# சிந்தித்தால் சிரிப்புவரும் (அல்லது) அலுவலர்களின் அட்டகாசம்

# சிந்தித்தால் சிரிப்புவரும் (அல்லது) அலுவலர்களின் அட்டகாசம்

சிந்தித்தால் சிரிப்புவரும்
(அல்லது)
அலுவலர்களின் அட்டகாசம்

பி.எஸ்.பசுபதிலிங்கம்

ஊக்கம், உதவி மற்றும் மேற்பார்வை
எஸ்.சந்திரா பசுபதிலிங்கம்
அ.ரகமத்துல்லா

மின்னூல் வெளியீடு : freetamilebooks.com



மின்னூலாக்கம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

This book was produced using pandoc

## 0.1 நூல் அறிமுக உரை

வணக்கம்.

நான் 1969-லேயே அரசுப் பணிக்கு வந்திருந்தாலும் நிலையான பணிக்கு 1973-ல் வருவாய்த் துறைக்கு வந்தேன். அது முதல் 2009 ல் ஓய்வு பெறும்வரையும் முக்கியப் பொறுப்பு வாய்ந்த பணியிடங்களில் தான் அமர்த்தப்பட்டிருந்தேன். இயற்கையாகவே என்னிடம் குடிகொண்டிருந்த ரசனை, எதனையும் மனப் பூர்வமாக செய்யும் குணங்களின் காரணமாக எந்தப் பணியிடத்திலும் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டோ அல்லது வெறுப்புடனோ பனி புரிந்ததில்லை. அதன் காரணமாக நான் பெற்ற அனுபவங்கள் அதிகம். பலப்பல நிகழ்வுகள் என் மனதில் பதிந்து விட்டன. பணிநிறைவு செய்து எழு ஆண்டுகள் கடந்த நிலையிலும் ஓய்வாக அமர்ந்திருக்கும் வேளைகளில் நீங்காக நினைவுகள் மனதில் நிழலாடும்போது வித்தியாசமான உணர்வு ஏற்படும்.

அந்த உணர்வுகளை விளையாட்டாக எனது கணிப்பொறியில் கடந்த மூன்று ஆண்டுகளுக்கு முன்னதாக. தட்டச்சு செய்துவைத்தேன்.. அதனை எனது ஆப்த நண்பன் ரஹமத்துல்லாவிடம் மட்டும் பகிர்ந்து கொண்டேன். அதனைப் படித்தவன், அதனைப் புத்தகமாக வெளியிடும்படி ஆலோசனை கூறியபோதும். அதில் எனக்கு அவ்வளவு அக்கறை ஏற்ப்படவில்லை.

சில காலம் முன்னதாக free tamil books இணைய தளத்தை எதேச்சையாக அறிந்தேன். (தனது மூன்றாவது ஆண்டில் அடி எடுத்து வைத்த வேளை) இயல்பாகவே எதாவது புத்தகம் வாசிக்கும் நான், பொட்டலம் கட்டிவரும் துண்டுக் காகிதத்தில் இருக்கும் சிறுசெய்தியைக்கூட படிப்பேன். அப்படிப்பட்ட நான் இந்த தளத்தில் வந்த

புத்தகங்களை பதிவிறக்கம் செய்து படிக்க ஆரம்பித்தேன்.

அந்த சந்தர்ப்பத்தில்தான் நமது அனுபவங்களையும். இந்த தளத்தில் வெளியிட்டால் என்ன என்று தோன்றியது. ஆனாலும். அப்பணியினை முடிப்பதில் இவ்வளவு சிரமம் ஏற்ப்படும் என்று நான் கருதவில்லை. நான் அலுவலகத்தில் தட்டச்சு செய்த font எனது புதிய கணினியில் வேலை செய்யவில்லை. பலப்பல தேடல்களின் பின்னர். Unicode converter கண்டுபிடித்து மாற்றம் செய்தேன். அந்தோ பல எழுத்துக்கள் விதவிதமாக மாற்றம் கண்டு கண்ணாமூச்சி ஆடியது. கடைசியில் அனைத்தையும் திரும்பத் திரும்ப சரிசெய்ய வேண்டியதாகிவிட்டது. ஒவ்வொரு முறை திறக்கும்போதும் / நகலெடுத்து ஒட்டும்போதும் இந்த மாற்றம் என்னை வெறுப்பேற்றியது. இருந்தாலும் நீயா நானாவென்று ஒரு கை பார்த்துவிடுவது என்ற அடிப்படையில் ஒருவகையாக முடித்துவிட்டேன்.

இந்த புத்தகம் ஒன்றும் என் அனுபவத்தின் அடிப்படையில் மற்றவர்களுக்கு அறிவுரை கூறும் நூல் அல்ல. மாறாக படிக்கும் நேரத்தில், இப்படிக்கூட நடக்கிறதா என நகைச்சுவையுடன் நினைக்கத் தூண்டும்.

அதைவிட, படிக்கும் நேரத்தில் ஒவ்வொருவரும் தங்கள் அனுபவத்தில் நிகழ்ந்தவற்றை நினைக்க வைக்கும் என்பதில் ‘துமி’ (துளியினும் மிக நுண்ணியது) அளவேனும் சந்தேகமில்லை.

நான் அரசுப் பணியில் மட்டுமே என் முழு அர்ப்பணிப்புடன் இருந்துவிட்டதால் அனைத்து நிகழ்வுகளும் அந்த சூழ்நிலையைச் சுற்றியே வலம் வருவது தவிர்க்க இயலாததாகிவிட்டது.

படிக்கும் அனைவருக்கும் மகிழ்ச்சியை மட்டும் தரும் என்றும் சிறு நெருடலைக்கூட ஏற்படுத்தாது என்றும் நம்புகிறேன்.

பழைய நினைவுகளைச் சுமந்து வருபவைகள்

என்பதால் புத்தகத்திற்கு பழைய மாதிரியே இரட்டைப் பெயராக சற்று பழைமையாக வைத்திருக்கிறேன்.

நன்றி, வணக்கம்.

## 0.2 நூல் ஆசிரியர் அறிமுக உரை

வணக்கம்.

நான் கடலூர் மாவட்டத்தில் அரசுப்பணியில், வருவாய்த்துறையில் இளநிலை உதவியாளராகப் பணியில் சேர்ந்து படிப்படியாக மேலேறிச் சென்று வட்டாச்சியர் நிலையில் (முப்பத்தைந்தாண்டுகளுக்கு மேல் பணியாற்றி) 2009 ல் பணி நிறைவுசெய்தேன். கடினமான பணியிடங்களில், இக்கட்டான சந்தர்ப்பங்களில் பணிசெய்ததால் பலப்பல அனுபவங்கள் கிடைத்தது.

என்னைப் போலவே என் நண்பன் திரு அ. ரஹமத்துல்லாவும் ஆரம்பம் முதல் இறுதிவரை ஒருவரை ஒருவர் தொடர்ந்தும். இணைந்தும் பணிசெய்ய நேரிட்டது. ஒரு அபூர்வம். ஒன்று நான் பார்த்த இடத்துக்கு அவன் வருவான் அல்லது நான் அவனது இடத்தைக் கைப்பற்றுவேன்.

அடிப்படையில் நான் செக்கு மாடு மாதிரி அரசுத் துறையிலேயே வேலை பார்த்ததால் உலக விவகாரங்களில் என் அனுபவங்கள் வெளிப்படவில்லை.

அடுத்து, என் துணைவியாரைச் சொல்லவேண்டும். ஏதோ நான்பாட்டுக்கு அரசு இயந்திரமாக வேலை செய்துகொண்டிருந்த வேளையில் என்னோடு பணியாற்ற வந்து என்னைக் கைப்பிடித்து குடும்பம் என்ற ஒன்றையும் சேர்த்து இயக்குபவராக திருமதி சந்திரா அமைந்ததால் மட்டுமே நான் மற்ற கவலை இல்லாமல் அரசுப் பணியை மட்டும் செய்ய முடிந்தது.

மற்றபடி என்னைப்பற்றி குறிப்பிடும்படி ஏதுமில்லை

என்பது எனது தாழ்மையான கருத்து.

நன்றி வணக்கம்.

## 0.3 முன்னுரை

“சிரிப்பு அதன் சிறப்பை சீர்தூக்கிப்
பார்ப்பதே நம்ம பொறுப்பு”

இந்தத் திருக்குறளைப் படித்த ஞாபகம் வருகிறதா. இல்லையென்றால் மீண்டும் ஒருமுறை ஒவ்வொரு அதிகாரமாக படித்துப் பார்த்துத் தேட வேண்டியதுதான்.

இது சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்த நமது காலஞ்சென்ற நகைச்சுவை நடிகர் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்கள் பாடி நடித்த பாடலின் வரிகள் அன்றி வேறில்லை. திருக்குறளில் தேடினால் கிடைக்காது. அப்புறம் ஏன் தேடிப்பார்க்க சொன்னேன்?

அடுத்தவன் கஷ்டத்தில்தானே நமது சந்தோஷம் பிறக்கிறது. இந்த உலகின் இயக்கமே ஒருவரின் கஷ்டம் அடுத்தவருக்கு சந்தோஷம் என்றுதானே ஓடுகிறது.

கலைவாணர் சொன்னதைப்போல் அல்லாமல் அவசர அவசரமாக உணவை விழுங்கிய மாடு ஓர் இடத்தில் படுத்து சாவகாசமாக வாய்க்கு கொண்டுவந்து அசை போடுவது போன்று முப்பத்தெட்டு ஆண்டுகள் அரசுப்பணியை முடித்துவிட்டு ஆற அமர வீட்டில் ஈசி சேரில் உட்கார்ந்து (படுத்துக்) கொண்டு அசைபோட்டதில், சுவைத்ததில் சிலவற்றை இங்கே உங்களுடன் பகிர்ந்துகொள்ளுகிறேன்.

கெக்கே பிக்கே என்று சிரித்து வயிற்று வலி வந்தால் தான் சிரிப்பு என்பதல்ல. நடந்ததை நினைக்கும்போது புன்முறுவல் வரவழைத்தால் போதும் அதுவே சிறந்த நகைச்சுவை என்பர்

நகைச்சுவையாளர். சாகா வரம் பெற்ற எழுத்தாளர்களின் ஒவ்வொரு ஆக்கத்திலும் அதன் ஒவ்வோர் பகுதியிலும் மெல்லிய நகைச்சுவை இழையோடிச் செல்வதாலேயே அவை என்றும் இனிக்கும் காவியங்களாகத் திகழ்கின்றன.

சரி, இந்த புத்தகத்தின் தலைப்பு பழங்கால கதைப்புத்தகங்கள், திரைப்படங்களின் பெயர்கள் போன்று இரட்டைத் தலைப்பாக இருக்கிறதே என்று எண்ணுகிறீர்களா இதுவும் பழைய நினைவுகளின் அடிப்படையில் எழுந்ததுதானே அதனால்தான் தலைப்பும் பழைமையாக உள்ளது.

மேலும், இங்கே அதிகாரிகள் என்றால் வருவாய்த்துறையில் பணிபுரியும் எல்லா நிலை அலுவலர்களையும் ஒரே தரத்தில் குறிப்பிடத்தான்.

எப்போதும் பிறரது துன்பத்தில்தான் மனிதன் சந்தோஷம் காண்கிறான். பிறரது துன்பத்தைக் காணும்போதுதான் மனிதன் சிரிக்கிறான். அதேசமயம் தனது துன்பமும் மற்றோருக்கு சந்தோஷத்தைத் தருகிறது என்பதையும் மனிதன் நன்கு அறிவான்.

இதுதான் மனித வாழ்க்கை.

தனது துன்பத்தைக் கண்டு பிறர் சிரிக்கும்போது நாம் கோபப்படாமல் சேர்ர்ந்து மகிழ்வதில்தான் வாழ்வின் முழுமை இன்பம் கிடைக்கிறது. அப்படிப்பட்ட அந்த ஒரு நொடிப்பொழுதில் நமது துன்பமும் காற்றில் கரைந்து போய்விடுவதை நாம் உணரமுடியும். அதை விடுத்து இம்மாதிரி வேளையில் சிரித்து மகிழ்வதற்கும் கேலி பேசி சிரிப்பதற்கும் எனக்கு மட்டுமே உரிமை உண்டு என்றும், எனக்கு துன்பம் வந்தால் மற்றவர்கள் எனக்கு ஆறுதல் சொல்ல வேண்டும் என்று எதிர்ர்பார்ர்த்தால் மனிதனின் அடிப்படை குணத்திற்கு அது மறானாது அல்லலவா.

மாறாக மற்றவர் துன்பம் எனக்கு இன்பம் தரவேண்டும். ஆனால் எனது துன்பத்தை யாரும் கண்டு விமர்சிக்கக்கூடாது என்பது கடைந்தெடுத்த

சுயநலம் என்பதில் சந்தேகம் உண்டோ.

ஆடிய காலும் பேசிய வாயும் சும்மா இருக்குமா? எழுதிய கைகள் சும்மா இருக்காமல் பழக்க தோஷத்தில் எழுத்தாக வடித்துவிட்டதுடன் அற்ப ஆசை புத்தகமாக வடிக்கத் தூண்டுகிறது.

அதுதான் சிலபல பக்கங்களை எழுதித் தள்ளிவிட்டேன்.

குமாஸ்தாவாக இருந்தபோது நான் எழுதியதை எல்லாம் படிக்க வேண்டியது என் அதிகாரியின் தலை எழுத்து.

நானே அதிகாரியாக ஆனதும் எனக்கு கீழே இருந்தவர்கள் எழுதியதை எல்லாம் படிக்க நேர்ந்தது என் தலை எழுத்து.

இப்போது நான் எழுதியிருப்பதை எல்லாம் படிக்கவேண்டியது உங்க தலை எழுத்து. தலை எழுத்தை மாற்றமுடியாது என்பது இதுதான் போலும்.

யாருடைய மனதையும் நோகடிக்காமல் நடந்ததை மட்டும் நினைத்துப் பார்த்த அளவில் சிரிக்க வைத்ததை பகிர்ந்துகொள்ளுவதில் ஒரு சந்தோஷம். அதனாலேயே நிகழ்வுகளை சொல்லும் வேளையில் அதில் சம்பந்தப்பட்ட நபர் பெயரை சொல்லவில்லை. தேவையான இடங்களில் மட்டும் கற்பனைப் பெயர் சேர்த்திருக்கிறேன். ஆட்சேபனை இல்லாத இடங்களில் என் நண்பர்களின் பெயரைச் சொல்லியுள்ளேன்.

என் எழுத்துக்களை படிப்பவர்கள் வருவாய்த் துறை அலுவலர்களாக இருப்பின் அதிமதுரமாக இனிக்கும். மற்றவர்களுக்குக் கரும்பாக இருக்கும். மற்றபடி யாருக்கும் இரும்பாக இருக்காது என்று நம்புகிறேன்.

அந்த நம்பிக்கையில், படிக்கப் போகும் உங்களுக்கு எங்களின் மனமார்ந்த நன்றியை தெரிவிக்கிறேன். இதில் சொல்லப்பட்டவைகள் யாவும் உண்மையில் அப்படியே நடந்தவைதான்.

கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும்போது நடப்பவைகளை அது எப்படி ஏன் என்றெல்லாம் நினைக்க முடியாது. அதுபாட்டுக்கு போய்கொண்டே இருக்கும். அதில் அடித்துக்கொண்டுபோய் நாமும் கரை சேரவேண்டும். இல்லையென்றால் கரை ஏற முடியாது.

பின்னர் நினைத்துப் பார்த்து சந்தோஷமோ ஆறுதலோ அடைந்துகொள்ள வேண்டியதுதான்.

நானும் என் நண்பன் ரஹமதுல்லாவும் அவ்வப்போது பேசி, சிரித்துக் கொள்ளுவோம். அதையே எழுத்தாக வடிக்க முனைந்ததும் அதற்கு ஆக்கமும் ஊக்கமும் உதவியும் செய்த அவனுக்கும், துணை நின்ற என் வாழ்க்கைத் துணைவியார் சந்திராவுக்கும் நான் கட்டாயமாக நன்றி சொல்லமாட்டேன். ஏனெனில் அது அவர்களின் பங்களிப்பு.

இப்புத்தகத்தினை, அதன்வழி என் நினைவுகளை, முன்னாள், இந்நாள், வரும்நாள் என் சக வருவாய்த்துறை சகோதர, சகோதரிகளுக்கு சமர்ப்பிக்கிறேன்.

நன்றி, வணக்கம்.

# 1 சிரிக்காத சின்னையா

அந்த ஹாலில் இருந்த அலுவலர்களுக்கு ஒரே அதிர்ச்சி கலந்த ஆச்சரியம். ஆம் அந்த சிரிக்காத சின்னையா - அலுவலக உதவி மேலாளர், பகபகவென்று சிரித்துக் கொண்டிருந்தார். யாருக்கும் ஒன்றும் புரியவில்லை.

இது நடந்து நாற்பது ஆண்டுக்கு மேலாகிவிட்டது. முதலில் மாவட்ட ஆட்சியர் அலுவலக செட்டப் குறித்து ஒரு முன்னுரை. மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் பலப்பல பிரிவுகள் உண்டு. ஒவ்வொரு பிரிவிலும் நான்கு அல்லது ஐந்து கிளார்க்குகள் வேலை செய்வர். அவர்களுக்கு ஒரு பிரிவுத் தலைவர் (ஹெட்கிளார்க்கு) உண்டு. பிரிவுத் தலைவர் என்பவர் அப்போதெல்லாம் குட்டிக் குட்டி சமஸ்த்தான அரசர் போன்றவர்கள்.

மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் வட மேற்கில் உள்ள பெரிய ஹால். அதில் நிலம் சம்பந்தப்பட்ட ஐந்து பிரிவுகள் உண்டு. அதில் ஒரு பிரிவுதான் 'வி' பிரிவு.

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது ஒவ்வொரு ஆசிரியருக்கும் மாணவர்கள் சேர்ந்து மிகவும் கச்சிதமாகவும் அதைவிட மிகவும் பொருத்தமாகவும் ஒரு பட்டப் பெயர் வைத்துவிடுவார். அவர் ரிட்டையராகிப் போனாலும் தலைமுறை தத்துவமாக அந்த பட்டப்பெயர் மாணவர்கள் மத்தியில் நிலைத்துவிடும். உதாரணம். எங்கள் கணக்கு ஆசிரியருக்கு நாங்கள் வைத்திருந்த பெயர் வெட்டுக்கிளி. அவர் வகுப்புக்கு வந்தால் ஒரு மணிநேரம் பாடம் நடத்துவதற்குள் எதையாவது கேட்டு ஒரு மாணவன் பாக்கியில்லாமல் ஒரு முறையாவது வரிசையாக வரவழைத்து கிள்ளிவிடுவார். என்ன பெயர் பொருத்தம் சரிதானே?

அதேபோன்று அந்த ஹெட்கிளார்க்குக்கு நாங்கள்

வேலைக்கு வந்த புதிதில் எங்கள் முன்னோர்கள் வைத்திருந்த பெயர் ‘சிரிக்காத சின்னையா.’

ஒன்றுமில்லை. எப்போதும் அவர் முகத்தில் ‘உர்’ வழிந்துகொண்டே இருக்கும். யாரோடும் அதிகம் கலந்து பேசமாட்டார். அப்படி பேசினாலும் மற்றவர்கள் சிரித்துப் பேசினாலும் மகாபலிபுரத்து சிற்பம் போல் அவர் முகத்தில் ஒரே பாவம்தான். அவருடன் பழகுபவர்கள்தான் பாவம். அவருக்கு நினைப்பு. ‘நாம் சற்று ரிலாக்ஸ்டாக முகத்தை வைத்துக்கொண்டால் நம் கீழ் உள்ளவர்கள் நம்மை ஏறி மேய்ந்து விடுவர்’ என்று.

போகட்டும். விஷயத்திற்கு வருவோம். அந்தப் பிரிவில் ஒரு கிளார்க்கு வேலைபார்த்து வந்தார். அவர் எம்.ஏ. படித்தவர். கிராமத்திலிருந்து வந்தவர். கிராமத்தில் ஏர் ஓட்டிக்கொண்டிருந்தவர் அப்படியே நகரத்திற்கு வேலையாக வந்தால் எப்படிப்பட்ட அலங்காரத்தில் இருப்பாரோ அப்படிதான் வேலைக்கு வருவார். அதில் ஒன்றும் தப்பில்லை. ஆனால் நாகாரிகத்தில் திளைத்துக்கொண்டிருக்கும் எங்களுக்கு(!?) அவர் ஒரு ஜோக்கர். அவர் வேலைக்கு வந்த புதிது. அவர் படித்திருந்த அளவிற்கு புத்திசாலித்தனம் சற்று குறைவு. ஆனால் பிழைக்கத் தெரிந்தவர். ஜால்ரா தட்டுவதிலும் குழைந்து குழைந்து குனிந்து கும்பிடு போடுவதிலும் தனி பட்டம் பெற்றவார்.

அப்போதெல்லாம் அலுவலக நடைமுறை முழுவதும் ஆங்கிலத்தில்தான். தமிழ் கொஞ்சமாகத் தலைகாட்டிக்கொண்டிருந்தது. மாதம் இரண்டு முறை பிரிவுத் தலைவருக்கு கிளார்க்குகள் தங்களின் பதிவேடுகள் அனைத்தையும் தணிக்கைக்கு வைக்க வேண்டும். மாதம் ஒரு முறை மாவட்ட ஆட்சியரின் பி.ஏ-விற்கு வைக்க வேண்டும். மூன்று மாதத்திற்கு ஒருமுறை மாவட்ட ஆட்சியருக்கோ அல்லது மாவட்ட வருவாய் அலுவலருக்கோ தணிக்கைக்கு வைக்க வேண்டும்.. அந்தந்த அலுவலரும் தங்கள் மன நிலைக்கு தகுந்தபடி தணிக்கைக் குறிப்பு எழுதுவர். அதில் குறைகள் சுட்டிக் காட்டப்பட்டிருக்கும்.

அதனை நாம் சரி செய்து வைக்கவேண்டும். அப்படித்தான் ஒவ்வொரு கிளார்க்கின் வேலைத்திறனும் கண்காணிக்கப்படும்.

அதிலும் மூன்று மாதத்திற்கு ஒருமுறை மாவட்ட ஆட்சியருக்கோ அல்லது மாவட்ட வருவாய் அலுவலருக்கோ தணிக்கைக்கு வைக்கும்போது கிளாக்குகள் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு இருப்பர். ஏனென்றால் ஒவ்வொரு சமயம் தணிக்கை செய்து வந்தவுடன் சில கிளார்க்குகளுக்கு மெமோ கொடுக்கப்பட்டதுண்டு. சிலர் நேரில் அழைத்து 'இதைவிட்டு வேறுவேலைக்கு போயிருக்கக்கூடாதா' என்று வெறுத்துப்போகும் அளவிற்கு திட்டு வாங்குவதுண்டு. நேரம் நல்லா இல்லையென்றால் டிராஸ்பர் கூட கிடைக்கும் மாவட்டத்தின் கடைக்கோடிக்கு. இப்படிப்பட்ட கொடுமையில் அதிகாரி சமயத்தில் நல்ல மூடிலிருந்தாலோ அல்லது சோம்பலாக இருந்தாலோ 'குறிப்பில்லை' என்று ஒற்றை வார்த்தையில் பதிவுசெய்து அனுப்பிவிடுவார்.

பங்களாவிலிருந்து தணிக்கை செய்து பதிவேடுகள் பிரிவில் கொண்டு வைக்கப்பட்டதும் கிளார்க்குக்கு தெரிகிறதோ இல்லையோ. கொண்டு வரும் ஜவான் மூலம் எல்லோருக்கும் தெரிந்துவிடும். எல்லாரும் ஆவலாகப் பதிவேட்டைப் பிரித்துப்பார்த்து குறிப்புகளின் அழுத்தத்திற்கு தகுந்தபடி கமெண்ட் அடித்து கொண்டிருப்பர். தப்பித்தவறி 'குறிப்பில்லை' என்று வந்துவிட்டால் போச்சு. அந்த கிளார்கிடமிருந்து அன்று டிபன் காப்பி என்று ஏதாவது எப்பாடுபட்டாவது வசூல் செய்துவிடுவர் அந்த வசூல் ராஜாக்கள்.

அன்றும் அப்படித்தான். மேற்படி ஹாலில் எல்லாரும் தங்கள் பிரிவு வேலையில் மூழ்கியிருந்தநர். இப்போது போன்று அந்த காலத்தில் அலுவல் நேரத்தில் பிரிவில் உட்கார்ந்துகொண்டு அரட்டை அடித்து வெட்டிப் பேச்செல்லாம் பேசமுடியாது. மிலிட்டரி ஒழுங்கில் வேலை நடக்கும். எப்போதாவதுதான் கலகலப்பு இருக்கும். அல்லது

அலுவலக நேரம் அல்லாத சமயத்தில் பேசிக்கொள்வர்.

பங்களாவிலிருந்து பைல்களின் மூட்டை கொண்டு வந்து வைக்கப்பட்டது. சிரிக்காத சின்னையா தமது பிரிவுக்கான பைல்களை எடுத்து பார்த்தார். அதில் நமது நண்பரின் பதிவேடுகள் தணிக்கை செய்து வந்திருந்தது. மாவட்ட ஆட்சியர் பதிவேடுகளை தணிக்கை செய்ததற்கு அடையாளமாக அதற்குறிய குறிப்புப் பதிவேட்டில் ஒவ்வொரு பதிவேட்டின் பெயரையும் குறிப்பிட்டு 'குறிப்பில்லை' என்று எழுதியிருந்தார். சிரிக்காத சின்னையாவிற்கு சற்று அதிர்ச்சி. 'என்னடா இது மாய்ந்து மாய்ந்து வேலை செய்பவனுக்கெல்லாம் கன்னாபின்னாண்ணு குறிப்பு எழுதுறாங்க. ஆனா இவருக்கு என்னடான்னா குறிப்பில்லை என்று இருக்கு' என்று நொந்துகொண்டே பிரிவிக்கு அனுப்பிவிட்டார். நாங்களென்றால் குறிப்பில்லை என்று வந்தவுடன் ஆப்கனிஸ்த்தானை கிரிக்கெட்டில் தோற்கடித்த சந்தோஷத்தில் துள்ளிக் குதித்து கொண்டாடியிருப்போம். நம்ம ஆளு வாய் திறக்கவில்லை. தெரிந்தால் செலவு வைத்துவிடுவார்களே என்றுதான்.

எப்போதும் தணிக்கை செய்துமுடித்து வந்ததும் 48 மணிநேரத்திற்குள் குறிப்புகளுக்கு பதில் வைத்துவிடவேண்டும். பெரும்பாலும் மன்னிப்புக் கேட்டுதான் பதில் இருக்கும்.

நம்ம ஆளு என்ன செய்தார் தெரியுமா? தணிக்கைக் குறிப்பு பதிவேட்டில் மாவட்ட ஆட்சியர் ஒவ்வொரு பதிவேட்டிற்கு நேராகவும் குறைகள் இல்லை என்ற அர்த்தத்தில் 'குறிப்பில்லை' என்று எழுதியிருந்தார் அல்லவா! அதன் அருகில் ஐயா 'குறிப்பு வைத்துவிடுகிறேன்' என்று பொருப்பாக எழுதி ஹெட்கிளார்க் மேசையில் வைத்துவிட்டார். குறிப்பில்லை என்றால் நம்ம ஆளு ஏதோ குறிப்பு வைக்கத் தவறிவிட்டோம் என்று அர்த்தம் செய்துகொண்டு அப்படி எழுதிவிட்டார்.

அதனை எடுத்துப்பார்த்த சிரிக்காத

சின்னையாவிற்கு ஆரம்பத்தில் சொன்னபடி சிரிப்பு கட்டுப்படுத்தமுடியாமல் வந்துவிட்டது. இந்தக் களேபரத்தில் நாங்கள் எல்லாரும் என்ன நடந்தது என்று தெரியாமல் சிரிக்காத சின்னையாவிற்கு ஏதோ ஆகிவிட்டது என்று நினைத்து அதிர்ச்சியும் சந்தேகமுமாக ஆகிவிட்டோம். அதற்குள் சற்று சுதாரித்துக்கொண்ட பக்கத்து ஹெட்கிளார்க்கு என்ன என்று கேட்க சிரிக்காத சின்னையா அப்படியே அந்த பதிவேட்டை தூக்கிக் கொடுத்துவிட்டார். அப்போதுதான் தெரிந்தது அந்த சிரிப்பிற்குக் காரணம்..

போதாதா எல்லாருக்கும். அலுவலகம் என்பதையும் மறந்து எல்லாரும் சிரித்துவிட்டோம். மிலிட்டிரி பரேடுபோல் நடந்துகொண்டிருந்த ஆபீசில் திடீரென்று சிரிப்பு சத்தம் கேட்டால் என்ன ஆகும். பக்கத்து ஹால்களில் இருந்தவர்கள் என்னவோ ஏதோவென்று வந்து பார்த்துவிட்டு விஷயத்தை அறிந்ததும் அவர்களும் சேர்ந்துகொண்டனர். ஒரு நிமிடத்தில் அலுவலகம் முழுவதும் சுமார் 200க்கு மேல் வேலை பார்த்தவர்களுக்கு தகவல் பரவிவிட்டது. பி.ஏ-வின் அலுவலக உதவியாளர். மூலம் தகவல் தெரிந்த நேர்முக உதவியாளர் ஆவலும் சிரிப்பும் தாங்காமல் தாம் யானை மேல் இருந்துகொண்டு அதிகாரம் செய்யும் பெரீரீரீய அதிகாரி என்பதையும் மறந்து நேரில் பிரிவுக்கு வந்து சிறப்பாக பணியாற்றுகிறீர்கள் என்று பாராட்டிவிட்டுச் சென்றுவிட்டார்.

ஆனால் சம்பந்தப்பட்ட நம்ம ஆளு கொஞ்சமும் அலட்டிக்கொள்ளாமல் தம் வேலையில் கவனம் செலுத்திக்கொண்டிருந்தார். அப்படி நடித்தார். இல்லைண்ணா பார்ஸ் காலியாயிடுமே. எப்படியோ அன்று பொழுது இப்படி கழிந்துவிட்டாலும். இதனை பல ஆண்டுகள் சொல்லிச் சொல்லி சிரிக்க வைத்துவிட்டார் நம்ம ஆளு. அதைவிட சிரிக்காத சின்னையாவையே சிரிக்க வைத்த கில்லாடி என்று பாராட்டும் வேறு.

# 2 பணிப்பதிவேடு திறப்பு விழா

நான் வேலைக்குச் சேர்ந்த புதிதில் சாதாரணமாக ஒவ்வொருவருக்கும் இருக்கக் கூடிய புத்திசாலித்தனம் எனக்கு இருக்கவில்லை. ஆனால் பொது அறிவு மற்றும் அரசாங்க வேலைக்குத் தேவையே இல்லாத மற்றபல விஷயங்களில் மட்டும் மெத்தவே இருந்தது. என்னுடன் புதிதாக வந்த செட்டு என்று சொல்லும் ஆறு பேர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் வேலையில் இருந்தோம். வேலைக்கு சேர்ந்தவுடன் எல்லாருக்கும் பணிப்பதிவேடு ஆரம்பித்து பதிவுகள் செய்வது வழக்கம். சொல்லப்போனால் அதுதான் புதிதாக சேர்ந்தவருக்கு வைக்கப்படும் முதல் செலவு என்று சொல்லலாம். அப்போது முதல்தான் ஒரு அலுவலர் யார் யார் தலையைத் தடவுவது என்றெல்லாம் முதன்முதலாகக் கற்றுக்கொள்கிறார் என்று சொல்லவேண்டும்.

சரி. விஷயத்திற்கு வருவோம். நான் வேலைக்கு சேர்ந்து கிட்டத்தட்ட ஒரு ஆண்டு ஆகிவிட்டது. பணிப்பதிவேடு ஆரம்பிக்கவேண்டும் என்று அக்கரை ஏதும் இல்லாமல் ஜாலியாக போய் வந்துகொண்டிருந்தேன். என் நண்பர்கள் ஐவரும் வந்து என்னை திட்டிய பின்னர்தான் எனக்கு சற்று உரைத்தது. எல்லாரும் அக்கவுண்டண்ட்டிடம் சென்று குழைந்து பேசி கோரிக்கை வைத்தோம். அவர் உடனே எங்களோடு டீ சாப்பிடக் கிளம்பி வந்துவிட்டார். ஆச்சு. டீ என்றால் டிபனும் சேர்ந்துதான் போலும். எல்லாரும் ஆளுக்கு ஒரு எஸ். ஆர் (பணிப்பதிவேடு) வாங்கி வந்துவிடுங்கள் என்றார்.

எல்லாரும் ஆளுக்கு ஒரு பதிவேட்டுடன் அக்கவுண்டண்ட் முன்பு ஆஜரானோம். அப்போதும் டீ சொல்லுங்க என்றார். பிரிவில் உள்ள எல்லாருக்கும் டீ சப்ளை முடிந்தது. நல்ல நேரம் பார்த்து விபரங்கள் பதிவு செய்யப்பட்டது.

அடுத்து நேர்முக உதவியாளரின் ஒப்புதல் பெறப்பட்டால்தான் அந்த பதிவேடு சட்டப்படி செல்லத்தக்கதாகும்.

எல்லோரும் மாலையில் நேர்முக உதவியாளர் முன்பாக ஆஜரானோம். அவர் ஒவ்வொருவரிடமாக விசாரித்து பதிவேட்டில் உள்ள விபரங்களை சரிபார்த்து ஒப்புதல் அளித்தார்.

என் முறை வந்தது. சொந்த ஊர் திருநெல்வேலி என்று இருந்ததைப் பார்த்துவிட்டுக் கேட்டார்.

“திருநெல்வேலி என்று உள்ளதே அங்கு நீங்கள் எந்த இடம்”
“திருநெல்வேலி டவுண்தான்”
“அங்கே எந்த இடம்”
“கலெக்டார் ஆபீசுக்கு அருகில் கொக்கிரகுளம் என்ற சிறிய ஊர்”
“அங்கே எந்த இடம்”
“கிருஷ்ணன் கோயில் அருகில்”
“யார் வீடு”
“சு.பா.வி வீடு”
“ஓகோ“

நேர்முக உதவியாளர் குறும்பாகச் சிரித்துவிட்டு குடும்பார்த்த விபரங்களை கேட்டுவிட்டு ஒப்புதல்செய்து கொடுத்துவிட்டார். அவர் ஏன் குடும்பார்த்த விபரங்களை நம்மிடம் மட்டும் கேட்கிறார் என்று எனக்கு புரியவில்லை. மறுநாள் என் மாமாவிற்கு தகவல் வந்துவிட்டது. அவர் என்னிடம் பி. ஏ. என்ன கேட்டார் நீ என்ன பதில் சொன்னாய் என்று கேட்டார். அப்போதும் ஒன்றும் புரியவில்லை. அதன்பின்னர் சிலதினங்கள் கழித்துதான் விபரம் தெரிந்தது. பி.ஏ. அவர்கள் திருநெல்வேலியைச் சேர்ந்தவர் என்றும், அங்கே வேலைபார்த்துவிட்டு பதவி உயர்வில் கடலூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் நேர்முக உதவியாளராக வந்தவர் என்றும். நான் அசட்டுத் தனமாக மாவட்ட ஆட்சியர் அலுவலகம் இருக்கும் இடத்தை கிராமம் என்றும் அதைப்பற்றி அவருக்கு தெரியாது என்றும் நினைத்து உளறி இருக்கிறேன்.

பொதுவாக, புதிதாக ஒரு அதிகாரி வந்தால் அவர் குலம் கோத்திரம் எல்லாம் விசாரித்து அதற்குத் தகுந்தபடி தங்கள் குலம் கோத்திரம் எல்லாம் ஒத்துப் போய்விட்டால் போதும் நேராகப் போய் நீங்கள் என் பேத்தியின் நாத்தனாருக்கு ஓரகத்தியின் மகனுக்கு ஒன்றுவிட்ட சகோதரிக்கு சம்பந்தி வீட்டாரின் சொந்தக்காரருக்கு மிகவும் நெருங்கிய சொந்தம் என்று தங்களின் நெருங்கிய சம்பந்தத்தை விவரித்து ‘காக்கா’ பிடித்துக் கொள்வது வழக்கம். அதுபோல் திருநெல்வேலியில் இருந்து வந்தவர்கள் எல்லாரும் அவர் பணியேற்றவுடன் சொந்தம் ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். இந்த டெக்னிக்தான் நமக்கு தெரியாதே. அதில் ஒரு சுவாரஸ்யம் என்னவென்றால் அந்த டெக்னிக் எந்த கல்லூரியில் சொல்லித் தருகிறார்கள் என்று தெரியாததால் இன்று வரையிலும் நான் இப்படித்தான் குப்பை கொட்டிக்கொண்டிருக்கிறேன்.

எனது உறவினர் ஒருவர் ஒருநாள் என்னை பார்த்துவிட்டு பி.ஏ. கேட்டதற்கு இப்படி பதில் சொன்னாயாமே என்று கேட்டபோதுதான் எனக்கு விபரம் விளங்கியது. அதுமுதல் பி.ஏ. கண்ணில் எப்படியும் பட்டுவிடக்கூடாது என்று சுற்றிக்கொண்டு வெளியே போவது வழக்கமாகிவிட்டது. அவர் மாற்றலாகிப் போனது வரையிலும் அவர் கண்ணில் படவே இல்லையே. எப்படி என் சாமர்த்தியம்!

ஆனால் ஒன்று, எங்கள் ஆறுபேரையும் நேர்முகமாக விசாரித்து பணிப்பதிவேட்டில் ஒப்புதல் செய்தபோது அவர் சொன்னது சுமார் நாற்பது ஆண்டுகள் ஆகியும் என் மனதை விட்டு நீங்கவில்லை.

“இப்போது நீங்கள் எல்லாரும் எஸ்.ஆர் ஒப்பன் செய்ய என்னிடம் வந்திருக்கிறீர்கள். இந்த நேரத்தில் நான் எஸ்.ஆர் ஒப்பன் செய்தது நினைவுக்கு வருகிறது. எனக்கும் கலெக்டர் பி.ஏ. தான் எஸ்.ஆர் ஒப்பன் செய்தார். அவர் சொன்னார். ‘நான் உனக்கு எஸ்.ஆர் ஒப்பன் செய்தது போன்று நீ நன்கு முன்னேறி என்னைப்போல் ஒரு பதவிக்கு வரவேண்டும். நீயும் பலருக்கு எஸ். ஆர். ஒப்பன்

செய்ய வேண்டும்’ என்று வாழ்த்தினார். அப்போது அவர் சொன்னது இன்றும் எனக்கு நினைவு இருக்கிறது. அதுபோல் நீங்களும் எல்லா தேர்வுகளும் எழுதி நல்லபடியாக பணி செய்து பலருக்கு எஸ்.ஆர் ஒப்பன் செய்யும் வகையில் பதவி உயர்வு அடையவேண்டும்.” என்று மனமாற வாழ்த்தினார்.

அந்த வாழ்த்து அப்படியே பலித்து நானும் வட்டாட்சியராகப் பதவி உயர்வு பெற்று சிதம்பரம் ஆதி திராவிடர் நலத் தனி வட்டாட்சியராகப் பணியில் சேர்ந்து பல ஆசிரியர்களுக்குப் பணிப்பதிவேடு துவங்கி வைத்ததும் அல்லாமல் அவர்களுக்கும் இந்த நிகழ்ச்சியைச் சொல்லி அதே வாழ்த்துக்களை தெரிவித்துள்ளேன். அந்த ஒரு நிறைவும். சந்தோஷமும் என் வாழ்நாள் முடியும் வரையிலும் நினைவில் நிற்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இவ்வளவு சொல்லிவிட்டு அந்த நல்ல அதிகாரியின் பெயரைக் கட்டாயம் குறிப்பிட்டாக வேண்டும். அதுதான் அவருக்கு நான் செலுத்தக்கூடிய நன்றிக்கடன்.

அவரது திருப்பெயர் ஆர். அழகப்பன், பி.ஏ. உண்மையில் அவருக்கு அவரது பெற்றோர் அவரது மனதின் அழகின் அடிப்படையில்தான் அழகப்பன் என்று பெயர் வைத்திருக்கவேண்டும். அவர் மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளராகப் பணிபுரிந்த காலத்தில் யாரும் அவரைப்பற்றி சிறு குறைகூட சொன்னதில்லை.

இப்போதும்கூட அன்று முதன் முதலாக அவர் முன்பு எத்தனை துரம் வழிந்திருக்கிறோம் என்று நினைத்தால் சிரிப்புத்தான் வருகுதைய்யா.

இதே போன்ற பணிப்பதிவேடு திறப்பு விழா சுமார் பத்து அண்டுகள் கழிந்து வட்டாட்சியர் அலுவலகத்தில் நடைபெற்றது. அது முற்றிலும் வித்தியாசமானது.

நுற்றுக்கணக்கான கிராம நிர்வாக அலுவலர்கள்

பணியமர்த்தப்பட்ட நேரம். அவர்களுக்குப் பணிப்பதிவேடு பராமரிக்க வேண்டும். சற்று மிகுதியான வேலைதான். இருந்தாலும் அது கடமைதானே. ஆனால் அதனை ஒரு பெரிய பாராங்கல்லை ஒற்றைக் கையால் தூக்கி வைப்பது போன்று பில்டப் கொடுத்து ஒவ்வொரு வி.ஏ.ஓ-வும் ஒரு பணிப்பதிவேடும் முப்பது ரூபாயும் கொண்டுவரவேண்டும் என்று வசூலித்துவிட்டார் அந்தக் கில்லாடி. இந்தத் தகவல் பரவி மாவட்டம் முழுவதும் அதே ரேட்டை பிக்ஸ்பண்ணி ஒரு அடி அடித்துவிட்டனர் மக்கள்.

ஏதோ என் காலம் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் துவங்கியதாலும் நல்ல அதிகாரிகள் இருந்ததாலும் சுலபமாக பணிப்பதிவேடு துவங்கப்பட்டது. அதே கீழ் நிலை அலுவலகங்களில் பணியில் சேருவோர் பணிப்பதிவேட்டுக்காக அலைந்து திரிந்து வாங்கி வருவதும் அதனை பதிவுசெய்து துவங்கி வைக்க எஸ்டாபிளிஸ்மெண்ட் குமாஸ்த்தா பிகு பண்ணுவதும் அதற்காக டீ, டிபன் செலவு வைப்பதும் சகஜம்.

பணிப்பதிவேடு என்றதும் ஒரு முக்கிய விஷயம் சொல்லவேண்டும். இது 1974ல் நடந்தது. நான் டெஸ்பாட்ச் பிரிவில் பதிவுத்தபால் அனுப்பும் வேலையில் இருந்தேன். அந்நாளில் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து தினமும் நூற்றுக் கணக்கில் பதிவுத் தபால்கள் அனுப்பப்படும். அதற்காக தபால் அலுவலகத்தில் நடப்பது போன்று எல்லா வேலையும் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலேயே செய்யப்பட்டுவிடும். அது ஒரு குட்டி தபால் ஆபீஸ்.

டி பிரிவு ஹெட்கிளார்க் வந்தார். தம் கண்முன்பாகவே ஒரு பணிப்பதிவேட்டை கவர் போட்டு ஸ்டாம்ப் ஒட்டி பதிவுசெய்து தன்னிடமே கொடுக்கும்படி வற்புறுத்தி வாங்கிக் கொண்டுசென்றார். பின்னர் அவர் சொன்ன தகவல்.

ஒரு நல்ல மனிதர். அதுவும் ரொம்ம்ம்ம்ப நல்ல மனிதர். நமது மாவட்டத்திலிருந்து பணி உயர்வில்

சென்றார். அவரது பணிப்பதிவேடு தபாலில் அனுப்பப்பட்டது. ஆனால் காணாமல் போய்விட்டது. அடுத்து அவரது பணிப்பதிவேட்டை புனர் நிர்மாணம் செய்து அனுப்பி வைத்தனர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து. ஆனால் துரதிருஷ்ட வசமாக அதுவும் காணாமல் போய்விட்டது. அவர் எவ்வளவு நல்ல மனிதராக இருந்தால் இரண்டு முறை காணாமல் போயிருக்கும். பலருக்கும் கெடுதல் செய்த அப்பேர்ப்பட்ட நல்ல மனிதர் அவர்.

ஆனால் பணிப்பதிவேட்டினை மீண்டும் தயார் செய்து அனுப்பவேண்டிய கட்டாயத்தில் அந்த ஹெட்கிளார்க்கு தமது சொந்த பொருப்பில் மீண்டும் தயார் செய்து அனுப்பி வைத்தார்.

இதேபோன்று இன்னொரு நிகழ்ச்சி. மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் ஒரு குறிப்பிட்ட பிரிவில் பணிபுரிந்தவார்கள் எல்லாருக்கும் ஏற்பட்டது. அவர்களின் பணிப்பதிவேட்டில் ‘நடுவுல கொஞ்சம் பக்கங்களைக் காணோம்’. ஆனால் விபரம் கண்டுபிடிக்க முடியவில்லை. எல்லாரும் அந்த பிரிவு எழுத்தரிடம் சண்டை பிடித்துவிட்டனர். கடைசியில் அவரது பணிப்பதிவேட்டிலும் சில பக்கங்கள் காணோம்.

அப்புறம்தான் தெரிந்தது. அந்த அலுவலக அதிகாரியின் கைவண்ணம் என்று. அவரவருக்கும் ஏதாவது காரணம் பற்றி பணிப்பதிவேடு ஒப்புதலுக்கு அனுப்பப்பட்ட போது அந்த அதிகாரி சத்தமில்லாமல் சில பக்கங்களைக் கிழித்து எடுத்துவிட்டார். இது விபரம் தெரியாமல் கடைசியில் அந்தப் பக்கங்களில் செய்திருக்க வேண்டிய பதிவுகள் குறித்து விபரம் கேட்டு அவரவரும் அந்நாளில் வேலை பார்த்த அலுவலகங்களில் போய் அல்லாடிக் கொண்டிருந்தனர்.

இம்மாதிரியான அதிகாரிகளை முதலில் பதம் பார்த்திருக்க வேண்டாமா? அவரை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டனர். எவ்வளவு அடித்தாலும் தாங்குறவன்தான் வருவாய்த்துறை அலுவலன்.

பணிப்பதிவேடு எவ்வளவு முக்கியமான ஆவணம் என்பது எல்லாருக்கும் தெரியும். ஆனால் அது தம்முடைய பணிப்பதிவேட்டுக்கு மட்டும்தான் பொருந்தும் என்று இருப்பவர்கள் பலர்.

சில சமயம் அனுப்பப்படும் பதிவேடு தமது பிரிவுக்குத் தவறாக வந்ததென்றால் அதனை உடனடியாக திருப்பித் தரமாட்டார்கள். அதனை எடுத்து ஒரு மூலையில் வைத்துவிட்டார் என்றால் அதன் பின்னர் அது ‘இனி அவுக்காக் கட்டாக’ மாறி அங்கேயே கிடைக்கும். சம்பந்தப்பட்டவர் திக்குத் திசை தெரியாமல் திண்டாடி அதிர்ஷ்டவசமாக கண்டுபிடித்தால்தான் உண்டு. சில சமயம் சிலரது பணிப்பதிவேடுகள் பீரோவுக்கு அடியில் எல்லாம் கிடந்தது உண்டு.

ஒரு வித்தியாசமான சம்பவம். நான் கோட்டாட்சியர் அலுவலகத்தில் இருந்தபோது நடந்தது.

அங்கு பிரிவு எழுத்தர் விரைவில் ஓய்வு பெறும் நிலையில் இருந்த பெண்மணி. அவர் ஆடிட் பார்ட்டி வருகிறார்கள் என்பதால் எல்லா பதிவேடுகளையும் சப்கலெக்டர் ஒப்புதல் பெற்று அடுக்கி வைத்திருந்தார். ஆடிட் எல்லாம் முடிந்து பத்து நாள் கழித்து திடீரென்று ஒரு குண்டைப் போட்டார். “சார் என்னோட எஸ்.ஆரைக் காணோம்”. அவர்தானே பொருப்பு. அதற்காகவே அவருக்கு யாரும் திறக்கமுடியாத ஸ்டீல் பீரோ கொடுக்கப்பட்டிருந்தது.

எல்லா பிரிவிலும் தேடிப்பார்த்து ‘இல்லை’ என்று சொல்லிவிட்டனர். ஆனாலும் கண்டுபிடிக்க முடியவில்லை. குமாஸ்த்தாவோ யாரும் இல்லாத நேரத்தில் மற்ற குமாஸ்த்தாக்களின் ரிக்கார்டுகளை துளாவிப் பார்க்க, அதுவேறு பிரச்சினையாகிவிட்டது. அவரவரும் ஏதோ தம்மை சந்தேகிப்பதாக அர்த்தம் செய்து கொண்டனர். இதற்கிடையில் தங்கள் பதிவேட்டை தங்களிடமே கொடுக்கும்படி ஒவ்வொருவரும் கேட்கத் துவங்கினர். யாராவது தமது பதிவேட்டை தாமே தொலைப்பாரா? இப்படியாக ஒரு மாதம் சென்றது. இதற்குள் மந்திரம் முடிகயிறு எல்லாம் வந்து சேர்ந்தது. என்னிடம்

விசாரணைக்காக வந்த ஒருவர் தமக்கு மந்திரம் தெரியும் என்றுசொல்லி ஏதோ ஜெபம் செய்து அது இருக்குமிடம் நிறைய பேப்பர் பேப்பராக வருவதாக ஒரு கதை விட்டார். வருவாய்த்துறை அலுவலகத்தில் பேப்பரைத் தவிர தங்கக் கட்டியா கொட்டி வைத்திருக்கிறது. குமாஸ்த்தாவுக்கு தினமும் துக்க விசாரிப்புகள் இலவச ஆலோசனைகள் என்று ஒரே கலக்கல்தான். அவர்கள் சொன்னபடி சிலபல கோயில்களுக்கெல்லாம் போய்வந்தார்.

ஒரு நாள் சற்றே சோம்பலாக உட்கார்ந்திருந்த பி.ஏ. திடீரென்று எழுந்தார். என்னையும் பதிவறை எழுத்தரையும் அழைத்துக்கொண்டார். பதிவறைக்குள் சென்று ஒவ்வொரு ரேக்காக ஒரு கண்ணோட்டம்விட்டார். ஒரு ரேக்கில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த பச்சைக் கலர் அட்டை ஒட்டிய கட்டுகளை இறக்கச்சொன்னார். பார்த்தால் அதன் நடுவே. பச்சை பயிண்டு செய்த பதிவேடு ஓய்வு பெற்றவர்களின் பதிவேடுகளுக்கு இடையில் இருந்தது. ஒரு பதினைந்து நிமிடத்தில் கண்டு பிடிக்கப்பட்டுவிட்டது. அலுவலகமே ஒரே கொண்டாட்டம்தான்.

அந்த குமாஸ்த்தாவோ குறி சொன்னவரைப்பற்றி புகழ்ந்து தள்ளினார். ஆனால் இரண்டு தினங்கள் கழித்து ஒரு சந்தேகத்தினைக் கிளப்பினர் மக்கள். “அத்தனை நாள் தேடியும் கிடைக்காத அந்த பதிவேட்டை பி.ஏ. எப்படி டக்கென்று கண்டுபிடித்தார். ஒரு வேளை அவர்தான் அதனை ஒளித்துவைத்திருப்பாரோ” என்று.

எப்பவுமே உதவி செய்பவனுக்கு ஒரு சிறு பழியாவது வந்து சேரும். அது இயற்கை. அதனை மாற்ற இயலாது. அவர் ஒரு நாள்கூட பதிவறைக்குள் வந்தவரல்ல. பதிவறை சாவிகூட அவரிடம் ஒப்படைக்கப்படுவதில்லை. அவர் குயுக்தியாக ஆடிட்டுக்கு வந்த பதிவேடுகள் ரிக்கார்டுகளில் கலந்து இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் போய்ப்பார்த்து கண்டுபிடித்துவிட்டார்.

உண்மையில் நடந்ததும் அதுதான் பதிவேடுகளைக்

கொண்டுவந்து ஆடிட் பார்ட்டியிடம் காண்பித்தவர். தவறுதலாக பணிப்பதிவேட்டையும் கொண்டுபோய் அடுக்கிவிட்டார் பதிவறையில். கடைசியில் கண்டுபிடித்தவார் தலையில் பழி.

# 3 கவர்னர் வருகிறார்

நான் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் பணியில் சேர்ந்த நேரம். முதலில் தட்டச்சுப் பிரிவில்தான் சேர்ந்தேன். எங்கள் சூப்பரிண்டெண்டெண்டு ஒரு முக்கியமான அறிவுரையைச் சொன்னர்.

சில தினங்கள் முன்பாக கவர்னர் வருவதாக தகவல் வந்துள்ளது. உடனே அதற்கான முன்னேற்பாடுகளின் துவக்கமாக கவர்னர் மாளிகை செயலருக்கு ஒரு கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. அந்தக் கடிதத்தில் கவர்னரின் உணவுப் பழக்கம் குறித்து விபரம் தெரிவிக்கும்படி மாவட்ட ஆட்சியரின் சார்பில் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் அதில் இருந்த வாசகம் ‘Governor’s good habits’ விபரம் தெரிவிக்கும்படி கேட்கப்பட்டிருந்தது. ‘food habit’ என்பதற்குப் பதிலாக கையெழுத்து புரியாமல் ‘good habit’ என்று தட்டச்சு செய்துவிட்டார் அந்த டைப்பிஸ்ட். அதனை யாரும் கவனிக்காமல் கவர்னர் அலுவலகத்திற்கு அனுப்பி வைத்துவிட்டனர். வந்தது வினை. கவர்னர் மாளிகையிலிருந்து பிடிபிடி என்று பிடித்துவிட்டார்கள். விளைவு, ஊருக்கு இளைத்தவர் பிள்ளையார் கோயில் ஆண்டி என்பது போன்று டைப்பிஸ்ட்டுக்கு மாறுதல் கொடுத்துவிட்டார்கள். கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்து போட்டவர்களுக்கு ஒன்றுமில்லை.

கவர்னர் வருகிறார் என்றால் உடனே பல்வேறு பணிகள் நடக்கும் அந்தக் கூத்துக்கள் எல்லாம் பின்னாளில்தான் நான் கண்டு கேட்டு அனுபவித்தும் இருக்கிறேன்.

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு ஒரு முறை கவர்னர் வந்தார். அப்போதெல்லாம் வி.ஐ.பி வருகை என்றால் ஒரே கொந்தளிப்பாக இருக்கும் ஏதோ ஆக்ஸிடென்ட் ஆன இடத்தில் காப்பாற்றுவதற்கு ஓடி ஓடி வேலை பார்ப்பது போல் வட்டாட்சியர் பறப்பார். மேலேயிருந்து உத்திரவுகள்

பறக்கும். காலையில் ஒன்று சொல்வர். மாலையில் ஒன்று சொல்வர். போர்முனையில் இருப்பதுபோல்தான் நடவடிக்கையெல்லாம் இருக்கும்.

கவர்னர் வருகை தொடர்பாக பணி செய்ததால் அடுத்த தணிக்கைக்கு பதிவேடுகளை சரி செய்து வைக்கிறேன் என்று குமாஸ்தாக்கள் தவணை வாங்கிவிடுவர்.

ஒரு கவர்னர் வந்தார். எல்லா முஸ்தீபுகளும் செய்யப்பட்டு விட்டது. இரவு எட்டுமணி இருக்கும். வட்டாட்சியருக்கு கவர்னரின் தனி அலுவலரிடமிருந்து வந்தது ஒரு உத்திரவு. கவர்னருக்கு காலையில் டிபனுக்கு இடியாப்பம் வேண்டும் என்று. கவர்னருக்கு சாப்பாடு எல்லாம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில்தான் ஏற்பாடு செய்வர். ஆனால் நேரம் கடந்த நிலையில் ஏதும் ஏற்பாடு செய்ய இயலாத நிலைமை. வட்டாட்சியர் நேராக வந்தார் அலுவலகத்திற்கு. நாங்கள் எல்லாம் கிராமத்தில் வயல்வெளியில் ஆடு மாடு கிடைபோடுவது போன்று உட்கார வைக்கப்பட்டிருந்தோம். வட்டாட்சியர் தன் பரிவட்டங்களின் ஆலோசனை கேட்டார். யாருக்கும் புரிபட வில்லை. தோன்றியது ஒரு குயுக்தியான யோசனை.

கூப்பிட்டார் டபேதாரை. “நாளை விடிகாலையில் எனக்கு இடியாப்பம் வேண்டும்”.

அவர் தலையைச் சொரிந்தவாறே. அய்யா, ஏற்பாடு செய்ஞ்சிட்டா போச்சு கையோடு இரண்டு அலுவலக உதவியாளர்களை அழைத்தார்.

“ஏண்டா இவனே அய்யா இடியாப்பம் கேட்கிறாங்க என்ன பண்ணலாம்.” பதில் பாசிட்டிவாக வந்தது.

மறுநாள் அதிகாலை அலுவலக டிபன் கேரியரில் இடியாப்பம் வந்துவிட்டது. வட்டாட்சியர் “யாரும் மூச்சுவிடக்கூடாது நேராக பங்களாவில் கொண்டுபோய் கவர்னர் டபேதாரிடம்

கொடுத்துவிட்டு வந்துவிடு” என்று சொல்லிவிட்டார்.

முன்னதாக முக்கியப் பிரமுகர்கள், ஓட்டல்கள் எல்லாம் கேட்டுப் பார்த்து கிடைக்காத இடியாப்பம் எப்படிக் கிடைத்தது.

அந்த நாளில் விடியற்காலை நான்கு ஐந்து மணியளவில் தெருவில் “இடியாப்பேய்” என்று குரல் கேட்பது சிதம்பரத்தில் வழக்கம். ஒரு ஆள் சுமார் மூன்று அடிக்குமேல் வட்டமான ஒரு மூங்கில் தட்டில் ஒரு வெள்ளை துணியினை வைத்து அதில் இடியாப்பம் அடுக்கி அதன்மேல் ஒரு மூங்கில் தட்டு மூடி இடது கையில் ஏந்திக்கொண்டு மறு கையில் ஒரு பாத்திரமும் ஏந்திக்கொண்டு பல தெருக்களில் வலம் வருவார். நான்கூட சிதம்பரம் வந்த புதிதில் இந்த நேரத்தில் விற்கிறாரே இதென்ன அதிசயம் என்று எண்ணியதுண்டு ஆனால் அந்த அதிசயம் இந்த சந்தர்ப்பத்திற்காகத்தான் போலும்.

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் கவர்னர் விரும்பி சாப்பிட்டதாகவும். பாராட்டியதாகவும் டபேதார் சொன்னதாக வட்டாட்சியர் வந்து அலுவலகத்தில் சொன்னதுதான்.

ஆமாம். நம்மைப்போல் சாமான்யர்கள் ரசித்து ருசித்து அனுபவித்து சாப்பிடக்கூடிய சுவைமிக்க உணவுகளை எல்லாம் பெரிய இடத்தில் உள்ளவர்கள் எங்கே சாப்பிட்டிருக்கப் போகிறார்கள்.

ஒரு முறை கவர்னர் வரும் நேரத்தில் மழை பெய்யும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. மழை பெய்யவில்லை. மூட்டம்தான். உடனே குடை ஏற்பாடு செய்யும்படி வட்டாட்சியருக்கு உத்திரவு வந்துவிட்டது. ஏதோ கவர்னருக்கு ஒரு குடை ஏற்பாடு செய்யச்சொன்னதாக எண்ணிவிடவேண்டாம். மழையே கொட்டினாலும் கவனர்ருக்கு என்ன குடையா தேவை? அவர் நனையாமல் பங்களாவில் போய் இறங்கி விடப்போகிறார். எல்லாம் சுற்றி வருகிற அதிகாரிகள் பட்டாளத்திற்குத்தான். உடனே கணக்குப்போட்டார்கள் இருபத்தைந்து குடைகள் வாங்கிவிட்டனர்.

கவர்னர் வந்தார். மழை வரவில்லை. கவர்னர் போனார் மழைமேகமும் கூடவே போய்விட்டது. குடைகளை என்ன செய்வது?

வட்டாட்சியர் நேராக கடைக்காரரை கேட்டுப்பார்த்தார். அவரோ விற்ற பொருள்கள் தோஷம் பட்டிருக்கும் என்பதால் வாங்க மறுத்துவிட்டார். பேரம் பேசிப் பார்த்தார்கள். நடக்கவில்லை. இருபத்தைந்து குடைகளும் அலுவலகத்திற்கு வந்து இறங்கிவிட்டது. அவ்வளவுதான் எல்லா வருவாய் ஆய்வாளருக்கும் ஒரு குடை கொடுத்துவிட்டார். அதிகாரிகள் மட்டத்தில் கோட்டாட்சியர் முதல் துணை வட்டாட்சியர் வரை ஒரு குடை கொடுத்துவிட்டனர். மீதமிருந்ததை அலுவலகத்தில் செல்லப் பிள்ளைகளாக இருக்கும் உதவியாளர்கள் பெற்றுக்கொண்டனர். எப்படியோ குடைகள் விற்காமலே தீர்ந்துவிட்டது. பின் என்ன! இலவசமாக யானை கொடுத்தால் வாசலில் ஒன்று தோட்டத்தில் ஒன்று என்று கட்டிக் கொள்வோம். காசுக்கு என்றால் யாருக்கு வேண்டும்!

அப்புறம் குடைக்கான செலவு என்னாச்சு என்கிறீர்களா. அதுதான் வருவாய் ஆய்வாளர்கள் பொதுச் செலவில் சேர்ந்துவிட்டதே. ஆம். ஒரு விஷயம் உங்களுக்குப் புரியாது என்று நினைக்கிறேன்.

எந்த ஒரு முக்கியப் பிரமுகர் வந்தாலும், மற்றும் மாவட்ட ஆட்சியர், கோட்டாட்சியர் மற்றும் இன்னபிற அதிகாரிகள் கேம்ப் வந்தாலும் அவர்களின் சாப்பாடு முதல் பல்வேறு செலவுகள்வரை வருவாய் ஆய்வாளர்தான் பார்க்கவேண்டும். மாதம் முடிந்ததும் அந்த மாதத்தில் அவர் என்னென்ன செலவு செய்தார் என்று கணக்கினை வட்டாட்சியரிடம் கொடுத்துவிடுவார். மற்றவர்கள் போன்று வருவாய் ஆய்வாளர்கள் எல்லாம் நேராக அலுவலகத்தில் வந்து ஸ்டாம்பு ஒட்டி கையெழுத்து போட்டு சம்பளத்தை பெற்றுச்சென்றுவிட முடியாது. வட்டாட்சியர் வரும் வரை காத்திருந்து மீட்டிங்

நடக்கும். அப்புறம் வரவு செலவு கணக்கு சொல்லப்படும். அதற்கு ஒவ்வொரு வருவாய் ஆய்வாளரும் எவ்வளவு ரூபாய் பங்கு தரவேண்டுமென்று வட்டாட்சியர் முன்பாக முடிவாகும். அதனை சம்பளப் பட்டுவாடா செய்யும் அலுவலர் பிடித்துக் கொண்டு மீதியைத்தான் வருவாய் ஆய்வாளரிடம் கொடுப்பார். பணத்தைக் கொடுத்துவிட்டு பின்னர் பங்கு கேட்டு வாங்கும் பேச்செல்லாம் கிடையாது. வருவாய் ஆய்வாளர் பாட்டுக்கு பணத்தைப் பெற்றுக்கொண்டு தலைமறைவாகிவிட்டால் என்ன செய்வது.

அதைவிட அலுவலகத்தில் யாருக்குமே தாம் வரும் வரையிலும் சம்பளம் கொடுக்காதே என்று உத்திரவிட்டு ஆசுவாசமாக இரவு ஏழு மணிக்குமேல் அலுவலகத்திற்கு வந்து மீட்டிங் நடத்திய தாசில்தாரும் உண்டு என்பது சிறப்புத் தகவல்.

அதுசரி, இப்படி சம்பளத்திலிருந்து வருவாய் ஆய்வாளர்களிடம் பிடித்தம் செய்தால் அது தர்மமா நியாயமா என்றெல்லாம் கேட்காதீர்கள் இது அந்நாளில் எழுதப்படாத சட்டம். யாராவது கசந்துகொண்டு பணம் கொடுத்தால்கூட அவர் அதற்கான விலையை கொடுக்கவேண்டியதுதான். அப்புறம் எப்படி வருவாய் ஆய்வாளர்கள் நேர்மையாக இருக்கமுடியும்.

உன் யோக்கியதை என்ன என்கிறீர்களா நானும் என் நண்பன் ரகமத்துல்லாவும் வைராக்யத்திற்காக காதை அறுத்துக் கொண்டவர்கள். அதிலும் நான் எனது கடைசி ஆறு மாத கடனை அடைப்பதற்காக மதியம் ஒரு வேளை சாப்பிடாமல் பட்டினி கிடந்து மிச்சம் பிடித்து பணியிலிருந்து விடுபடும்போது யாருக்கும் கடன் வைக்காமல் வந்தேன் என்றால் நம்பவா போகிறீர்கள். ஆனால் ஒரு சந்தோஷம் எல்லாரும் எங்களை ‘பிழைக்கத் தெரியாதவர்கள்’ என்று பட்டம் கொடுத்து பாராட்டியுள்ளனர். யாருக்குக் கிடைக்கும் அந்த பேரு!

# 4 மாடு தின்ற சப்ஜெயில் ரெக்கார்டு

அந்தநாளில் சப்ஜெயில் நிர்வாகம் வருவாய்த் துறையில் இருந்தது. தலைமை-யிடத்துத் துணை வட்டாட்சியர்தான் சப்ஜெயில் சூப்பிரண்டெண்டெண்ட்-ஆகவும் வேலை பார்ப்பார். அவருக்கு உதவிக்கு என்று ஒரு கிளார்க்கு இணைக்கப்பட்டிருப்பார். இருவரும் பலவகைப் பணிகளுடன் கூடுதலாக இதனையும் கவனிக்கவேண்டும். ஒரு பியூன் (அலுவலக உதவியாளர்) சப்ஜெயிலில் இருந்துகொண்டு பார்த்துக்கொள்வார். அவர்தான் கைதிகள் அடைப்பு விடுப்பு சாப்பாடு போடுவது எல்லாம் பார்த்துக் கொள்வார். துணை வட்டாட்சியரும், சப்ஜெயில் கிளார்க்கும் காலையிலேயே அலுவலகத்திற்கு வந்துவிடுவர்.

ஏனென்றால் சப்ஜெயிலில் வைக்கப்பட்டுள்ள கைதிகளுக்கு சாப்பாடு போட்டதைக் கண்காணிக்கவேண்டும். அடுத்து, குற்றவாளிகளை (தற்போது விசாரணைக் கைதி என்று அழைக்கப்படுகிறார்கள்) கோர்ட்டில் ஆஜார்படுத்தவேண்டி கூட்டிச் செல்லக் காவலர்கள் வந்துவிடுவர். அவர்களுக்குப் பதிவுகள் செய்து அனுப்ப வேண்டும். இரவு கைது செய்யப்பட்டவர்களை அடைப்பதற்கு அழைத்து வந்துவிடுவர். அப்போதெல்லாம் அது 24 மணிநேர பணியிடம் போன்று காட்சி அளிக்கும். துணை வட்டாட்சியரும் காலை ஏழரைக்கெல்லாம் அலுவலகம் வந்துவிடுவார். அவர்கள் இருவரும்தான் பார்த்துக்கொள்ளவேண்டும்.

அப்போதெல்லாம் உண்மையிலேயே வேலைப் பளு அதிகமாக இருக்கும். இப்போதெல்லாம் வேலைப்பளு என்று சங்கம் வைத்துக் கொண்டு புலம்புகிறார்களே அந்த நாளைய வேலையில் பத்தில் ஒரு பங்குகூட

இப்போது கிடையாது என்பதுதான் கசப்பான உண்மை. உண்மையான உண்மையும்கூட.

பல கிளார்க்குகள் இரவு வெகு நேரம் வரையிலும் இருந்து வேலை பார்ப்பர். இதைப்பற்றி ஒரு கதைகூட சொல்வர். சொல்லத் தகாததுதான் என்றாலும் சொல்லப்பட்டதைத்தான் சொல்கிறேன். அந்தநாளில் விலைமாதர் வீடுகள் இருந்ததாகவும் இரவு நேரத்தில் வாடிக்கையாளார் வருவார் என்று அவர்கள் தெருவில் காத்திருப்பராம். இரவு நெடுநேரம் ஆகிவிட்டதும். அவர்தம் உடனிருப்பவர்கள் "தாலுகா கச்சேரி கிளார்க்குகூட வீட்டுக்குப் போய்விட்டான் இனி எவனும் வரமாட்டான் உள்ளே வா" என்று சொல்வராம். அப்படியானால் வட்டாட்சியர் அலுவலகங்களில் எவ்வளவு வேலை இருந்திருக்கும் என்று புரிந்துகொள்ளலாம்.

அப்போது நாங்கள் இளவட்டமாக நான்கைந்து பேர் பணியில் சேர்ந்த புதிது என்பதால் புதுத் துடைப்பமாக நன்றாகப் பெருக்கித் தள்ளுவோம். இல்லை வேலை பார்ப்போம். எல்லாரும் திருமணமாகாதவர்கள் என்பதால் வாரத்தில் ஒரு நாள் அல்லது இரண்டு நாள் முழு இரவும் அலுவலகத்தில் வேலை பார்ப்போம். இல்லையென்றால் வட்டாட்சியருக்குப் பதிவேடுகளை தணிக்கைக்கு மாதம் ஒருமுறை வைக்க நேரும்போது வாங்கிக் கட்டிக்கொள்ள வேண்டியதுதான்.

இதில் வேடிக்கை என்னவென்றால் இரவு முழுவதும் அலுவலகத்தில் வேலைசெய்துவிட்டு அதிகாலை ஆறு மணியளவில் பக்கத்து காப்பிக்கடையில் முதல் போணி செய்து காப்பி குடித்துவிட்டு வீட்டுக்கு சென்றுவிடுவோம். காலைக் கடன்களை முடித்துவிட்டு அலுவலகத்தில் சீனியர்கள் வரும் முன்னதாக வந்து வேலை செய்துகொண்டிருப்போம். இரவு கண் விழித்த அடையாளமே இருக்காது. இளமையின் முறுக்கு அப்படி துள்ளியது.

இப்படியாகப்பட்ட ஒரு நல்ல நாளிலே அதிகாலை ஆறு மணிக்கு நாங்கள் நான்குபேர் வீட்டுக்குச்

சென்றுவிட்டோம். அதில் சப்ஜெயில் கிளார்க் நண்பரும் ஒருவர். அவரது தங்கும் விடுதி வட்டாட்சியர் அலுவலகத்திற்கு எதிரில்தான் இருந்தது. அதனால் அவர் எல்லா பைல்கள் பதிவேடுகளையும் மேசைமேலேயே அடுக்கி வைத்துவிட்டுச் சென்றுவிட்டார். மிஞ்சிப்போனால் ஒரு மணி நேர இடைவெளியில் காலைக் கடனை முடித்துவிட்டு அலுவலகத்திற்கு வந்துவிடுவார். இடைப்பட்ட நேரத்தில் வார்டன் எனப்படும் பியூன் வந்து பார்த்துக்கொள்வார். மேலும் அலுவலகம் சுத்தம் செய்யும் வேலையாள் வந்துவிடுவார்.

இப்படிப்பட்ட நிலையிலும் அனைவரும் அசந்த சந்தர்ப்பத்தில் தெருசுற்றும் மாடு ஒன்று லேசாக அலுவலகத்தில் தலையை நீட்டியது. கதவோரமாக உள்ள மேசையில் பதிவேடுகளும் பைல்களும் இருந்ததைப் பார்த்ததும். அதற்கு என்ன தோன்றியதோ. தினமும் மிச்சம் மீதியை உண்டு பசியாரும் ஒருவரை அழைத்து அவருக்கு அறுசுவை விருந்து கொடுத்தால் எப்படி மகிழ்வாரோ, அப்படி தினமும் மயில்துத்தம் சேர்த்துக் காய்ச்சிய பசை தடவி ஒட்டப்பட்ட சினிமா போஸ்டர்களை சிரமப்பட்டு நாவால் துளாவி கிழித்து உண்டுவந்த மாட்டுக்கு எதிரில் பரிமாறப்பட்ட அறுசுவை உணவாகத் தென்பட்டது போலும். விருந்துண்பவர்கள் எதிரில் எத்தனை வகை பதார்த்தங்கள் வைத்திருந்தாலும் முன்னதாக ஒரு ஓரத்தில் வைக்கப்பட்ட இனிப்பினை எடுத்து உண்பர். அதுபோன்று நமது மாடும் கிரேன்போல் நீட்டிய தலையிலிருந்து நாவை சற்று முன்னதாக சுழற்றி நீட்டி சப்ஜெயில் பதிவேட்டை பற்றி இழுத்தது. இருந்ததில் சிறந்த விருந்தாக தெரிந்ததுபோலும். அப்படியே நின்று நிதானமாக யாருக்கும் தொந்தரவு தராமல் தானும் எந்த தொந்தரவும் இல்லாமல் சுவைத்துத் தின்னத் துவங்கிவிட்டது.

பானகம் அருந்தியவர்கள் நன்கு அறிவர். (பானகம் என்றால் என்ன என்று தொரியுமா? வெயிலின் கொடுமையிலிருந்து காத்துக்கொள்ள தண்ணீரில் எலுமிச்சை சாறும் வெல்லமும் கலந்து குடிப்பர்.

அக்காலத்தில் அது ஒரு சிக்கனமான சிறந்த ஆரோக்கியபானம்.) மனம் விரும்பி பானகம் குடிக்கும்போதுதான் அதில் ஒரு துரும்பு வந்து தொண்டையில் சில்மிஷம் செய்து ருசியைக் கெடுக்கும். இன்னும் சற்று தெரிந்த உதாரணம் சொல்லவேண்டுமென்றால் மணிலாப் பயறு தின்னும்போது அதன் சுவையை ரசிக்காதவர்கள் யாரும் இருக்கமுடியாது. அதேவேளையில் இடையில் ஒரு எண்ணைக்கொட்டை வாயில் சிக்கி எல்லா சந்தோஷத்தையும் கெடுத்துவிடுவது அனைவரும் அனுபவித்திருக்கக்கூடியதே. அப்படியாக ஒரு நிலைமை அந்த மாட்டுக்கு ஏற்பட்டது.

நமது நண்பர் ரூமிலிருந்து அலங்கார சகிதமாக அலுவலகத்திற்கு வந்தவர் எதிரில் ஒரு மாடு அலுவலகத்திற்குள் தலையை நீட்டிக்கொண்டிருப்பதை தூரத்திலிருந்தே பார்த்துவிட்டு மாட்டினை சப்ஜெயிலில் அடைப்பதற்காக கொண்டு வந்திருக்கிறார்கள் போலும் என்று நகைச்சுவை உணர்வைக் காட்டிக்கொண்டு வந்து பார்த்தால் அங்கே சப்ஜெயில் பதிவேடு மாட்டின் வாயில் மாட்டிக்கொண்டு ‘விஷ்ணு பரமாத்மாவை நினைத்து ‘ஆதிமூலமே’ என்று கதறிய ஐராவதம்(யானை) நிலையில்’ சத்தமில்லாமல் கதறிக்கொண்டிருந்து.

நமது நண்பர் பதைபதைத்து ஓடி அதன் வாயிலிருந்து பதிவேட்டை பிடுங்குவதற்குள் அங்கே வந்த வாடரும் (வார்டன் என்பதன் மாரியாதைச்சொல்) சேர்ந்து போராடியதில் ஒரு வழியாக பதிவேடு பாகம் பிரித்துக்கொண்டு மாட்டின் வாய்க்குள் பாதியும் நண்பர்கள் கையில் பாதியுமாகக் கிடைத்தது. பதிவேட்டைப் பார்த்தவுடன் இன்றோடு நமது வேலை காலி என்று பதைபதைத்து தலையில் கைவைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டார் நண்பர். வேலைக்கு வந்த புதிது. எந்த ஒன்றின் சாதக பாதகங்களையும் ஆராய்ந்து பார்த்து தைரியம் கொள்ள இயலாத பருவம்.

சற்று நேரத்தில் துணை வட்டாட்சியர் அலுவலகம்

வந்து சேர்ந்தார். பயத்தில் உறைந்துபோயிருந்த நண்பர் தயங்கித் தயங்கி விஷயத்தை அவரிடம் சொன்னார். ஆனால் துணை வட்டாட்சியரோ அதைக்கேட்டு சற்றும் அதிர்ச்சிகூட இல்லாமல் “போனால் போகிறது பார்த்துக்கொள்ளலாம் விடு” என்று சொல்லிவிட்டார். நண்பருக்கு சற்று ஆறுதல். ஒன்றும் பெரிய பாதிப்பு இல்லைபோலும் என்று நினைத்துக்கொண்டார். அலுவலக வேலை வழக்கம்போல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. சற்று நேரத்திற்கு ஒரு முறை “நீ இப்படி பண்ணியிருக்கக்கூடாது” என்று கொஞ்சம் கொஞ்சமாக வயிற்றில் புளியைக் கரைக்க ஆரம்பித்தார். கரைத்த புளிஎல்லாம் சாம்பார் ரசம் புளிக்குழம்பு என்று வயிற்றில் தயாராகிக் கொண்டிருந்தது போலும்.

மதியம் எல்லாரும் சாப்பிடப் போயிருந்த சமயத்தில் பக்கத்தில் இருந்த நண்பரை விளித்து “ஏம்பா நம்ம ரெண்டுபேரையும் பக்கத்து பக்கத்து செல்லில்தானே அடைப்பார்கள்” என்று அப்பாவிபோல் முகத்தை வைத்துக்கொண்டு ஆசிரியரிடம் சந்தேகம் கேட்கும் மாணவன்போல் கேட்டுள்ளார். அவ்வளவுதான் நண்பருக்கு அழாத குறைதான். அதற்குள் அலுவலகத்தில் எல்லாருக்கும் தெரிந்து துக்கம் விசாரிப்பதுபோல் ஒவ்வொருவராக வந்து கேட்க ஆரம்பித்துவிட்டார்கள். உள்ளே மனதிற்குள் “மவனே மாட்டினியா, செத்தே போ” என்று எண்ணியிருப்பர். அதுதானே மனித இயல்பு. இதில் ஆங்காங்கே கூடிக்கூடி ஏதே தீவிரவாதியைப் பற்றிபேசுவதுபோல் ரகசிய கூட்டம் வேறு.

மாலைவரையிலும் இப்படியாக ஒருவழிபண்ணிவிட்டு அப்புறம் தீர்வைப்பற்றி சொன்னார் துணை வட்டாட்சியர். நேராகச் சென்று கோர்ட்டில் சிரஸ்ததாரிடம் நடந்ததைச் சொல்லி விபரம் சேகரித்து வரும்படி சொன்னார். அதேபோன்று காவல் நிலையங்களிலும் விபரம் கேட்டு எல்லா விபரங்களையும் வைத்து பதிவேட்டினை மீண்டும் புதுப்பித்து ஒப்புதல்கள் பெற்று விடிய விடிய தயார்செய்து முடித்துவிட்டார்.

பின்னர்தான் சற்று நிம்மதி ஏற்பட்டது. இதற்குள் கோட்டாட்சியர் கூப்பிட்டு ‘நடந்தது நடந்துவிட்டது இனி சரிசெய்வதைப் பாருங்கள்’ என்று ஆறுதலும் தைரியமும் சொன்னதால் தப்பித்தார்கள்.

முறைப்படி அந்த மாட்டின் பேரில் வழக்கு போட்டு சப் ஜெயிலில் அடைத்திருக்க வேண்டும். அதற்க்கு வழி இல்லாமல் போய்விட்டது.

அதன்பின்னர் எங்களுக்கு ஒரு படிப்பினை கிடைத்தது. வட்டாட்சியர் கூப்பிட்டால்கூட மேசைமீது இருக்கக்கூடிய முக்கியக் கோப்புகளை எடுத்து அலமாரியில் வைத்து பூட்டிவைத்துவிட்டுதான் செல்வோம்.

இதற்கு நிகரான ஒரு சம்பவம் அடுத்த சில ஆண்டுகளில் நடந்தது. வாக்காளர் பட்டியலில் பெயர் சேர்க்கவேண்டி மனுக்கள் ஏராளமாக வந்தது. அதனை கிராம வாரியாகப் பிரித்து ஒவ்வொருவருக்கும் கொடுத்து புலவிசாரணை செய்ய அனுப்பிவைத்தனர். நண்பருக்கு ஒரு கிராமத்திற்கான விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டது. நண்பர் கிராமத்திற்குச் சென்று விண்ணப்பங்களை விசாரிக்கத் துவங்கினார். ஒரு வீட்டில் விசாரித்துக்கொண்டிருக்கையில் இங்கேயும் ஒரு மாடு வில்லனாக வந்துசேர்ந்தது. நண்பர் ரிஷப ராசி போலும்.

விசாரணை மனுக்களைக் கையில் வைத்துக்கொண்டு மற்றவற்றை சைக்கிள் கேரியரில் வைத்திருந்தார். சந்தடிமிக்க அந்த இடத்தில் வில்லனாகவந்த மாடு அரவமின்றி கேரியரில் இருந்த விண்ணப்பங்களில் தன் திருநாவை நீட்டி இழுத்துத் தின்ன ஆரம்பித்துவிட்டது. கூடியிருந்தவர்கள் மாட்டை அடித்துத் துரத்தினர். அதற்குள் சிலபல விண்ணப்பங்கள் மாட்டின் வாயாகிய ஆலைக்குள் அரவைக்குப் போய்விட்டது.

நண்பர் பாவம் அதிர்ந்துவிட்டார். பின் என்ன. சும்மா சும்மா மாடுவந்து வாழ்க்கையில் முட்டினால் (குறுக்கிட்டால்) என்னதான் செய்வது. இங்கே

நண்பரின் நேர்மையும், அந்த கிராமத்தின் நற்குடிகளின் குணமும் நண்பருக்கு உதவின. அலுவலகத்தில் உள்ள பதிவேட்டில் உள்ள பட்டியலுடன் ஒப்பிட்டுப் பார்த்து மனுதாரார்களை அழைத்து அவர்களிடம் வேறு விண்ணப்பங்கள் பெற்று சரிசெய்துகொள்ளப்பட்டது. இந்த காலத்தில் இப்படி நடந்தால் கதையே வேறுதான்.

இதேகிராமத்தில் எனக்கும் ஒரு அனுபவம் உண்டு. நான் வருவாய் ஆய்வாராக இருந்தபோது நிலவரி, கடன் வசூல் ஆகியவை ஜப்தி செய்யும் அளவுக்கு கெடுபிடியாக வசூலிக்க உத்திரவிடப்பட்டது. குடிகள் மிகவும் அசட்டையாக இருந்தனர். ஜீப்புகளில் மைக் கட்டிக்கொண்டு பொதுமக்களுக்கு மிரட்டல் விடுவதும், வரிகட்டாதவர் நிலத்தில் அறுவடை செய்வதை மறிப்பது போன்று ‘மிலிட்டாரி ரூல்’ நடந்தது. அப்படிப்பட்ட ஒருநாளில் மேற்படி கிராமத்தில் முகாமிட்டு ஜீப்பில் ஒலிபெருக்கி மூலம் மக்களுக்கு மிரட்டல் வேண்டுகோள் விட்டுக் கொண்டிருந்தோம். பத்து பதினைந்து கிராம நிர்வாக அலுவலர்கள் மற்றும் அடியாள் பட்டாளத்துடன் - அடியாள் என்றால் எங்கள் பாஷையில் தலையாரி (தற்போது கிராம உதவியாளர்) என்று அர்த்தம் வசூல் பணி நடந்துகொண்டிருந்தது.

ஒரு பத்து நிமிடம் இப்படிப்பட்ட உதார்களை விட்டுவிட்டு ஜீப்பில் ஏறி மன்னார்குடிக்கு வந்துகொண்டிருந்தோம். பாலத்தைக் கடந்தவுடன் அந்தப் பகுதியில் வசூல் பணிக்காக ஜீப்பினை நிறுத்தினோம். ஒரு நபர் வேகமாக வந்து என் முன்பாக நின்று ஐயா நீங்கள் இந்த பதிவேடுகளை விட்டுவிட்டு வந்துவிட்டீர்கள் இந்தாருங்கள் என்று கொடுத்தார். சுமார் மூன்று கிலோமிட்டர் தூரம் எங்கள் ஜீப்புக்கு ஈடுகொடுத்து சைக்கிள் மிதித்து வந்திருக்கிறார். அந்த கட்டில் எனது வரிவசூல் குறித்த கிராம வாரி விபரங்கள் பதிவேடுகள் இருந்தன. முக்கியமான பதிவேடுகள்தான். இது எப்படி உங்களிடம் கிடைத்தது என்றேன்.

நடந்ததைச் சொன்னார். நான் ஜீப்பின் அருகில்

நின்றுகொண்டு புறப்படும் முன்பாக என் கையிலிருந்த கட்டினை ஜீப்பின் பேனட்டின்மேல் வைத்துவிட்டு கத்திய களைப்புக்கு சிரமபரிகாரமாக தேநீர் அறுந்திவிட்டு அடுத்த ஊரில் பந்தா பண்ணும் உத்தேசத்தில் வேகமாக ஜீப்பில் ஏறிப் புறப்பட்டு விட்டிருக்கிறோம். பேனட்மீது வைத்திருந்த கட்டானது ஜீப் சற்று நகர்ந்ததும் கீழே விழுந்திருக்கிறது. அதனைப் பார்த்த நபர் “நம்ம ஆர்.ஐ. வைத்திருந்தது” என்று கண்டுகொண்டு எடுத்துக்கொண்டு வந்துள்ளார். உண்மையில் நான் அவரது இடத்தில் இருந்திருந்தால் அப்படி பொறுப்புடன் நடந்திருப்பேனா என்பது கேள்விக்குறிதான். என் நண்பனும் நானும் அடுத்தடுத்து வருவாய் ஆய்வாளராகப் பணிபுரிந்து கிராமத்து மக்களைக் கெடுத்துவிட்டோம். பின் என்ன வருவாய் ஆய்வாளர் என்றால் எல்லாரையும் கசக்கிப் பிழிந்து வசூல் செய்து தம்மை வளர்த்துக்கொள்ள வேண்டாமா. அதைவிடுத்து பரிவும் பாசமும் நட்புணர்வும், அவர்களில் ஒருவன் என்ற வகையிலும் பழகினால் அடுத்து வரும் அலுவலர்களுக்கு யார் லஞ்சம் கொடுப்பர். உடையார்குடி குறுவட்டத்தில் கட்டுப்பட்ட கிராமத்தினர் ஐந்து ஆண்டுகால நடைமுறையில் லஞ்சம் என்றால் என்ன என்பதையே மறந்துவிட்டனர். அதனால் அடுத்தடுத்து வந்தவர்கள் “ரெண்டுபேரும் பிர்க்காவை கெடுத்து வைத்திருக்கிறார்களே” என்று புலம்பும் அளவிற்கு செய்த கொடூரோர்கள் அல்லவா நாங்கள்.

ஆனால் ஒன்று. முப்பது ஆண்டுகள் கடந்த நிலையில் இன்றும்கூட அந்தப் பக்கம் சென்றால் கிடைக்கும் பரிவும் அன்பும் என்னென்று சொல்வது. அதைவிட ஒன்று என் மனைவிக்காக சிதம்பரத்தில் ஒரு மருத்துவ மனையில் நின்று கொண்டிருந்தேன். ஒரு முஸ்லிம் பெரியவர் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். நானும் இவர் ஏன் இப்படி உற்று உற்றுபார்க்கிறார் என்று எண்ணிக்கொண்டேன். திடீரென்று என் அருகில் வந்து நீங்கள் மன்னார்குடி தாசில்தாரா இருந்தவர்தானே என்றார். இல்லை என்று சொல்லியும் அவர் என்னை நன்கு தெரியும்

என்று சொன்னார். அப்போதுதான் நான் சுதாரித்துக்கொண்டு நீங்கள் எந்த ஊர் என்றதும் லால்பேட்டை என்றார். நான் அங்கு ஆர்.ஐ.யாக முப்பது ஆண்டுக்கு முன் வேலை பார்த்தேன் என்றேன். அப்போதுதான் அவர் நினைவு கொண்டு தமக்கு சிமென்ட் வழங்கிய விபரத்தை குறிப்பிட்டு நலம் விசாரித்தார். அந்த ஊரில் பாதி வீடுகள் நான் கொடுத்த சிமென்ட் மூலம் அந்த நாளில் கட்டிய வீடுகள்தான். சகோதரர் நினைவூட்டி நெகிழ்ந்தது என்றும் மறக்க முடியாதது.

எங்கள் மீது மாட்டுக்கு மட்டும் பாசம் என்றில்லை. அதைவிட மனிதர்களுக்கும் பாசம் அதிகம்.

# 5 அஞ்சல் வாக்குப் பெட்டியை உடை – அதிகாரி கட்டளை

தேர்தல் என்றாலே அது திருவிழா போன்றதுதான். அது அரசியல் கட்சிக்குமட்டுமா பொருந்தும். தேர்தல் நடத்தும் அலுவலகங்களுக்கும் பொருந்தும்.

தேர்தல் சுமுகமாக நடப்பது என்பது அதில் ஈடுபடும் அலுவலர்களின் புத்திசாலித்தனமான, பொறுப்புமிக்க, அர்ப்பணிப்புடன்கூடிய வேலையில்தான் - வேலையில் மட்டும்தான் இருக்கிறது. அதில் ஒன்று குறைந்தாலும். பலப்பல சிக்கல்கள் வந்து சேரும். தவறு சற்றே பெரிதானாலும், தேர்தல் நடத்தும் அலுவலர் கோர்ட்டில் போய் நிற்க வேண்டியதுதான். வேலைக்கும் பங்கம் ஏற்படும் என்பதை சொல்லத் தேவையில்லை.

நான் காட்டுமன்னார்கோயில் தேர்தல் துணை வட்டாட்சியராக இருந்த நேரம். தேர்தல் பணிகள் துவங்கி நடைபெற்றுவந்த நிலையில் வேலை மந்தமாக நடக்கிறது என்பதை கருத்தில் கொண்டும் நான் ஏற்கனவே பார்த்துவந்த பணியிடம் காலாவதியான நிலையில் எனக்கு பணியிடம் வழங்கவேண்டும் என்ற கட்டாயத்தில் என்னை இங்கே கொண்டுவந்து மாட்டித் தொங்க விட்டுவிட்டார்கள்.

பணியிடத்தில் சேர்ந்தவுடன் சம்பிரதாயப்படி சிதம்பரம் சப்கலைக்டர் ஆபீசில் வந்து எல்லாருக்கும் சலாம் அடித்துவிட்டு கோட்டாட்சியரைப் போய்த் தரிசித்தேன். அவர் ஒரே அறிவுரைதான் சொன்னார். காட்டுமன்னார்கோயிலில் தேர்தல் பிரிவுபற்றி புகார் மயமாக உள்ளது. வேலையும் எதுவும் நடக்கவில்லை. நீங்கள் சற்று பொறுப்பு

எடுத்துக்கொண்டு செய்ய வேண்டும் என்றார். நானும் “எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன்” என்று அசட்டுத் தைரியத்துடன் சொல்லிவிட்டு வந்து விட்டேன்.

அப்புறம்தான் தெரிந்தது ஒரு வேலையும் சரியாக இல்லை என்பது. தேர்தலுக்கு ஒரு மாதம் மட்டும்தான் இருந்தது. கடலூரிலிருந்து வந்த தேர்தல் நடத்தும் அலுவலர் மிக நன்றாகவே குழப்பினார். அதிகாரம் மட்டும் கொடிகட்டிப் பறந்தது. இங்கே எனது முன்னனுபவம் மட்டுமே கைகொடுத்தது. ஐந்து துணை வட்டாட்சியர்கள் அங்கே இருந்தும் யாரும் அதைப்பற்றி கண்டுகொள்ளவும் இல்லை. உதவிக்கு வரவும் இல்லை. தேர்தல் என்றால் ஊர்கூடித்தான் தேர் இழுத்தாக வேண்டும்.

ஆகட்டும் விஷயத்திற்கு வருவோம். இப்படியாகத்தானே நாளொரு குழப்பமும் பொழுதொரு சந்தேகமுமாக நடந்துகொண்டிருந்த நிருவாகத்தில் நான் சற்று தடுமாறித்தான் போனேன். என் நண்பரும் தேர்தல் பிரிவில் பலமுறை பணிசெய்தவருமான துணை வட்டாட்சியர் திரு பத்மனாபன் (நல்லவர்கள் பெயரை எந்த இடமாக இருந்தாலும் கட்டாயம் குறிப்பிடத்தானே வேண்டும். அதுதானே பண்பாடும், நாகரிகமும்) என்பவர் ஒருபக்கம் சிவில் சப்ளை பிரிவில் மண்டையைப் பிய்த்துக் கொண்டிருந்தார். நான் பணியேற்றதும் தன் வேலைப்பழுவையும் பொருட்படுத்தாமல் என்ன செய்யவேண்டுமானாலும் என் உதவி எப்போதும் உங்களுக்கு உண்டு என்று கைகொடுத்தார்.

ஏற்கனவே தேர்தல் பிரிவில் தற்காலிகமாக வேலைசெய்து சம்பளம் தரப்படவில்லை என்று நின்றுவிட்டவர்களை வரவழைத்து அவர்களுக்கு சமாதானம் சொல்லி ஒருங்கிணைத்து வேலையை முடுக்கிவிட்டேன். நான் பொருப்பில் அமர்ந்தவுடன் எல்லாரும் உதவிக்கு வந்துவிட்டனர். இதெல்லாம் என் முகராசியல்ல. என்னுடைய பவரும் அல்ல. நான் ஒருபோதும் யானைமேல் உட்கார்ந்துகொண்டு அதிகாரமாக பீடிக்கு நெருப்பு கேட்பவனல்ல.

எல்லாவற்றுக்குமான கடைசிக் கட்டம் வந்தது. ‘நடுவில் சில பக்கங்கள் காணாமல் போகவில்லை. தேவைப்படாமல் கிழிக்கப்பட்டுவிட்டன.’ அப்புறம் ஹைலைட்டுக்கு இடம் போதாதல்லவா. அதனால்தான்.

வாக்குப் பதிவு முடிந்து வாக்கு எண்ணும் நாள் வந்தது. காலை எட்டுமணிக்கு வாக்கு எண்ணிக்கை துவங்கவேண்டும். ஆறு தொகுதிகள் ஒரே இடத்தில் சிதம்பரத்தில் எண்ணப்பட்டது. ஐந்து தொகுதி தேர்தல் நடத்தும் அதிகாரிகளும் வெகு முன்னதாக வந்து ஏற்பாடுகளை சரி செய்துகொண்டிருந்தனர். படைகள் எல்லாம் போருக்குத் தயாராக தோள் தினவெடுத்து நிற்கும்போது தளபதி வராத நிலையின் தவிப்புடன் எங்கள் அதிகாரி எங்கே எங்கே என்று தவித்த நிலை. பள்ளிக்கூட கேட் மூடும் வேளையில் ஓட்டமாக ஓடிவரும் மாணவனின் நிலையில் பரபரப்புடன் வந்தார் எங்களவர்.

வந்தவுடன் கேட்ட கேள்வி ‘அஞ்சல் வாக்குப்பெட்டி சாவி எங்கே’ என்பதுதான்.

இங்கே ஒரு விஷயத்தை சொன்னால்தான் புரியும். தேர்தல் பணியில் ஈடுபடுத்தப்படும் அலுவலர்களுக்கு அவர்கள் வாக்களிக்க ஏதுவாக அஞ்சல் வாக்கு வழங்கப்படும். அதனை அவர்கள் வாக்கு எண்ணும் நாள் காலை வாக்கு எண்ணிக்கை தொடங்கும் முன்னதாகக் கொண்டுவந்து அதற்கான பெட்டியில் சேர்த்துவிடுவர். எங்கள் தொகுதிக்கான பெட்டி சீல் வைக்கப்பட்டு கடலூர் அலுவலகத்தில் வைக்கப் பட்டிருந்தது. பெட்டியின் பொறுப்பு தேர்தல்நடத்தும் அலுவலருடையது. முன்னதாக அவர் எங்களிடம் மிகச்சிறந்த பூட்டு இன்ன கம்பெனி இத்தனை லீவர் இவ்வளவு பெரிது என்றெல்லாம் கண்டிப்புடன் பின்பற்றி வாங்கிக்கொண்டுவிட்டார். தேர்தல் முடிந்தப்புறம் நம் வீட்டுக்கு நல்ல பூட்டு தேவைப்படும் அல்லவா. யார் வாங்கிக் கொடுப்பர்.

நடுநாயகமாக தேர்தல் நடத்தும் அலுவலர், அவருக்கான பரிவாரங்கள் வேட்பாளர் ஏஜெண்டுகள் என்று பதினைந்து இருபதுபேர்

உட்கார்ந்திருக்க அவருக்கு எதிராக ஒரு காலியிடம் விடப்பட்டு அதனைச்சுற்றிலும் 'ப' வடிவில் வாக்கு எண்ணும் பணியாளர்கள், கட்சி ஏஜெண்டுகள் எல்லாம் நூற்றைம்பது பேருக்கு மேல் இருந்தனர்.

இத்தனைபேர் மத்தியில் தாமதமாக வந்ததும் இல்லாமல், வந்தவுடன் ஏதோ சாவியை என்னிடம் கொடுத்து பத்திரப்படுத்தச் சொன்னதுபோலவும் நான் பொறுப்பில்லாமல் இருந்தது போலவும் "எங்கைய்யா பெட்டிசாவி" என்றார் அதிகாரி. எனக்கு அதிர்ச்சியும் கோபமும் கையாலாகாத்தனத்தினால் ஏற்பட்ட வெறுப்பும் என்ன செய்வது என்ற பதட்டமும் ஏற்பட்டுவிட்டது. எங்கள் வட்டாட்சியருக்குப் பயங்கர கோபம் வந்துவிட்டது. அவர் "பசுபதிலிங்கம் பேசாமல் இருங்க நான் பேசிக் கொள்கிறேன்" என்று சமாதானப்படுத்திவிட்டு ஒரு கடி கடித்தார் அதிகாரியைப் பார்த்து.

இப்ப என்ன செய்வது என்று அதிகாரி கேட்க "நீங்கள்தானே பாஸ் நீங்கள்தான் வழிசொல்லவேண்டும்" என்று அடுத்த கடி விழுந்தது வட்டாட்சியரிடமிருந்து. பார்த்தார் அதிகாரி பூட்டை உடைத்து விடுங்கள் என்றார்.

நான்தானே பொறுப்பு அலுவலர். நான்தான் செய்தாகவேண்டும். உடனே அலுவலக உதவியாளரை அழைத்து பெட்டியை உடையுங்கள் என்றேன். ஊகும். அந்த பயில்வானால் முடியவில்லை. பட்டென்று நான் வாங்கி முயற்சித்தேன். பயில்வானால் முடியாதது ஓமக்குச்சிக்கு சாய்ந்துவிடுமா என்ன! எல்லா பாணங்களும் தோற்றுவிட்டன. நாங்கள் என்ன போர்க்களத்திற்கா வந்திருக்கிறோம். அல்லது ஒர்க்ஷாப் வைத்திருக்கிறோமா. அப்படியே ஆயுதங்கள் வைத்திருந்தால்தான் உள்ளே விட்டுவிடுவார்களா என்ன. கையில் கிடைத்த பேப்பர் வெய்ட் முதற்கொண்டு பெட்டிகளில் சுற்றப்படும் கம்பியை வெட்டுவதற்கான கட்டிங்பிளேயர் வரை எல்லாவற்றாலும் முயன்றுபார்த்தும். ஒன்றும் அசைந்து

கொடுக்கவில்லை. அந்தப் பெட்டி என்ன இந்தக்காலத்தில் டெண்டர் விட்டு கமிஷண் அடிப்படையில் வாங்கியதா என்ன! இம்சை அரசன் இருபத்துமூன்றாம் புலிகேசியின் வாள் கைப்பிடிபோல் சுலபமாகக் கழன்றுகொண்டுவிட!

அது ஐம்பது ஆண்டுக்கு முன்னர் கல்மிஷம் தெரியாத அலுவலர்கள் வாங்கி வைத்திருந்த ஆவணங்கள் வைத்துப் பாதுகாப்பு செய்யும் பெட்டி. அதனிடம் எங்கள் ஜம்பம் ஏதும் செல்லவில்லை. ஆனால் பெரிய பட்டறையில் வேலைநடக்கும் போது ஏற்படும் சத்தம்போன்று எங்கள் இருப்புப்பெட்டி சத்தம் கொடுத்து ஆராய்ச்சி மணி அடிப்பது போன்று எல்லாரையும் ஸ்தலத்திற்கு வரவழைத்துவிட்டது. அந்த ஹாலில் இருந்த நுற்றைம்பது பேர் மட்டுமின்றி காவலர்கள் பக்கத்து ஹாலில் இருந்தவர்கள் சிலர் என்று எல்லாரும் வந்து ‘ஏதோ நான் நிராயுதபாணியாக புலியுடன் மோதுவதைப் பார்ப்பதுபோல்’ சுற்றி நின்று வேடிக்கை பார்க்கின்றனர். பத்திரிக்கைகாரர்கள் போட்டோ எடுக்கின்றனர். இப்படியாக துவந்த யுத்தத்தில் நான் வேர்த்துக் குளித்துவிட்டேன். அடுத்த ஹாலில் வாக்கு எண்ணிக் கொண்டிருந்த சிதம்பரம் கோட்டாட்சியருக்கு தகவல் போய் அவர் என்னைக் கூப்பிட்டனுப்பினார். நான் விட்டால்போதும் என்று ஓடினேன். அவர் என்ன நடந்தது என்று சிரித்துக்கொண்டே கேட்க நான் அவசரத்திலும் விஷயத்தை சொன்னேன். உடனே அவ்வளவுதானே இந்தாருங்கள் என்று ஒரு சுத்தியலை என்னிடம் கொடுத்தார். அதுதான் ஒரு அதிகாரிக்கான அலங்காரம்.

பெட்டி உடைப்பின் இரண்டாம் அத்தியாயம் தொடங்கியது. நம்ம ஹீரோ (பூட்டு) எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. ஆளாளுக்கு ஐடியாமட்டும் சொல்லிக் கொண்டிருந்தனர். இந்த களேபரத்தில் அரைமணி நேரத்திற்கு மேல் கடந்துவிட்டது. மற்ற தொகுதிகளில் வாக்கு எண்ணிக்கை ஆரம்பித்துவிட்டது. இங்கேயென்றால் சுத்தியல் அடிக்கும் அசையவில்லை, அந்த பூட்டும்

கம்பீரமாக அதைத் தாங்கி நின்ற அந்த இரும்பு பெட்டியும்.

அப்போதுதான் வந்தது. கிளைமாக்ஸ் கட்டம். அருகில் நின்றுகொண்டிருந்த எங்கள் அதிகாரி பேண்ட் பாக்கெட்டில் கைவிட்டு ஒரு கொத்து சாவியை எடுத்து என்னிடம் நீட்டியபடியே “நேற்று ஒரு சாராயக்கடை சீல் வத்தேன் அந்த சாவி இது. திறக்கிறதா பாருங்கள்” என்றார்.

சற்றும் மனம் தளராத விக்கிரமாதித்தன் முருங்கை மரத்தின் மீது மீண்டும் ஏறி பிரேதத்தை வெட்டி எடுத்துக்கொண்டு வந்ததுபோன்று அந்த சாவியை வாங்கி பூட்டில் விட்டேன் அடுத்த நொடியில் இத்தனை அடிவாங்கியும் சற்றும் என்மேல் கோபத்தைக்காட்டாத அந்த ரோஷம்கெட்ட பூட்டு டக்கென்று ஒரு சிறு மூச்சுப் பேச்சுமின்றி திறந்துகொண்டது. இந்த இடத்தில் நீங்களாக இருந்தால் என்ன செய்திருப்பீர்கள் சொல்லுங்கள்.

தன்னிடமே சாவியை வைத்துக்கொண்டு இத்தனை நேரம் ஆட்டம் காட்டிய அதிகாரி அந்த சாவி அதற்குரியதல்லவென்றும் தாம் முன்தினம் சாராயக்கடை சீல் வைத்த பூட்டின் சாவிதான் என்றும் சாதித்தார். தப்பு செய்யும் அதிகாரியை அடிக்கலாம் என்று சட்டம் அனுமதி அளித்திருந்தால் நான் குறைந்தபட்சம் ஒரு அறையாவது விட்டிருப்பேன். என்ன செய்வது நினைப்பதெல்லாம் நடந்துவிடுமா என்ன.

ஒருவழியாக அஞ்சல் வாக்குப் பதிவு எண்ணப்பட்டது. அடுத்து வாக்குச்சாவடி பெட்டிகள் எண்ணும் பணி துவங்கியது. நான் அடைந்த வெறுப்பிலும் அவமான உணர்விலும் யாரிடமும் சொல்லாமல் பக்கத்து அறையில் போய் படுத்துவிட்டேன்.

சற்று நேரம் கழித்து கடலூரில் மேற்படி அதிகாரியிடம் வேலைபார்க்கும் என் நண்பர் வந்து என்னை சமாதானப்படுத்தி இதற்கு ஒரு முன்கதையை சொன்னார் பாருங்கள் அதுதான் பெரிய

கிளைமாக்ஸ். காலையில் அஞ்சல் வாக்குப் பெட்டியை எடுத்துக்கொண்டு ஜீப்பில் புறப்பட்டு பாதி தூரம் வந்ததும் அதிகாரி, பெட்டி சாவி எங்கே என்று ஒரு சந்தேகம் கிளப்பியிருக்கிறார்.

“என்னசார் கேட்கிறீங்க எங்களை நம்பாமல் நீங்கள்தானே ஆரம்பம் முதல் வைத்திருக்கிறீர்கள். இப்ப வந்து என்னை கேட்டால் எப்படி” – இது நண்பர் “அப்ப வண்டியைத் திருப்பு அலுவலகத்தில் போய் பார்த்துவிடலாம்” – இது அதிகாரி

வண்டி திரும்பி மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கு போனது. அங்கேயும் இல்லை. நேரமாகிறது என்பதால் மீண்டும் பயணம். கடலூர் ஓ.டி வந்ததும் அதிகாரிக்கு ஒரு ஆலோசனை. இப்போதே நேரமாகிவிட்டது. அங்கு போனதும் வாக்கு எண்ணிக்கை துவங்கவேண்டும். எனவே, போகும்போதே பெட்டியின் பூட்டை உடைத்துவிடலாம் என்று சொல்லியிருக்கிறார்.

“சார் அதெல்லாம் வேலைக்காகாது. நாளைக்கு பெட்டி உடைக்கப்பட்டிருந்தது என்று பிரச்சினை வந்தால் நீங்கதான் மாட்டிப்பீங்க. உடைச்சது நான் என்று வந்தால் நான் உள்ளே போகவேண்டியதுதான். வேணும்ணா நீங்களே உடைச்சுக்குங்க. நான் பொறுப்பாக மாட்டேன்” - இது நண்பரின் கண்டிப்பு.

இந்தக் கதையை கேட்டதும் அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. இப்படிப்பட்ட அதிகாரியிடம் ஒரு மாதம் வேலைபார்த்ததே இப்படி நமக்குக் கண்ணை கட்டுதே. நண்பர் பல நாளாக எப்படி வேலைபார்க்கிறார் என்று என்னை நானே தேற்றிக்கொண்டேன்.

சிலநாட்கள் சென்றன. எங்கள் கோட்டாட்சியர் வேறு இடத்திற்கு மாற்றலானார். பிரிவு உபசார விழா நடைபெற்றது. சிதம்பரம் மற்றும் காட்டுமன்னார்கோயில் வட்டத்தில் வேலைபார்த்த கிராம நிர்வாக அலுவலர் முதல் வட்டாட்சியர்கள் வரை எல்லாரும் கலந்துகொண்டனர். கோட்டாட்சியர் பேசினார். அப்போது “காட்டுமன்னார்கோயில்

துணை வட்டாட்சியராக பசுபதிலிங்கம் பணியில் சேர்ந்தபோது எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன் என்று சொன்னார். உண்மையில் அதன் பின் நான் காட்டுமன்னார்கோயில் தேர்தல் பணிபற்றி சற்றும் கவலைப்படவும் இல்லை. அந்தப்பக்கம் போகவும் இல்லை. என்ன நடக்கிறது என்று விசாரிக்கவும் இல்லை. ஒரு சிறு பிரச்சினைகூட எழாமல் பொறுப்பாக செய்து முடித்தார் இந்த நேரத்தில் அவரை நான் பாராட்ட வேண்டும்" என்றார். ஒரு மூலையில் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்த எனக்கு ஒரு இன்ப சிலிர்ப்பு ஏற்பட்டது உண்மை.

பைபிளில் காணப்படும் ஒரு பொன்னான வரி "நல்ல ஊழியக்காரனால்தான் நல்ல எஜமானனாக இருக்கமுடியும்" என்பது. உண்மையில் அவர் ஒரு நன் மேய்ப்பராகவே இருந்தார் என்பதில் சற்றும் சந்தேகமில்லை. அதனை அவருக்கு வழங்கப்பட்ட வழியனுப்பு விழா நிருபித்தது. அப்படிப்பட்ட நல்ல அதிகாரியின் பெயரைக் குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை. அவர்தான் பின்னாளில் திண்டுக்கல் மாவட்ட ஆட்சியராகப் பணிபுரிந்த திரு வெங்கடாசலம் அவர்கள். இப்படிப்பட்ட அதிகாரிகளின் கனிவான அணுகுமுறையினால்தான் பணிச்சுமை எப்படி இருந்தாலும் சந்தோஷமாக கீழ்நிலை அலுவலர்கள் வேலைபார்க்கிறார்கள் என்றால் அது பொய்யல்ல.

"வேலை செய்கிறவனுக்கு வேலைகொடு, வேலை செய்யாதவனுக்குப் புரமோஷண் கொடு" என்கிற ஒரு எழுதப்படாத நடைமுறை வருவாய்த் துறையிலே உண்டு. வேலை தெரிந்துகொண்டு ஆர்வமுடன் வேலை செய்பவர்கள் எல்லாரைம் கோர்ட்டு கேஸ், குப்பையாக கிடக்கும் இருக்கை, சிக்கல்கள் நிறைந்த கோப்புகள் பயமுறுத்தும் நிலையில் உள்ள பிரிவு என்று அதில் துக்கிப் போட்டுவிடுவார்கள். அது நான் வேலைக்கு சேர்ந்த காலத்திலிருந்தே நடைமுறையில் உள்ளதுதான்.

இங்கே அதிகாரி தன் ராஜதந்திரத்தை கையாளுவார். திடீரென்று அதிகாரி ஒரு குமாஸ்த்தாவை

கூப்பிடுவார். சென்று சலாம் அடித்ததும் உட்காருங்க என்று உபசாரம் செய்வார். சில வினாடிகள் கழித்து மணி அடித்து டபேதாரை அழைத்து “டீ கேட்டேனே இன்னும் வரலியே இரண்டா சொல்லுங்க” என்பார். அதற்குள் சூடான டீக்கு பதிலாக ஐஸ்கட்டி ஒன்று நம் தலையில் வைக்கப்படும்.

தொடருவார் அதிகாரி. “எனக்கு உங்களால் ஒரு உதவி வேண்டும். தினமும் … … இன்ன பிரிவினால் எனக்கு பிரச்சினைதான். அந்த ஆள் என்னதான் வேலை செய்கிறானோ தெரியவில்லை. ஆனா ஒரு பைல்கூட நகரவில்லை. கொஞ்சம் அந்த சீட்டை நீங்கதான் கரையேத்தனும். அந்த சீட்டை பிரித்து உங்ககிட்டே அட்டாச் செய்துவிடுகிறேன். கொஞ்சம் சரி பண்ணுங்க”

நம்மைப்போன்ற அப்பாவிகளுக்கு ஒரு பெருமை தலைக்கு ஏறும். சரி என்று வந்துபார்த்தால் பின்னர்தான் தெரியும். முனிசிபாலிட்டி குப்பை கிடங்கின் நிலையில் பிரிவு இருக்கும். நாம் உள்ளே புகுந்து மண் வேறு, குப்பை வேறு, பிளாஸ்ட்டிக் கழிவு வேறு என்று தரம் பிரித்து மூட்டை கட்டிவைக்கிறமாதிரி வேலை செய்யணும். அப்போது அதிலிருந்து வரும் நாற்றம் அறுவருப்பு எதுவும் நமக்கு தெரியாது ஏனென்றால் நாம்தான் அதிகாரியின் மோதிரக் கையால் குட்டு வாங்கிக்கொண்டு வந்திருக்கிறோமே. அவர் வைத்த ஐசில் நம் மூளையின் சிந்திக்கும் பகுதிதான் ஃப்ரீஸ் ஆகி விட்டதே.

# 6 தரிசனத்திற்கு சீட்டுப்பிடி

இப்போதெல்லாம் அதிகாரிகள் கொஞ்சம் திருந்திவிட்டார்கள். நான் சொல்லவருவது சுமார் இருபத்தைந்து ஆண்டுக்கு முன்புவரை நடந்தது.

சிதம்பரம் அருள்மிகு நடராசப் பெருமான் ஆலயத்தில் ஆண்டுக்கு இரண்டு முறை ஆனி மாதம் ஒன்றும், மார்கழிமாதம் ஒன்றும் தரிசனம் நடைபெறும். அப்போது மட்டும் நடராசர் பிரதிமையை தேரோட்டம் முடிந்ததும் ஆயிரங்கால் மண்டபத்தில் வைத்து அதிகாலை அபிஷேகம் நடைபெறும்.

அதற்காக வெளி மாவட்டங்களில் இருந்தும் சென்னையிலிருந்தும் அதிகாரிகள் வந்துவிடுவர். எல்லாம் அலுவலகப் பணி என்ற போர்வையில்தான். இதுவன்றி மாவட்ட ஆட்சியர், வருவாய் அலுவலர், பக்கத்து கோட்டாட்சியர் என்று ஒரு பட்டாளம் வரும். யாரும் தனியாக வரமாட்டார்கள். மனைவி மக்கள் உறவுக்காரரர் வேலைக்காரரர் என்று பந்தாவாக வந்துவிடுவர். அவர்கள் வளர்ப்பு நாய் பூனை தவிர. முன்தினம் வட்டாட்சியருக்கு போன்மூலம் கோரிக்கைபோன்று உத்திரவு வரும். அபிஷேகம் பார்க்க இடம் ஏற்பாடு செய்து கொடுக்கும்படி.

இந்த வழக்கம்தான் எங்களுக்கு தெரியுமே. நாங்கள் மட்டும் என்ன 'வருவாய் துறையினரால் முடியாதது யாராலும் முடியாது' என்று பெயர் எடுத்தவர்கள் ஆயிற்றே. விடுவோமா. கிராமங்களுக்கு உத்திரவு பறக்கும் எப்படியும் இருபத்தைந்து தலையாரிகளை (தற்போது கிராம உதவியாளர் என்று பெயர்) வரவழைத்துவிடுவோம். அனைவரும் வட்டாட்சியர் அலுவலகம் என்ற பட்டியில் மாலை முதல் அடைக்கப்படுவர்

இரவு வட்டாட்சியர் வருவார். எல்லாருக்கும் ஏதேனும் உணவு வழங்கப் பட்டாலும் படலாம். ஆனால்

அறிவுரை மட்டும் கண்டிப்பாக வழங்கப்படும். எல்லாருக்கும் ஒவ்வொரு போர்வை / டேபிள் கிளாத் வழங்கப்படும். அவர்கள் அதனை எடுத்துச் சென்று ஆயிரங்கால் மண்டபத்தின் முன்பாக விரித்து அதில் உட்கார்ந்துகொள்ளவேண்டும். இல்லையென்றால் பொதுமக்கள் அங்கு வந்து முன்னதாக இடம் பிடித்துவிடுவர். அப்புறம் அதிகாரி எங்கு உட்காருவார். அவர்கள் என்ன முஸ்லிம்களா? தொழுகைக்கு வரும்போது முதலில் வருபவர் முதல் வரிசையிலும் கடைசியில் வருபவர் கடைசியிலும் நின்று தொழுகை செய்வதற்கு. அதிகாரிகள் பக்திப் பரவசத்தின்பேரிலா வருகிறார்கள்! அதிகாரத்தின் பேரிலல்லவா வருகிறார்கள். தாமதமாக வந்தாலும் இடம் கொடுக்க வேண்டியது வட்டாட்சியர் கடமையாயிற்றே. இல்லையென்றால் ‘என்னையா நீர் தாசில் உத்தியோகம் பார்க்கிற லட்சணம்?’ என்று கேட்டுவிட்டால் என்னாவது.

ஆக முன் இரவிலேயே பக்தர்கள் வரும் முன்னதாகவே தலையாரிகளை அழைத்துக் கொண்டுபோய் பஸ்சில் துண்டுபோட்டு இடம் பிடிப்பது போல் இடம் பிடித்தாயிற்று அவர்கள் அங்கேயே படுத்துக் கிடப்பர். அபிஷேகம் ஆரம்பிக்கப்போகும் நேரத்தில் பக்தர்கள் வந்துபார்த்து நமக்கு முன்னதாகவே வந்து இடம்பிடித்துவிட்ட பக்தர்கள் போலும் என்று எண்ணி, நமக்கு இந்தத் தடவை நடராஜாவை அருகில் இருந்து அபிஷேகம் பார்க்கக் கொடுத்துவைக்கவில்லையே என்று தங்களைத் தாங்களே நொந்துகொள்வர்.

இப்படியாகப்பட்ட முன்னேற்பாடுகள் மத்தியில் மாவட்ட ஆட்சியர் அல்லது அவர் குடும்பம் வந்து சேரும். மற்ற எந்த அதிகாரி வந்தாலும். வருவாய் ஆய்வாளர் அல்லது வட்டாட்சியர் வந்து வந்தவர்களுக்கு தக்கபடி உட்கார்ந்திருக்கும் தலையாரியை எழுப்பிவிட்டு உட்காரவைத்துவிடுவார். ஆனால் பாரிதாபம். ஏதேனும் ஒரு அதிகாரி பந்தாவாக வந்தாலும் போதும். அல்லது வேறு யாரேனும் அதிகாரிபோல்

வந்து நின்றாலும் போதும். ஒரு தலையாரி எழுந்திருந்து “சா.....மி” என்று சினிமாவில் வரும் ‘அரசர் முன்பாக வீரர்கள் வணங்கும் பாவனையில்’ நன்றாகக் குனிந்து வணக்கம் செலுத்துவார். அவ்வளவுதான் ஆற்றைத்தாண்டுகிற செம்மறியாட்டுக் கூட்டம் போல் எல்லாரும் எழுந்து குனிந்து “சா.....மி” போட்டுக்கொண்டு இடத்தைவிட்டு வெளியேறிவிடுவர்.

அவ்வளவுதான். அங்கே இடமின்மையால் அருகில் பார்க்கவேண்டும் என்று நின்று பார்த்துக்கொண்டிருக்கும் பக்தர்கள் வந்து அந்த இடத்தை ஆக்கிரமித்துவிடுவர். அப்புறம் தாமதமாக வரும் அதிகாரவார்க்கத்திற்கு இடமில்லாமல் போய்விடும். அப்புறம் என்ன! வட்டாட்சியரோ, வருவாய் ஆய்வாளரோ, வந்திருப்பது இன்னார் என்று சொல்லி, கொஞ்சம் நகர்ந்துகொள்ள வைத்து இடம் வாங்கிக் கொடுப்பர். இதில் சில சமயம் நமக்கும் நமது குடும்பத்திற்கும் வாழ்த்துக்கள்கூட கிடைக்கும். நமக்கெல்லாம் சகிப்புத் தன்மை ஜாஸ்த்திங்க. அப்படியும் சிலருக்கு இடம் கிடைக்காமல் போய் வட்டாட்சியர் அப்புறம் திட்டப்பட்டதுண்டு. அதைவிட, மேலேயிருந்து போனில் கேட்பர் “ஆமா என்ன இன்னாருக்கு தரிசனத்துக்கு இடம் கிடைக்கலியாமே. அரேஞ்ச்மெண்ட் ஏதும் செய்யலியா” இந்த சந்தர்ப்பத்தில் முன்னாள் தாசில்தார் யாராவது தாம் இடம் பிடித்து கொடுத்த வீரப் பிரதாபங்களை ஒரு பக்கம் அவிழ்த்து விடுவார்.

இந்த பிழைப்புக்கு வட்டாட்சியர் வேறு வேலைக்கு போயிருக்கலாம் என்று தோன்றும். என்ன செய்ய கழுதைக்கு வாழ்க்கைப்பட்டால்.. .. .. .. ..

அடுத்து ஒரு கூத்து அரங்கேறும். ஒரு மாவட்ட ஆட்சியர் வந்தார். தில்லையில் நடனக் கோலத்தில் அருள்பாலிக்கும் நடராசப் பெருமானுக்கு நாட்டியத்தின்மூலம் அஞ்சலி செலுத்தவேண்டும் என்று அவருக்கு ஆசை பிறந்துவிட்டது. அவ்வளவுதான் ஏற்பாடுகள் துவங்கிவிட்டன.

நாட்டியாஞ்சலி விழா என்று அறிவிக்கப்பட்டுவிட்டது. பல பகுதிகளிலும் இருந்து நாட்டியக் கலைஞர்கள் வரவழைக்கப்பட்டனர். ஆயிரங்கால் மண்டபத்தில் விழா மேடை போடுவதில் துவங்கி வரும் முக்கியப் பிரமுகர்களுக்கு தங்கும் வசதி செய்து தருவது உள்பட வட்டாட்சியர் செய்யவேண்டும்.

இதற்காக வட்டாட்சியர் சொத்துவைத்திருந்தால் விற்று செலவு செய்யலாம். இல்லையென்றால் பிச்சைதான் - கௌரவப் பிச்சை, ஏற்கனவே நம்மிடம் வந்து போனவர்கள் முக்கியப் பிரமுகர்கள் பெருந்தனக்காரர்கள் என்று நன்கொடை வசூல் செய்து நடத்திக் கொடுப்பர். நன்கொடை என்ற பெயரில் ஒரு தொகையைக் கொடுத்துவிட்டு தனக்கு சாதகமாக காரியம் சாதித்துக் கொண்ட பிரமுகர்களும் உண்டு. அப்புறம் ஏன் லஞ்சம் ஊழல் எல்லாம் உருவாகாது.

நாட்டியாஞ்சலி விழாவிற்கும் சில சமயம் அதிகாரிகள் வந்துவிடுவர். அப்புறம் என்ன அவர்களுக்கும் சீட்டுப்பிடி விளையாட்டுதான். ஆனால் நல்ல வேளையாக ஒரு சில ஆண்டுகளுக்குப் பின்னர் நாட்டியாஞ்சலிக்கு செலவு செய்யும் வேலை வட்டாட்சியரை விட்டு போய்விட்டதோ வட்டாட்சியர்கள் பிழைத்தனரோ.

ஆனாலும் ஒரு தொந்தரவு தொடர்ந்தது நாட்டியாஞ்சலிக்கு வரும் சில செல்வாக்கு மிக்க கலைஞர்களுக்கு தங்குமிடம் சாப்பாடு ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. சில சமயம் நமக்கு என்னவென்றே தரியாத ஒரு நாட்டியக் கலை சம்பந்தமான பொருளை ஏற்பாடு செய்யும்படி நம்மைப் படுத்துவதுண்டு. ஏன் வேண்டியதை அவர்கள் எடுத்து வரமாட்டார்களா அல்லது தாங்களே போய் வாங்கிக்கொள்ள மாட்டார்களா.

இதுதான் போகட்டும். சில சமயம் போனில் உத்திரவு வரும். இன்ன அதிகாரி அல்லது அவருக்கு வேண்டியவர் அல்லது குடும்பத்தினர் வருகிறார் அவருக்கு நல்லமுறையில் சாமி தரிசனம் செய்து

கொடுக்கவும் என்று. அவ்வளவுதான் வட்டாட்சியரோ அல்லது வருவாய் ஆய்வாளரோ கோயிலுக்கு போய் ஏற்பாடு செய்ய வேண்டும்.

வருபவர் ஒன்றும் பக்தி சிரத்தையுடன் சாமி கும்பிட வரவில்லை. போகிறபோக்கில் 'நடராஜாவாமே, தங்கக் கூரையாமே நான் பார்த்ததேயில்லையே அந்தவழியேதானே போகிறோம். அப்படியே பார்த்துவிட்டுப் போவோமே. நம்ம இன்னார்தானே அங்கே வேலை பார்க்கிறார். சொன்னால் ஏற்பாடு செய்துவிட்டுப் போகிறார்' என்று தனக்கு வேண்டியவர் காதில் போட்டுவிடுவார். அவ்வளவுதான் வட்டாட்சியர் ஏற்பாடு செய்துவிட்டு காத்திருப்பார். வருபவரோ கால பூசை நடக்கும் வேளையிலும் கோயில் நடை அடைக்கும் வேளையிலும் வந்து நின்றுகொண்டு ஏதோ நாம் வருந்தி வருந்தி அழைத்ததால்தான் வந்ததுபோலவும் உடனே போகவேண்டும் என்பது போலவும் பறப்பார். வட்டாட்சியர் வீட்டு கோயிலா அது? தம் இஷ்டம்போல் திறந்து காட்ட.

வட்டாட்சியராகப் பணியேற்றவுடன் அவர் செய்ய வேண்டியது நேராக கோயிலில்போய் தம்மை அறிமுகம் செய்துகொண்டு கோயில் செக்கரட்டரி போன்றவர்களை தாஜா செய்துகொள்ள வேண்டியதுதான். ஆனால் ஒன்று. இம்மாதிரி சந்தார்ப்பங்களில் வட்டாட்சியர் அலுவலகத்தில் ஒரு குமாஸ்த்தா எப்படியும் இருப்பார். அவர்தான் வட்டாட்சியர் அலுவலக கைடு. அவர் நடராஜாகோயில் தீட்சிதர்கள் எல்லாரையும் தெரிந்துவைத்திருப்பார். யார் வந்தாலும் அவரை அனுப்பி விடுவார்கள். முன்னதாகச் சென்று தீட்சிதர்களைப் பார்த்து தரிசனத்திற்கு ஏற்பாடு செய்வார்.

இங்கே இன்னொரு வேதனையும் கொசுராக கிடைக்கும். வரும் இப்படிப்பட்ட வி.ஐ.பி.களுக்கு பூசைத்தட்டு மாலை வகையறாக்கள் வாங்கி வைத்திருப்பார் வட்டாட்ச்சியர். வருபவரின் வெயிட்டுக்கு ஏற்ப சில சமயம் பொன்னாடைகூட

ஏற்பாடு செய்யப்படும். வருகின்ற கிழங்கட்டையிலிருந்து குஞ்சுகுழுவான் வரை எல்லாருக்கும் ஏற்பாடு செய்வதுகூட சர்வசாதாரணம். போகட்டும், எடுபிடி வேலையைத்தான் தலையெழுத்தே என்று செய்துவிடலாம். அதற்குக் காசு கொடுப்பவர்கள் நூற்றில் ஒருவர். அவரும் ஐநூறு ரூபாய்க்கு பூசைக்கான இத்தியாதிகள் வாங்கி வைத்திருந்தால் ஒரு ஐம்பதோ நூறோ கொடுத்துவிட்டு செல்வார். அதனை வாங்காவிடில் “சாமி காரியத்துக்கு நாங்கள்தான் செலவு செய்யவேண்டும். இதெல்லாம் நீங்க கொடுத்து எங்களுக்கு சேரவேண்டிய புண்ணித்தை நீங்க கைப்பற்றி விடாதீர்கள்” என்பது போல் சொல்வார்கள் பாருங்க. எங்கே போய் முட்டிக்கொள்ள.

இதிலே ஒரு சுவாரஸ்யம் என்னண்ணா, வந்த வி.ஐ.பி கொஞ்சம் கனமானவர்தான் நல்ல பக்திமான் என்று கண்டுகொண்டால் நமது தீட்சிதர் பெருமக்கள் அப்படி இப்படி என்று பெருமைபேசி, நீங்கள் குறிப்பிடும் நாளில் உங்க பேருக்கு அர்ச்சனை செய்து அனுப்பிவைக்கிறோம். வருடத்துக்கு இவ்வளவுதான் என்று மிக நுணுக்கமாக கவர்செய்து கஸ்டமர் பிடித்துவிடுவர். அதோடு விடுவரா ஆனித் திருமஞ்சனம், ஆருத்திரா தாரிசனம் சமயங்களில் ஒரு பத்திரிக்கை அனுப்பி வைத்து அதற்கும் தனி வசூல் செய்து விடுவர். அந்த நெட்வொர்க்கை மிக அழகாக நடத்தி வருடங்கள் பலவற்றிற்கு தொடர்வர். ஆக வட்டாட்சியர் மறைமுகமாக தம்மையறியாமலே புரோக்கர் வேலை செய்துவிட்டார்.

சிலசமயம் கலெக்டர் சொந்தக்காரர் அல்லது சென்னையிலிருந்து பெரிய அதிகாரி போன்றோர் வந்தால் வி.ஐ.பி. காரில் வருவர். அந்தக் காருக்கு ஒரு டிரைவர் இருந்தார். அவர் வட்டாட்சியாரிடம் வண்டிக்கு டீசல் வேண்டும் என்று கேட்டு காசினைக் கரந்துவிடுவதும் உண்டு. எதற்கு பெரிய இடத்துப் பொல்லாப்பு என்று அதையும் செய்துதொலைக்க வேண்டியதுதான்.

போதாதற்கு அந்த டிரைவருக்கு என்று படி வேறு கொடுக்க வேண்டும். இல்லையென்றால் அவர் தன் பங்குக்கு வருபவரிடம் வட்டாட்சியரைப் பற்றி அள்ளிப் போட்டுவிடுவார்.

அவருக்கு அது ஒன்றும் பெரிய வேலை இல்லை. வண்டியில் திரும்பும்போது “இந்த தடவை தாசில்தார் நல்லாவே செய்யலைங்க. போனதடவை வந்த வி.ஐ.பி.க்கு அவ்வளவு மரியாதை செய்தார்” என்று கொளுத்தி போட்டு விட்டால் போதும். இந்த சள்ளைக்கு பயந்தே டிரைவருக்கு திருப்தியாக படி கொடுத்து அனுப்பி தொலைக்கவேண்டும்.

# 7 கடன்கள் பிரிவுக்கு கூடுதல் பாதுகாப்பு

நான் வேலைக்கு வந்த சில நாட்களில் தாலுக்கா ஆபீசுக்கு மாறுதல் செய்யப்பட்டேன். அப்போதெல்லாம் விளையாட்டுப் பையனாகத்தான் இருப்பேன். இப்போது மட்டும் என்ன. எப்போதும்தான். ஆனால் செய்ய வேண்டிய வேலைகள் சரியாக நடைபெற்றுவிடும். சிலரைப்போல் ஒன்றுமில்லாததற்குக்கூட அலட்டிக் கொள்ளமாட்டேன். அலுவலகத்தில் உள்ள பலவகையான வினோத கேரக்டர்களை ரசிப்பதற்கு ஒருபோதும் தவறியதில்லை.

அது ஆணானாலும் சரி பெண்ணானாலும் சரி அல்லது அதிகாரியாகவே- யானாலும் சரி மாட்டினால் கலாய்ப்பதில் ஒரு ஜாலி. இருந்தும் யாரையும் மனம் புண்படும்படி நேரடியாக கலாட்டா செய்தது கிடையாது. இதற்கென்றே ஒரு இளவட்ட செட்டு இருந்தது, அதில் என் ஆத்ம எதிரி (நண்பன் என்றால் கண்பட்டுவிடும்) ரகமத்துல்லா, வேல்சாமி, பத்மனாபன், சீனுவாசன், ராஜன், சுந்தரராமன், சம்பத் ஆகியவர்கள் முக்கியமானவர்கள்.

அந்த அலுவலகத்தில் கடன் பிரிவு என்பது தனி கட்டிடத்தில் இயங்கிவந்தது. அந்த காலத்தில் தாலுக்கா ஆபீசில் பொதுப்பிரிவை விட கடன் பிரிவுதான் வலிமையானது. எல்லா காடா கிளார்க்குகளும். அங்கு வேலை பார்ப்பர். ரொம்பப் பொறுப்பான பிரிவு அது. எல்லா கோப்புகளும் மிகவும் முக்கியமானதும் பணம் சம்பந்தப்பட்டதும் ஆகும். வசூல் விபரம் பாக்கி விபரம் முதலியவை அங்கே தினசரி கணக்கிடப்பட்டுவிடும். இப்போதுதானே கணிணி எல்லாம் வந்துள்ளது. அப்போது அந்த பிரிவில் உள்ள சில குமாஸ்த்தாக்கள் மூன்று மூன்று இலக்கங்களாக சர்வசாதாரணமாக கூட்டுவதைப்பார்த்து

பொருட்காட்சியை வேடிக்கை பார்க்கும் சிறுவன் போல் வாயைப் பிளந்துகொண்டு பார்த்ததுண்டு.

அந்த பிரிவுக்கு தலைவர் ஒரு அக்கவுண்டண்ட். அவரும் நண்பராகத்தான் பழகுவார். ஆனால் கொஞ்சம் பயங்கொள்ளி. நிறைய சந்தேகப் பேர்வழி.

தினமும் அலுவலக நேரம் முடிந்தவுடன் அவர்தான் கடைசியாக பிரிவைப் பூட்டுவார். சிவன் கோயில்களில் அர்த்தஜாம பூசை என்ற நிகழ்ச்சி தினமும் நடைபெறும். சுவாமியைக் கருவறையிலிருந்து பூசை புனஸ்காரங்களுடன் கொண்டுவந்து பள்ளியறையில் வைத்து பூட்டுவர். அந்த வைபவத்தை தினமும் சலிக்காமல் சென்று தரிசிக்கும் பக்தர்கள் கூட்டம் ஒன்று ஒவ்வொரு ஊரிலும் உண்டு.

அதுபோல் எங்கள் கடன் பிரிவு பூட்டும் வைபவமும் அதற்கு சற்றும் குறையாத மகிமை பொருந்தியதாக இருக்கும். சிவன்கோயில் பக்தர்கள் போல் நாங்கள் அதனைக் காண அலுவலகத்தின் பின் பகுதியில் கூடிவிடுவோம். ரொம்ப பில்டப் கொடுக்கிறேனோ.

இதோ விஷயத்திற்கு வந்துவிட்டேன். மாலை அலுவலக நேரம் முடியும் நேரத்தில் நாங்கள் வந்து லோன் செக்ஷணையே தூரத்தில் இருந்து பார்த்துக்கொண்டிருப்போம். எல்லா உதவியாளர்களும் முன்னதாகவே சென்று விடுவர். அக்கவுண்டண்ட் மட்டும் கடைசியாக எல்லா சுவிட்சுகளையும் அணைப்பார். பிரிவின் எல்லா ஜன்னல்களையும் மூடுவார். பின்னர் இரண்டுபக்கமும் பார்த்துவிட்டு கதவை சாத்துவார். மீண்டும் ஒரு முறை கதவை திறந்து உட்பக்கம் ஒரு லுக் விடுவார். சில சமயம் உள்ளே சென்று மின்விளக்கு சுவிட்சுகளை ஒருமுறை அணைக்கப்பட்டுள்ளதா என்று சரிபார்ப்பார். திரும்பவும் கதவை மூடுவார். பூட்டை எடுப்பார் கதவைப் பூட்டுவார் தொட்டுக் கும்பிடுவார் பூட்டைப் பிடித்து ஓரிருமுறை தொங்கிப் பார்ப்பார். நன்றாக பூட்டப்பட்டுள்ளது என்பதை உறுதி செய்துகொள்வார்.

அடுத்து மீண்டும் பூட்டை தொட்டு கும்பிட்டுக்கொள்வார். தன் சட்டைப் பாக்கெட்டினைத் தூக்கி முத்தம் கொடுத்துக்கொள்வார். சற்று விரசமாகத் தொரியுதா. உண்மைதாங்க அது என்னண்ணு சொல்றேன்.

திரும்பவும், பூட்டைப் பிடித்து ஒரு தொங்கல். ஆனா பூட்டு ஒருநாளும் புட்டுக்கொள்ளவில்லை.

அடுத்து, வெராண்டாவில் நிற்கும் தன் சைக்கிளை எடுத்து கீழே இறக்கி வைத்து ஸ்டாண்டு போடுவார்.

மீண்டும் படி ஏறிச்சென்று பூட்டை தொட்டுக் கும்பிட்டு, சட்டைக்கு முத்தம் கொடுத்து, தொங்கிப்பார்த்து திருப்தி செய்துகொள்வார். அடுத்ததுதான் ஹைலைட். பூட்டின் சாவியை பத்திரப்படுத்துவார்.

அது எப்படி என்கிறீர்களா. அவசரப்படாதீங்க நாங்க எத்தனை நாள் பொறுமையா பார்த்து ரசித்து, சிரித்து, களித்திருக்கிறோம். கதவுக்குப் பக்கத்தில் உள்ள சன்னலை லேசாகத் திறந்து சாவியை உள்ளே வைப்பார். அதற்கு முன்னதாக யாரேனும் சாவி வைப்பதைப் பார்க்கிறாரா என்று சுற்றிலும் ஒரு பார்வை பார்ப்பார். சாவியை வைத்துவிட்டு ஜன்னல் கதவை ஓசைப்படாமல் சாத்துவார். பின் மீண்டும் ஒரு முறை பூட்டைப் பிடித்துத் தொங்கி சரிபார்ப்பார். கண்காணிக்கும் நாங்கள் இந்த பூட்டு இன்றாவது பிடுங்கிக்கொண்டு விழாதா என்று ஏங்குவோம்.

ஒரு வழியாக அரைகுறை திருப்தியுடன் படியிறங்கி சைக்கிளை பிடித்துக்கொண்டு ஸ்டேண்ட் கிளிப்பைத் தள்ளுவார். மீண்டும் பூட்டையே முறைத்துப் பார்ப்பார். ஒரு சில நாளில் மீண்டும் சென்று பூட்டை சோதனை செய்வார் என்பது கூடுதல் இணைப்பு. சைக்கிளை நகர்த்துவதற்கு முன்னதாக மீண்டும் பாக்கெட்டுக்கு முத்தம் கொடுத்துவிட்டு அக்கம் பக்கம் பார்த்துவிட்டு நகருவார்.

அதெல்லாம் சரி சாவியைப் பக்கத்து சன்னலில் வைக்கும்போது இவ்வளவு பில்டப் எதற்கு?

அதைவிட, தோட்டி முதல் தொண்டைமான் வரையிலும் எல்லாருக்கும் சாவி அங்கே வைக்கப்படும் விபரம் தெரியும்! காலை நேரத்தில் கட்டிடத்தை பெருக்கி சுத்தம் செய்ய ஒரு பெண்மணி வருவார். அவர் அந்த சாவியைத்தான் எடுத்து கதவைத் திறப்பார். இந்த லட்சணத்தில் இவ்வளவு முஸ்தீபுகள் எதற்கு? மனிதனுக்கு சந்தேகமோ அன்றி பயமோ வந்துவிட்டால் இப்படித்தான். அதிலும் இரண்டும் ஒருவரிடம் ஒன்றாகக் குடித்தனம் நடத்த வந்துவிட்டால் என்னாவது.

அதென்ன பாக்கெட்டுக்கு முத்தம் கொடுப்பது என்று நீங்கள் யோசிப்பது தெரிகிறது. அது ஒரு தனி கதை. நண்பரை பதிவறை பொறுப்பில் அமர்த்தும் வரையிலும் நன்றாகத்தான் இருந்ததாக ஞாபகம். பதிவறைப் பொறுப்பில் இருக்கும் கிளார்க்குகள் பலருக்கு ஏதாவது காரணத்தைக் காட்டி மெமோ பெரும் பாக்கியம் கிடைக்கும். சப்ளை அண்டு சர்வீஸ் செய்து சிலர் சரி செய்துகொள்வர். சிலர் பனிஷ்மெண்ட் பெறுவர்.

இவ்வாறாகத்தானே நண்பர் அந்த பிரிவில் சேர்ந்தவுடன் சந்தேகம் வர ஆரம்பித்தது. மனிதனுக்கு பயம் வந்துவிட்டாலோ, தப்பு செய்ய ஆரம்பித்துவிட்டாலோ பக்தி என்பது கொஞ்சம் கூடுதலாக வந்துவிடும் போலும். நண்பரும் அப்படித்தான். பக்தி அதிகமாகிவிட்டது. கடவுளை வணங்குவதற்கு ஏதுவாகவோ அல்லது தமது நெஞ்சில் கடவுள் இருக்கிறார் என்று தைரியம் சொல்லிக் கொள்வதற்காகவோ ஒரு சாமி படமும் கந்த சஷ்டி கவசம் சின்னஞ்சிறிய பதிப்பும் தன் பாக்கெட்டில் எப்போதும் வைத்துக் கொள்வார். அடுத்து செண்டிமெண்ட்டும் சேர்ந்துகொண்டது. பலரைப் பார்த்திருக்கலாம். பேனாவை எடுத்து எழுத ஆரம்பித்தவுடன் அது தடங்கல் இன்றி எழுதாவிட்டால் நொந்துபோய்விடுவர். வெளியே புறப்படும்போது லேசாகத் தடுக்கினால் என்ன நினைப்பரோ அதுமாதிரிதான். தடுக்கினால் திரும்பி வந்து ஒரு மடக்கு தண்ணீர் குடித்துவிட்டு சென்றால் எல்லாம் சாரியாகிவிடுமாம். இப்படி ஒரு பாரிகாரம்.

அதுபோல்தான் சிலர் எழுதத் துவங்கும் முன்பாக ஒரு வெற்றுக் காகிதத்தில் ஒரு கிறுக்கல் செய்துபார்த்துவிட்டு அப்புறம் எழுதத் துவங்குவர்.

இப்படியாக ஒவ்வொரு முறை எழுதத் துவங்கும்போதும் அல்லது கையெழுத்து போடும்போதும் சற்று வித்தியாசமாக, தன் இடது கை விரலில் ஒரு புள்ளி வைத்துப் பார்த்துவிட்டு எழுதும் பழக்கம் நண்பருக்கு வந்துவிட்டது. அடுத்து பயத்தைபோக்கிக் கொள்ள தன் பாக்கெட்டில் உள்ள புத்தகத்தை எடுத்து கண்களில் ஒற்றிக்கொண்டு துவங்கும் பழக்கமும் ஏற்பட்டுவிட்டது. பலரைப் பார்த்திருக்கலாம். முதலில் சாத்திர சுத்தமாக கடவுளை வணங்க ஆரம்பித்து கடைசியில் போகிற போக்கில் கோயிலை நோக்கி ஒரு குலுக்கலும் முத்தமும் கொடுத்து வணங்கிவிட்டு போய்க்கொண்டே இருப்பர். அப்படியாக நண்பரும் கையில் புள்ளியும் பாக்கெட்டுடன் சேர்த்து முத்தமும் கொடுக்கப் பழகிவிட்டார். அவரது இடது கை சுட்டுவிரல் அல்லது நடு விரல் எப்போதும் நீலமாகவே இருக்கும். ரொம்பநாள் வரையிலும் இவர் ஏன் சட்டை பாக்கெட்டை இழுத்து இப்படி முத்தம் கொடுத்துக் கொள்கிறார் என்று புரியாமல் குழம்பியதுண்டு. ஒரு சீனியர் நண்பர்தான் இந்த ரகசியத்தை அறிக்கையாக வெளியிட்டாரோ நாங்கள் தெளிவடைந்தோமோ.

ஆக, நண்பரின் கடன் பிரிவு கதவடைப்பு முதல், முத்தம் வரையிலும் அலுவலகத்தைத் தாண்டி மாவட்டப் பிரசித்தம் ஆகிவிட்டது. இதெல்லாம் சத்தியமாக உண்மைதாங்க. அல்லது உண்மையான உண்மை என்றாலும் அது சத்தியம்தாங்க.

இப்படியாகத்தானே நாட்கள் கழிந்த நிலையில் அவர் பதவி உயர்வு பெற்று வேறு ஒரு வட்டத்தில் தலைமையிடத்துத் துணை வட்டாட்சியராக ஆகிவிட்டார். ஆக விதியாகப்பட்டது வலிதல்லவா நானும் என் நண்பனும் அங்கேயே மாறுதல் செய்யப்பட்டு குமாஸ்தாவாக குப்பை கொட்டப் போய்விட்டோம். ஆனால் ஊர் மாறலாம். பதவி மாறலாம். கூடப் பிறந்த குணம் மாறுமா. அங்கேயும்.

சந்தேகம், பயம், கையிலே நீலப் புள்ளி, பாக்கெட்டுக்கு முத்தம் எல்லாம் தொடர்ந்தே வந்தது. ஆனா இன்னும் கொஞ்சம் முன்னேற்றம் ஏற்பட்டது என்னவோ உண்மை.

அங்கே வேலை பார்க்கும்போது. அலுவலகத்தின் தலைவர் என்ற வகையில் அவர்தான் வருவோர் போவோருக்கெல்லாம் பதில் சொல்ல வேண்டும். போன் வந்தால் அவர்தான் எடுத்துப்பேசி பதில் சொல்ல வேண்டும். ஆனால் நமது நண்பருக்கு அதெல்லாம் கொஞ்சம் கஷ்டம்தான். யார் தலையிலாவது கட்டுவதிலும் தாம் தப்பிச் செல்லுவதிலும் குறியாக இருப்பார். பிரச்சினையிலிருந்து தப்பிக்கிறாராம்.

அலுவலகமே அமைதியாக இயங்கிக்கொண்டிருக்கும். சுற்றிலும் ஆறு குமாஸ்த்தாக்கள். அதில் என் நண்பர் ஒருவர். போன் மணி அடிக்கும். உடனே தலைவர் மிகவும் மும்முரமாக தலையைக் குனிந்துகொண்டு வேலை பார்ப்பார். யாராவது போன் எடுக்கட்டும் என்று. எங்களுக்குத் தெரியாதா அவர் குனிந்த நிலையில் ஓரக்கண்ணால் யாராவது பார்க்கிறார்களா என்று நோட்டம் விடுவதை. தொலைபேசியோ விடாக்கண்டனாக தொடர்ந்து அடித்துக்கொண்டே இருக்கும்.

நண்பர் மெல்லக் கையை நீட்டி ரிசீவரை எடுத்து மெதுவாக காதுக்குக் கொண்டுசெல்வார். ஏதாவது பேசியதா இல்லையா என்றெல்லாம் தெரியாது. டக்கென்று கையை நேராக நீட்டிவிடுவார். ரிசீவரை வைத்துக்கொண்டே யாரையாவது கூப்பிட்டு உனக்குத்தான் போன் என்று கொடுத்துவிடுவார். பெரும்பாலும், என் நண்பன்தான் மாட்டுவான். போய் ரிசீவரை வாங்கி கேட்டால் மறுமுனையில் சம்பந்தமில்லாத ஏதாவது தகவல் கேட்பர். அல்லது மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து ஏதாவது விபரம் கேட்பர். அதற்கும் என் நண்பனுக்கும் தொடர்பே இருக்காது. வேலை கெட்டதுதான் மிச்சம். என் நண்பனோ கடுப்பாகி என்னை எங்கே

அழைத்தார்கள் என்னிடம் கொடுக்கிறீர்களே என்று சொல்லி சம்பந்தப்பட்டவரிடம் கொடுப்பார். நம்ம ஆள் சாதாரணமானவரா. "உங்களைத்தானே அடிக்கடி கூப்பிடுவர் என்றுதான் கொடுத்தேன்" என்பார். தப்பித் தவறி அவர் தொலைபேசியில் மாட்டிக் கொண்டாரானால். மேலிடத்திலிருந்து எது கேட்டாலும். "எனக்கொண்ணும் ஐடியா இல்லை. வட்டாட்சியரை கேட்டுக்கொள்ளுங்கள்" என்று சொல்லிவிடுவார். இப்படி சொல்லி பலமுறை வாங்கிக்கட்டிக்கொள்வது தனிக்கதை.

இருந்தாலும் எப்படியும் தினம் ஒரு நாள் யாரிடமாவது வாங்கிக் கட்டிக்கொள்வது வழக்கமாகிவிட்டது. இதனால் பேர்வழிக்கு ஸ்ட்ரெஸ் அதிகமாகி ஒருநாள் என்ன செய்கிறோம் என்று அறியாமல் அடி எடுத்துவைத்து கீழே விழுந்ததுதான் மிச்சம். அப்புறம் என்ன. எல்லாரும் ஆளாளுக்கு ஆலோசனை சொல்லி விடுப்பில் அனுப்பி வைத்துவிட்டனர்.

ஆனால் மனிதர் பொறுப்பினை கழித்துக் கட்ட முயன்றாலும் செய்யும் வேலைகளை ஒழுங்காகச் செய்வார். அவர் விடுப்பு முடிந்து தேர்தல் துணை வட்டாட்சியராக மீண்டும் பொறியில் அகப்பட்டுக்கொண்டார். ஆனால் நாங்கள் எல்லோரும் சேர்ந்து ஊர் கூடி தேர் இழுத்ததால் சிறமமில்லாமல் பணிகளைச் செய்து நல்ல பெயர் எடுத்துவிட்டார். அப்போது மட்டும் மனிதருக்கு தைரியம் வந்துவிட்டது.

சிலர் இருக்கின்றனர். தனியே இருட்டில் போகச் சொன்னால் வீட்டுத் தோட்டத்திற்குக்கூட போகாதவர், கும்பல் இருந்தால் வீரமாக இரவில் சுடுகாட்டுக்குக்கூட போவர். அதுமாதிரிதான் இவரும்.

இன்னொரு நண்பர். அவர் சற்று வித்தியாசமானவர். காது கேட்காதவர்களைப் பார்த்திருக்கிறோம். கொஞ்சமா காது கேட்காதவர்கள் உண்டு. கொஞ்சம்கூட காது கேட்காதவர்களும் உண்டு. ஆனா காது கேட்காததுபோல் நடந்துகொள்பவர்களைப் பார்த்தால் என்ன செய்வது. மற்றவர்கள்

வேண்டுமானால் நம்புவர். ஆதிமுதல் பார்ப்பவர்கள் நம்புவரா. அவர் கொள்ளுப் பைக்குள் தலையை விட்டு நன்கு சாப்பிடுவார். ஒன்றும் செய்யாது. கடிவாளத்தினை மாட்டியதும் மயக்கம் வந்துவிடும். முதல் முறை மயக்கம் வந்து வீட்டுக்குச் செல்வார். அடுத்தநாள் அலுவலகத்திற்கு வருவார். அடுத்த முறை மயக்கம் வந்து ஆஸ்பத்திரிக்குச் செல்வார். அடுத்தநாள் வரமாட்டார். வேறு இடத்திற்கு போய்விடுவார். ஏதோ ஒரு அலுவலகத்தில் இப்படி நடந்தால் பரவாயில்லை. போகும் இடத்தில் எல்லாம். கொஞ்சம் வேலைப் பழு என்றாலும் மயக்கம் வந்தால் என்ன செய்ய. அவருக்குப் பட்டப் பெயராகிவிட்டதுதான் கண்ட பலன். மனிதர் காதில் அதுவாவது விழுந்ததோ இல்லையோ யாமறியோம் பராபரமே.

மனதில் பயமும் நம்பிக்கையின்மையும் குடக்கூலி இல்லாமம் குடியிருந்தால் மற்றவர்கள் யாரும் (எந்த குணமும்) குடிவரமாட்டார்கள். எந்த வேலையும் பார்க்க முடியாது.

# 8 பெரிய அதிகாரியின் தான தருமம்

நான் வருவாய் ஆய்வாளராகப் பணிபுரிந்த சமயம். தமிழக அரசின் தலைமைச் செயலர் அந்தஸ்த்தில் இருந்த எங்கள் துறை பெரிய அதிகாரி ஒருவர் வந்தார். அவர் வந்தது என்னவோ நடராசர் ஆலயத்தில் சாமிகும்பிட.

எங்கள் அதிகாரிகள் பெரும்பாலோருக்கு ஒரு முக்கியமான தற்காப்புக்கலை தெரியும். யாராவது பெரிய அதிகாரி வந்தால் ஏதாவது கேள்வி கேட்டாலோ அல்லது தணிக்கை செய்தாலோ நாம் தனியே மாட்டிக்கொள்ளக்கூடாது என்பதில் குறியாக இருப்பர். “புலிக்குப் பயந்தவர்கள் எல்லாம் என்மீது வந்து படுத்துக்கொள்ளுங்கள்” என்றானாம் ஒரு வஸ்தாது. அதுபோல் தமக்குக் கீழே உள்ளவர்கள் எல்லாரையும் வரவழைத்து விடுவர். வட்டாட்சியர், துணை வட்டாட்சியர், வருவாய் ஆய்வாளர்கள், கிராம நிருவாக அலுவலர்களின் சங்கத் தலைவர்கள் என்று பலரையும் ஏதாவது ஒரு வேலையைக் குறிப்பிட்டு வரவழைத்து கட்டிப்போட்டு வைத்துக்கொள்வதில் வல்லவர்கள்.

அம்மாதிரி மேற்படி பெரிய அதிகாரி வருகையின் தொடர்பாக எங்களை எல்லாம் சிதம்பரம் வரவழைத்து உட்கார வைத்துவிட்டார்கள். முக்கிய உறவினரை ஆப்பரேஷனுக்கு அனுப்பிவிட்டு வெளியில் பயத்துடன் காத்திருக்கும் சொந்தத்தைப்போல் நாங்களும் வழியில்லாமல் காத்துக் கிடந்ததுதான் மிச்சம். அவர் என்னவோ சாமி கும்பிட்டுவிட்டுக் கிளம்பிப் போய்விட்டார். அவரை வழியனுப்பிவைத்துவிட்டு வட்டாட்சியர் பரிவாரங்கள் வந்து சேர்ந்ததும்தான் எங்களுக்கு நிம்மதி.

அடுத்து, வழக்கமாக இப்படி எந்த அதிகாரி வந்து

சென்றாலும் உடனிருந்த அலுவலர்களிடம் மற்றவர்கள் என்ன நடந்தது என்று கேட்டு தெரிந்துகொள்வது வழக்கம். ஏடாகூடமாக ஏதாவது நடந்திருந்தால் “நல்லவேளை நாம் மாட்டாமல் அவன்மட்டும் மாட்டினானே” என்று மனதிற்குள் ஒரு குரூர சந்தோஷம்.

அப்படித்தான் வந்தவர்களிடம் விசாரித்தோம். தலையிலடித்துக் கொண்டோம். சிரித்துச் சிரித்து வயிறு வலித்ததுதான் மிச்சம்.

அப்படி ஒன்றும் பெரிதாக நடந்துவிடவில்லை. வந்த அதிகாரி முன் தினம் இரவு ஒரு முக்கியமான பொருப்பை வட்டாட்சியர் தலையில் கட்டிவிட்டார். அது இதுதான். அவர் நடராசர் ஆலயத்தில் சாமிகும்பிட்டுவிட்டு ஒரு பழுத்த சிவனடியாருக்கு வேட்டி வகையறாக்கள் தானம் செய்யவேண்டும். தகுதியானவராக ஏற்பாடு செய்யுங்கள் என்று உத்திரவாகிவிட்டது.

தானதருமத்திற்கு தங்கத்தில் பசு செய்து தரவேண்டும் என்றாலும்கூட செய்துவிடலாம். அட யானையேகூட செய்துவிடலாம். ஆனால் தகுதியான பழுத்த சிவனடியாரை எங்கு போய் தேடுவது. அப்படி யார் இருக்கிறார்கள் என்று தீட்சிதர்களுக்குக்கூட சொல்லத் தெரியவில்லை. அந்த ராத்திரியில் வருவாய் ஆய்வாளர், கிராம நிர்வாக அலுவலர் எல்லாரும் தேடிச் சலித்துப்போய் ஒரு திட்டம் வகுத்தார்கள். தினமும் நடராசர் ஆலயத்தில் வந்து உட்கார்ந்திருக்கும் ஒரு சடாமுடி ஆளைப் பிடித்தார்கள். அவரிடம் இன்னமாதிரி பெரிய அதிகாரி தானதருமம் செய்ய ஒரு சிவனடியார் தேவைப்படுகிறார். நீங்கள் வந்து வாங்கிக் கொள்ளுகிறீர்களா என்றதும் ரொம்ப சந்தோஷமாக சரியென்று சொல்லிவிட்டார். ஆனாலும் அவர் மனதில் ஏதோ பொறி தட்டிவிட்டதுபோலும். பெரிய அதிகாரி என்கிறீர்கள். என்னை சிவனடியாராக நடிக்கச் சொல்கிறீர்கள் இதிலே ஏதோ சந்தேகமாக இருக்கிறது ஆளை விடுங்க என்று கழட்டிக்கொண்டுவிட்டார்.

நம்மவர்களுக்கு இதேதடா சங்கடம் என்று தடுமாறி அப்புறம் நைச்சியமாக பேசி எப்படியோ சம்மதிக்க வைத்துவிட்டார்கள். அவரை விட்டால் தலையெல்லாம் சடை பிடித்த ஆறடிக் கூந்தல் உள்ள ஒருவரை எங்கே போய் தேடுவது.

ஆக மறுநாள் காலை, அதிகாரி கோயிலுக்கு வந்தார். சாமி கும்பிட்டார். நம்ம சடாமுடி சாமியாரை குளிக்கப்படுத்தி விபூதி உத்திராட்சம் வகையாறா வேஷம் கட்டி தயாராக கொடிமரத்திற்கு அருகில் உட்கார வைத்திருந்தார்கள். அதிகாரி சாமிகும்பிட்ட சுவடு குறையாமல் நேராக சாமியாரைத் தேடிவந்தார். சாமியார் முன்பாக வந்ததும், அவரது காலில் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டார். வட்டாட்சியர் மூலம் ஏற்பாடாகியிருந்த தான தருமங்களை அவரிடம் கொடுத்தார்.

அவ்வளவுதான் பக்கத்தில் இருந்த மாவட்ட வருவாய் அலுவலர், அடுத்து விழுந்து ஆசி வாங்கிக்கொண்டார். விடுவாரா அடுத்த அதிகாரி கோட்டாட்சியரும் அவர் காலில் விழுந்து ஆசி வாங்கிக்கொண்டார். இதைப் பார்த்ததும். வட்டாட்சியரும் அவர் காலில் விழப்போனார். பக்கத்திலிருந்த வருவாய் ஆய்வாளர் ரகசியமாக “என்னசார் நீங்க. அவங்கள்ளாம் விபரம் தெரியாமல் காலில் விழுந்தாங்க. எல்லா விஷயமும் தெரிந்த நீங்களும் விழப்போறீங்களே” என்று தடுத்துப் பார்த்தார். வட்டாட்சியரா கொக்கா. “அடப் போப்பா அவ்வளவு பெரிய அதிகாரி காலில் விழறார்ன்னா அதில் ஏதோ இருக்கு. மேலும் பெரிய அதிகாரியெல்லாம் விழும்போது நாம் ஆசி வாங்கலைன்னா நல்லா இருக்குமா” என்று சொல்லிவிட்டு வட்டாட்சியரும் ஆசிவாங்கிவிட்டார். முன் ஏர் போகும் வழியில்தான் பின் ஏர் போகும் என்று உழவர் பெருமக்கள் சொல்லும் முதுமொழிக்கேற்ப முதல்நாள் சாமியாரை ஏற்பாடுசெய்த வருவாய் ஆய்வாளரும். கிராம நிர்வாக அலுவலரும்கூட சாமியார் காலில் விழுந்து ஆசிவாங்கிக்கொண்டனர். இது எப்படி இருக்கு.

நல்ல வேளை சிவனடியாரிடம் சில தேவாரம் திருவாசகம் பாடி பொருள் சொல்லி என் மனதைக் குளிர்விக்கவேண்டும் என்று அதிகாரி ஆசைப்பட்டு எதுவும் கேட்காமல் போனது பெரிய புண்ணியம்.

சடாமுடியுடன் கூடிய பழுத்த சாமியாருக்கு தானம் செய்ததில் அதிகாரிக்கு பரம திருப்தி. ஏதோ கைலாசத்திற்கே போய் சிவபெருமானையும், அவரைச் சுற்றியிருக்கும் சிவகணங்களையும் தரிசித்துவிட்ட சந்தோஷத்தில் மாவட்டத்தின் வருவாய் நிருவாகமே மிகச்சிறப்பாக நடைபெறுவதாக சான்று கொடுத்துவிட்டு கிளம்பிப்போய்விட்டார்.

மீட்டிங் பணிஆய்வு எல்லாம் என்னாச்சு என்கிறீர்களா. அடப்போங்கசார் நீங்கவேறு. சப்ளை அண்டு சார்வீசில்தான் எல்லாமே முடங்கிக் கிடக்கிறது என்பது தொரியாதா உங்களுக்கு.

நாங்களும் நரி இடம்போனால் என்ன வலம்போனால்தானென்ன மேலே விழுந்து பிடுங்காமல் போனதே என்ற சந்தோஷத்திலும். நடந்ததை லைவ் டெலிகாஸ்ட் பார்த்த திருப்தியிலும் கதையை அசைபோட்டுக்கொண்டு அவரவர் இருப்பிடம் சென்றோம்.

ஏதோ தெய்வசங்கல்ப்பமாக இப்படி நடந்துவிட்டது என்று நினைக்காதீர்கள் இப்படிப்பட்ட விநோத அதிகாரிகள் நிறையபேர் இருக்கிறார்கள். அவர்கள் கேட்பது தலைசுற்றவைக்கும்.

சாமிகும்பிட வந்தேன் பேர்வழி என்று வருவார். பங்களாவில் தங்குவார். நடப்பன, பறப்பன, என்று ஒரு பிடி பிடிப்பார் சற்று ஓய்வு எடுத்துக்கொண்டு கோயிலுக்கு செல்வார். சிலர் இருக்கிறார்களே அவர்கள் முன்னதாக சாப்பிடமாட்டார்கள். கோயிலில் விழுந்துவிழுந்து சாமி கும்பிட்டுவிட்டு நேராக பங்களா வந்து ஒரு பிடி பிடித்துவிடுவர்.

ஒரு சில சமயம் குறும்பான எங்கள் ஆட்கள் சற்று துணிச்சலுடன் அய்யா கோயிலுக்கு போவதால்

அசைவம் சாப்பிடலாமா என்று முன்னதாக கேட்பர். வேறென்ன அவர் சைவம் என்றால் செலவு கொஞ்சம் குறையுமே என்ற நப்பாசைதான். ஆனால் அந்த விடாக்கண்டனோ அதெல்லாம் பரவாயில்லை என்று சமயத்தில் மெனுவே கொடுத்துவிடுவார்.

வருவாய்த்துறையில் இதெல்லாம் ரொம்ப சாதாரணமப்பா.

இன்னொரு வி.வி.ஐ.பி. தோர்தல் ஆணையத்தின் மிகப்பெரிய அதிகாரி. குடும்பத்துடன் சாமிகும்பிட வந்துவிட்டார். அப்போது பணிபுரிந்த வட்டாட்சியரோ சப்ளை அண்டு சர்விசில் கைதேர்ந்தவர். உதாரணமாக, அதிகாரி சிகரெட் பிடிப்பார் என்று தெரியும். ஆனால் எந்த பிராண்டு என்று தெரியாது என்று வைத்துக்கொள்ளுங்கள் (அதெல்லாம் முன்னதாகவே துப்பறிந்துவிடுவார் என்பது வேறு விஷயம்). இவர் உள்நாடு வெளிநாடு என்று எல்லா வகை சிகரட்டுகளையும் வாங்கி தயாராக வைத்துவிடுவார். ஏன் பீடிகட்டுகூட வாங்கிவைத்துவிடுவார். அப்படிப்பட்ட கில்லாடி காக்காபிடி ஆசாமி. அவரா கைவிட்டு காசு செலவழிக்கப்போகிறார். கீழே இருப்பவன் தலையில்தானே விடியப்போகிறது.

நமது வி.வி.ஐ.பி சாமிகும்பிட்டுவிட்டு சாப்பிட்டுவிட்டு கிளம்புவதாக திட்டம். வட்டாட்சியர் கல்கண்டு சார்க்கரை பொங்கல். கொஸ்த்து, சம்பா சாதம் உள்ளிட்ட பெரிய மெனுபோட்டு தயார் செய்துவிட்டார். அதிகாரி குடும்பத்துடன் வருகிறார் அல்லவா. ஆபீசில் வேலை பார்த்த இரண்டு பெண் உதவியாளர்களை பாரிமாறுவதற்கு அழைத்துச் சென்றுவிட்டார். தாமே முன்னின்று இலைகளில் குறைவு ஏற்பட்ட வகையறாக்களை மீண்டும் மீண்டும் இலையில் வைத்து அந்த குடும்பத்தையே திக்கித் திணர அடித்துவிட்டார்.

அடுத்து அவருடன் பாதுகாப்புக்கு வந்த முப்பது கமாண்டோக்களுக்கும் அசைவ சாப்பாடு தனி பந்தி. அவர்கள் போய் தங்கள் ஊரில் சொல்லிக்கொள்வார்களே “சிதம்பரம் தாசில்தார்

பகுத் படா ஆத்மி ஹை. படா கானா சப்ளை ஹோதா” என்று. நமது புகழ் டெல்லிவரையிலும் சென்றுவிடும் அல்லவா.

இப்படியாக அந்த பெரிய அதிகாரி கிளம்பிப்போனார் அடுத்த கேட் வழியாக பக்கத்து மாநில கவர்னர் வந்துசேர்ந்தார். அவருக்கு என்று தனியாக ஒரு விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அவரது பயணம் எதற்கு என்றெல்லாம் சொல்லப்படவில்லை. வழக்கம்போல் அவர் கோயிலுக்குதானே வரக்கூடும் என்று எண்ணி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது. வந்தவர் தாம் ஒரு பிரபல நாடி சோதிடரிடம் நாடி சோதிடம் பார்க்க வேண்டும் என்றும். அதற்கு ஏற்பாடு செய்யச்சொன்னார். அப்படியானால் அவர் வைத்தீஸ்வரன் கோயிலுக்கு அல்லவா. சென்றிருக்கவேண்டும்.

எங்கள் கில்லாடி உடனே தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர், மயிலாடுதுறை வட்டாட்சியர் எல்லாருக்கும் போன் போட்டு சொல்லிவிட்டு கழட்டிக்கொண்டு விடுவோம் என்ற எண்ணத்தில் இருந்தார். கவர்னரோ தாம் சோதிடம் பார்த்துவிட்டுத்தான் சாப்பிடப்போவதாக தெரிவித்துவிட்டார். அப்போதே நேரமாகிவிட்டது. இனி எப்போது வந்து சாப்பிடுவது என்று காரிசனமாக கேட்கப்போக சாப்பாட்டை என்னுடனே எடுத்துவந்துவிடுங்கள் என்று சொல்லிவிட்டார் அவர்.

அப்புறம் என்ன சிதம்பரம் பட்டாளம் வாகனத்தில் எல்லா ஐட்டங்களையும் ஏற்றிக்கொண்டு வைத்திஸ்வரன் கோயில் சென்று சேர்ந்தது. நம்ம வட்டாட்சியருக்கோ ஏதோ அங்கே இப்படி தேவுடுகாத்துக்கொண்டு எல்லா அதிகாரிகளும் இருப்பர் என்று நினைப்பு. ஆனால் அங்கே ஒரு வருவாய் ஆய்வாளர்கூட வரவில்லை. இவர்கள் போய் இறங்கிய பின்னர் நிதானமாக அந்த ஊர் கிராம நிர்வாக அலுவலர் வந்து நின்றிருக்கிறார்.

கெஸ்ட் ஹவுஸ் இத்தியாதிகள் எல்லாம் ஏற்பாடாகிவிட்டதா என்றால் அதெல்லாம் தெரியாது என்று கைவிரித்துவிட்டார். அவர் என்ன சிதம்பரம் வட்டாட்சியாரிடமா வேலை பார்க்கிறார்? பயந்துகொண்டு பதில்சொல்ல!

சோதிடம் பார்த்தார்... பார்த்தார்... சோதிடக்காரரோ இதற்கு அந்த சுவடி பார்க்கவேண்டும் அதற்கு இந்த சுவடி பார்க்கவேண்டும் என்று தமது தொழில் தர்மப்படி அடித்துவிட்டுக்கொண்டே போனார்.

கடைசியில் சாப்பட்டு நேரமும் கடந்தது. இடைப்பட்ட நேரத்தில் சாப்பிட்டுவிடுவோம் என்று சாப்பிடுவதற்கு ஒரு அறை ஒதுக்கித் தரும்படி கேட்டால் இடம் ஏதுமில்லை என்று மாடிப்படிக்கு அடியில் ஒரு டேபிளைப் போட்டு பேருதவி செய்தார் சோதிடக்காரார். சாமியார்களிடமும் சோதிடர்களிடமும் மாட்டிக்கொள்ளும் பல ஆசாமிகள் மற்ற எந்த கவுரவத்தையும் அடகு வைத்துவிடுவர். அந்த இடத்தில் நம்ம கவர்னருக்கும் அதே நிலைமைதான். மாடிப்படிக்கடியிலேயே உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு தொடர்ந்து சோதிடம் பார்த்துக்கொண்டு கிளம்பிச்சென்றார் புண்ணியவான் என்றால் நம்பவா போகிறீர்கள்.

# 9 என்னைச்சுற்றி எப்போதும் கூட்டம்தான்

நான் வட்டாட்சியர் அலுவலகத்தில் பணியில் சேர்ந்த சமயம். ஒரு துணை வட்டாட்சியர் வந்து பணியில் சேர்ந்தார். மிகவும் நல்ல மனிதர். யாரிடமும் கோபப்படமாட்டார். ரொம்ப நல்லவன்னு பேரெடுக்க விரும்புபவர். அப்படிப்பட்டவர்தானே நமக்குத் தேவை. நாங்கள் எல்லாரும் கேலிபேசுவதற்கு வசதியாக இருந்தார். ரசனையோடு கலந்துகொள்ளுவார். இருந்தாலும் அவரை நாங்களும் புண்படுத்தியதில்லை. அவரும் எங்களைப் புண்படுத்தியதில்லை.

அவர் காலையில் அலுவலகம் வந்தார் என்றால் அவர் முன்பாக எப்போதும் கூட்டம் சுற்றி நின்றுகொண்டிருக்கும். முதலில் என்ன நடக்கிறது என்று தெரியவில்லை. நான்கூட அவர் ஏதோ இந்த ஊரில் உள்ளவர்களுக்கு நன்கு அறிமுகமானவர்போலும். அதனால்தான் நிறையபேர் அவரை நாடி வந்துவிடுகிறார்கள் என்று எண்ணிக்கொண்டேன்.

கொஞ்சநாள் கழிந்துதான் தெரியவந்தது நிலவரம். நண்பர் காலையில் வந்து சீட்டில் உட்கார்ந்தவுடன் எப்படா அதிகாரி வருவார் மனுகொடுக்கவேண்டும் என்று காத்துக்கொண்டிருக்கும் யாரேனும் ஒருவர் வந்து மனு கொடுப்பார். நம்மவர் அவரிடம் மிகவும் பரிவுடன் கோரிக்கை என்ன என்று விசாரிப்பார். மனுவை வாங்கிக்கொண்டு பேசாமல் அடுத்த வேலையைப் பார்ப்பவர்களையே பார்த்து சலித்துப்போன திருவாளார் பொதுஜனம் பரிவுடன் என்ன ஏது என்று கேட்பவரைக் கண்டால் விடுவரா. “ஆதௌ கீர்த்தனாரம்பத்திலே” என்றபாணியில் பிரச்சினை முளைவிட்ட நாள் முதல் கதை சொல்ல ஆரம்பித்துவிடுவார். நம்மவரும் பொருமையாக தலையை ஆட்டிக்கொண்டு கேட்பார். ஒரு நிமிடம்

ஆகியிருக்காது. அடுத்து மனு கொடுக்க வந்தவருக்கு அவரது கோரிக்கைதானே முக்கியம். அவர் தம் மனுவை முகத்துக்கு நேரே நீட்டுவார். உடனே முன்னவரை விட்டுவிட்டு அடுத்த மனுவை வாங்கிக்கொண்டு என்ன என்பதுபோல் அவர் முகத்தைப் பார்ப்பார். ஆக அடுத்த கதை துவங்கிவிடும்.

முதல் மனுதாரர் நின்றுகொண்டே இருப்பார். அடுத்த மனுதாரர் பேசிக் கொண்டிருக்கும்போதே அடுத்து ஒருவர், பின்னர் அடுத்தது இன்னொருவர், என்று நான்கைந்துபேர் மனுவை நீட்ட எல்லாருக்கும் ஒரே நிலைதான். அவரவர்களும் தங்கள் கதை முடியவில்லை என்று நின்றுகொண்டே இருப்பர். அவர்களுக்கு அப்போதே தங்கள் கோரிக்கை பரிசீலிக்கப்பட்டு கைமேல் பலன் கிடைத்துவிடும் என்று நினைப்பு. இதற்கிடையில் போன் குறுக்கீடு வேறு. இப்படியாக நின்று கொண்டிருப்பவர்கள் அவர்களுக்குள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு தனி ஆவார்த்தனம் செய்வர். ஆக எப்போதும் மேசையைச் சுற்றிலும் பத்துபேர் இருப்பர். இதற்கிடையில் கிளார்க்குகள் ஏதேனும் கோப்பினைக் கொண்டுபோய் நீட்டினால் அதுவும், மேசையில் உள்ள மனுக்களுடன் சங்கமமாகிவிடும்.

நிற்கிற கும்பல் சும்மா இருக்குமா மேசைமேல் இருக்கும் கோப்பினை லேசாகத் துக்கி என்ன இருக்கு என்று ஆராயும். பக்கத்து மேசையில் உள்ள குமாஸ்த்தாக்களின் கோப்புகளை ஆராய்வர். இப்படியாக தெந்தரவுதான் மிஞ்சும். யாருடைய கோரிக்கையும் பைசல் ஆகியிருக்காது.

நண்பர் தனியாக இருக்கும்போது "ஏன் சார் வருபவர்களிடமெல்லாம் நீங்கள் பேச்சுவார்த்தை நடத்திக்கொண்டே இருந்தால் எப்படி? டக் டக்கென்று அனுப்பிவைத்தால் என்ன?" என்றால் அவர் சொல்வார். "ஏன்சார் அவனவன் ஏதோ நம்ம கோரிக்கைக்காக மட்டும்தான் இந்த ஆபீஸ் திறந்துவைத்துக் காத்திருக்கிறது என்று நினைத்துக்கொண்டு செலவுசெய்து கொண்டுவந்து

மனுகொடுக்கிறான். நாம் செய்துகொடுக்க இயலவில்லையென்றாலும். ஆறுதலாகவாவது பதில் சொல்ல வேண்டாமா. அப்பதானே நம்மீது அவனுக்கு நம்பிக்கை வரும்” என்பார்.

கோரிக்கை நிறைவேற வேண்டாமாம். ஆறுதல் கிடைத்தால் போதுமாம். இது எப்படி இருக்கு.

இடையிடையே எங்களுக்குக் கதையெல்லாம் சொல்வார் பாருங்க. ஒன்றிரண்டைப் பார்க்கலாம்.

வேலைக்கு புதிதாக வரும் குமாஸ்த்தாக்கள்பாடு எப்பவுமே கொஞ்சம் கஷ்டம்தான். அப்போதெல்லாம் உயர் அதிகாரி கூப்பிட்டாலே போதும். நாம் என்ன தப்பு செய்தோம். இந்த கோப்பு வைக்கவில்லையே அதற்குத்தானா? அந்தக்கோப்பில் அப்படி எழுதினோமே அதற்குத்தானா! என்றெல்லாம் ஒரு பயம் வந்துவிடும். அதிலும் வட்டாட்சியர் என்பவர் வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள்தான், சற்று நேரம்தான் அலுவலகத்திற்கு வருவார். வந்துவிட்டால் அலுவலகம் மிலிட்டரி கோர்ட்டு நிலைமையில் இருக்கும். துணை வட்டாட்சியர் முதல் பியூன் வரை எல்லாருக்கும் எதாவது காரணத்திற்கு டோஸ் விழும். ஏதோ ஒரு சில சீனியர் கிளார்க்குகள் மட்டும்தான் வட்டாட்சியரிடம் தாமாகவே சென்று பேசுவர். பாதரட்சைகளை கழற்றிவிட்டு தரிசிக்கச் செல்லும் கிளார்க்குகள் எல்லாம் சர்வசாதாரணம். அவ்வளவு பயம். அப்புறம் புதுசா வந்து வேலை கற்றுக்கொள்ளும் நிலையில் உள்ள குமாஸ்த்தாக்கள் எம்மாத்திரம்.

இப்படியாகத்தானே தாசில்தாராகப்பட்டவர் திக்குவிஜயத்தை முடித்துக் கொண்டு அலுவலகத்திற்குள் பிரவேசம் செய்தவுடன் மணி அடிக்கப்படும். டபேதாராகப்பட்டவர் போய்க் கேட்டுவிட்டு குற்றேவலுடன் வெளியே வந்து அந்த “பி9-ஐ” அய்யா கூப்பிடறார் என்று சற்று ஏளனமும், கொஞ்சம் சிவபெருமான் தலையில் உள்ள பாம்பின் கர்வத்துடன் கலந்த அதிகாரத்துடனும் அறிவிப்பார். அந்தளவிலே “பி9” ஆகப்பட்டவர் ஒரு சில மாதங்கள் முன்பு வேலைக்கு சேர்ந்தவர். அவரோ

‘இடியோசைகேட்ட நாகம்போல்’ நடுநடுங்கி நேற்று வைத்த பைல் சம்பந்தமாகவா, காலையில் ஒரு பார்ட்டி வந்து கேட்டானே அவன் ஏதாவது வத்தி வைத்துவிட்டானா, என்று மனம் பதறும்போதே, ஆகா நேற்று நாம் பி.ஆர் தணிக்கைக்கு வைக்க மறந்துவிட்டோமே அதுவாக இருக்குமா, இதுவாக இருக்குமா என்றெல்லாம் மனம் குமைந்துகொண்டே எழுந்திருந்து சட்டை பித்தான்களை சரிசெய்து போட்டுக்கொண்டு தலைமுடியை சற்று மேல் துக்கி சரி செய்துகொண்டு சிங்கத்தின் கூண்டுக்குள் தயங்கித் தயங்கி செல்லும் முயலாக சென்று ஒரு சலாம் செய்வார்.

அவ்வளவுதான். தாசில்தாராகப்பட்ட சிங்கத்துக்கு அவர் ஏதோ கலைப் பிராண்டிவிட்ட ஒரு சுண்டெலி மாதிரி தெரிவார். “வாங்க சார் மாப்பிளை மாதிரி எங்கப்பனும் கச்சரிக்கு போறான்னு தினம் வந்து சேரை தேச்சிட்டு போனா சரிவராது. டீ.ஓ. வந்தா நாற்பத்தெட்டு மணி நேரத்தில் பதில் போகணும்னு சாருக்கு தெரியாதா, என்னசார் டிரெயினிங் எடுத்தீங்க” என்று ஆரம்பித்து லேசாக ஒரு கடிகடித்து அனுப்பிவைப்பார். அப்போதுதான் தாம் நேர்முகக் கடிதங்களுக்கு பதில் வைக்காமல் குழப்பத்தில் கட்டி வைத்திருப்பது ஞாபகம் வரும். அப்போதும் ஒரு சந்தேகம் நாம் செய்துள்ள இத்தியாதி தப்புகள் எல்லாம் நல்ல வேளையாக அய்யாவுக்கு ஞாபகம் இல்லை போலும் அந்தமட்டும் தப்பித்தோம் என்று நினைத்தாலும். இத்தனைபேர் மத்தியில் வைத்து நம்மை இந்த ஆள் திட்டிவிட்டானே என்று ஒருபக்கம் மனம் கழிவிறக்கப்பட்டுக்கொண்டே ஒரு நொண்டி சமாதானத்தையும் சொல்லிவிட்டு வெளியே வருவார்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது பெயிலான சப்ஜெட்டுக்காக தலைமை ஆசிரியரிடம் அடிவாங்கிக்கொண்டு வெளியே வரும் மாணவனை எல்லாரும் பார்ப்பதுபோல் ஒரு உணர்ச்சி. சிலர் குறும்பாக சிரித்துவேறு வைப்பர்.

இப்படிப்பட்ட மனம் நொந்த நிலையில் வருபவரை சீனியர் குமாஸ்த்தா ஒருவர், அப்படியே நம்ம பி9-

கிளார்க்கை வார்த்தையினாலேயே வாரி அணைத்து உச்சி முகந்து பக்கத்தில் உட்காரவைத்துக்கொள்வார்.

“என்ன தாசில் திட்டிட்டானா. என்னா பண்ணினே” - இது சீனியர்.

“டீ.ஓ.க்கு பதில் வைக்கலை அதான்” - இது பி9

“அது தப்புதானே நீ அன்றன்றைக்கு பதில் எழுதிக்கடாசிட்டு போயிட்டா அப்புறம் ஏன் கேட்கப்போறாங்க டி.ஓக்கு பதில் வரலைன்னா கலெக்டர் ஆபீசில் அவரைத்தானே கேட்பான்” – சீனியர்

“சார் அது ஒண்ணுமில்லைங்க என்ன எழுதுறதுண்ணு புரியலை. அதான். இல்லாட்டி வேணுமிண்ணா கட்டி வைக்கப்போறேன்.” - பி9

“சரி தெரியலைன்னா என்னை மாதிரி சீனியர்களிடம் கேட்க வேண்டியதுதானே போ போய் என்னென்ன பதில் வைக்கணுமோ எல்லாத்தையும் எடுத்துட்டு மதியம் மூணு மணிக்கு வந்திடு. சர்வீசுக்கு வந்தவுடனே இப்படில்லாம் பாட்டுவாங்கினா அப்புறம் பிளாக் மார்க்காகிடும். போ. தைரியமா போ.” – சீனியர்

நம்ம பி9-க்கு பல்வேறு தெய்வங்களும் தன் முன்பு வந்து வரம் தந்துவிட்ட திருப்தி. இதுவரை பதில் தெரியாமல் கட்டி வைத்துள்ள தபால்கள் எல்லாத்தையும் எடுத்து வைத்துக்கொண்டு கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டிருப்பார்.

ஆச்சு மணி மூணு. நம்ப பி9, சீனியர் முன்பு ஆஜர். சீனியரோ தன் வேலையெல்லாம் முடித்துவிட்டு ஓய்வாக சிந்தனையில் உட்கார்ந்திருப்பதுபோல் இருப்பார். நம்மவர் வந்து பணிவான வணக்கத்தை காணிக்கை செலுத்திவிட்டு நின்றுகொண்டே இருப்பார். சற்றே சிந்தனை கலைந்து “வாடாப்பா எல்லா பைலையும் எடுத்து வந்திட்டையா பெட்டியில் உட்கார். ஒவ்வொண்ணா எடு” என்பார்.

டீ.ஓ.க்களுக்கு பதில் எழுதுவது தொடர்பான வகுப்பு ஆரம்பமாகும். “ஒரு டீ சாப்பிட்டுட்டு வந்துடறேனே நாமபாட்டுக்கு வேலைபார்க்கலாம்.” - இதுசீனியர்.

இவ்வளவு தூரம் நமக்கு உதவி செய்பவருக்கு நாம் இந்த காணிக்கையாவது செலுத்த வேண்டாமா என்ற எண்ணத்தில் “சார் நான் வாங்கித் தருகிறேன்” என்பார் பி9.

சீனியரோ சற்றே பிகு செய்துகொள்வார். நான் லைட்டா டிபன் சாப்பிடலாம் என்று பார்த்தேன் என்பார். கௌரவத்தை விடுவாரா பி9. அதற்கென்ன சார் நான் சொல்கிறேன் என்று குருவுக்கு டிபன் ஆர்டர் கொடுத்து காசையும் தந்துவிடுவார். அடுத்து ஆரம்பிக்கும் வகுப்பு.

“சரி முதல் கடிதத்தை எடு - ஒரு பேப்பரை எடுத்து நான் சொல்கிறபடி எழுது. கடிதாசி யாரிடமிருந்து வந்துள்ளதோ அவருக்கு எழுதவேண்டும். நே.மு.க. என்று போட்டு உன் கோப்பு எண் போடு. - கீழே மதிப்பிற்குரிய அய்யா என்று போடவேண்டும். - அடுத்து சப்ஜெக்ட். கடிதத்தில் என்ன எழுதியிருக்கோ அதையே எழுதவேண்டும். நான் சொல்கிறேன். அதை அப்படியே எழுதிக்கோ. - சரி அடுத்து பார்வை. - வந்த கடித எண்ணையும் தேதியையும் போடு. இப்போ டைட்டில் முடிந்து போச்சு - அடுத்து அந்த கடிதத்தில் என்ன கேட்டிருக்கோ அதற்கு பதிலை எழுதிக்கோ. கடையில் தங்கள் உண்மையுள்ள என்று எழுதி வட்டாட்சியர் என்று போட்டு ஒப்புதலுக்கு வைக்க வேண்டியதுதான்.

அடுத்த கடிதத்தினை எடு என்பார். அதற்கும் இதே ரீதியில் சொல்லிக்கொடுப்பார். அந்த ‘பி9’க்கு தெரியாததே பதில் எழுதுவதற்குத்தானே. அதைவிட்டு முகவரி எழுத ஒரு வகுப்பு எடுக்க வேண்டுமா என்ன. பி9க்கு எல்லாம் புரிந்ததுபோல் இருக்கும். ஆனால் ஒன்றும் புரியாமலும் இருக்கும். ஆக அன்றைய சீனியரின் டிபன் செலவு பி9 உபயமாகும்.

அடுத்த நாள் செலவுகககு ஒரு ‘சி9’ கிடைக்காமலா

போய்விடுவார். இப்படியாக சீனியர்கள் புது வரவுகளை ராக்கிங் செய்வதுண்டு. நான் தாலுக்கா அலுவலகத்தில் வேலையில் சேர்ந்த புதிதில் சீனியர்களுக்கு வணக்கம் சொன்னால் வந்தது வினை. இங்கே வா என்று கூப்பிட்டு ஒரு கட்டு தபால்களை கையில் கொடுத்து போய் கம்பேர் செய்துவா என்பார். அரைமணிநேரம் மெனக்கெட்டு முடித்துக்கொண்டு வந்தால் D.T. கையெழுத்து வாங்கிவா என்பார். அவரிடம் போய் நின்று வாங்கிவந்தால் அப்படியே டெஸ்பாட்சில் கொடுத்துவிடு என்பார். இருந்த இடத்திலிருந்தே எங்களை எடுபிடிகளாக்கி வேலை வாங்கிவிடுவார். நாங்கள் கிட்டத்தட்ட பத்துபேர் இருந்தோம். கொஞ்சம் கொஞ்சமாக அந்த டிரெண்டை மாற்றிவிட்டோம். முதலில் கொஞ்சம் வீக்கான சீனியரை முறைத்தோம். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக எல்லாரையும் மேய்க்க கற்றுக்கொண்டோம். நீயும் சர்வீஸ் கமிஷண் நானும் சர்வீஸ் கமிஷன் என்றெல்லாம் சண்டை வளர்க்க தைரியம் வந்துவிட்டது. நாளாவட்டத்தில் இந்த கொடுமையெல்லாம் மறைந்துவிட்டது. ஏன்னா நாங்கள்தான் சீனியர் ஆகிவிட்டோமே.

இப்போதெல்லாம் பலர் வேலைக்கு வரும்போதே விபரமாக வருகிறார்கள். எந்த சீட்டில் பசை இருக்கு எதில் பிரச்சினை இருக்கு என்று தெரிந்துகொண்டு காக்கா பிடித்தோ காசை அடித்தோ சீட்டை விலைக்கு வாங்கிவிடுகிறார்கள்

அரசாங்கம் வேலைக்கு எடுத்ததற்காக ‘சம்பளம்’ கொடுக்கிறார்கள். ஆனால் வேலை செய்வதற்கு பொதுமக்கள் ‘கிம்பளம்’ கொடுக்கவேண்டும் என்ற பாலிசிதான் பெரும்பாலான குமாஸ்த்தாக்களுக்கு. இது தெரியாமல் ஒன்றிரண்டுபேர் நேர்மை என்ற மகுடத்துடன் உள்ளே நுழைந்து மாடு மாதிரி வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். டிரிக் (trick) தெரிந்தவர்கள் மைனர் மாதிரி போய் வந்துகொண்டிருக்கிறார்கள்.

(அந்த காலத்தில் நாங்கள் மாடு என்று புரிந்திருக்குமே.)

இப்போதுள்ள மேலதிகாரிகள் கேட்கமாட்டார்களா என்கிறீர்களா. அவர்களுக்கே வேலை தெரிந்தால்தானே. அவர்கள்தான் ஒரு தாரக மந்திரத்துடன் வருகிறார்களே. “அதென்னங்க கஷ்டம். நீங்கதானே சம்பந்தப்பட்டவர். நீங்கதான் செய்யணும். நான் வந்து செய்யணும்னா அதுக்கு நீங்க எதுக்குங்க” என்று கேட்டே காலம் கடந்துவிடுகிறது. அவர்களுக்கு மேற்கொண்டு புரமோஷண் கிடைத்து போய்க்கொண்டே இருக்கிறார்கள்.

“வேலை செய்றவனுக்கு வேலையைக்கொடு வேலை செய்யாதவனுக்கு புரமோஷண் கொடு என்பதுதானே” எங்கள் துறையின் பாலிசி. அப்படியில்லை யென்றால் வேலை செய்ய ஆள் கிடைக்கமாட்டார்கள் அல்லவா.

# 10 மாடுகள் பேப்பர் தின்னப் பழகியது எப்படி

எந்த ஒரு அலுவலகத்தை எடுத்துக்கொண்டாலும் அங்கே இளக்காரமான ஒரு பணியிடம் இருக்கும். அது பெரும்பாலும் டைப்பிஸ்ட் பணியிடமாகத்தான் இருக்கும். மனிதனுக்குக் கையாலாகாத வேலைகளையெல்லாம் வேறு யாராவது செய்யக் கூடியவர்களைக் கண்டால் அவ்வளவுதான். அவர்கள் பேரில் ஒரு இனம் புரியாத காழ்ப்புணர்ச்சிக்கு ஆளாகிவிடுவான். அப்படிப்பட்ட நிலையில்தான் இந்த டைப்பிஸ்ட்டுகளைக் கண்டால் கொஞ்சம் வெறுப்புணர்ச்சி மற்றவர்களுக்கு. அது அரசன் முதல் சேவகன் வரை ஒரே மாதிரிதான் வெளிப்படும்.

எப்போதும் டைப்பிஸ்ட்டுகளுக்கும், குமாஸ்த்தாக்களுக்கும், ஒரு பனிப்போர் ஏதோ ஒரு காரணத்தை வைத்து நடந்துகொண்டே இருக்கும். அப்போதெல்லாம் துணை வட்டாட்சியர், வட்டாட்சியர், கோட்டாட்சியர் போன்ற இந்த அதிகார வர்க்கம் இருக்கிறதே அவர்கள் குமாஸ்த்தாக்கள் பக்கம்தான் ‘கோடுவார்.’ ‘கோடாமை’ குறித்த வள்ளுவர் வாக்கெல்லாம் இங்கே செல்லுபடியாகாது. ஏன்னா, இவர்களுக்கு டைப்படிக்கத் தெரியாது. அடுத்து அவர்கள் மூலமாக வருமானம் வராது.

குமாஸ்த்தாக்கள் நாள் கணக்கில் ஏன் மாதக் கணக்கில்கூட ஒரு கோப்பினை கட்டி வைத்துவிடுவர். பார்ட்டி வந்து கவனித்தாலோ அல்லது வேறு எந்த வகையிலாவது நெருக்கடி வந்தாலோ உடன் அந்த கோப்பிற்கு சிறப்பு விசா அந்தஸ்த்து வழங்கப்பட்டு ஒவ்வொரு அலுவலராகக் கடந்து ஒப்புதல் பெற்று கடைசியாக டைப்பிஸ்ட்டிடம் வந்து சேரும். ஆனால் டைப்பிஸ்ட்டு மட்டும் உடனே அடித்துத் தந்துவிடவேண்டும். வரும்போதே ‘அவசரம்’ என்று

கட்டியங் கூறிக்கொண்டே கொண்டுவந்து தருவார் குமாஸ்த்தா.

ஆச்சு. டைப்பிஸ்ட் வேண்டுமென்றோ அல்லது வேண்டாமென்றோ தாமதம் செய்தால் உடனே அவதுறு கிளம்பிவிடும். நேராக அதிகாரியிடம் போய் நம்ம டைப்பிஸ்ட்டு எந்த பேப்பர் கொடுத்தாலும் அடித்து தரமாட்டேன் என்கிறார். ரொம்ப லேட் செய்கிறார் என்று கோள் சொல்வார் குமாஸ்த்தா. “ஆமாங்க எனக்குகூட அப்படிதான்” என்று அதற்கு வழி மொழியவும் ஒரு குமாஸ்த்தா இருப்பார். ஆரம்பித்துவிடும் ஒரு சத்தமில்லாத மௌன யுத்தம்.

இப்படித்தான் ஒரு வட்டாட்சியர் வந்துசேர்ந்தவுடனேயே ஒரு பிரச்சினையை அவரிடம் கொண்டுபோய்விட்டார்கள். அவரும் உடனே அதை நம்பிவிட்டார்.

ஒரு சில தினங்கள் சென்றது. நமது டைப்பிஸ்ட்டு நண்பர் தமது ஈட்டிய விடுப்பில் 15 தினங்கள் சரண்டர் செய்வதாகவும் அதற்கான ஊதியத்தினை வழங்கும்படியும் கேட்டு மனு கொடுத்தார். வட்டாட்சியர் ஏற்கனவே தம்மிடம் வந்த புகாரை நினைவு வைத்துக்கொண்டு தமக்கு இந்த சரண்டர் விடுப்பினை அங்கீகரிக்க அதிகாரம் உள்ளதா என்று கேள்விகேட்டு திருப்பி அனுப்பிவிட்டார். அது விபரம் நண்பருக்கு தெரிந்துவிட்டது.

நான் போய் டைப்பிஸ்ட் நண்பரிடம் ஒரு கடிதம் தட்டச்சு செய்யலாமென்று சென்றேன். அங்கே இரண்டு டைப்பிஸ்ட்டுகள் இருந்தனர். இருவரும் சீனியர்கள். இருவரும் படு வேகமாக தட்டச்சு செய்துகொண்டிருந்தனர். ஆனால் முகம் மட்டும் கடுகடு. டைப்படிக்கும் கடிதங்களில் எல்லாம் ஒரு எழுத்தை அடித்தால் இரண்டு அரை எழுத்தாக இரண்டு வரிகளாக அடித்துக்கொண்டிருக்கிறது. “என்ன அண்ணே இது இப்படி இருக்கே” என்றேன்.

“அது அப்படித்தான் உன் வேலையை முடித்துக்கொண்டு போ” என்று எனக்கு சரியாக அடித்துக் கொடுத்தார். அப்புறம்தான் தெரிந்தது

எரிமலை குமுறிக்கொண்டு இருக்கும் விஷயம்.

நீங்கள் வட்டாட்சியரிடம் நேரில் போய் கேட்பதுதானே என்றேன். நண்பர் சொன்னார். “இவன் (வட்டாட்சியர்) இத்தனை காலம் வேலை பார்த்திருக்கானே. அவனும் சரண்டர் வாங்கியிருக்கானே அவனுக்கு யார் சாங்ஷண் செய்தார்கள் என்று தெரியாதா? அதிசயமா தாசில்தார் சீட்டில் உட்கார்ந்தவுடன் இவன்களுக்கு இப்பதான் அதிகாரம் இருக்கா இல்லையான்னு சந்தேகம் வருதா. நீ பாட்டுக்கு போய் உன் வேலையைப் பார்” என்று சொல்லிவிட்டார்.

இரண்டு நாட்கள் ஆனது அலுவலகத்திலிருந்த எந்த கடிதமும் மேலே அனுப்பப்படவில்லை. ஏன்னா எல்லாம் படிக்க முடியாதபடி இரண்டு இரண்டு வரிகளில் அரைவாசி எழுத்துக்களில் உள்ளதே. குமாஸ்த்தா போய் கேட்டால் “மிஷின் அப்படிதான் அடிக்கிறது நீ வேணுமானா பார்த்துக்கோ” என்றுவிட்டனர். துணை வட்டாட்சியர் கேட்டார். அவருக்கும் அதே பதில்தான்.

பிரச்சினை வட்டாட்சியரிடம் கொண்டுபோகப்பட்டது. அவருக்கு ஒரே கோபம். கூப்பிட்டார் டைப்பிஸ்ட்டுகளை. விசாரணை துவங்கியதும் ஒரே பதில்தான் சொன்னார் டைப்பிஸ்ட்.

“மிஷின் லட்சணம் இதுதான். இருப்பதைக் கொண்டுதானே அடிக்க முடியும்”
“இவ்வளவு நாள் எப்படி அடித்தீர்கள் திடீரென்று இரண்டு மிஷினுமா ரிப்பேர்.”
“அது என்ன சொல்லிவைத்தா ரிப்பேராகுது”
“மெக்கானிக்கை கூப்பிட்டு கேட்டீர்களா”
“எல்லாம் காண்பிச்சாச்சு இனி ரிப்பேர் செய்ய முடியாது அதற்கு புது மிஷின்
வாங்கிவிடலாம். அதனால் ஸ்டேஷனரி அண்டு பிரிண்டிங் ஆபீசுக்கு அனுப்பிவிட்டு வேறு மிஷின்தான் வாங்கவேண்டும் என்று
சொல்லிவிட்டார்.”
“முக்கியமான கடிதங்களையாவது பக்கத்து ஆபீசில் போய் அடித்துக்கொண்டு

வரக்கூடாதா”
“அது எப்படிங்க அதுமாதிரி எல்லாம் சட்டத்தில் இடமில்லை.”
“என்னதான் சொல்றீங்க”
“பேசாமல் எங்களை ரிலீவ் பண்ணிடுங்க நாங்க வேற நல்ல ஆபீசுக்கு போஸ்ட்டிங் வாங்கிக்கிறோம்.”

பேச்சுவார்த்தை முறிந்துவிட்டது. இதற்குள் பிரச்சினையின் மூல காரணம் என்ன என்று வட்டாட்சியர் காதில் போட்டுவிட்டார்கள். பார்த்தார் வட்டாட்சியர் கூப்பிட்டார் சம்பந்தப்பட்ட குமாஸ்த்தாவை. டைப்பிஸ்ட்டின் சரண்டர் விண்ணபப்பத்தில் ஒப்புதல் செய்து அனுப்பி வைத்துவிட்டார். பிரச்சினை சரியாகிவிடும் என்று நினைத்தார். இரண்டும் அடிபட்ட புலியாயிற்றே அவ்வப்போது உறுமிக்கொண்டே இருந்தது. சின்னச்சின்ன பிரச்சினைகளும் பூதக்கண்ணாடிமூலம் பார்க்கப்பட்டது.

விளைவு. மீண்டும் ஒருநாள் வட்டாட்சியர் கூப்பிட்டார். டைப்பிஸ்ட்டுகள் வேலையில் எப்போதும் புகார் வந்துகொண்டே இருக்கு. என்ன வேலை நடக்கிறது என்றே தெரியவில்லை. உங்க செக்ஷனை கொண்டு வந்து என் ரூமுக்கு பக்கத்தில் உள்ள வெராண்டாவில் போடுங்கள் என்று உத்திரவிட்டுவிட்டார். அதன்படி தாசில்தார் கோர்ட்டு ஹாலுக்கு அருகில் தலைமை இடத்து துணை வட்டாட்சியர் பார்வையில் வெராண்டாவில் போடப்பட்டுவிட்டது.

அப்புறம்தான் நல்ல நல்ல கூத்தெல்லாம் நடக்க ஆரம்பித்தது. அலுவலகங்கள் நிறைந்த பகுதி என்றாலே ஏதாவது தின்னக் கிடைக்காதா என்று மாடுகள் சுற்றித் திரிவது வழக்கம். நம்ம டைப்பிஸ்ட்டு ஆபீசுக்கு வரும்போதே ஒரு குப்பை காகிதத்தை காட்டி அந்த மாட்டை கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே வரவைத்துவிட்டார். மாடும் சில தினங்களில் சுதந்திரமாக பேப்பர் தேடிக்கொண்டு ஆபீசுக்குள் வரும் அளவிற்கு பழகிக்கொண்டுவிட்டது. சில சமயம் ஆபீஸ்

வாசலில்வந்து பேப்பர் கிடைக்காதா என்று ஏக்கப் பார்வையை வீசிக்கொண்டு நிற்கும். அதை யாரும் கண்டுகொள்ளவும் மாட்டார்கள். அந்த வழியாக கடந்து செல்லும் சிலர் அதைத் தொட்டுக்கும்பிட்டுவிட்டு செல்வதும் உண்டு, (மாடு லட்சுமிக்கு சமமானதாமே)

ஒருநாள் இப்படி அந்த மாடு வந்து ஏக்கப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தது. அந்த நேரம் பார்த்து வட்டாட்சியர் டைப்பிஸ்ட்டை கூப்பிட்டு ஏதே கேட்டுக்கொண்டிருந்தார். ஒருவர் அன்று லீவு எடுத்திருந்தார். நண்பர் மேசைமேல் எல்லா கடிதத்தையும் வைத்துவிட்டு சென்றிருந்தார்.

மாடு இதுதான் சமயம் என்று சற்றே தலையை உள்ளே நீட்டி ஒரே சுழற்றில் ஒரு கட்டு கடிதங்களை சுனாமி போல் உள்ளே இழுத்து ஆற அமற சுவைத்துக் கொண்டிருந்தது. வட்டாட்சியரிடமிருந்து வந்த டைப்பிஸ்ட்டு அலறி அடித்துக்கொண்டு மாட்டை விரட்டுவது போலவும், அதன் வாயிலிருந்து கடிதங்களை பிடுங்குவதுபோலவும் பாவனை செய்துகொண்டிருந்தார். அதற்குள் சத்தம் கேட்டு நாலைந்துபேர் ஓடிவந்ததும் மாடு வாயில் கிடைத்த உணவுடன் ஓடிப்போய்விட்டது.

“இப்படி பொறுப்பில்லாமல் எல்லாத்தையும் வைத்துவிட்டு எங்கே போனீங்க” என்று எரிந்து விழுந்தார் துணை வட்டாட்சியர். “ஏன்சார் தாசில்தார் கூப்பிட்டார் என்று நீங்க சொல்லித்தானே போனேன். உங்க கண்காணிப்பில்தானே நாங்க வேலை செய்கிறோம். நீங்க பார்த்து விரட்டியிருக்கக்கூடாதா” என்று ராம பாணத்தைத் திருப்பிவிட்டார் டைப்பிஸ்ட்டு.

இப்படியே சில நாள் போயிற்று. ஒருநாள் செமத்தியான மழை பிடித்தது. அந்த வெராண்டாவின் கூரைக்கு பதிலாக அவரைக்கொடி போட்டு வைத்திருக்கலாம். அவ்வளவு சிறப்பான கூரை. விடிய விடிய பெய்த மழையில் மிஷின்கள் மட்டுமில்லாமல் கடிதங்கள் வைத்திருந்த பெட்டியில் தண்ணீர் புகுந்து ஊறி எல்லாம் காகிதக்கூழ்போல்

ஆகிவிட்டது. அப்புறம் என்ன வட்டாட்சியரே முன்னின்று சொல்லாமல் கொள்ளாமல் பழைய இடத்திற்கே சீட்டை மாற்றிப் போட்டுவிட்டார்கள். விடுவாரா டைப்பிஸ்ட். நேராக வட்டாட்சியரிடம் போய் “நாளைபின்னே எவனாவது புகார் சொன்னா நாங்க என்ன வேலை செய்றோம்னு நீங்க சந்தேகப் படுவீங்க அதனால் உங்க பக்கத்திலேயே எங்களுக்கு இடம் கொடுங்க உங்க கண்ணெதிரிலேயே வேலை செய்கிறோம்” என்று வாதாட, அப்புறம் ஒரு வழியா சமாதானம் ஆனது.

டைப்பிஸ்ட்டுகளிடம் வைத்துக் கொண்டால் அவர்களுக்கு வாதாட யாராவது வருவது கொஞ்சம் கஷ்டம்தான். ஆனால் அவர்களிடம் சரியான ஆயுதம் வைத்திருப்பர். அதுதான் முக்கியமான நேரத்தில் மிஷினை ஏதாவது செய்து அவதிப்பட வைத்துவிடுவர்.

ஆனால் டைப்பிஸ்ட்டு என்று இளக்காரமாக எண்ணிவிடக்கூடாது. ‘நான் பல ஊர் தண்ணிகுடித்து வளர்ந்தவன்டா’ என்று சிலர் பெருமை பேசுவர். அதுமாதிரிதான் பல அதிகாரிகளைக் கண்டவர்கள் டைப்பிஸ்டுகள். பல குமாஸ்த்தாக்களின் கடிதங்களையும் தட்டச்சு செய்தவர்கள். அதில் உள்ள விபரங்களை மனதில் கிரகித்து வைத்துக்கொண்டு சரியான நேரத்தில் ஆலோசனை சொல்லும் திறமையான டைப்பிஸ்ட்டுகள் இருந்துள்ளனர். சில அதிகாரிகள் சமயத்தில் டைப்பிஸ்டை கூப்பிட்டு இப்படி ஒரு விபரம் தேவை. உங்களுக்கு ஏதேனும் தெரியுமா என்று ஆலோசனை கேட்பது வழக்கம்.

இப்படித்தான் நான் காட்டுமன்னார்கோயில் தாலுக்கா ஆபீசில் வேலையில் சேர்ந்த நேரம். அங்கு ஒரு மதாச்சாரப்படி குடுமிவைத்த டைப்பிஸ்ட் இருந்தார். அவர் பெயரை அவசியம் சொல்லவேண்டும். அவர்தான் திரு ராமசாமி. நான் அவரை குடுமி அங்கிள் என்று கேலியாக கூப்பிடுவேன். அவர் என் கையெழுத்தை வைத்து என்னைப் பார்த்ததும் என்ன புறா பறக்காதா

என்பார்.

மலை புறம்போக்கு விபரம் கேட்டு ஒரு கடிதம் வந்தது. நான் பாட்டுக்கு இந்த தாலுக்காவில் மலை புறம்போக்கு இல்லை என்று எழுதிவிட்டேன். கடிதம் டைப்பிஸ்ட்டிடம் போனது. அவர் அதை அடிக்காமல் எடுத்து வைத்துவிட்டார். மற்ற எல்லாம் அடித்து வந்துவிட்டது. இதுமட்டும் குறைகிறதே என்று பார்த்து நேரில் சென்று கேட்டேன். நான் போனதும் “இங்கே வாடா இந்த தாலுக்காவில் மலைபுறம்போக்கு இல்லை என்று உனக்கு நல்லா தொரியுமா. உனக்குதான் தெரியாது. இதில் கையெழுத்து போட்ட எவனுக்கும் தெரியாதா. யாரையாவது கேட்கவேண்டாமா” என்று கேட்டுவிட்டு இன்னின்ன கிராமத்தில் உள்ளது. போய் பழைய கட்டை எடுத்துப் பார் என்றார். உண்மையில் அப்படி ஒரு பகுதி இருந்தது அந்தப் தாலுக்காவில் அதிலிருந்து அவர்பேரில் கூடுதல் மரியாதை ஏற்பட்டது. பலமுறை அவரிடம் விபரங்கள் கேட்டு அறிக்கைகள் தயார் செய்துள்ளேன்.

நாங்கள் எழுத்துப் பிழையுடன் எழுதும் வார்த்தைகளை எல்லாம் சரிசெய்து அடிப்பதுடன் எங்களிடம் இன்ன பிழை இருக்கிறது என்று சுட்டிக்கட்டுவார்.

வருடம் ஒரு முறை ஜமாபந்தி திருவிழா நடைபெறும். உண்மையில் அது ஒரு திருவிழா மாதிரிதான். எல்லா கிராமக் கணக்குகளும் தாலுக்கா அலுவலகத்திற்கு வரவழைக்கப்பட்டு தணிக்கை செய்யப்படும். மேல் அலுவலகங்களிலிருந்து வந்து கணக்குத் தணிக்கையில் ஈடுபடுவர். நம்ம குடுமி அங்கிளும் கணக்கு தணிக்கை செய்வார். அவரிடம் மட்டும் கணக்கு போட்டுவிடாதீர்கள் என்று கேட்கும் கிராம கார்ணம் மணியம் (தற்போது கிராம நிர்வாக அலுவலர்கள்) உண்டு. ஏனென்றால் அவருக்கு எல்லா கணக்கும் அத்துப்படி. தணிக்கை செய்து கணக்கில் உள்ள குறைபாடுகளை சி.ஏ.ஜி. ரேஞ்சில் கண்டுபிடித்துவிடுவார்.

அதேபோன்று என் நண்பர் பழனியப்பன் என்பவர்.

அவரை நாங்கள் அண்ணே என்றுதான் அழைப்போம். டைப் அடிப்பதில் செம ஸ்பீடு. ஒரு தப்பு இருக்காது. அவரிடம் பழகிய அளவில் உண்மையில் ஒரு அண்ணனாகத்தான் இருந்தார். எல்லாருக்கும் உதவி செய்வார். யாரிடமும் அவர் சண்டை வளர்த்தியதாக நானறியேன். இன்னும் ஒருபடி மேலே போய் என் திருமணத்தின்போதும் நான் முன்னின்று நடத்திய ஒரு திருமணத்தின்போதும். மற்றும் என் வீட்டில் ஒரு இறப்பு ஏற்பட்டபோதும் என் குடும்ப உறுப்பினர் போன்று இருந்து எல்லாம் செய்தார். அது நட்பைவிடவும் பல மடங்கு அதிகம் என்றால் மிகையாகாது.

இன்னும் ஒரு டைப்பிஸ்ட் அவர் எப்போதும் சிரித்த முகமாகத்தான் - சிரித்த முகமாக மட்டும்தான் இருப்பார். அவருக்கு ஏனோ வேலை என்றால் அவ்வளவு எரிச்சல். அதன் காரணமாக எப்போதும் பல்லைக் ‘கடித்துக்’கொண்டே செய்வார். ஆனால் பார்ப்பவர்களுக்கு எப்போதும் பல்லைக் காட்டிக்கொண்டு இருப்பதால் சிரிப்பதாகத் தோன்றும். அலுவலகத்துக்கு வந்த ஒரு பெரியவர் இவரைப் பார்த்துவிட்டு இந்த ஆபீசில் எப்போவும் சிரித்துக்கொண்டே இருக்கிறாரே அவர் யார் என்று கேட்டார் என்றல் பார்த்துகொள்ளுங்கள்.

டைப் அடிக்கக் கொடுக்கப்படும் சில கடிதங்களில் திருத்தம் ஏதும் இருக்காது. உடனே இதையெல்லாம் முதலிலேயே ஓ.சி. அண்டு எப்.சி. ஒரே தடவையில் அடிக்கக்கூடாதா என்பார். சின்னச் சின்ன நினைவூட்டுக் கடிதங்களையெல்லாம் நீங்கள் கையால் எழுதக்கூடாதா என்று வாதாடுவார். எல்லா குமாஸ்த்தாவுக்கும் அவரை கண்டால் சற்று கசப்பாகவே இருக்கும்.

சில சமயம் அவரை சீண்டுவதில் எனக்கும் கொஞ்சம் சந்தோஷமாக இருக்கும். என்னைப் பொருத்தவரை நான் சொந்தமாக டைப்ரைட்டர் வைத்திருந்தேன். நான் எங்கே போனாலும் அதனை எடுத்துச் சென்றுவிடுவேன். என் கடிதங்கள் பெரும்பாலும்

டைப்பிஸ்ட்டிற்கு போகாது. இருந்தாலும் சில சமயம் வேண்டுமென்றே ஏதாவது கடிதத்தை அவரிடம் கொடுப்பேன். அவர் வேலை அதிகமாக இருப்பதாகவும் நானே அடித்துக் கொள்ளக்கூடாதா என்றும் கேட்பார். நான் பாட்டுக்கு அவரிடம் ரொம்ப அவசரம் என்று சொல்லிக் கொடுத்துவிட்டு வந்துவிடுவேன். அவர் கையில் வாங்கி பேப்பர் வெயிட்டால் அதன் தலையில் ஒரு கொட்டு வைப்பார். அடுத்து அதை எடுத்து வேறு இடத்தில் வைப்பார். வாய் முணறிக்கொண்டே இருக்கும்.

அரைப்பக்கம்தான் இருக்கும். பல்லைக் கடித்துக்கொண்டு வேகவேகமாக அடிப்பார். ஒரு நேர்முகக் கடிதம். அதில் கட்டாயமாக கலெக்டர் பேயரையோ அல்லது அதற்கு ஏற்றார்போல் முக்கியமான இடத்திலோ ஒரு பிழையுடன் அடித்திருப்பார். கொடுத்த ஐந்தாவது நிமிடம் இந்தா என்று கடுகடுப்புடன் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போய்விடுவார். நான் எடுத்துப்பார்த்து அந்த இடத்தை வேண்டுமென்றே இங்கினால் மண்டையாக திருத்துவேன். அப்புறம் அதனை கொண்டுபோய் “முக்கியமாக இந்த இடத்தில் தப்பாக இருக்கு. கலெக்டர் நேரடியாகப் பார்ப்பது. பரவாயில்லையா” என்று அங்கலாய்ப்பேன். மனதிற்குள் சிரித்தாலும் முகத்தில் ரொம்ப பாவமாக காட்டிக்கொள்வேன். நான் காட்டியதுதான் தாமதம். வெடுக்கென்று அதனைப் பிடுங்குவார். இதனை மெலிதாகத் திருத்தியிருக்கக்கூடாதா என்று புலம்பிக்கொண்டே அப்படியே கசக்கி வீசிவிட்டு வேறு ஒன்று அடித்துத் தருவார்.

அரைகுறை மனத்துடன் கடமையே என்று செய்யும் காரியங்கள் எதுவும் இப்படித்தான் ஒன்றுக்கு இரண்டாக நமக்கு வேலைவைக்கும் என்பதை அவர் ரிட்டையர் ஆகும் வரையிலும் உணரவே இல்லை பாவம். எப்போதும் பல்லைக் கடித்துக்கொண்டு தன் கோபத்தையெல்லாம் மிஷிண்மேல் காட்டுவதால் டைப் அடித்து வரும் கடிதங்கள் எல்லாம் எழுத்துக்கள் தைத்து ஓட்டை உடைசலாக வந்துசேரும்.

ஆனால் அந்நாளில் டைப்பிஸ்ட்டுகள் பாவம்தான். சில கடிதங்கள் பல நகல்கள் தேவைப்படும். அவற்றுக்கு பல அடுக்கு கார்பன் வைத்து அடிக்கவேண்டும். கடைசி காப்பியும் தெளிவாக இருக்கவேண்டும் என்பதால் அழுத்தம் அதிகமாக கொடுக்க வேண்டும். தோள்கள் விரல்களில் கடுமையாக வலி எடுக்கும். அதைப்பற்றி குமாஸ்த்தாவுக்கு என்ன கவலை. ஆடு நனையுதேண்ணு ஓநாய் கவலைப்பட முடியுமா?

இதே துறையில் டைப்பிஸ்ட்டாக பணி துவங்கி முன்னேறி இதே துறைக்கு மாநிலத் தலைவரா (CRA) - சீப் செக்கரட்டரிக்கு இணையாக வேலை பார்த்தவர்கூட உண்டு என்றால் நம்ப முடியுமா?

# 11 எல்லாத் திருட்டும் திருட்டல்ல

ஒருவருக்குத் தெரியாமல் எடுத்தால் அது திருட்டுதானே. ஆனால் எல்லாத் திருட்டும் திருட்டல்ல. திருடனிடம் திருடினால் அது திருட்டல்லதானே.

திருட்டு என்பது எப்போது வருகிறது? ஒருவனுக்குப் பற்றாக்குறையாக உள்ள ஒரு பொருள் அடுத்தவனிடம் அபரிமிதமாக இருந்தால் அப்போதுதான் அதனை அபகரிக்கும் எண்ணம் மனிதன் மனதில் உதிக்கிறது. அப்படிப்பட்ட நிலை தொடரும்போது அவன் கொஞ்சம் கொஞ்சமாகத் திருடனாக மாறிவிடுகிறான். சிலர் அதனை விட்டுத் திருந்துவர். சிலர் அதனை தன் பிரதானத் தொழிலாக ஆக்கிவிடுவர். அப்போதுதான் பிரச்சினை.

நான் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் வேலை பார்த்தபோது என் பிரிவில்தான் அலுவலகத்திற்குத் தேவையான எழுதுபொருட்கள் வாங்கித் தரப்படும். அப்போதெல்லாம் அதிகாரிமுதல் கிளார்க்குவரை எழுதுவதற்குத் தேவையான இங்க் வகையறாக்கள் வாங்கித்தரும் பொறுப்பு எங்கள் பிரிவில் ஒரு குமாஸ்த்தாவிடம் இருந்தது. அவர் கொஞ்சம் சீனியர். நாங்கள் வேலைக்கு வந்த புதிது. அவரிடம் எழுதுவதற்கு இங்க் கேட்டால் இல்லை என்பார். எங்களிடம் “பில்போட்டால்தான் வாங்கமுடியும் இப்போதைக்கு நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்” என்பார். அனால் சற்று நேரத்தில் முக்கியமான பிரிவிலிருந்து கேட்டால் உடனே எடுத்துக்கொண்டுபோய் கொடுப்பார்.

அப்போதெல்லாம், வாரத்தில் மூன்று நாளாவது இரவு முழுவதும் உட்கார்ந்து வேலை செய்வோம். அப்படி ஒருநாளில் எங்கள் பொறுமல் வெடித்தது. நாங்கள் மூன்று குமாஸ்த்தாக்கள் சேர்ந்து அவரது

பெட்டியைத் திறந்து பார்த்தோம். சிகப்பு, நீலம், கருப்பு என்று வரிசையாக பாட்டில்கள் இருந்தது. நாங்கள் ஆளுக்கு ஒரு இரண்டு அவுன்ஸ் பாட்டிலில் வேண்டியதை நிரப்பிக்கொண்டோம். அப்போதெல்லாம். இங்க்பாட்டிலுக்கு குப்பிபோல் ஒரு ஜிகினாத்தாள் முடியிருக்கும். நோகாமல் கழட்டி விடலாம். அப்படி எடுத்துவிட்டு அதில் தண்ணீர் ஊற்றி அதே சீலைமூடி வைத்துவிட்டோம். பத்து நாள் கழித்து ஒருநாள் தன் வீட்டுக்கு எடுத்துப்போவதற்காக இங்க் ஊற்றிக்கொண்டு தொட்டு எழுதினார். ஒரே மங்கலாக எழுத்துக்கள் வந்தன. ஹெட்கிளார்க்கிடம் புலம்பினார் நண்பர். “இப்பல்லாம் xxxகம்பெனி கொஞ்சம்கூட சரியில்லை சார். பாருங்க எவ்வளவு தண்ணியா எழுதுதுண்ணு” நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்துக்கொண்டோம்.

இன்னொரு சமயம், நான் தாலுக்கா ஆபீசில் சம்பளப்பட்டியல் கிளார்க்காக இருந்தேன். பட்டியல் போடத் தேவைப்படும் படிவங்கள் எல்லாம் பதிவறையில் ஏராளமாக இருந்தது. ஆனால் பதிவறை அட்டெண்டர் மனது வைத்தால்தான் கிடைக்கும். தனக்கு ஏதேனும் காரியம் ஆகவேண்டும் என்றால் கேட்டவுடன் தருவார். இல்லையென்றால் படிவம் இல்லை வேறு அலுவலகத்தில் கேட்டுதான் வாங்கித் தரவேண்டும் என்று கைவிரிப்பார். என்னிடம் ஒரு பழக்கம். ஏதாவது கோப்பு போன்றவை தேவையென்றால் நானே கௌரவம் பாராமல் போய் சட்டையைக் கழற்றிவிட்டுக்கூட ரேக்குகள் மேலேறி தேடி எடுப்பேன். யார் தயவும் பார்த்துக்கொண்டு நிற்கமாட்டேன். அப்படி தேடும் சமயத்தில் எங்கெங்கே என்னென்ன கண்ணில் படுகிறதோ அதனை நினைவில் வைத்துக்கொள்வேன்.

நான் சம்பளப்பட்டியல் குமாஸ்த்தாவாக இருக்கும்போது ஒரு துணை வட்டாட்சியர் அலுவலகத்திலேயே தங்கி எங்களுடன் வேலை பார்ப்பார். ஒருநாள் அவரிடம் இப்படி நடக்கிறது எந்தப் படிவம் கேட்டாலும் தருவதில்லை. அவரை

கண்டிக்கக்கூடாதா என்றேன். ஆனால் அவரோ படிவம் இருப்பது நிஜம்தானே. இந்தா டார்ச் லைட், இந்தா சாவிக்கொத்து போய் வேண்டிய படிவத்தை எடுத்துக் கொள் என்று கொடுத்தார். அது போதாதா! நேராகப் போய் இருந்த எல்லா வகைப் படிவங்களையும் கிளப்பிக்கொண்டு வந்து துணை வட்டாட்சியரின் பீரோவில் அடுக்கிவைத்துவிட்டோம். இரண்டொரு நாட்கள் கழிந்தது. வந்தார் பதிவறை அட்டெண்டர். ஐயா இன்ன படிவம் இருக்குமா ரொம்ப வேண்டியவங்க கேட்கிறாங்க நான் வைத்திருந்தேன் காணவில்லை என்றார். வழக்கமாக அவர் எங்களுக்கு சொல்லும் பதிலை அவருக்கு திருப்பிவிட்டேன்.

அதற்கப்புறம் யாரிடமும் போய் படிவத்திற்கு பிச்சை எடுத்ததில்லை. அடுத்தாற்போல் அந்த ஆண்டுக்கான படிவம் வந்தபோது துணை வட்டாட்சியர் பார்த்தார். யார் யார் பிரிவுக்கு என்னென்ன படிவம் தேவையோ அவற்றை மொத்தமாக பிரித்து வழங்கி பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள் பிற்பாடு படிவம் இல்லை என்று சொல்லக்கூடாது என்று கொடுத்து புதிய வழிமுறை ஏற்பாடு செய்துவிட்டார்.

ஒவ்வொரு ஆண்டும். அலுவலகத்திற்குத் தேவையான எழுதுபொருட்கள் வந்து சேரும். ஆனால் குமாஸ்த்தாக்களுக்கு மட்டும் தேவைக்கேற்ப வழங்கப்படமாட்டாது. அப்படியே பதுக்கி வைத்து கடைசியில் வெளியே விற்றுவிடுகிற அலுவலர்கள் இருந்தார்கள்.

அப்போதெல்லாம் மூன்று ஆண்டுக்கு ஒருமுறை எப்படியும் மாறுதல் செய்துவிடுவர். இப்போதுபோல் ஒரே அலுவலகத்தில் ஒரே சீட்டில் ஒரு மாமாங்கம் எல்லாம் இருக்க முடியாது. அதிலும் எமர்ஜென்சி வேறு. எல்லாரையும் வேறு வேறு ஊருக்கு மாற்றிவிட்டார்கள்.

அந்த வகையில் இருபது பேருக்கு மேல் சிதம்பரம் தாலுக்கா ஆபீசில் கடலூர் காரர்கள் வந்து உட்கார்ந்து கொண்டார்கள். தினமும் ரயிலில் வந்து

போவார்கள். மாலையில் மட்டும் அலுவலகம் விடும் நேரத்தில் ரயில் புறப்பட்டுவிடும். அதனால் கடலூர்க்காரர்கள் மட்டும் நிரந்தரமாக ஒரு அனுமதி கடிதம் துணை வட்டாட்சியரிடம் கொடுத்து வைத்திருப்பார்கள். கடன் பிரிவு குமாஸ்தாக்கள் மட்டும் யாரையும் கண்டுகொள்ளாமல் அரை மணிநேரம் முன்னதாக புறப்பட்டு ஓட்டமும் நடையுமாக சென்று ரயிலைப் பிடித்துவிடுவர்.

பொதுப்பிரிவில் மட்டும் ஏங்கித் தவிப்பர். அப்போதைய தலைமை இடத்து துணை வட்டாச்சியர் மிகவும் இளகிய மனது கொண்டவர். கடலூர்க்காரர்களை ரகசியமாக அழைத்து காதுக்குள் நீ போகலையா என்பார். அத்துடன் போகிறவர்கள் எல்லாம் தனித்தனியா போங்க. கும்பலா போனா வெளியே தெரிந்துவிடும் என்பார். தப்பி தவறி அதிகாரி வந்துவிட்டால் இன்றுதான் அனுமதி கொடுத்துவிட்டு போகிறார் என்று காப்பற்றிவிடுவார்.

இந்த நிலையிலும் ஒரு குமாஸ்தா தினமும் பதினோரு மணிக்குதான் வருவார். மாலை நாலு மணிக்கே கம்பிநீட்டிவிடுவார். வேலையும் செய்யமாட்டார். வயதானவர் என்பதால் தாசில்தார் கண்டிக்கவும் மாட்டார். இவரைப் பற்றி சப்கலெக்டர் வரை நன்கு தெரியும்.

இப்படியாகப்பட்ட நிலையில் சப்கலெக்டர் ஆண்டு தணிக்கை வந்தது. எல்லோரும் ரயில் லேட்டாக வந்தால் சங்கடமாகிவிடும் என்பதால் முதல் நாள் அலுவலகத்திலேயே தங்கி வேலை பார்த்தனர். காலை பத்து மணிக்கெல்லாம் சப்கலெக்டர் வந்து விட்டார். ஒவ்வொரு பிரிவாக பதிவேடுகள் தணிக்கை நடக்க ஆரம்பித்துவிட்டது. நம்ம நாயகனோ அன்றும் பதினோரு மணிக்குதான் அலுவலகம் வந்தார். அதற்குள் அவரை தணிக்கைக்கு அழைத்துவிட்டார்கள். இதோ அதோ என்று சாக்கு சொல்லி சமாளித்துவிட்டார்கள். நண்பர் உள்ளே நுழைந்தார் ஒரு பையுடன். அவர் வரும் முன்பே கொய்யாப்பழ வாசனை வந்தது.

என்ன வாசனை அடிக்கிறது என்று கேட்டதற்கு தாம் கொய்யாப்பழ சென்ட் போட்டிருப்பதாக பதில் சொன்னார் அவர்.

அவரை பிடித்து கோர்ட் ஹாலுக்குள் தள்ளி விட்டார்கள். சப்கலெக்டருக்கு செம கோபம். ஏன் தாமதம் என்றார். நண்பரோ “அது வந்துங்க காலையிலேயே கிளம்பிட்டேங்க. வழியில் மயக்கம் வந்து விழுந்துட்டேன். ஆஸ்பத்திரிக்கு போய் காட்டிட்டு வரேனுங்க” என்றார். சப்கலெக்டருக்கோ கோபத்தை முந்திக்கொண்டு சிரிப்பு வந்துவிட்டது. “என் அப்பா மாதிரி இருக்கீங்க. பொய் பேசாதீங்க. நீங்க போகலாம்” என்று வெளியே அனுப்பி விட்டார்.

நண்பர் வெளியே வந்து என் பிரிவில் ஒரு குறையும் இல்லை என்று என்னை பாராட்டி அனுப்பி விட்டார் என்று பெருமையாக சொல்லிகொண்டார்.

இதில் சுவாரசிய சமாசாரம் என்னன்னா, நண்பர் கொண்டுவந்த பையை ஒரு மேஜை சந்தில் ஒளித்துவைத்துவிட்டு போனாரா! மக்கள் அந்த பையை எடுத்து சோதனை செய்தார்கள். பை நிறைய கொய்யா பழம். எல்லா குமாஸ்தாக்களும் எடுத்து பங்குபோட்டு காலி செய்துவிட்டார்கள். நண்பர் வந்து வெறும் பையைப் பார்த்து யார் எடுத்தது என்று அறியாமல் நொந்து போய்விட்டார். அவர் யாரிடம் கேட்டாலும் ‘நீங்கள் கொய்யாப்பழ சென்ட் போட்டதாகத்தானே சொன்னீர்கள். பழம் ஏதும் கொண்டு வந்ததாகச் சொல்லவில்லையே. என்னிடம் கொடுத்து வைத்திருந்தால் பத்திரமாக இருந்திருக்குமே’ என்று வெறுப்பெற்றிவிட்டனர். திருடனைத் தேள் கொட்டிய கதைதான்.

இந்த நண்பர் வயதான காலத்திலும் அற்பத்தனமாகக் காரியங்கள் செய்வார். அதனால் கடலூர் நண்பர்கள் இவரோடு சேர்ந்திருக்க மாட்டார்கள். அப்போதெல்லாம் கடலூர் – சிதம்பரம் இடையில் ரயில் சீசன் டிக்கெட் மாதத்துக்கு இருபது ரூபாய்க்குள்தான். எந்த ரயிலில் வேண்டுமானாலும் எத்தனை முறை வேண்டுமானாலும் போய் வரலாம். நமது நண்பரோ அந்த சீசன் டிக்கெட் கூட எடுக்காமல்

பழையதிலேயே தேதி திருத்தி பயன்படுத்துவார். என்றாவது டி.டி.ஆர். பார்த்தால் வயசானவர் என்பதால் திட்டிவிட்டு போகச் சொல்லிவிடுவார். இவரோ வெட்கமில்லாமல் அதையே பெருமையாகச் செய்துவந்தார். ஒருநாள் ஸ்குவார்டு வந்துவிட்டது. நண்பர் மாட்டிகொண்டார். மற்ற நண்பர்களிடம் உதவி செய்யும்படி கேட்டு பார்த்தார். முன்பே கண்டித்திருந்தும் அவர் திருந்தாததால் அனைவரும் கைவிட்டுவிட்டனர்.

நண்பர் ஒன்றும் பெரிய தப்பு செய்துவிடவில்லை. பல முறை திருத்தியதால் அந்த அட்டையே ஓட்டை விழும் நிலையில் இருந்தது. நண்பர் சொன்னார். அது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. என்னுடைய சீசன் டிக்கெட்டில் என் மகள்தான் இப்படிச் செய்துவிட்டார் என்று சொல்லப்போக, தணிக்கை செய்தவர்களுக்கு கோபம் வந்து இவ்வளவு நாளா திருட்டு ரயிலில் வந்ததற்கு கடுமையான தொகை கணக்கிட்டு பணத்தைக் கட்டு அல்லது ஜெயிலுக்குப் போ என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டனர். மாலை வரை ஸ்டேஷனிலேயே உட்காரவைத்து கடைசியில் பணத்தை கறந்துவிட்டுத்தான் வெளியே விட்டனர்.

அவருடன் வந்தவர்கள் அலுவலகத்தில் வந்து செய்தி வாசித்ததில் எல்லோருக்கும் தகவல் தெரிந்துவிட்டது.

இப்படிப்பட்டவர்களிடம் திருடினால் அது திருட்டல்லதானே.

# 12 சட்டம் என் கையில்

ஒரு சில அதிகாரிகள் சட்டத்தை மட்டும் கட்டிப்பிடித்துக்கொண்டு மல்லாடுவார்கள். சட்டத்தினை இடம் பொருள் ஏவல் அறிந்து அதற்குத் தக்கவாறு பிரயோகிக்கவேண்டும். சட்டம் என்பது இருபக்கமும் கூர்மையான ஒரு வாள் போன்றது. ‘துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம்’ என்பர். அதுபோன்று துஷ்டர்களை களைவதற்குத்தான் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளதே தவிர, நாம் ‘இஷ்ட பரிபாலன’மாக இஷ்டப்படி பயன்படுத்துவதற்காக அல்ல.

ஒரு குழந்தையின் கையில் கத்தி கிடைக்குமானால் அதனை தம் இஷ்டப்படி வீசும். ஒன்று அந்தக் குழந்தையால் மற்றவர்களுக்குக் காயம் ஏற்படும். அல்லது அதன் கையில் உள்ள கத்தியினால் அந்தக் குழந்தைக்கே ஆபத்து ஏற்படும். அதிலும் அதிகாரிகள் சட்டத்தை மட்டுமே கையில் வைத்துக்கொண்டு அரசாட்சி செய்தால் அதன் பலாபலன்கள் குழந்தை கையில் கிடைத்த கத்திக்கு ஒப்பாகத்தான் பலனைத் தரும். வலுத்தவன் எல்லாம் குழந்தையின் கையில் உள்ள கத்தியைப் பற்றிக் கவலைப்படாமல் தன்னைக் காத்துக்கொண்டு தப்பி விடுவான். கடைசியில் பலியாகப்போவது குழந்தையாகத்தான் இருக்கும் என்பதில் ஐயமுண்டோ.

அப்படி ஒரு சம்பவம்தான் இது. காட்டுமன்னார்கோயில் வட்டம் தனி வட்டமாகப் பிரிக்கப்பட்ட நேரம். வந்த வட்டாட்சியர் கண்ணுக்கு சட்டப்பிரிவுகள் மட்டும்தான் தெரியும். உண்மையில் சட்டப் பிரிவுகளில் அவர் கரைகண்டவர். சற்றும் ஆணவமோ செருக்கோ இன்றி பணிபுரிபவர். மிகமிக நேர்மையானவர். அதனால் அவரை யாருக்கும் பிடிக்காது. அவரது நேர்மையின் காரணமாக அவரது நடை உடை பாவனைகள் எல்லாம் அவரை ஒரு அரசனைப் போல் சற்றேனும் காண்பிக்காது. மாறாக

அவரிடம் வேலை பார்க்கும் சேவகர்கூட அவரை விடவும் சற்று அலங்காரமாக இருப்பார் என்றால் மிகையாகாது.

அப்படிப்பட்டவரை அரச பீடத்தில் அமர்த்திவிட்டனர். அவரது கண்டிப்பும் சட்டப்படி மட்டுமேயான செயல்பாடும். கீழே யாருக்கும் பிடிக்கவில்லை. தினமும் ஒரு போராட்டமாகக் கழிந்துகொண்டிருந்தது. அப்போது கிராம கர்ணம் மணியம் என்ற அலுவலர்கள் வேலை செய்த நேரம். ஒட்டுமொத்த கீழ் நிலை அலுவலர்களும் அவருக்கு எதிராகக் கொடி பிடித்த நிலை.

அப்படிப்பட்ட நிலையில் ஒரு கிராமத்தில் மணியம் வேலை செய்தார் ஒருவர். அவரும் சற்று கெடுபிடியான ஆள்தான். கிராமத்தில் வல்லமையானவரும்கூட. அங்கே அந்த கிராமத்தில் அவருக்கு சற்று எதிர்ப்பு. ஆனாலும் அவரை ஒன்றும் செய்ய இயலாத நிலைமை. இரண்டு நிலைமையும் ஒன்றாக சேர்ந்தது அந்த கிராமத்தைப் பொருத்தமட்டும்.

பார்த்தார் மணியம் நிலைமையை வைத்து தமக்கு சாதகமாக காய் நகர்த்தினார். குரங்கு கள்ளையும் குடித்ததோடு தேளும் கொட்டிய கதை அரங்கேறிற்று.

கிராமத்தில் ஒரு வழக்கம் உண்டு. ஒவ்வொரு வீட்டிலும் காலை மாலை வேளையில் வீட்டைப் பெருக்கி குப்பையைக் கொண்டுவந்து வீட்டு வாசலில் ஒரு மூலையில் கொட்டிவிடுவர். அது சற்று சேர்ந்தவுடன் ஒரு நல்ல நாள் பார்த்து அதை அக்கினி பகவானுக்கு ஆகுதியாகக் கொடுத்துவிடுவர். ஆக, எல்லா வீட்டு வாசலிலும் ஒரு சிறு குப்பை மேடு இருப்பது அந்த நாளில் வெகு சாதாரணம். நம்ம மணியம் பார்த்தார். தெரு என்பது அரசு புறம்போக்குதானே. அதில் குப்பை கொட்டுவதன்மூலம் ஆக்கிரமிப்பு செய்திருக்கிறார் என்று அந்தந்த வீட்டு சொந்தக்காரர் பேரில் ‘பி.மெமோ’ புக் செய்துவிட்டார். தாலுக்கா ஆபீசிற்கு அறிக்கை அனுப்பும்போது மணியம் தனது பரிந்துரையில் குப்பைமேடு மூலம் ஆக்கிரமிப்பு.

அதற்கு இருபது மடங்கு அபராதம் விதிக்கலாம் என்று பரிந்துரைத்துவிட்டார். எப்போதும் கீழ் நிலை அலுவலர் அனுப்பும் பரிந்துரையை மேலே இருப்பவர்கள் ஆய்வு செய்து குறைக்க மாட்டார்கள். அப்படி குறைக்க வேண்டுமெனில் அவர் அதற்கான காரணங்களைப் பதிவு செய்ய வேண்டும். அப்படி எந்த அலுவலரும் பதிவு செய்யமாட்டார்கள். ஏனெனில் ‘சட்டப்படி உள்ளதே தவிர அபராதத்தினை குறைத்தால் பின்னர் அரசுக்கு வருவாய் இழப்பு என்று நம்மீது ஏதாவது குற்றம் சுமத்தப்பட்டால் என்னாவது’ என்று அப்படியே வழிமொழிந்துவிடுவர்.

இப்படியாக வருவாய் ஆய்வாளர் பரிந்துரைக்க அதனை வட்டாட்சியர், அப்படியே அங்கீகரித்துவிட்டார். ஆக “இம்புட்டுகாணம் காக்கா அசிங்கம் செய்ததற்கு இப்படி ஒரு கலவரமா” என்று வடிவேலு சொல்லுவது போன்று வட்டாட்சியர் அங்கீகரிக்க கணக்குகள் முடிவுக்கு வரும்போது இம்புட்டுகாணம் குப்பை கொட்டியதற்கு வரி, அபராதம், செஸ். சர்சார்ஜ் என்று எங்கேயோ போய்விட்டது.

அடுத்து, விவசாயிகள் தங்கள் நிலத்திற்கு அருகில் இருக்கக்கூடிய புறம்போக்கு பகுதியில் சிறிதளவு சேர்த்து விவசாயம் செய்வது சர்வசாதாரணம். யாரும் ஆக்கிரமிப்பு செய்ய வேண்டும் என்று எண்ணிச் செய்வதில்லை. பல ஆண்டுகாலமாக எல்லையை மிகச் சரியாக கணிக்காமல் செய்வதுதான். தற்போது மீனவர்கள் இலங்கை எல்லையில் மீன் பிடித்தனர் என்ற பிரச்சினை போன்றதுதான் இதுவும். அதையெல்லாம் கணக்கெடுத்து ஆக்கிரமிப்பு புக் செய்துவிட்டார். அதற்கும் இருபது மடங்கு தீர்வை பரிந்துரை.

அதோடு விட்டாரா அவர்கள் புறம்போக்கு நிலத்தில் சாகுபடி செய்வதற்கு அரசு ஆதாரத்திலிருந்து தண்ணீர் எடுத்துள்ளனர் என்பதைக் காரணம் காட்டி அதற்கும் இருபது மடங்கு அபராதம் விதித்தார். ஆக ஒரு குற்றம் கூட்டுறவு வங்கியில் தவணை தவறிய

கடனுக்கு ஒப்பாக மடங்குகளில் பெருகியது.

அது மட்டும்தானா. இன்னும் கேளுங்க. கிராமத்தில் விவசாய நன்செய் நிலங்களுக்கு அனைத்திற்கும் தண்ணீர் தர அரசாங்கம் கியாரண்டி வழங்கியுள்ளது. அதன்படி ஒவ்வொரு சர்வே நம்பருக்கும் இன்னின்ன வாய்க்காலில்தான் தண்ணீர் பெறவேண்டும் என்று முறையாக அந்தக் காலத்திலேயே அதாவது 1920-களிலேயே செட்டில்மெண்டின்போது நிர்ணயம் செய்துவிட்டது. அதை இன்று வரையிலும் எந்தக் கொம்பனாலும் குறை என்று சொல்லி, திருத்த தைரியம் இல்லை. இதற்கும் சட்டப் பாதுகாப்பு வழங்கப்பட்டுள்ளது. ஒரு விவசாயி தமது நிலத்திற்கான பாசன ஆதாரத்தை மாற்றி பாசனம் செய்தால் அதற்கும் அபராதம் விதிக்க சட்டத்தில் வழிசெய்யப்பட்டுள்ளது. ஆனால் பொதுவாக விவசாயிகள் தண்ணீர் அருகில் கிடைக்கும் நிலையில் அதனைப் பாய்ச்சி சாகுபடி செய்துகொள்வது என்பது சாதாரணமான விஷயம். ஆனால் நம்மவர் அதனையும் புக் செய்தார். அதற்கும் இருபது மடங்கு பரிந்துரைத்தார். அதுவே புறம்போக்கு என்றால் ஆக்கிரமிப்பு அனுபத்திற்கு பிமொமோ இருபது மடங்கு அதில் சாகுபடி செய்தால் தண்ணீர் தீர்வை இருபது மடங்கு.

கிழிஞ்சிதுடா என்கிறீர்களா. கிழிஞ்சாலும் ஆடவேண்டும் என்பதுதான் விதி.

அவர்பாட்டுக்கு அதிகபட்சத் தீர்வையை விதித்துவிட்டார். அதிகாரி பாட்டுக்கு தன் கடமையைச் செய்தார். அதுதான் - 'அரசாங்க வருவாய்க்கு இழப்பு ஏற்படுத்தாமல்' – பார்த்துக் கொண்டார். ஆக, எல்லாரும் சட்டப்படியே நடந்து கொண்டனர். ஆனால் செக்கில் மாட்டிக்கொண்டு பிழிபட்டது அந்த கிராம மக்கள்தான். எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான். படித்தவன் பாட்டைக் கெடுத்தான் என்ற கதைதான்.

அடுத்ததாக ஜமாபந்தி வந்தது. வட்டாட்சியரோ ஒரு பைசாவானாலும் அரசாங்கத்திற்கு சேர வேண்டியது குறையக்கூடாது என்பதற்காக ஒவ்வொரு கிராமக்

கணக்கையும் தாமே கூட்டி, கழித்து, பெருக்கி, வகுத்து, என்று எல்லா திறமையையும் காட்டி கணக்குகளை திக்குமுக்காடச் செய்துவிட்டார். நம்ம கர்ணமோ அதிலும் கில்லாடி. அவர் கணக்கு எழுதுவதில் சிறந்த அறிவாளி என்றால் பொய்யில்லை. ஒரு கிராமக் கணக்கினை ஓரிரு மணிநேரத்தில் எழுதி முடித்துவிடுவார். அத்தனை வேகம். அத்தனை துல்லியம். கணக்கில் ஒரு பைசாகூட தப்பு கண்டுபிடிக்க முடியாது.

அவர் கணக்கு எழுதுவதில் ஒரு கலைநயம் இருக்கும். எல்லா வகை கணக்குகளும் அவரைச் சுற்றி பரப்பி வைக்கப்பட்டிருக்கும். அவர் தரையில் அமர்ந்து மடியில் வைத்துக்கொண்டுதான் எழுதுவார். கிராமத் தலையாரி அவ்வப்போது வெற்றிலை பாக்கு உட்பட தேவையானதை வாங்கிவருவார். ஒரு சில மணி நேரங்களில் அந்த கிராமக் கணக்கு முடித்து கட்டிவைக்கப் பட்டுவிடும். அடுத்து பக்கத்து கிராமத்தின் கணக்குப் பிள்ளை யாருக்கேனும் உதவி தேவையென்றால் அதை எழுத ஆரம்பித்துவிடுவார்.

நமது சட்டம் வட்டாட்சியாரிடம் கணக்கு போனது அப்படியே அங்கீகரித்து மேலே அனுப்பிவிட்டார். மொத்த கிராமத்திற்கான வரி ஒன்றும் அதிகமில்லை ஜெண்டில்மேன். இந்த கிராமத்திற்கான மொத்த வரியை விட அந்த தாலுக்காவிற்கான வரியானது குறைவுதான்.

அடுத்தடுத்த ஆண்டுகளில் இதே வரிவிதிப்பு தொடர்ந்ததும் கிராமமக்கள் கொடிபிடித்ததும் அப்புறம் அரசாங்கத்திற்கு நிலைமையை எடுத்துச் சொல்லி அரசாங்கமும் பெரிய மனதுவைத்து தள்ளுபடி செய்ததும் பெரிய கதை.

இதுதான் என்றில்லை. சட்டத்தை வைத்துக்கொண்டு வராத தண்ணீருக்கு வரிவசூல் செய்த கதை தெரியுமா. அதுவும் காட்டுமன்னார்கோயில் வட்டத்தில்தான்.

அன்னாளில் நடந்த ஒரு நிகழ்ச்சி குறித்து கேள்விப்பட்டிருக்கிறேன். கர்மவீரர், ஏழைகளின்

தோழன், கல்விகண் திறந்த வள்ளல், எந்த ஒரு குழந்தையும் பசியின் காரணமாக படிக்காமல் இருந்துவிடக்கூடாது என்பதற்காக மதிய உணவுத்திட்டத்தை கொண்டுவந்த படிக்காத மேதை ‘காமராசர்’ அவர்கள் முதலமைச்சராக இருந்தபோது மெத்தப் படித்த இஞ்சினீயர்கள் எல்லாரும் ஏட்டில் எழுதிவைத்த ஒரு அணைக்கட்டுத் திட்டம் குறித்து அறிக்கை தயார்செய்து ஒப்புதலுக்குக் கொண்டு சென்றார்களாம். அத்திட்டத்தினைப்பற்றி விவரிக்கக்கேட்ட அளவில் காமராசர் அவர்கள் கேட்ட கேள்விக்கு அதிகாரிகளால் எந்த பதிலும் சொல்ல இயலவில்லையாம். வேறு மாற்றுத் திட்டமும் தோன்றவில்லையாம். அப்போது காமராசர் அவர்கள் இந்த திட்டத்தினால் இத்தனை விவசாயிகள் குடிகள் பாதிக்கப்படுவார்களே இதனை இப்படி மாற்றி அமைத்தால் என்ன என்று ஆலோசனை சொன்னாராம். ஏட்டுக்கறி சாப்பாட்டுக்கு உதவாது என்று நிரூபித்த அனுபவ அறிவாளர் அவர். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் என்றார் வள்ளலார். ஆனால் எதிர்காலத்தில் வாடப்போகும் பயிர்களைப் பற்றி கவலைப்பட்ட வள்ளலார் காமராசர். நான் சொல்லப்போவது அதற்கு நேர்மாறான நிகழ்ச்சி.

திட்டக்குடி தாலுக்காவில் ஓடிய (இப்போதுதான் ஓடவில்லையே) வெள்ளாற்றில் ஒரு தடுப்பணை கட்டி அந்தத் தண்ணீரை காட்டுமன்னார்கோயில் ஸ்ரீமுஷ்ணம் பகுதியில் பாசனம் செய்யலாம் என்று ஒரு திட்டத்தினை செயல்படுத்தினார்கள். அதற்கு பெலாந்துறை வாய்க்கால் திட்டம் என்று பெயர் சூட்டினார்கள். திட்டம் முடிந்துவிட்டது. திட்டம்தான் முடிந்ததே ஒழிய திட்டமிட்டபடி தண்ணீர் வரவில்லை. நம்ம பொதுப்பணித்துறை திட்டங்கள் எல்லாம் இப்படித்தானே இருக்கு. இருக்கும் பொறியாளர்கள், காண்ட்ராக்டர்களுக்கு வேலை வேண்டும். அதற்காக இப்படி திட்டங்கள் போடுவதில் வல்லவர்கள்.

சரி திட்டம் தோல்விகண்டுவிட்டது. அதற்கு என்ன செய்வது என்கிறீர்களா. அங்கேதான் இருக்கிறது

சிக்கல். இப்படி திட்டங்கள் கொண்டுவரும்போது அதற்கான செலவுத் தொகையை அதனால் பயன்பெறும் விவசாயிகளிடமிருந்து வசூல் செய்வதுதான் நோக்கம். இப்படியாக, போடும் திட்டத்தில் செலவு செய்வது, பலன் அடைவது எல்லாம் ஒரு துறை. அதன் செலவை இஞ்சினீயர் முதல் சுக்குநீர் வரை சம்பளம், படி, பயணப்படி இத்தியாதிகள் உட்பட எல்லாவற்றையும் சேர்த்து வரியாக வசூல் செய்யவேண்டியதும். விவசாயிகளின் வயிற்றொரிச்சலை வாங்கிக் கட்டிக்கொள்வதும் வேறு துறை. அதுதான் வருவாய்த்துறை. இப்படி என்னென்ன திட்டங்களோ செயல்பட்டதாகச் சொல்லப்பட்டு வசூல் செய்ய முடியாமல் திணறியுள்ளது வருவாய்த்துறை.

நம்ம திட்டத்திற்கு வருவோம். திட்டச் செலவினை விவசாயி வாரியாக பிரித்து டிமாண்டு லிஸ்ட் கொடுத்துவிட்டார்கள். தண்ணீரே வராத நிலையில் யார்தான் வரி கட்டுவார்கள். இப்படியே நாள் கடந்தது. வட்டிக்கடைக்காரன் போல் பாக்கிக்கு வட்டிகணக்கிட்டு அதையும் விவசாயிகளிடம் வசூல் செய்ய வேண்டிய நிலை. பல ஆண்டுகள் கடந்த நிலையில் சர்க்கார் கோழிமுட்டை குடியானவனின் அம்மிக்கல்லை உடைக்கும் என்று நினைத்த ஏதோ ஒரு சில பயந்தாங்கொள்ளிகளிடம் வசூல் செய்தனர். மற்றவர்களை ஒன்றும் செய்ய இயலவில்லை. இல்லாத திட்டத்திற்கு வசூல் செய்யக்கூடாது என்று நீதி மன்றத்திற்கு சென்றனர் விவசாயிகள். இதற்கிடையில் நிலைமையை எடுத்துச்சொல்லி தள்ளுபடி செய்யவேண்டும் என்று அறிக்கை அனுப்பினர் தாலுக்கா அலுவலகத்திலிருந்து. நம்ம அதிகாரிகளுக்கு அதையெல்லாம் சிந்திக்க நேரமில்லை. ஒவ்வொரு மீட்டிங்கிலும் அரசு உத்திரவு வரும் வரையில் வசூல் செய்வதற்கென்ன என்று கெடுபிடி செய்தனர். இப்படியாக, பெரும் போராட்டத்திற்கு இடையில் அரசு உத்திரவு வந்ததா. தள்ளுபடி ஆனாதா என்றெல்லாம் தெரியாது. மீட்டிங் சப்ஜெக்டிலிருந்து அந்த விபரம் சத்தமின்றி நீக்கப்பட்டுவிட்டது. ஆக முப்பது ஆண்டுக்கு மேலாக அந்த வாய்க்காலில் மழைத்தண்ணீராவது ஓடியதா

என்றால் அதுவும் கிடையாது.

இதுபோல் வெட்டாத கிணற்றுக் கடன், அடிக்காத பூச்சிமருந்துக்கு வசூல், வாங்காத டிராக்டருக்கு வசூல் என்று யாரோ ஒருவர் திட்டத்தை செயல்படுத்தி விடுவார். வசூல் செய்யும் பொருப்பு வருவாய்த்துறைக்கு. இப்படியாக ஒரு நிலையில் 36 வகை கடன்கள் வசூல் செய்ய வேண்டிய நிலைமை இருந்தது என்றால் நம்ப முடிகிறதா. ஆனால் விவசாயி என்னவோ சுதந்திரம் வாங்கியபோது இருந்த நிலையில்தான் இன்றும் இருக்கிறான் சுதந்திரமாக.

ஃப்பூ! இதுதானே என்கிறீர்களா வீராணம் ஏரி என்று ஒன்று ஆயிரம் ஆண்டுகளாக இருக்கிறது தெரியுமோ. அந்த ஏரியை கட்டிய புண்ணியவான் அதில் எவ்வளவு பலன் கண்டானோ தெரியாது. ஆனால் தற்காலத்தில் அது விவசாயிகளுக்கு பலன் கொடுக்கிறதோ இல்லையோ பலருக்குப் பலன் கொடுக்கிற கதை தொரியுமோ. 1984 ஆம் ஆண்டில் நான் வருவாய் ஆய்வாளராக இருந்தேன். அப்போது எங்கள் கோட்டாட்சியர் பங்களாவில் தங்கியிருக்கும்போது ஒரு கேள்வி கேட்டார். இந்த வீராணம் ஏரி இவ்வளவு பெரியதாக உள்ளது. அதனைத் தூர் வாரினால் நல்லது. ஆனால் ஒரே பிரச்சினை. அந்த மண்ணை என்ன செய்வது என்று பேச்சுவாக்கில் சொன்னார். நான் அதற்கு முன்னதாக 1980ல் ஆதி திராவிடர் நல தனி வருவாய் ஆய்வாளராகப் பணி புரிந்திருக்கிறேன். அப்போது இந்தப் பகுதி முழுவதும் எனக்கு அத்துப்படி. இன்னும் சொல்லப்போனால் நான் ஒரு கிராமத்தைக் கடந்துபோகும்போது அங்கு உள்ள ஆதி திராவிடர் ஒருவர் கப்பென்று என் சைக்கிளை மறித்துவிடுவார். என்னை இறக்கி இளநீர், டீ என்று ஏதாவது கொடுத்து உபசரித்துதான் அனுப்புவார். அந்த அன்புத்தொல்லையில் நான் பலமுறை நெகிழ்ந்திருக்கிறேன். அதனால் அவர்களின் நிலை எனக்கு நன்கு தெரியும். ஒவ்வொரு குடியிருப்புப் பகுதியும் பள்ளக்கையில் இருக்கும். சிறு மழை வெள்ளம் என்றாலும். அவர்களுக்குத் தண்ணீர்

பஞ்சம் இருக்காது. ஏனென்றால் அவர்கள் வீட்டுக்குள் புகுந்துதானே வெள்ளம் வடியும்.

இந்த அனுபவத்தை வைத்து நான் ஒரு ஆலோசனை சொன்னேன். ஏரியில் அப்புறப்படுத்தும் மண்ணை அப்படியே எல்லா குடியிருப்பு பகுதியிலும் கொட்டி மேடாக்கிவிடலாம். அப்படி செய்தால் சிதம்பரம் காட்டுமன்னார்கோயில் வட்டத்தில் எந்த குடியிருப்பும் வெள்ளத்தால் பாதிக்காது என்பதுதான் அது. என் அதிகாரி சொன்னார் “நீ என்னவோ நல்லாதான்யா சொல்றே ஏழை சொல் அம்பலம் ஏறாதய்யா.” அப்போது அது சாதாரண பேச்சுதான். பேச்சு என்பதைவிட ஒரு அங்கலாய்ப்பு என்பரே அதுதான் பொருந்தும்.

அப்போதைய கணக்குப்படி வீராணம் ஏரியில் பதினெட்டு அடி உயரத்திற்கு சேரு படிந்திருப்பதாக சொல்லப்பட்டது. இதே வீராணம் ஏரியை ஒட்டிய சாலையில் 1972க்கு முன்னர் பல முறை பயணம் செய்திருக்கிறேன். கடலில் அடிப்பது போன்று சிறு அலைகள் கிளம்பி பஸ்சில் போகிறவர்கள் பேரில் தண்ணீர்த் துளிகளை வீசும். அவ்வளவு அழகான காட்சி அது. அதன் கதி இப்போது எப்படி என்று சொல்லத் தேவையில்லை. ஏதோ சென்னைக்குக் குடிநீர் கொண்டு செல்லும் நோக்கத்தில் வீராணம் ஏரியில் சில ஆண்டுகளாகத் தண்ணீர் கொஞ்சமேனும் உள்ளது. இதற்கு முன்னர் கோடை காலத்தில் வீராணம் ஏரியானது சோழத்தரம் பகுதியின் இணைப்பு சாலையாகவோ விளையாட்டுத் திடலாகவோதான் இருக்கும்.

இப்படிப்பட்ட ஏரியை துர்வாரப்போவதாக திட்டங்கள் போட்டதும். பில் போட்டதும்தான் கண்ட பலன். அந்த ஏரி என்னவோ அப்படியேதான் இருக்கிறது. கோடிகளைக் கொட்டி பலன் இல்லாத இந்தத் திட்டத்திற்கு சிறு அளவு நிதியைக்கொண்டு மிகச் சிறப்பாக சீர் செய்திருக்க முடியும் மனம்தான் இல்லையே அப்புறம் எப்படி,

எனது ஆலோசனை (1) நெய்வேலியில் இயங்கும் ஒரு மண்வெட்டும் இயந்திரத்தின் பழைய சிறிய

இயந்திரத்தை கொண்டுவந்து ஏரிக்குள் இறக்கிவிட்டால். அது ஒரே மாதத்தில் ஆழப்படுத்திவிடும். இதற்கு நெய்வேலி நிறுவனத்திற்கு பெரிய தொகை ஏதும் தரவேண்டியதில்லை.

(2). கடலூரில், துறைமுகத்தில் மண் வெட்டுவதற்கென்று ஒரு இயந்திரம் உள்ளது. மண்வெட்டிக் கப்பல் என்பர். அதில் முன்பக்கம் ஒரு கை நீண்டு அதில் உள்ள மண்வெட்டி சுழன்றபடியே தண்ணீரை இழுத்து வெளியேற்றும். அதனைப் பெரிய குழாய்கள் மூலம் தொலை துரத்திற்குக் கொண்டு கொட்டிவிடுவர் மண்மட்டும் அங்கேயே தங்கிவிடும் தண்ணீர் மீண்டும் ஏரிக்குள் வந்துவிடும். அந்த இயந்திரம் ஒன்றும் கோடி ரூபாய் பெறுமானதல்ல. அதனை கொண்டுவந்து ஏரியில் இறக்கிவிட்டால் தண்ணீர் இருக்கும்போதே அது வேலை செய்துகொண்டிருக்கும். வெட்டும் மண்ணை கரையில் கொட்டிவிட்டால் கரை பலமடைந்துவிடும். செலவு குறைந்த சீரமைப்பு. ஆனால் செலவு குறைந்த திட்டத்தைப் போட்டால் யாருக்கு லாபம்.

1. இது எல்லாவற்றையும் விட ஒரு சிறப்பான திட்டம் உள்ளது. ஏரி மண்ணை யார் வேண்டுமானாலும் தங்கள் சொந்த செலவில் எடுத்துக்கொள்ளலாம். ஒரு லோடுக்கு இவ்வளவு என்று ஒரு குறைந்தபட்சத் தொகையை நிர்ணயம் செய்து அறிவிப்பு கொடுத்துவிட்டால் போதும். ஏரியானது ஒரு மாதத்திற்குள் துர்வாரப்பட்டுவிடும்.

ம். இதையெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தால் வடரெட்டை வாய்க்கால் பழமலைப்பிள்ளை போன்று நமக்கும் ஒரு பைத்தியக்காரன் பட்டம் கிடைக்கும் அவ்வளவுதான்.

அது என்ன என்கிறீர்களா. வடரெட்டை வாய்க்கால் என்பது வீராணம் ஏரியின் முக்கிய வாய்க்கால். அதில் பாசனம் பெறும் விவசாயிகளில் பழமலைப் பிள்ளை என்பவர் ஒருவர். அவர் விவசாயத்தில் புலி. அதைவிட வீராணம் ஏரியையும் அதனைச்

சார்ந்த வாய்க்கால்களையும் சீர் செய்ய வேண்டிய அவசியத்தையும் அதற்கான வழிமுறைகளையும் நன்கு அறிந்தவர். ஒவ்வொரு வாரமும், மாவட்ட ஆட்சியர், கோட்டாட்சியர், வட்டாட்சியர் என்று யாரையாவது சந்தித்து மனு கொடுப்பது வழக்கம். நான் அவரை முதன்முதலில் பார்க்க நேர்கையில் அவரைப்பற்றி நக்கலடித்த அதிகாரிகளைப் பார்த்திருக்கிறேன். “இந்தாள் ஒருத்தன் சலிக்காமல் ஒரு மனுவைத் துக்கிக்கொண்டு வந்துவிடுகிறான்.” என்று கமெண்ட் அடித்ததைப்பார்த்து நானும்கூட அவரை இகழ்ச்சியாக நினைத்ததுண்டு. ஆனால் விரைவிலேயே அவரது கோரிக்கைகள் பற்றி தெரிந்துகொண்டதும் அதற்காக மிகவும் வருந்தியிருக்கிறேன். அவர் பேரில் ஒரு மரியாதையே ஏற்பட்டது. அவரது கருத்துக்களைக் கொஞ்சமாவது அதிகாரிகள் கேட்டிருந்தால் எத்தனையோ விவசாயிகள் பயனடைந்திருப்பர் அத்தனை திட்டங்களை வைத்திருந்தார்.

இன்னொருவரைப்பற்றிக்கூட இங்கே சொல்லவேண்டியது அவசியம். அப்போது விவசாயிகள் வரிகொடா இயக்கம் நடத்திவந்த நேரம். கீழதங்குடியில் சேதுராமன் என்று ஒரு பெரியவர். அவர்தான் இயக்கத்திற்கு தலைமை வகிப்பவர். நாங்கள் கிராமத்திற்கு வரிவசூல் செய்யச் சென்றால் விவசாயிகள் அவர் சொன்னால் பணம் கட்டுகிறோம் என்று கைகாட்டிவிடுவர். மறுபக்கம் அதிகாரிகள் நிலவரி வசூலுக்கு நெருக்கடி கொடுப்பர். இந்த நிலையில் ஒருநாள் நேரில் அவரைப்பார்த்து விபரம் தெரிவிக்கலாம் என்று சென்றேன். போனவுடனே அவர் இன்று நல்ல நாள் எனக்கான வரி எவ்வளவு என்று கணக்கிட்டு சொல்லுங்கள் என்று கேட்டு பைசா சுத்தமாக செலுத்திவிட்டார். எனக்கோ ஆச்சரியம். அவர் சொன்னார் “இந்த நிலம்தான் எனக்கு சோறுபோடுகிற தெய்வம். அதற்கான வரி செலுத்தவேண்டியது எனது கடமை. அப்பத்தான் என் நிலம் எனக்கு சோறுபோடும்.”

உண்மைதான். அவரது நிலத்தைச் சுற்றி எல்லாரும் புகையான் தாக்கம், அது இது என்று நஷ்டப்பட்டுக்

கொண்டிருப்பர். ஆனால் இவரது நிலம் முழுவதும் ஒரு சிறு பிரச்சினை இல்லாமல் அறுவடையாகி விதை நெல்லாக விற்றுப்போகும். தமது சாப்பாட்டுக்கு அவர் வெளியே நெல் வாங்கிக்கொள்வதும் உண்டு. விவசாயத்தில் இப்படி ஒரு மேதை இருந்தார். அவரைப்பார்த்து அவர் செய்யும் வேலைகளை அப்படியே பின்பற்றிய ஒருசில விவசாயிகளும் உண்டு. இப்படிப்பட்டவார்களை கேலி பேசுபவர்கள் ஏராளம். அந்தக்குணம்தானே நம்மிடம் தாராளம். வேறு என்ன செய்ய.

ஆனால் ஒன்று “நான் கட்டிவிட்டேன் என்று சொல்லி யாரிடமும் வசூல் செய்யக்கூடாது” என்பார். வாரிகொடா போராட்டம் என்றால் முன் நிற்பார். அது என்ன லாஜிக்கோ.

# 13 அலுவலக உதவியாளர்களின் கூத்து

அலுவலகங்களில் வேலைபார்க்கும் அலுவலக உதவியாளர்கள் அடிக்கும் லூட்டி இருக்கிறதே அது ரொம்பவும் ரசனைக்குரியது. அந்த நாளில் வட்டாட்சியர் அலுவலகத்தில் கிட்டத்தட்ட 15 அலுவலக உதவியாளர்கள் இருந்தனர். அனைவரும் நேற்று வேலைக்கு வந்த குமாஸ்த்தாவாக இருந்தாலும்கூட அவர்களிடம் மாரியாதையாகவும், பாசத்துடனும் பழகுவர். சிறு பிரச்சினை என்றாலும்கூட துணை நிற்பர். தப்பு என்று தெரிந்தால் இன்னமாதிரி பிரச்சினை உள்ளது என்று எச்சரிப்பர். அலுவலக நிருவாகத்தில் அலுவலர்களும் பியூன்களும், (பிற்காலத்தில்தான் அலுவலக உதவியாளர் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது) நெசவு செய்யப்பட்ட பின்னல் இழையாக இயங்குவர்.

அப்போது டேப்ரிக்கார்டர் என்றால் ஏதோ அதிசய எந்திரம் என்று நினைத்த காலம். எல்லாருக்கும் ஊசி வைத்து இயங்கிய இசைத்தட்டுக்களைத்தான் தெரியும். அப்படிப்பட்ட காலகட்டத்தில் நான் ஒரு டேப் ரிக்கார்டர் வைத்திருந்தேன். ரேடியோவில் பாட்டு போடும்போது காத்திருந்து, தற்போதும்கூட உள்ளத்தில் இனித்துக்கொண்டே இருக்கும் பாடல்களைப் பதிவு செய்து வைத்திருப்பேன்.

அந்நாளில் ஒவ்வொரு பிரிவிலும் இருந்த வேலைப் பளு தற்போதைப்போல் பத்துமடங்கு இருக்கும். இதனால் அதிகப்படியான நேரம் வேலை செய்தால்தான் கொஞ்சம் நல்ல பெயர் எடுக்க முடியும். எங்களைப் போன்ற கத்துக்குட்டிகளைப் பற்றி சொல்லவே வேண்டாம். இரவு நேரத்தில் வந்து அலுவலகத்தில் வேலை பார்ப்பதெல்லாம் சர்வ சாதாரணம்.

இப்படிப்பட்ட நிலையில் நானும், என் நண்பர்கள் ரகமத்துல்லா, சுந்தரராமன், செல்வராஜ், கண்ணையன் போன்றோர் ஒரு செட்டு. இரவு ஒன்பது மணியளவில் வந்து உட்காருவோம். மறுநாள் காலை ஐந்து மணியளவில்தான் வீட்டுக்குப் போவோம். இப்படி வாரத்தில் இரண்டு நாளாவது வேலை செய்வோம். படுக்கை தூக்கம் ஓய்வு ஏதும் கிடையாது. இரவு பன்னிரண்டு மணியளவில் ஆளுக்கு ஒரு போர்வையைப் போர்த்துக்கொண்டு கடைத்தெருவிற்குப்போய் டீ குடித்துவிட்டு வருவதுதான் சிறிய இடைவேளை. இரவு முழுவதும் வேலைசெய்து கோப்புகளை கட்டுக்கட்டாக அதிகாரியின் மேசைமேல் வைத்துவிட்டுப் போய்விடுவோம். மறுநாள் காலையில் துணை வட்டாட்சியர் வந்தவுடன் அனைத்தும் ஒப்புதல் செய்யப்பட்டு வட்டாட்சியர் மேசையில் அடுக்கப்பட்டிருக்கும். அதிகாலையிலேயே முகாம் செல்லும் வட்டாட்சியர், வெளி வேலைகளை முடித்துவிட்டு அலுவலகத்தில் நுழைந்தவுடன் அவர் கண்ணில் கோப்பு மலை தட்டுப்படும். உடனே அவர் அந்த ‘ராக்கோழி’களை கூப்பிடு என்பார். எல்லாரையும் வைத்துக்கொண்டே கையோடு ஒப்புதல் செய்து கொடுத்துவிடுவார். அந்த சந்தோஷத்தில் எங்களுக்கு இரவு கண்விழித்த சுவடுகூட தெரியாது. இப்படியாக எங்கள் ஆரம்ப சர்வீஸ் கழிந்தது. ஆனால் இப்போதுதான் நினைக்கிறோம். நாம் அப்படியெல்லாம் கஷ்டப்பட்டு உடலையும் மனதையும் கெடுத்துக்கொண்டு வேலை பார்த்திருக்க வேண்டாமோ என்று. ஏன்னா இப்பவும் அந்த அலுவலகம் இயங்கிக்கொண்டுதானே இருக்கிறது.

இதிலே சுவாரசியமான விஷயம் என்னவென்றால் அலுவலகத்திற்கு என்று தனியே வாட்ச்மேன் கிடையாது. அலுவலக உதவியாளர்கள் முறை வைத்துக்கொண்டு நைட் டூட்டி பார்ப்பர். அதிலும் ஒருவருக்கு ஒருவர் ஒத்தாசையாக மூன்று நான்கு பேர் இரவில் அலுவலகத்திற்கு வந்துவிடுவர்.

நாங்கள் நால்வரும் இரவு அலுவலகம் வருகிறோம்

என்றால் தவறாமல் மூன்று நான்கு பேர் இரவு ஆஜராகிவிடுவர். ஒன்றுமில்லை. என்னுடைய டேப்ரிக்கார்டரை வீட்டிலிருந்து எடுத்து வந்துவிடுவேன். அது ஒரு மேசைமேல் அரசர்போல் கொலுவீற்றிருக்கும். அதனைச்சுற்றி அமைச்சர் பெருமக்கள்போல் நான்கைந்து அலுவலக உதவியாளர்கள் உட்கார்ந்துகொள்வர். அவர்களின் காதுகள் பாட்டுக்களைக் கேட்டுக்கொண்டிருக்கும் வேளையில் அவர்களின் கண்கள் டேப் சக்கரம் சுழலுவதையே பார்த்துக்கொண்டிருக்கும். அவ்வளவு வசியம் அதன்பேரில். அவர்களில் சின்னசாமி என்பவர் ஒருவர். பெயர்தான் சின்னது. உருவம் மிகப் பெரியது. மிகவும் தமாஷ் பேர்வழி. மற்ற அலுவலக உதவியாளர்களின் பஃபூன் அவர்தான். அவரை உசுப்பேற்றி டான்ஸ் ஆட வைத்துவிடுவர். அவர் தம்மை ஜெமினிகணேசனாக எண்ணிக்கொண்டு பாட்டுக்கு நடனம் ஆட ஆரம்பித்துவிடுவார். சில சமயம் இரவு சப்ஜெயில் காவலுக்கு வரும் வயதான பெண்மணியை அழைத்துவந்து இருவரும் ராக் அண்டு ரோல் ஆடுவர். நாங்கள் எங்களின் வேலையை அலுப்பு தட்டாமல் பார்த்தோம் என்றால் இவர்களின் உற்சாகமும் ஒரு காரணம்.

அந்த நாட்களில் மசால்சி என்று ஒரு பணியிடம் இருந்தது. அலுவலகத்தினை சுத்தம் செய்தல், கவர்கள் ஒட்டி வைத்தல் அலுவலகத் தேவைக்கு பசை காய்சுதல் இன்னபிற எடுபிடி வேலைகளைச் செய்வதற்காக அமார்த்தப்பட்ட பணியிடம் அது. அவர்களுக்கு சில்லரை செலவினத்திலிருந்துதான் சம்பளம் கொடுக்கப்படும். கிட்டத்தட்ட தினக்கூலிதான். பெரும்பாலும் அந்த மசால்சி என்பவரை வரும் அதிகாரிகள் தமக்கு ஒரு அடிமை சிக்கிக்கிட்டான் என்று நினைத்து தம் வீட்டு வேலைக்கு அழைத்துக் கொள்வர்.

இந்த அதிகாரிகள் இருக்கிறார்களே அவர்கள் எல்லாம் தம்மை ஒரு அரசராகவே நினைத்துக்கொள்வர். சரி அப்படியானால் அவரது மனைவியர் அரசிகள்தானே. ஆம் அவர்கள்

தங்களை மகாராணியாகவே நினைத்துக்கொள்வர். அரசர் இருக்கையில் வந்து உட்கார்ந்த நாள் முதல் அவர்களின் அந்தப்புற அரசாங்கம் கொடிகட்டிப் பறக்கும். அதற்காக சிக்கிக் கொள்ளும் அடிமைகள்தான் இந்த மசால்சிகள். சிலரிடம் அவர்கள் அந்தக்காலத்தில் கேள்விப்பட்ட அரபுநாட்டு அடிமைகள்போன்று சாட்டையடி மட்டும்தான் வாங்கியிருக்கமாட்டார்கள். மாறாக வாய்ச்சவுக்கால் பலமுறை விளாசப்பட்டிருப்பர். அவர்கள் வேலைக்கு வரும்போதே அவர்களை எந்த மந்திரம் போட்டோ வாயைக் கட்டிவிடுவர் அதிகாரிகள். அவர்கள் படும் அல்லல்கள் சொல்லிமாளாது. ஆனால் யாரிடமும் சொல்லவும் முடியாது. ஆனாலும், இந்த அலுவலக உதவியாளர்கள்மூலம் அரண்மனை ரகசியங்கள் வெளியே கசிந்துவிடும். ஸ்விஸ் வங்கி ரகசியமே வெளியே கசிந்துவிடும்போது இதெல்லாம் எம்மாத்திரம்.

இப்படிப்பட்ட ஒரு மாசால்சி ஒரு மகாராணியிடம் சிக்கிக்கொண்டார். அரசியார் அவரை தினமும் அம்மி அரைப்பது உட்பட சமையல் வேலையெல்லாம் வாங்கிக்கொண்டார். இந்தக்காலத்து டி.வி. சீரியல்களின் கதைக்கரு அந்தக்காலக் கதைகளிலிருந்துதான் உருவாகியிருக்கும் போலும். இவர் தமக்கு அந்த வேலைகள் செய்து பழக்கமில்லை என்றாராம். அதற்கு அரசியார் மசால்சி என்றால் என்ன மசாலா அரைப்பவர் என்றுதான் பொருள். அரைத்துக்கொடு என்று வேலை வாங்குவாராம். இப்படிப்பட்ட நிலையில் ஒருநாள் அந்த மசால்சி நமது அலுவலக உதவியாளர் குழாத்திடம் வேலை வேண்டாம் என்றுசொல்லி அழுதிருக்கிறார். நம் மக்கள் என்ன லேசுப்பட்டவார்களா? தீர்வினை சொல்லிக் கொடுத்துவிட்டனர்.

அதுமுதல் ஒவ்வொரு வேலையிலும் ஏதாவது தப்பு செய்து நஷ்டம் வைத்துக்கொண்டே வந்திருக்கிறார். அரசியாரும் தம் வாய் ஓயுமட்டும் திட்டித் தீர்த்திருக்கிறார். இவருக்கென்ன திட்டினால்

மேலேவந்து ஒட்டிக்கொள்ளவா போகிறது என்று இருந்துவிட்டார். மசால்சியின் தினசரி வேலையில் ஒன்று அருகில் உள்ள அடிபம்பிலிருந்து ஒரு தவலையில் தண்ணீர் பிடித்துவந்து வீட்டில் நிரப்புவது. யாரோதானே கஷ்டப்பட்டு தண்ணீர் கொண்டுவருகிறார்கள் தாராளமாக தண்ணீர் செலவாகிக் கொண்டிருந்தது குடும்பத்தில். இப்படியாகப்பட்ட ஒரு நல்ல நாளில் நம் அலுவலக உதவியாளர்கள் ஆலோசனைப்படி தோளில் சுமந்துவந்த அந்தப் பெரிய தவலையை வீட்டு வாசலில் தண்ணீருடன் தவறவிட்டுவிட்டார் நம் மசால்சி. அவ்வளவுதான் அத்தனை உயரத்திலிருந்து விழுந்த தவலையானது, லாரியில் அடிபட்ட தவக்களை (தவளை) மாதிரி வயிற்றைப் பிளந்துகொண்டு உயிரை விட்டுவிட்டது. சத்தம் கேட்டு திட்டிக்கொண்டே வெளியே வந்தார் அரசியார்.

வாசலிலோ தண்ணீர் வெள்ளமாக ஓடியிருக்க தவலையானது கோணல்மாணலாக வளைந்துபோய் வாயைப்பிளந்துகொண்டு தரையில் கிடக்க, அதற்கு மத்தியில் நமது மசால்சியார் முழுவதும் குளித்த நிலையில் காலைப் பிடித்துக்கொண்டு அரற்றிக்கொண்டு கிடந்தார். திட்டிக்கொண்டே வெளியேவந்த அரசியாருக்கு ஒரே அதிர்ச்சி. அய்யாவைப் பார்ப்பதற்கு என்று வந்து காத்திருந்த பொதுமக்களின் கனிவான கவனிப்பில் இருந்தார் மசால்சி. இப்படியா வேலைவாங்குவது என்ற கண்டனம் வேறு. அந்த உடைந்த குடத்துடன் மசால்சியின் அடிமை விலங்கும் உடைந்தது. மசால்சியை வீட்டு வேலைக்கு வரவேண்டாம் என்று ஆபீசுக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். கொத்தடிமைத் தளையிலிருந்து மீட்கப்பட்டவர் போன்று அலுவலகத்திற்கு வந்துவிட்டார் நம் மசால்சி. அதன் பின்னர் அதிகாரி வீட்டு அரண்மனை ரகசியங்கள் கதாகாலட்சேபமாக அவ்வப்போது அலுவலகத்தில் பிரசங்கிக்கப்படும்.

இங்கே மற்றொரு மசால்சி பற்றி சொல்லவேண்டும். குடும்ப சூழ்நிலை காரணமாக ஏதாவது ஒரு வேலைக்குப் போயாக வேண்டிய நிலையில் படித்த

அந்த இளைஞன் மசால்சியாக சேர்ந்தான். பத்தாம் வகுப்பு படித்துவிட்டால் ஏதோ முனைவர் பட்டம் பெற்றவர்போல் அலட்டிக்கொள்ளும் அந்த காலத்தில் பட்டம் பெற்றிருந்தும் சற்றும் வெட்கமோ கவலையோபடாமல் இட்ட பணிகளை செய்து யாவரும் விரும்பும் நிலைக்கு உயர்ந்தான். அலுவலகத்தில் தந்த ஊக்கத்தினால் சர்வீஸ் கமிஷண் தேர்வு எழுதி வெற்றிபெற்று அதே அலுவலகத்தில் கிளார்க்காக சேர்ந்தான். கடும் உழைப்பினால் பிற்காலத்தில் துணைக்கலைக்டர் வரையிலும் பதவி உயர்வுகள் பெற்று எல்லாருடைய அன்பையும் பெற்று ஓய்வு பெற்றார் அந்த முன்னாள் இளைஞன். கனிவான பேச்சு, யாரிடமும் அன்பாகப் பழகுவது கௌரவம் பாராமல் வேலைகளைச் செய்வது என்று பல குணநலன்கள். அவரைப் பார்த்து நானும்கூட நற்குணங்களைக் கற்றுக்கொண்டேன் என்பது உண்மை.

இதுவும் ஒரு மசால்சி மேட்டர்தான். வட்டாட்சியர் அலுவலகத்தில் அக்காலத்தில் மின்விளக்கு கிடையாது ஆளாளுக்கு ஒரு அரிக்கேன் விளக்கு மட்டும் கொடுக்கப்பட்டிருக்கும். மசால்சி என்பவர் தினசரி அவற்றைத் துடைத்து எண்ணை விட்டு மாலையில் ஏற்றி வைப்பார். மின் விசிறியாவது ஒண்ணாவது. கரண்டே இல்லையாம் இதில் மின்விசிறிக்கு எங்கே போவது. எல்லாம் கைவிசிறிதான். ஆனால் தாசில்தாருக்கு மட்டும். ஒரு பங்கா உண்டு. இன்றும்கூட பழைய கட்டிடங்களில் அதன் சுவட்டைப் பார்க்கலாம். ஆம் பங்காக்கள் அகற்றப்பட்டு விட்டன. ஓ அது எப்படி இருக்கும் என்றே தெரியாதல்லவா. ஒன்றுமில்லை. தாசில்தாரின் தலைக்கு மேலாக உயரத்தில் இரண்டு பக்கச் சுவருக்கும் இணைத்து ஒரு மரத்தண்டு பொருத்தப்பட்டிருக்கும். அதிலிருந்து சுமார் நான்கடி உயரத்திற்கு ஒரு தடித்த பாய் மற்றும் துணியினால் அமைக்கப்பட்ட தடுப்புபோன்ற அமைப்பு தொங்கிக்கொண்டிருக்கும். அதனை இயக்குவதற்காக தாசில்தார் சீட்டுக்கு பின்பக்கம் உள்ள சுவரில் ஒரு சக்கரம் வைத்து அதன் வழியாக விசிறி அமைப்பின்பேரில் கயிறுமூலமாக

இணைப்புக் கொடுக்கப்பட்டிருக்கும். அந்தக் கயிற்றினை தாசில்தார் கோர்ட் ஹாலுக்கு பின்பக்கம் உள்ள வெராண்டாவில் உட்கார்ந்திருக்கும் நபர் பிடித்து இழுத்தால் அந்த விசிறி அமைப்பு முன்னும்பின்னும் ஊஞ்சல்போல் ஆடி காற்றினை வழங்கும். இதற்காகவே ஒருவர் ‘பங்காபுல்லர்’ என்ற பெயரில் அமர்த்தப்பட்டிருப்பார். அவரும் மசால்சி போன்றவர்தான். ஏன் அந்த அமைப்பினை உள்ளேயே இருந்து இயக்கினால் என்ன என்று நினைப்பது புரிகிறது. அதெப்படி அவர் உள்ளே இருந்து இயக்கினால் அவருக்கும் காற்றுவருமே அப்புறம் ஆண்டியும் அரசனும் ஒன்றாகிவிட மாட்டார்களா. இதெல்லாம் வெள்ளைக்காரன் காலத்து அமைப்பு.

அப்படிப்பட்ட ஒரு பங்காபுல்லர் என்ற மசால்சி தாசில்தார் இருக்கும்போது பின் வெராண்டாவில் அமர்ந்துகொண்டு கயிற்றை இயக்கிக் கொண்டிருப்பார். சமயத்தில் கை அசந்தாலோ துங்கிவிட்டாலோ டோஸ் கிடைக்கும். இதனையெல்லாம் டபேதார் கண்காணிப்பார். இந்த அமைப்பையெல்லாம் நான் பணியில் சேர்ந்த காலத்தில் பார்த்திருக்கிறேன். ஆனால் கூத்துகளை நேரில் கண்டதில்லை. அப்படி வேலைக்கு சேர்ந்தவர்கள் பின்னாளில் பியூன்களாக ஆகிய சமயத்தில் சக பியூன்களால் கேலி பேசப்பட்டதை கேட்டு ரசித்ததுண்டு.

ஒரு மசால்சி பங்காபுல்லராக இருந்தபோது தாசில்தாருக்கு வரும் சாப்பாட்டை அவரிடம் கொடுத்துவிட்டுப் போய்விடுவராம். தாசில்தார் சாப்பிட அமர்ந்தவுடன் பரிமாறிவிட்டு பாத்திரங்களை கழுவி வீட்டுக்கு அனுப்பவேண்டும். ஆனால் நம்மாளு அதனைத் திறந்துபார்த்து அதில் உள்ள உணவுகளை முன்னதாகவே ருசித்துவிடுவார். இப்படியாக பல நாளாக நடந்துவந்துள்ளது. இவரது ருசிபார்த்தலானது முழுவதையும் காலி செய்யும் அளவிற்கு பாரிணாம வளர்ச்சி கண்டுவிட்டது. இப்படியாக ஒருநாள் மீன் குழம்பு வைத்து அனுப்பியிருந்தார் தாசில்தாரிணி. நம்மாளுக்கு

ஆசை அத்துமீறி கொஞ்சம் கொஞ்சமாக மீன் முழுவதையும் காலி செய்துவிட்டு முட்களையெல்லாம் அந்தக் குழம்பிலேயே போட்டுவிட்டார். சோதனையாக, அந்த மீன் தாசில்தாரால் ஏற்பாடு செய்து வீட்டுக்கு அனுப்பப்பட்டது. மாலையில் தாசில்தாரிணியிடம் குழம்பில் மீனைக்காணோம் முள்தான் இருந்தது என்று தாசில்தார் சொல்லப்போக அவரோ தாம்தான் மீனை வைத்து அனுப்பியதாக சொல்லப்போக விசாரணைக் கமிஷன் அமைக்கப்பட்டு உண்மை கண்டறியப்பட்டது. அப்போதுதான் மசால்சி செய்ததெல்லாம் வெளியில் வந்துள்ளது. விளைவு?

மசால்சியெல்லாம் வைத்தால் குடுமி எடுத்தால் மொட்டை கதைதான். பிடிக்கவில்லை என்றால் வீட்டுக்கு அனுப்பிவிடுவர். ஆனால் நம்மாளு அய்யா அப்படி இப்படி என்று காலில் விழுந்து கெஞ்சியதும் மனம் இளகி வேறு வேலை கொடுத்துவிட்டனர். அப்போதெல்லாம் அலுவலகத்தில் மசால்சி தகுதியில் வாட்சுமேன், தோட்டக்காரன், முச்சி, பங்காபுல்லர் என்று பலர் இருந்திருக்கின்றனர். அதிகாரிக்கு பிடித்த வகையில் புகார் இன்றி வேலை செய்தால் பிழைக்கலாம் இல்லையென்றால் மூட்டைகட்ட வேண்டியதுதான்.

இப்படியாக சிலகாலம் கழித்து ஒருநாள் அவருக்கு துணைக்கலெக்டர் அலுவலகத்திலிருந்து அழைப்பு வந்தது. அப்போதெல்லாம் துணைக்கலெக்டர் ‘கேம்பு’ போகிறார் என்றால் இரண்டு மூன்று நாட்கள் பயணத்திலேயே இருப்பார். அந்தந்த இடத்திற்கும் ஆபீசிலிருந்து கோப்புகள் பெட்டியில் அடைத்து சீல் வைத்து ஒரு பியூன் அல்லது மசால்சி தலையில் பயணமாகும். அங்கே சென்றதும். தம்மிடம் உள்ள சாவியால் திறந்து கோப்புகளை எடுத்துக்கொண்டு தாம் ஒப்புதல் செய்த கோப்புகளை வைத்து சீல்வைத்து திருப்பி அனுப்புவார் அதிகாரி. இப்போது மாதிரி பஸ் வசதியெல்லாம் கிடையாது. ஏதோ ஓரிரு பஸ் போகும். இடைப்பட்ட இடங்களுக்கு தலைச்சுமைதான். வேறு வழியெல்லாம் கிடையாது. இப்படி செல்பவருக்கு கொசுறு சுமையாக அதிகாரி

வீட்டம்மாவால் சமையல் செய்து கேரியரும் கொடுத்தனுப்பப்படும்.

இந்த மாதிரியான காலத்தில் ஒரு துணை கலெக்டர் இருந்தார். அவருக்கு சாப்பாடு ருசியாக இருக்கிறதோ இல்லையோ அவர் சாப்பிடும் இலை நன்றாக இருக்கவேண்டும். இல்லையென்றால் அன்று அந்த சாப்பாடு கொண்டுவந்தவர் வீட்டுக்கு மூட்டைகட்ட வேண்டியதுதான். இப்படிப்பட்ட நிலையில் மீன்குழம்பு புகழ் மசால்சிக்கு அழைப்பு வந்தது. அவரிடம் இலை குறித்த முக்கிய அறிவுரைகள் சொல்லிக் கொடுத்தனுப்பப்பட்டது. அவர் நேராக சாப்பாட்டை எடுத்துக்கொண்டு அதிகாரி தங்கும் பங்களாவுக்குப் போய்ச்சேர்ந்தார். அதிகாரி பசியோடும் வீட்டுச்சாப்பாட்டு ஆவலோடும் வந்துசேர்ந்தார். டபேதார் சாப்பாட்டுக் கூடையைப் பிரித்தார். அவ்வளவுதான். ‘கெட்டது மசால்சி குடி’ ஏன்று முடிவாகிவிட்டது. ஆம். சாப்பாட்டுக் கூடையுடன் கொண்டுவந்த வாழை இலை டர்ர்ர். அய்யாவோ சாப்பிட ரெடியாகிவிட்டார். ஓடிப்போய் வேறு இலை வாங்கிவரவும் முடியாத அளவில் அந்துவான காட்டில் இருந்தது அந்த பங்களா. டபேதாரிடம் சரண்டர் ஆனார் மசால்சி. பக்கத்து அறையில் தங்கியிருந்த ஒரு அதிகாரி சாப்பிட்ட இலை வெளியே அப்போதுதான் ஒரு விக்கினமும் இல்லாமல் வந்து விழுந்திருந்தது. ஓடிப்போய் எடுத்துவந்து கழுவிவிட்டு சாப்பாட்டைப் பறிமாறிவிட்டார் மசால்சி. அப்புறம் என்ன. முடிவு சுபம்தான். பிற்பாடு அவரை அடிக்கடி மற்ற அலுவலக உதவியாளர்கள் இப்படி செய்தவன்தானே நீ என்று கிண்டல் செய்ததை கேட்டிருக்கிறேன்.

அந்த நாளில் அதிகாரிகள் ரொம்பவும் கெடுபிடியாக இருப்பர். கீழே வேலை பார்ப்பவர்களிடம் கனிவுடன் இருந்தாலும் கண்டிப்பும் இருக்கும். எப்போது வேண்டுமானாலும் மெமோ வந்து சேரும். ஆனால் இந்த அலுவலக உதவியாளர்களுக்குப் பெரும்பாலும் மெமோ எல்லாம் தரமாட்டார்கள். அடங்காத குதிரை என்றால் அதிகாரியிடம் ஓதிவிடுவர். அதிகாரிகள் காலையில் முகாம் சென்று மாலை வீட்டுக்கு வந்து

சேருவது எல்லாம் கிடையாது. தற்போது இரண்டு அல்லது மூன்று தாலுக்காக்கள் சேர்ந்தது அக்காலத்தில் ஒரு தாலுக்கா. தற்போதைய கடலூர் மற்றும் விழுப்புரம் மாவட்டங்கள் சேர்ந்தது ஒரு ஜில்லா. அதனை இரண்டு சப்கலெக்டர்கள் பார்த்தனர். சிதம்பரம் சப்கலெக்டர் ஒருவர், திண்டிவனம் சப்கலெக்டர் ஒருவர். ஆக அவர்கள் கேம்பு போகும் தூரம் அளவுகளை தெரிந்துகொள்ளலாம்.

இப்படியாக தாலுக்கா டிப்டி தாசில்தாராகப்பட்டவர், தாசில்தார் முகாம் சென்ற இடத்துக்கும் சப்கலெக்டர் முகாம் சென்ற இடத்திற்கும் பெட்டிகளில் தபால் வைத்து பூட்டி சீல் வைத்து கோப்புகளை அனுப்பி வைப்பார். முன்பே சொன்னமாதிரி தலைச்சுமையுடன் லோல்பட்டு தபால் கொண்டுபோய் சேர்ப்பார் பியூன். போன் கிடைக்கும் பெருந்தனக்காரர் வீட்டிலிருந்தோ போலீஸ் ஸ்டேஷன் மூலமோ தகவல் வரும். அவ்வளவுதான் தகவல் பறிமாற்றம் எல்லாம். மற்றபடி தபால்தான். தனிநபர் பயணம்தான்.

இப்படிப்பட்ட அடங்காத குதிரையை அடக்க ஒரு அதிகாரி கையாண்ட முறை சுவாரசியமானது. அதிகாரி முன்னதாக தாம் செல்லவிருக்கும் இடங்கள் பற்றி தகவல் சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார். அடுத்து டிப்டிதாசில்தார் ஒரு பெட்டியை சீல் வைத்து அலுவலக உதவியாளரை அழைத்து மிகவும் அவசரம். அய்யா இன்ன ஊருக்குப் போயிருக்கிறார். உடனே கொண்டு போகவும் என்று கனிவாகப் பேசி தலையில் தூக்கிவிட்டார். நம்மவர் பெட்டியைத் துக்கிக்கொண்டு பொறுப்பாக கால்நடை சபரிமலை யாத்திரைபோன்று கிளம்பிப் போய்விட்டார். அந்த கிராமத்திற்குப்போய் மணியத்தை சந்தித்து விபரத்தைச் சொன்னர். அந்த மணியமோ ‘அடடா அய்யா இப்பதானே கிளம்பி இந்த ஊருக்கு போகிறார். சீக்கிரம் போனால் நல்லது’ என்று தெரிவித்து அனுப்பிவைத்தார். அடுத்தடுத்து இரண்டுமூன்று ஊர் சுற்றி, கொண்டுபோய்ச் சேர்த்தார் கடைசியில். அதிகாரியோ மிகவும்

அவசரமான தகவல் என்று சொல்லியும் இப்படி வந்தாயே என்று கடிந்துகொண்டு பெட்டியை வைத்துவிட்டுக் காத்திருக்கச் சொன்னர். பின்னர் கொஞ்சநேரம் கழித்து அவரைக் கூப்பிட்டு இந்தப் பெட்டியை எடுத்துக்கொண்டு ஆபீசில் கொண்டுபோய் கொடு மிகவும் அவசரம் என்று முடுக்கிவிட்டார். மீண்டும் அந்த பெட்டியை தலையில் துக்கிக்கொண்டு நடைப்பயணம் செய்து ஆபீசுக்குப் போய்ச்சேர்ந்தார். வழியெல்லாம் சுமையின் கனம்பற்றி சந்தேகம் அப்படி என்னதான் அந்த பெட்டியில் இருக்கு இந்த கனம் கனக்கிறதே என்று. என்ன செய்வது தலைவிதியல்லவா தலைச்சுமையாக வந்து உட்கார்ந்திருக்கிறது.

இப்படியாக இவருக்குமட்டும் அடிக்கடி வெயிட்டான தபால்கள் கொண்டுபோகும் முக்கியப் பொறுப்பு வழங்கப்பட்டு வந்ததில் பார்ட்டி நொந்து நுடுல்ஸ் ஆகிவிட்டார். இப்படியாக கொஞ்சம் கொஞ்சமாக சுருதி அடங்கிவிட்டது. உடனிருக்கும் பணியாளர்களிடையில் வேலை என்றால் மூக்கால் அழுபவன் என்று கெட்ட பெயர்வேறு கூடுதல் பலனாக வந்து ஒட்டிக்கொண்டது.

ரொம்பநாள் கழித்துதான் விஷயம் வெளியே வந்தது. பெட்டி முழுவதும் செங்கலை அடுக்கி முக்கிய கோப்புகள் என்று சொல்லி, தம்மை பழிவாங்குவதற்காகத் தம் தலையில் கட்டிவிட்ட சேதி. எடுத்துச்செல்லும் பெட்டியில் என்ன இருக்கு என்று திறந்து பார்த்தாலோ கொண்டுபோகாவிட்டாலோ தலைவிதியானது வயிற்றில் வேலையைக் காட்டிவிட்டால் என்னசெய்வது. மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அனுபவித்தார். அப்புறம் என்ன அதான் மூக்கணாங்கயிறுதான் போட்டுவிட்டார்களே.
அடங்கிப்போகவேண்டியதுதான்.

அந்தநாளில் அப்படி என்றால், பஸ் வசதி எல்லாம் உள்ள நாளில், அதாவது இருபத்தைந்து வருடம் முன்பு ஒரு சம்பவம். அப்போது அடிக்கடி சமூகப் பிரச்சினைகள் நடந்துகொண்டிருந்த நேரம். ஒரு

பெரிய பிரச்சினை நடந்துவிட்டது. தினமும் அன்றைய நடவடிக்கை குறித்து அறிக்கை தயார் செய்து இரவு ஒரு அலுவலக உதவியாளர் மூலம் கலெக்டர் பங்களாவுக்கு எடுத்துச் செல்லவேண்டிய நிலை. அப்போதெல்லாம் அலுவலக உதவியாளர்கள் கொஞ்சம் தேறிவிட்டனர். நான் மாட்டேன் நீ மாட்டேன் என்று போட்டி போட ஆரம்பித்துவிட்டனர். அவசரம் என்பதால் மறுக்க முடியாத நிலைமை.

ஒருநாள் மாலை ஆறு மணியளவில் அறிக்கை தயார் செய்து ஒரு அலுவலக உதவியாளாரிடம் கொடுத்து உடன் மாவட்ட ஆட்சியர் பங்களாவில் சேர்க்கும்படி தாசில்தார் சொல்லிவிட்டார். இவருக்கு ரொம்ப கடுப்பு. கூட இருந்தவர்கள் வேறு உசுப்பேற்றினர். அப்படி என்னதான் தலைபோகிறது. எல்லாம் அதிகாலையில் கொண்டுபோய் கொடுத்தால் போகிறது என்று முடிவு செய்து வீட்டிற்குச் சென்று படுத்துவிட்டார். அங்கே அறிக்கையை பெற்று அரசுக்கு அனுப்புவதற்காக காத்துக் கொண்டிருந்தனர். போனில் கேட்டால் தாசில்தார் ‘அப்பவே அனுப்பிவிட்டேன்’ என்பதும் அங்கே ‘இன்னும் வரவில்லையே’ என்பதும் கடைசியில் மாவட்ட ஆட்சியர் கவனத்திற்குப் போய்விட்டது.

தாசில்தாருக்கு சந்தேகம் வந்துவிட்டது. ஏதோ தப்பு நடந்துள்ளது என்று உணர்ந்தார். நேராக அந்த அலுவலக உதவியாளர் வீட்டுக்கு விட்டார் வண்டியை. அங்கே போனால் ஆசுவாசமாக நம்மாளு எழுந்துவந்தார். தாசில்தார் ஒன்றும் சொல்லவில்லை. “இன்னும் ஒரு மணிநேரத்திற்குள் தபால் கடலூருக்குப் போய் சேரவில்லையென்றால் நீ காலையில் வேலையில் இல்லை” என்று மட்டும் சொல்லிவிட்டு வந்துவிட்டார். அந்த நள்ளிரவில் எந்த பஸ் போகிறது. இப்போது போல் டூவிலர் எல்லாம் அப்போது கிடையாது.

வேறு வழி. ஒரு டாக்சி வைத்துக்கொண்டு தபால் கொண்டுபோய் சேர்த்தார். வாடகைதான் கொஞ்சம் அதிகம். வண்டி வாடகையும் அவரது ஒருமாத சம்பளமும் சரியாய்ப் போய்விட்டது. வேறு ஒரு

பாதிப்பும் இல்லை. அதிலிருந்து, எந்தத் தபாலைக் கொடுத்தாலும் வாய்மூடிக்கொண்டு எடுத்துச் செல்ல ஆரம்பித்தனர். ஆனால் ஒன்று. 'அய்யா பஸ் காசு கொடுங்கள்' என்று கேட்டுவாங்கிக் கொள்வர். அவ்வளவுதான்.

நான் வருவாய் ஆய்வாளராக இருந்தபோது நடந்தது இது. திடீரென்று ஒரு போலீஸ்காரர் என்னிடம் வந்து உங்களை உடனடியாக மாவட்ட ஆட்சியர் பி.ஏ. பேசச்சொல்கிறார் என்று தகவல் சொன்னார். எனக்கோ என்னடா விஷயம் நம்மை ஏன் பேசச்சொல்கிறார் என்று சற்று பயம் கலந்த சந்தேகம். செய்யாத தப்புகள்கூட கண் மூன்பாக விஸ்வரூப தரிசனம் தந்தது. பக்கத்தில்தான் வட்டாட்சியர் அலுவலகம். போய் போன் போட்டு பேசினேன். தாசில்தார் ஜீப் ஆபீசுக்குள் புகுந்துவிட்டதாமே ஆபீஸ் இடிந்துவிட்டதாமே என்றார் அதிகாரி. 'அப்படியெல்லாம் இல்லீங்க அய்யா' என்று சொல்லிவிட்டு விசாரித்துச் சொல்கிறேன் என்று தகவல் சொல்லிவிட்டு வந்து பார்த்தால். அப்புறம்தான் நடந்தது தெரிந்தது.

பெரிதாக ஒன்றும் நடந்து விடவில்லை. லீவுநாள் என்பதால் தாசில்தார் கடலூருக்குப் போய்விட்டார். தாசில்தார் இல்லையென்றதும் சாரதியும் கடலூருக்குப் போய்விட்டார். அலுவலக உதவியாளர் மற்றும் ஆக்டிங் டிரைவரான ஒருவர் காலையில் வந்தார். வண்டியைத் தமது சீடரை வைத்துக் கொண்டு சுத்தம் செய்தார். அடுத்து அவ்வளவு சூட்டிக்கை இல்லாத அந்த நபரை டிரைவர் சீட்டில் உட்கார்ந்து ஸ்டார்ட் செய்யச்சொன்னார். இவர் வண்டி கண்டிஷனை சோதிக்கிறாராம். அதனால் வண்டியைப் பார்த்துக்கொண்டு கீழே நின்றுகொண்டிருந்தார். அவரோ சாவியைப் போட்டுப்பார்த்தார். வண்டி ஸ்டார்ட் ஆகவில்லை. கீழே நின்ற பரமார்த்த குருவோ சீடனைப்பார்த்து "இவ்வளவு நாளா அசிஸ்டண்டா இருந்தென்ன பயன் xxxxமாதிரி ஸ்டார்ட் செய்கிறியே! நல்லா சாவியைத் திருப்பி ஆக்சிலேட்டர்கொடு" என்றார். அவ்வளவுதான். தம்மைத்தான் கெட்டவார்த்தையில்

திட்டவிட்டார் என்று அந்த ஜீப்புக்கு ரோஷம் வந்து சீறிப்பாய்ந்துவிட்டது.

தாலுக்கா ஆபீசின் மூன்று படிக்கட்டுகளையும் ஏறிக்கடந்து வெராண்டா கட்டைச் சுவற்றை இடித்துக்கொண்டு உள்ளே பாய்ந்துவிட்டது. பயந்துபோன இருவரும் ஒரு கொத்தனாரை ஏற்பாடு செய்து பெயர்ந்துபோன கட்டைச்சுவர் துண்களை இழுத்துவைத்து முன்பு இருந்ததுபோல் பூசிவிட்டனர். ஜீப்பு பட்டறைக்குப் போய்விட்டது. ஒன்றுமே நடக்காததுபோல் தாலுக்கா அலுவலகம் அமைதியாக இருந்தது. ஆபீசில் வழக்கமாக வந்துநிற்கும் காக்கா குருவிகூட இல்லை. எதிர் கடையில் விசாரித்தபின்தான் நடந்த விபரம் தெரிந்தது.

இந்த அசம்பாவிதத்திலும் ஒரு நல்ல நேரம். அந்த ஜீப்பு தெருவை நோக்கி நிற்காமல் ஆபீசைப்பார்த்து நின்றதுதான். இல்லையென்றால் அதுபாட்டுக்கு எப்போதும் கூட்டம் உள்ள தெருவில் பாய்ந்து சிலபலரை பதம் பார்த்துவிட்டு எதிர் கடையில் பார்ச்சேசுக்கு போயிருக்கும்.

அதற்குள் கலெட்டர் ஆபீசுக்கு தாசில்தார் வரவழைக்கப்பட்டு பி.ஏ.விடம் இலவச தரிசனமும் அர்ச்சனையும் செய்து அனுப்பி வைக்கப்பட்டார். பின் என்ன. யாருடைய அனுமதியும் பெறாமல் தலைமையிடத்தைவிட்டு சென்றால் கொஞ்சவா செய்வார்கள். அந்த அப்பாவி அலுவலக உதவியாளரைப் பார்ப்பவர்கள் எல்லாம் ‘கொஞ்சம் வண்டி எடுக்கிறீர்களா கேம்ப் போகலாம்’ என்று கிண்டல் செய்ய ஆரம்பித்துவிட்டனர்.

# 14 சிரஸ்ததார் அழைக்கிறார்

கலெக்டர் ஆபீஸ். அப்போதுதான் நான் வேலைக்கு வந்த கத்துக்குட்டி. அப்போதெல்லாம் வேட்டி கட்டியதுபோன்ற பெல்பாட்டம் பேண்ட். லாடம் வைத்தது போன்ற டக்டக் ஷூ. கழுத்து வரை நீண்ட கிருதா. யாருக்கும் அஞ்சாதவன் என்ற மிடுக்கு. இதுதான் நான். நான் மட்டுமென்ன எனக்குத் துணையாக இன்னும் நான்குபேர். இப்படியாக நூறுபேருக்கு மேல் வேலை பார்த்த அலுவலகத்தை நான்குபேர் கலக்கிக்கொண்டிருந்தோம்.

வந்துசேர்ந்தார் ஒரு ஹிட்லர். அவர்தான் சிரஸ்ததார். அவரைக் கண்டால் அதிகாரிகளுக்கும் பயம். அப்புறம் கிழே வேலை பார்ப்பவர்களைச் சொல்லவா வேண்டும். ஆனால் நன்கு வேலை தெரிந்தவர். அதைவிட, வேலைவாங்கத் தெரிந்தவர். திரு டி.என். சேஷன் வந்தபின்னர்தான் தேர்தல் ஆணையத்திற்கு என்ன அதிகாரம் என்று மக்களுக்கு தெரிந்த மாதிரி அவர் சிரஸ்ததாராக வந்தபின்னர்தான் அதிகாரம் களைகட்டியது.

நாங்களும் எங்களின் கலக்கல்களை கொஞ்சம் குறைத்துக்கொண்டு கூடுமானவரை அவர் கண்ணில்படாமல் போய்வந்து கொண்டிருப்போம். இப்படியாக நல்லாவே போய்க்கொண்டிருக்கையில் எப்போதாவது அவர் கண்ணில் பட்டுவிட்டால் போயிற்று. மதியம் அவர் சாப்பிட்டுவிட்டு சற்றே ஓய்வாக பிரிவில் உட்கார்ந்திருக்கும்போது மாடு அசைபோடுவதுபோல் அவர் மனதில் எங்கள் நிகழ்ச்சி வந்து படம் காட்டும்போலும்.

பிரிவில் நான் தலைகுனிந்து எதையாவது எழுதிக்கொண்டிருப்பேன். ஒரு அலுவலக உதவியாளர் வந்து ‘சார் உங்களை சிரஸ்த்தார் கூப்பிடறார்’ என்பார். உடனே செய்த, செய்யாத,

செய்யப்போகிற தப்பெல்லாம் மனக்கண்முன் வந்து இதற்கா அதற்கா என்று பட்டிமன்றம் நடத்தும். சிரஸ்ததார் கூப்பிடறார் என்றவுடனே எங்கள் ஹாலில் உள்ள எல்லாரும் தங்கள் வேலையை உடனடியாக நிறுத்திவிட்டு "மவனே மாட்டினியா செத்த போ" என்று மனதில் நினைத்துக்கொண்டு பாரிதாபப் பார்வை பார்ப்பர். எழுந்து தலைமுடி முதல் சட்டைப் பித்தான் வரை எல்லாத்தையும் இருக்கிக்கட்டி சரிசெய்துகொண்டு மெதுவாக எழுந்து கூனிக்குறுகிக்கொண்டு பயபக்தியுடன் இறுதித்தீர்ப்பு நாளில் கடவுள் முன்பாக நிற்கும் பாவாத்மாபோன்று போய் நிற்பேன்.

"அய்யா கூப்பிட்டீங்களா" இருகரம்கூப்பி வணக்கத்துடன் நான்.

"பி.டி.எல் எல்லாம் அனுப்பியாச்சா" அடிவயிற்றிலிருந்து ஒரு உறுமலுடன்
- சிரஸ்தார்.
"அனுப்பிச்சிட்டேங்க" – நான்
"போய் 347 சூன் மாத பிடிஎல் எடுத்துவா" மீண்டும் உத்திரவு

விட்டால் போதும் என்று வெளியே ஓடிவந்து பிரிவில் போய்ப் பதிவேட்டை எடுத்து அதனை எப்போது பதிவறைக்கு ஒப்படைத்தோம் என்று பார்த்து, பதிவறைக்கு ஓடிப்போய் 'சிரஸ்தார் கேட்கிறார்' என்று கேட்டால் இன்னும் வரவில்லை என்பார் பதிவுக்காப்பாளர். உடனே மாடிக்கு ஓடிவந்து ஒப்படைத்த பிரிவில் தேடினால் இருக்காது. சமயத்தில், 'நீ ஒப்படைக்கவில்லை' என்பார் சுத்த நகல் பிரிவு சூப்பிரண்டு. பதிவேட்டைக் காட்டி நிரூபித்த பின்னர். 'பதிவறையில்தான் உள்ளது நல்லா தேடிப் பார்க்கச்சொல்' என்று தட்டிக் கழித்துவிடுவார் கண்காணிப்பாளர்.

மீண்டும் தடதடவென்று படிகளில் இறங்கி - அதுவும் ஒன்று இரண்டு மூன்று என்று ஒவ்வொரு படியாக இறங்குவதெல்லாம் கிடையாது. ஒன்று மூன்று ஐந்து என்று ஒன்றுவிட்டு ஒருபடியாக தாவித்தான் செல்வது. அப்படி இறங்கி, பதிவறையில் மீண்டும்

முறையிட்டால். ரொம்ப அலட்சியமாக ‘வாண்டட் ஸ்லிப் கொடுங்கள் பார்த்துத் தருகிறேன்’ என்று அலட்சியமாக பதில்சொல்வார். கொஞ்சம் கோபம் வரும். இருந்தாலும் ‘சிரஸ்ததார் கேட்கிறார் நான் அப்படியே சொல்லிவிடுகிறேன்’ என்று எனது பதிவேட்டைக் காட்டியதும் கொஞ்சம் இருங்க என்று எடுக்கச்செல்வார். இருக்காதா பின்னே. அவர் மட்டும் என்ன சிரஸ்ததாருக்கு முன்பாக இறுதித் தீர்ப்புக்கு அழைக்கப்பட மாட்டாரா என்ன.

அதற்குள் கிட்டத்தட்ட அரைமணிநேரம் கடந்துவிடும். நமக்கென்னவோ ஆறுமணிநேரம் கடந்துவிட்டது போலவும் மீண்டும் அழைப்பு வந்துவிட்டால் என்னசெய்வது என்றெல்லாம் பயம் வந்துவிடும்.

மெதுவாக நான் கேட்ட கோப்பினை எடுத்து நீட்டுவார் பதிவறை எழுத்தர். அதனைப் பிடுங்கிக்கொண்டு புலியைக் கண்ட மான்போல் பாய்ந்து சென்று சிரஸ்த்ததார் முன்பாக நிற்பேன். அவர்பாட்டுக்கு கோப்பினைப் பார்த்துக்கொண்டு இருப்பார். அந்த அறையில் உள்ள மேசை நாற்காலி போன்று நானும் ஒரு ஜடப்பொருளாக மாறிவிடுவேன். மெதுவாக நிமிர்ந்து பார்த்து கையில் உள்ளதை வாங்கிப் பார்ப்பார். திருப்திதானா என்பதெல்லாம் அவரது முகத்தில் தெரியாது. “சரி போ” என்று அடிவயிற்றிலிருந்து மீண்டும் ஒரு உறுமல் வரும். இப்படிச் சொன்னால் உங்களுக்குப் புரியாது. சர்க்கஸ் கூடாரம் அடித்திருப்பார்களே அதன் அருகில் போய் நின்றால் அங்கு அவ்வப்போது சிங்கத்தின் உறுமல் கேட்டிருப்பீர்களே அப்படித்தான் அவரது சொற்களும் வந்துவிழும்.

இப்போதுதான் அவரது அறைக்கு வெளியே தங்கியிருந்த நமது உயிர் மெல்ல நமது உடலுக்குள் வந்து உட்காரும். அப்புறமென்ன தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடிவந்து பிரிவில் காலரைத் தூக்கிக்கொண்டு உட்காருவேன். சுற்றிலும் உள்ள கண்களில் “அடப்பாவி தப்பிச்சிட்டியா” என்ற ஏக்கம் தெரியும். என் செட்டு நண்பர்கள் கூடுவர். என்ன

என்று அறிந்துகொண்டு தங்கள் அனுபத்தை சொல்விச் செல்வர். இப்படியாக ஒருமாதம் போகும். மீண்டும் ஒரு நல்லநாள் இல்லையில்லை எனக்கு கெட்ட நாள் வரும். அதேபோன்று ஏதாவது கேள்வி - ஓட்டம் - தேடல் - தப்பித்தல்தான். வேறென்ன. நல்ல வேளை ஒரு முறைகூட நான் மாட்டிக்கொண்டு பலியாகவில்லை. எங்க அப்பா அம்மா ரெண்டுபேரும் ரொம்ப பக்திமான்கள் அந்த புண்ணியம் என்னை காப்பாற்றியது என்று நினைக்கிறேன்.

எங்கள் பிரிவில் நான்கு குமாஸ்த்தாக்கள். அதிலே நான்மட்டும் கத்துக்குட்டி. ஒரு வருடம்தான் சர்வீஸ். மற்றவர்கள் சீனியர். இப்படியாகப்பட்ட நிலையில் ஒரு குமாஸ்த்தா தாங்கமுடியாமல் லீவுபோட்டுவிட்டுப் போய்விட்டார்.

ஒருநாள் மதியம் சாப்பாட்டு வேளையில் ஒரு நபரை, கையைப்பிடித்து இழுத்து (கூட்டி) வந்தார் சிரஸ்ததார். எங்கள் ஹெட்கிளார்க்கை விளித்து ‘‘இந்தப் பையனை அந்த சீட்டில் வைத்துக்கொள்ளுங்கள் போஸ்ட்டிங் போடுகிறேன்’’ என்று சொல்லி அந்தகாலத்தில் மகனை ஆசிரியரிடம் இழுத்துவந்து ஒப்படைக்கும் தகப்பன் போன்று ஒப்படைத்துவிட்டுப் போய்விட்டார். வந்த பையனோ ஆடு திருடிய கள்ளன் போன்று பேந்தப்பேந்த முழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். எங்கள் ஹெட்கிளார்க்கோ புன்னகை மாறாமல் கழுத்தில் கத்தி இறக்குபவர். கூப்பிட்டு விசாரித்துக் கொண்டிருந்தார். இரண்டு நாள் கழித்து அந்தப் பையனுக்கு அந்த சீட்டில் போஸ்ட்டிங் உத்திரவு வந்தது.

அப்புறம் சக குமாஸ்த்தாவாகி, அடுத்து அனுபவங்கள் பகிரப்பட்டு, கடைசியில் நண்பராகி அடுத்து ஆப்த நண்னாகிவிட்டான் அந்த அந்நாளைய பையன். அவன்தான் என் தற்போதைய ஆப்த நண்பன் திரு ரகமத்துல்லா. இருவரும் பிற்பாடு அடித்த லூட்டிகள். பட்ட துன்பங்கள், எங்கள் சிந்தனைகள், எங்களின் செயல்பாடுகள்

எல்லாம் ஒன்றுபோலவே இருக்கும்.

அப்போதே ஆரம்பித்துவிட்டது எங்களின் இரவுப்பணி. விடியவிடிய வேலை பார்ப்பது; காலை ஆறுமணிக்குச் சென்று காலைக்கடன் முடித்துவிட்டு எல்லாரும் அலுவலகத்திற்கு வரும் முன்னர் வந்துவிடுவது என்று பழகிவிட்டோம்.

இரவு நேரத்தில் மும்முரமாக வேலை செய்துகொண்டிருப்போம். அமைதியான அந்த நேரத்தில் பன்னிரண்டு மணியளவில் திடீரென்று ஒரு மிரட்டல் குரல் “யாரது என்ன செய்கிறீர்கள்” என்று உறுமலுடன் வரும். நிமிர்ந்து பார்த்தால் யாரும் இருக்கமாட்டார்கள். அடைத்த கதவுகள் அடைத்தபடி இருக்கும். பயத்துடன் பார்த்தால் ஒரு ஜன்னலை லேசாகத் திறந்துகொண்டு தம் முகத்தைமட்டும் காட்டிக்கொண்டு சிரஸ்ததார் நிற்பார். அவருக்குத் தொரியாதா வேலை பார்க்கிறோம் என்பது. இருந்தாலும் ஒரு மிரட்டல் கேள்வி. ஒரு பயந்த பதில். அவர்பாட்டுக்குப் போய்விடுவார். எங்கள் அதிர்ச்சி கொஞ்சநேரம் நீடிக்கும்.

பக்கத்தில் உள்ள சங்கக் கட்டிடத்தில் சீட்டு விளையாடிவிட்டு வீட்டுக்குப் போகும்போது அப்படியே எட்டிப்பார்த்துவிட்டு எங்களை மிரட்டிவிட்டுப் போவது அவருக்கு வேடிக்கை. செத்து செத்துப் பிழைப்பது எங்களுக்கு வாடிக்கை.

இப்படியாகத்தானே பிழைப்பு ஓடிக்கொண்டிருக்கையில் எங்களின் ஹெட்கிளார்க்கு தாசில்தாராகப் பதவி உயர்வில் போய்விட்டார். ஆகா எங்களின் சந்தோஷம் இருக்கிறதே. ஏதோ எங்களுக்கே பிரமோஷன் வந்ததுபோல் கொண்டாட்டம். பின் என்ன! மாமியார் கொடுமையிலிருந்து விடுபட்டு தனிக்குடித்தனம் போன மருமகள் நிலையிலல்லவா நாங்கள் இருந்தோம்!

அவருக்கு பார்ட்டி கொடுத்தோம் ஒரு ஓட்டலுக்கு அழைத்துச்சென்று. இரண்டு ஸ்வீட், நெய் ரோஸ்ட்

என்று ஆர்டர். நெய் ரோஸ்ட்டில் நெய் இல்லை என்று ஓட்டல்காரரிடம் தகறாறு வேறு. இப்படியாக எங்களின் சந்தோஷத்தைக் கொண்டாடி அனுப்பி வைத்தோம்.

ஒருவாரம் ஆகவில்லை. ஒருநாள் காலை அதே இடத்தில்வந்து உட்கார்ந்திருந்தார் அந்த பாசக்கார ஹெட்கிளார்க். ஆபீசுக்குள் நுழைந்தவுடன் எங்களுக்கு அதிர்ச்சி. அப்புறம்தான் தெரிந்தது. அவர் ஒருவாரம் மட்டும்தான் தாசில்தார் புரமோஷனில் சென்ற விஷயம். டபுள் ஸ்வீட் வீணானதுதான் கண்ட பலன். மீண்டும் செக்கில் சிக்கி சின்னா பின்னமானோம்.

நாமாவது வேறு இடத்திற்கு போகலாம் என்றால் ஹிட்லர் சிரஸ்த்ததாரிடம் செல்லுபடியாகாது. இப்படியே ஓரிரு மாதம் போனது. ஒருநாள் சிரஸ்த்ததார் லீவில் போய்விட்டார். அதனைப் பயன்படுத்திக்கொண்டு ஒருவர் ஆர்.ஐ. பணியிடம் பெற்றுக்கொண்டு சென்றுவிட்டார். ஒருவர் கள்ளக்குறிச்சிக்கு ஓடிவிட்டார்.

இதற்கிடையில் சிரஸ்ததார் லீவுமுடிந்து மீண்டும் வருகிறார் என்று சேதி வந்தது. என் நண்பன் ரஹமத்துல்லா நைசாக சிதம்பரத்திற்கு டிரான்ஸ்பர் வாங்கிக் கொண்டு ஓடிவிட்டான். நால்வரில் மிஞ்சியது நான் மட்டுமே. “அடிப்பியா உங்கப்பன் மவனே சிங்கண்டா” என்று வீராப்புடன் இருந்து பார்த்தேன். எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை. ஹெட்கிளார்க்கின் எல்லா கொடுமைக்கும் நான்தான் பலியானேன்.

கடைசியில் என் நண்பனை அழைத்துக்கொண்டு எங்களுக்கு டிரான்ஸ்பர் வழங்கும் வேலையைக் கவனிக்கும் கிளார்க்கிடம் போய் கேட்டேன். அவரோ இரண்டு மூன்று தினங்கள் முன்பே சொல்லியிருந்தால் செய்திருக்கலாம். சிரஸ்ததார் மீண்டும் வரும் நிலையில் ‘அவரன்றி ஓரணுவும் அசையாது’ என்று சொல்லிவிட்டார். வேறு வழியின்றி என்னையே நான் நொந்துகொண்டு அலுவலகம் வந்துகொண்டிருந்தேன்.

ஒருநாள் அலுவலகத்திற்கு சோத்து மூட்டையுடன் புறப்பட்ட நான் அப்படியே சைக்கிளில் கேப்பர் மலைப் பக்கம் போய்விட்டேன். நான்பாட்டுக்கு சைக்கிள் மிதித்துக்கொண்டே எங்கே போகிறோம் என்ற இலக்கு இல்லாமல் போய்க்கொண்டே இருந்தேன். ஓரிடத்தில் மலைமேல் வெகு ஆழத்திற்கு போர் போட்டுக் கொண்டிருந்தார்கள். பள்ளிக்கூடம் போகிற வழியில் எதையாவது வித்தியாசமாகப் பார்த்தால் நின்று பார்க்கின்ற எலிமெண்டரி ஸ்கூல் மாணவன் மாதிரி அங்கே நின்று வேடிக்கை பார்த்தேன். அங்கேயே சாப்பிட்டேன். மாலையானதும். அவர்கள் வேலை முடித்தார்கள். நானும் என் வேடிக்கையை முடித்துக்கொண்டு கிளம்பினேன். லீவு லெட்டராவது ஒண்ணாவது. அந்த சிந்தனையெல்லாம். மறுநாள் ஆபீசுக்கு கிளம்பும் நேரம் வந்தபோதுதான் ஏற்பட்டது. மீண்டும் மனதில் வெறுப்பு. நேராக சாப்பாட்டைக் கட்டி எடுத்துக்கொண்டு கல்யாணப்பரிசு தங்கவேலு பாணியில் நேராக ஆர்ட்டிஸ்ட் நண்பர் ஒருவரின் கடையில் போய் உட்கார்ந்துவிட்டேன். இப்படியாக, பத்துநாள் கடந்துவிட்டது.

பாசக்கார ஹெட்கிளார்க்கு வீட்டுக்கு ஆள் அனுப்பிவிட்டார். அப்போதுதான் தெரிந்தது நான் ஆபீசுக்குப் போகாதது. அப்புறம் என்ன வசவுதான். இருந்தாலும் மாறுதல் கேட்டுப் பெற்றுவிடலாம் என்று முயற்சித்தேன். ஹெட்கிளார்க்கோ எனக்கு வேறு இடம் கிடைக்காதபடி பார்த்துக்கெண்டார். நானோ அடைந்தால் மகாதேவி இல்லையேல் மரணதேவி என்று வீட்டிலேயே இருந்துவிட்டேன். ஐந்து மாதங்கள் அல்லவா தாக்குத் தகவல் இல்லாமல் வீட்டிலேயே இருந்திருக்கிறேன். வேலை போனாலும் பரவாயில்லை. அங்கு போவதில்லை என்று வைராக்கியம்.

அப்புறம் யார்யாரோ சிபாரிசுசெய்து பெரியமனது வைத்து சிதம்பரம் மாறுதல் வாங்கித் தந்தனரோ பிழைத்தேனோ. இங்கே வந்தால் அங்கே இருந்த எங்கள் செட்டு இங்கேயும் வந்துள்ளது. அப்புறம் என்ன டிப்டாப் சுருதியெல்லாம் இருந்த இடம்

தெரியாமல் போய் அடையாளம் மாறி வாலைச் சுருட்டிக்கொண்டு ‘எப்படி இருந்த நாம் இப்படி ஆகிவிட்டோமே’ என்று நினைத்துக்கொண்டே வேலைபார்த்தேன். சிதம்பரம் வந்தபின்னர் நடந்ததெல்லாம் வேறு கதை. அது அப்புறம்.

# 15 மாமியாரா? சித்தியா? ஹெட்கிளார்க்கா? கொடுமையில் சிறந்தவர் எவர்?

சித்தியின் கொடுமையை அனுபவிக்கும் பேறு சிலருக்குக் கிடைத்திடும். தாயை இழந்து தகப்பனின் பாசமில்லாத நிலையில் ஒரு சித்தி என்கிற சின்னம்மா வந்து சேர்ந்தால் அந்த சிறுவனின் வாழ்வில் கொடுமை எட்டிப்பார்த்து ஏளனம் செய்யும்.

மாமியாரின் கொடுமையினை அனுபவிக்கும் பேறு பலருக்குக் கிடைக்கும். திருமணம் ஆகி புகுந்த வீட்டுக்கு வந்துவிட்டால் குறிப்பிட்ட பர்செண்டேஜ் பெண்களுக்கு சர்வ சகஜமாக சாதி, மத, இன, மொழி வேறுபாடு இன்றி கிடைக்கக் கூடிய அனுபவம்தான் இது. அதென்ன பெண்களுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய பேரா என்ன. சில சமயம் சில ஆண்களுக்கும் கிடைக்கும். இதற்கு மாமியார் வீட்டு மருமகனாக செல்லும் புண்ணியம் செய்திருக்கவேண்டும். அவ்வளவுதான். இந்த இரண்டு மட்டும் வாழ்வில் ஒருவருக்குக் கிடைக்க சாத்தியமான வழிகள்.

ஆனால் நான் சொல்லப் புகும் கொடுமை இருக்கே அது யாருக்கும் அவ்வளவு சுலபத்தில் கிடைக்கக்கூடியது அல்ல. அதற்கு முக்கியமாக சர்வீஸ் கமிஷன் தேர்வு எழுதி அரசு அலுவலகத்தில் சேரவேண்டும். அங்கேயும் ஒரு நல்ல ஹெட்கிளார்க்கு நமக்கு அமைய வேண்டும். அவர் சிந்தனைகளில் உருவாகி அவரிடம் வேலை பார்க்கும் பேரு கிடைத்தவர்களுக்கு மட்டுமே சித்திக்கும். அதனை அனுபவிப்பவர்கள் வேறு எந்த இடத்தில் வேலைக்குச் சேர்ந்தாலும் மிகநல்ல பேரோடும் புகழோடும் வாழ்வாங்கு வாழ்வர் என்பது திண்ணம்.

ஹெட்கிளார்க்கு கொடுமை கிடைக்க பூர்வ ஜென்ம புண்ணியம் வேண்டும்.

நான் வேலைக்கு சேர்ந்த ‘அப்ரசண்டி பீரியடில்’ (அதாங்க புரபேஷன் பீரியட்) எனக்கு வாய்த்தவர்தான் நான் சொல்லும் கதை நாயகன். நல்ல மணலில் பிடுங்கிய வள்ளிக் கிழங்குபோல் மொழுமொழுவென்று இருப்பார். எப்போதும் சிரித்த முகம். யாரிடமும் கோபப்பட்டதாக வரலாறு கிடையாது. என்னை அங்கு போஸ்ட்டிங் போடுவதற்கு இரண்டு தினங்கள் முன்புதான் இதனை இவன் முடிக்கும் என்றாய்ந்து அவரை அந்தப் பிரிவுக்கு ஹெட்கிளார்க்காக அமர்த்தியிருந்தார் கலெக்டர்.

அந்தப் பிரிவில் போய் சேர்ந்தேன். அடுத்து என் நண்பனும் வந்து சேர்ந்தான். தவறு! ‘வந்து சேர்ந்ததால் நண்பனானான்’ என்பதுதான்சரி. ஆரம்பத்தில் எல்லாம் நல்லாத்தான் போய்க்கொண்டிருந்தது.

தினமும் எழுதி வைக்கும் பைல்களில் ஒன்றிரண்டு மட்டும் திரும்பி வராது. கோப்பு வரவில்லை என்றால் காரணம் ஹெட்கிளார்க்குக்குத்தான் தெரியும். அவரிடம் தான் நாம் முறையிடவேண்டும். இருந்தாலும் நம் மீதே சந்தேகம் இருப்பதால் உண்மையில் வந்ததா இல்லை நாம் அனுப்பவில்லையா என்றெல்லாம் இரண்டொருநாள் மனதுக்குள் பட்டிமன்றம் நடத்திவிட்டு, மெதுவாக அப்படி இப்படி ஆராய்ச்சி செய்துவிட்டு கடைசியில் மெதுவாக கேட்டால் சட்டென்று பதில்வரும். “ஆமாம் அது என்னிடம்தான் உள்ளது. பார்த்து அனுப்புகிறேன்” என்று. அப்பத்தான் நமக்கு நிம்மதி.

வீட்டிலே வேண்டாத தட்டுமுட்டு சாமான்கள் எல்லாம் ஒரு மூலை அறையில் போட்டு வைத்திருப்பார்கள். அதுபோல்தான் அந்த ‘எம்’ பிரிவு, மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தைப் பொருத்தமட்டும். உதிரி துக்கடா சப்ஜெக்டெல்லாம் அதில்தான் வந்து சேரும். ஆனாலும் முக்கியமான கோப்புகள் சேர்ந்ததுதான் அந்தப் பிரிவு. மிகவும் அனுபவம்

வாய்ந்தவர்கள்தான் அதில் உள்ள கோப்புகளைக் கவனிக்கமுடியும். திடீர் திடீரென்று சில கோப்புகள் ஜாடிக்குள் அடைபட்ட பூதம் வெளிவருவதுபோல் விஸ்வரூபம் எடுக்கும். என்மாதிரி கத்துக்குட்டியையெல்லாம் அதில் போட்டார்கள் என்றால் மற்றவர் யாரும் அதற்கு வர விரும்பமாட்டார்கள். போஸ்ட்டிங் கேட்கும்போதே தரவேண்டியதைத் தந்து பெறவேண்டியதை பெற்றுவிடுவர். ஒரு ஸ்டேஜில் நான் அப்படியே விட்டுவிட்டு வடநாட்டிலிருந்து கொத்தடிமைகள் தப்பி ஓடிவருவதுபோல் ஓடிவிட, அடுத்து ஆறு மாதத்திற்கு மேலாக பிரிவு காலியாக இருந்தது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

அப்படிப்பட்ட பிரிவில் நான் மட்டும் எப்படி குப்பை கொட்டினேன் என்றால் ஒரு அக்கவுண்டெண்ட் இருந்தார். நல்ல வேலைத் திறமை மிக்கவர். எந்தப் பேப்பரானாலும். கோப்பினைப் பார்த்தமாத்திரம் முடிவுசெய்து எழுதித்தள்ளிவிடுவர். அவரிடம்தான் போய் நிற்பேன்.

“தம்பி... நான் அட்டெண்ட் செய்து கொடுத்தால் உன் ஹெட்கிளார்க்குக்கு கோபம் வந்துவிடும். நீயும் வேலை கத்துக்கமாட்டே. சோ... எப்படி எழுதவேண்டும் என்று சொல்கிறேன். நீ எழுதி எடுத்துவா. நான் சரிபார்த்துத் தருகிறேன்” என்பார் அந்த அக்கவுண்டெண்ட். அப்படியே செய்வேன். அவர் சொன்னபடி செய்திருக்கிறேனா என்று படிக்கக்சொல்லி கேட்பார். திருத்தங்கள் செய்வர். அடுத்து அப்படியே ஹெட்கிளார்க்குக்கு அனுப்பிவிடுவேன். அப்படி எழுதி வைத்த பெரிய அறிக்கைகள் ஹெட்கிளார்க் என்ற அணைக்கட்டில் சிக்கி அங்கேயே தங்கி கோமா நிலைக்குச் சென்றுவிடும். மேலேயிருந்து கடுமையான நினைவூட்டு வந்தால்மட்டும் அதற்கு சுயநினைவூட்டப்பட்டு அதிகாரிக்குப் போகும்.

அப்படிப்பட்ட நிலையில் நான் பிரிவிலிருந்து ஓடிப்போனபோது இருபத்து மூன்று கோப்புகள், ஒரு வருடம் ஏழுமாதங்கள் ஹெட்கிளார்க் என்ற பெரிய

ஆஸ்பத்திரியில் கோமாநிலையில் இருந்தன என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். அப்புறமும்கூட நான் லீவில் இருந்த ஐந்து மாத காலமும் தூங்கியே காலம் கழிந்தது என்று பின்னர் தெரிந்தது. இப்படியே முன்னுரையே முழுவுரையாக போய்க்கொண்டிருந்தால் எப்படி என்று முணுமுணுப்பது கேட்கிறது.

எங்கள் பிரிவில் எப்போதும் ஆச்சரியம், அதிர்ச்சி, புன்னகைதான் ஓடும். மற்ற பிரிவுகளில் அவ்வளவு சௌஜன்னியம் இருக்காது. பயபக்தியுடன் வேலை நடக்கும். சிலசமயம் சற்று சகஜமாகப் போய்க்கொண்டிருக்கும்.

எங்கள் பிரிவில் ஹெட்கிளார்க்கு “மிஸ்டர்” என்று குரல் கொடுத்தால்போதும். நாங்கள் மூன்றுபேர் ஓடிச்சென்று அவரைச் சூழ்ந்துகொள்வோம். அவர் ஜமீன்தார்போன்று மேசைமேல் ஒரு பலகையை வைத்துக்கொண்டு சாய்ந்தவாறு உட்கார்ந்திருப்பார். அவரைச்சுற்றி நாங்கள் நின்றுகொள்வோம். யாரைக் கூப்பிட்டாலும் இதுதான் நிலைமை. உடனே இலக்கிய ஆராய்ச்சி நடக்க ஆரம்பித்துவிடும். ஆம். நானும் என் நண்பனும் கிளார்க்கு வேலைக்கு ஆகாதவர்கள். நான் அந்நாளில் இந்து பேப்பரில் வெளியாகும் ஜி.கே.ரெட்டி என்பவரின் செய்தியை ரசித்துப் படிப்பேன். அதில் வரும் ஏதோ ஒரு வர்த்தையையோ அன்றி வரியையோ அன்று உபயோகித்துவிடுவேன். சற்று நிரடலாக இருக்கும். எனக்கேகூட சமயத்தில் அர்த்தம் விளங்காது. இருந்தாலும் அதனை பயன்படுத்தவேண்டும் என்பதற்காகவே வளைத்து வளைத்து எழுதுவேன்.

என் நண்பனோ ஆங்கிலம் நன்கறிந்தவன். ஞானி. அந்த வயதில் அந்தப் படிப்பில் அவனது ஆங்கிலம் மிகத் தூய்மையாக மிக அழகாக இருக்கும். இருவரது எழுத்தில் ஒன்றின் பேரில்தான் விவாதம் நடக்கும். சும்மா சொல்லக்கூடாது எங்கள் ஹெட்கிளார்க்கு ஆங்கிலத்தில் செம டேலண்ட்டானவர். ரசனையும் மிக்கவர். அதனால் இலக்கிய ஆராய்ச்சி மிக சாதாரணமாக நடக்கும். எங்கள் எழுத்தை மனமாறப்

பாராட்டுபவர். சமயத்தில், இப்படி எழுதியிருக்கலாம் என்று விவாதிப்பார். இதில் மயங்கிப்போய் மற்ற விபரீதம் ஏதும் எங்கள் புத்தியில் உறைக்கவில்லை.

தினசரி வைக்கும் கோப்புகளில் பாதியில் கேள்விகள் கேட்டு திருப்பி அனுப்பிவிடுவார். அதுவும் ஒரு மாதம் கட்டி வைத்திருந்துவிட்டு. அதில் உங்கள் பாதிப்பு என்ன என்கிறீர்களா. நாம் இன்று வைத்த கோப்பினை அவர் ஒரு மாதம் கழித்து இன்றைய தேதியில் கேள்விகேட்டு திருப்பித் தந்துவிடுவர். அதற்குப் பதிலை நாம் எழுதி வைத்தால் வைத்த தேதிதான் போடவேண்டும். ஆக அவர் கேட்ட கேள்விக்கு ஒருமாதம் கட்டிவைத்துவிட்டுத் தாமதமாகப் பதில்வைத்த குற்றம் நம்மைச் சேர்ந்துவிடும்.

அடுத்து அவர் கேட்கும் விபரங்கள் ஏற்கனவே அந்தக் கோப்பிலேயே இருக்கும். ஆனால் அவர் அதனை வைக்கும்படி ஒருமாதம் கழித்து பழைய தேதியில் கேள்வி எழுப்புவார். நாம் அதிலேயே இருப்பதை சொன்னவுடன் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு “அய்யா தற்போது வைத்துள்ளேன்” என்று எழுதி ஒப்புதல் செய்யச்சொல்வார். தாமதத்திற்கு நாம் பொறுப்பாகிவிடுவோம்.

சில சமயத்தில் அவர் மேசையில் மாதங்கள் கணக்கில் கட்டி வைக்கப்பட்டிருந்த கோப்பில் ஏதோ ஒன்றில் அவசரம் தொற்றிக் கொள்ளும். மனிதர் அந்தக் கோப்பினை எடுத்து வைத்துக்கொண்டு நம்மை அழைத்து பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு நாம் வைத்த தேதியில் அவர் படித்துப் பார்த்து கேள்வி கேட்டது போலவும், அடுத்து நாம் பதிலை பத்து நாள் தாமதமாக வைத்ததுபோலும் அடுத்து அவர் வேறு கேள்வி கேட்டதுபோலும், அதற்கும் நாம் தாமதமாக வைத்ததுபோலும் தயார்செய்து நம்மை சிக்க வைத்துவிடுவார்.

யாரேனும் கோப்பினைப் பார்த்தால் தாமதம் எல்லாம் நம் தலையில் சுமந்திருக்கும். நமது மூல எழுத்தைச் சுற்றிலும் மாலைபோட்டதுபோன்று கேள்வியும் அதன் கீழே அவரது டிக்டேஷனில் நாம் எழுதிய

பதிலும் என்று ஒரு கிரிமினல் வழக்கில் நாம் சிக்கியிருப்போம். பழைய தேதியிட்டு நாம் கோப்பினைத் தயார்செய்தால் அது போர்ஜாரி இல்லையா. ஆக, அவரது அறிவுரையைப் பின்பற்றி நாம் குற்றம் புரிந்திருப்போம். ஆனால் அவர் அதில் ஏதும் சம்பந்தப் பட்டிருக்கமாட்டார். இது தெரியாமலே 'அவர் சொல்வதையெல்லாம் செய்தோம் என்றால் யார்தான் ஒப்புக்கொள்வர். அந்நாளில் ஹெட்கிளார்க்கு சொன்னால் கலைக்டர்கூட அதைத்தான் கேட்பார். குமாஸ்த்தாவுக்கெல்லாம் தன் கட்சியைக்கூற எந்த யோக்கியதையும் கிடையாது.

இப்படியெல்லாம் அவ்வப்போது அவசரம் ஏற்பட்டு தில்லு முல்லுசெய்து அறிக்கை அனுப்பப்பட்ட கோப்புகள் போக அவசரம் பிடிக்காத நிலையில் அவரது மேசையில் கட்டிவைக்கப் பட்டிருந்தவைதான் முன்சொன்னபடி நான் பிரிவிலிருந்து ஓடிப்போனபோது ஒரு வருடம் ஏழுமாதங்கள் ஹெட்கிளார்க் என்ற பெரிய ஆஸ்பத்திரியில் கோமாநிலையில் இருந்த இருபத்து மூன்று கோப்புகளும்.

பதிவேடுகள் மாதம் இரண்டு முறை தணிக்கை செய்யப்படும்போது உரிய காலத்தில் அவர் தணிக்கை செய்யமாட்டார். அடுத்து, மாதம் ஒருமுறை பி.ஏ. தணிக்கைக்கு வைக்கவேண்டும். அதற்கு முன்னதாக அவரிடம்போய் பிரிவு சரியில்லையென்றும் சரி செய்து பின்னர் தணிக்கை செய்யலாம் என்றும் சொல்லிவிடுவார். மூன்று மாதத்திற்கு ஒரு முறை மாவட்ட ஆட்சியர் அல்லது மாவட்ட வருவாய் அலுவலருக்கு அனுப்பவேண்டும். அப்போதுதான் சூடுபிடிக்கும்.

நம்மை அருகில் அழைத்து உட்காரவைத்துக்கொண்டு ஒவ்வொரு கோப்பிற்கும் உரிய பக்கங்களில் அந்தந்த கோப்புகளிலும் உரிய காலத்தில் நடவடிக்கை எடுக்கப்பட்டதுபோலும், பதில் வந்ததுபோலும் பதிவுகளை அவர் சொல்லச்சொல்ல நம் கையால் பதிவு செய்யப்பட்டுவிடும். ஆக ஒரு போர்ஜரி ரிக்கார்டு

தயார் செய்யப்பட்டு அதிகாரிக்கு அனுப்பப்பட்டுவிடும். அதோடு சரி மீண்டும் மூன்று மாதத்திற்கு கவலை கிடையாது கோப்பு ஏதும் நகராது.

இதன் விளைவுகள் நம்மைப் பாதிக்கும் என்பதையோ அதன்காரணமாக நம் உத்தியோகம்கூட பறிக்கப்பட வாய்ப்பு உள்ளது என்பதையோ உணராமல் ஒரு ஆண்டுக்குமேல் ஓடிவிட்டது. கொஞ்சம் கொஞ்சமாக சக கிளார்க்குகளிடம் புலம்பியதில் சீனியர்கள் அறிவுரைகள் சொல்லச் சொல்லத்தான் புத்தியில் உறைத்தது. ஆனால் நிலைமை கைமீறிய நிலையில் பனிஷ்மெண்ட் அது இது என்று செல்லமாக மிரட்டி வைக்க ஆரம்பித்துவிட்டார்.

ஆனால் திரைப்பட வில்லன்கள் போன்று எதுவுமே அவர் நடவடிக்கைகளில் தெரியாது. அப்பாவியாய் 'சிரித்துச் சிரித்தே எங்களை சிறையில் இட்டுவிட்டார்'. புதைசேற்றில் சிக்கிக்கொண்டு மீள முடியாத நிலையில்தான் சிரஸ்ததார் தலைப்பில் சொன்னபடி ஆளாளுக்கு போய்விட்டனர். நான் பைத்தியக்காரன் ரேஞ்சில் சீட்டைவிட்டு ஓடிப்போய்விட்டேன்.

காலைச்சுற்றிய பாம்பு கடிக்காமல் விடாது என்பது சரிதான். ஆறுமாங்கள் கழித்து நாங்கள் செய்த குற்றங்கள் என்று மேலேசொன்ன எல்லாவற்றையும் பட்டியல் போட்டு மெமோ கொடுத்துவிட்டனர். அப்போது எமர்ஜன்சி வேறு. எல்லாரும் எங்களைப் பயமுறுத்த ஆரம்பித்துவிட்டனர். கடைசியில் ஒரு சீனியர் குமாஸ்த்தாவிடம் போய் மெமோவிற்கு பதில் எழுதுவதற்காக ஆலோசனை கேட்டோம். அவரோ ரிக்கார்டுபடி நீங்கள்தான் சிக்கிக் கொண்டிருக்கிறீர்கள் இதில் முறண்டு பிடித்தால் இப்போதிருக்கும் கெடுபிடியில் நீங்கள் பலியாகிவிடுவீர்கள். குற்றத்தை ஒப்புக்கொண்டு மன்னிப்பு கேட்டால் தண்டனை குறைய வாய்ப்பு இருக்கிறது என்று அறிவுரை சொன்னார்.

என்ன நடந்தது என்று எழுதி என்னுடன் வேலைபார்த்த மற்ற பிரிவு குமாஸ்தாக்கள்

ஹெட்கிளார்க்குகள் ஆகியவர்களை சாட்சிக்கு அழைத்திருந்தால் எல்லாம் திசைமாறிப்போய் வில்லன்மேல் நாகாஸ்த்திரம் திரும்பியிருக்கும். என்ன செய்ய. எல்லாம் எங்கள் போதாதகாலம்.

மேலும் அப்போதைய நிலையில் நானும் என் நண்பனும் புகைப்படக் கலையிலும், ஆர்ட் ஒர்க்கிலும் மிக ஈடுபாட்டுடன் இருந்ததால் எப்போதும் திட்டம் போட்டுக்கொண்டே இருப்போம். “டேய் இன்னும் ஆறு மாதம் மட்டும் பல்லைக் கடித்துக்கொண்டு ஓட்டிவிடுவோம். அப்புறம் வேலையை ராஜினாமா செய்துவிட்டு ஒரு ஸ்டூடியோ வைத்துவிடுவோம்” என்று அடிக்கடி பேசிக்கொள்வோம். திருநாளைப் போவார் கதைதான். வருடம், மாதம், தேதி நிர்ணயம் செய்யாததால் நாளை நாளை என்று எங்கள் காலம் முப்பது ஆண்டுக்கு மேல் ஓடிவிட்டது என்றால் என்ன சொல்ல. அதற்குள் நாடி தளர்ந்து அரசாங்க அடிமையாகப் போய்விட்டோம்.

இதில் எங்கம்மாவுக்கும் ஒரு பங்கு உண்டு. நான் சற்று முனைப்பாக இறங்க நினைக்கும்போதெல்லாம் “என் காலம் மட்டும் நீ வேலையை விட்டுவிடாதே” என்று கோரிக்கை வைத்து கடைசியில் நான் ரிட்டையர் ஆனதுதான் மிச்சம். கையிலிருந்த தொழிலும் மங்கி தைரியமும் போன இடம் தெரியாமல் முடிந்துபோனது.

இதற்கிடையில் நாகாஸ்த்திரத்தை ஏவிவிட்ட மேற்படி ஹெட்கிளார்க்குக்கு அது நம்மேல் திரும்பிவிடவும் வாய்ப்பு உள்ளது என்று தெரிந்துவிட்டது. அதனால் சிதம்பரம் தாலுக்காவில் வேலைபார்த்த எங்களை உடனே வந்து பார்க்கும்படி பலமுறை அழைத்துப் பார்த்தார். நாங்களோ அந்த மூஞ்சிமட்டுமில்லை கட்டிடத்தையேகூட மிதிக்கமாட்டோம் என்று வெறுப்பில் இருந்துவிட்டோம். பனிஷ்மெண்ட் வந்துவிடும் என்றெல்லாம் பயமுறுத்திப் பார்த்தார். நாங்களோ “அடப் போப்பா வேலையையே துக்கி வீசப்போறோம். அதிலே பனிஷ்மெண்ட் எம்மாத்திரம்” என்று உதார் விட்டுக்கொண்டு பேசாமல்

இருந்துவிட்டோம். போதாததற்கு நாங்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டுவேறு எழுதிக் கொடுத்துவிட்டதால் சவுகாரியமாகப் போய்விட்டது அவருக்கு

எங்கள் இன்கிரிமெண்டை ஒரு ஆண்டுக்கு தொடர்ச்சியாக நிறுத்திவைத்து உத்திரவு பிறப்பித்துவிட்டார்கள். நாங்கள் உத்தியோகத்தையே விடப்போகிறோம் என்ற மிதப்பில் அதனை பாராட்டுப் பத்திரம்போல் ஏற்றுக்கொண்டோம்.

நானோ “வேலையை விட்டுப் போய்விட்டபின் இந்த பனிஷ்மெண்ட் காகிதத்தை வைத்துக்கொண்டு நாக்கா வழிக்க முடியும்” என்று சவடால் பேசிக் கொண்டிருந்தேன்.

என் நண்பனோ ஒருபடி மேலே போய் அந்த பனிஷ்மெண்ட் விபரத்தை தன் பணிப்பதிவேட்டில் தன் கைப்பட அழகிய எழுத்தில் பதிவுசெய்வேன் என்று அடம் பிடித்தான். உண்மையில் அவனது கையெழுத்து மிக மிக அழகாக அச்செழுத்துக்கள் போன்று விதவிதமான ஃபாண்ட்களில் இருக்கும். அதனால்தானோ என்னவோ தலையெழுத்து சரியில்லாமல் இப்படி மாட்டிக்கொண்டானோ என்னவோ. சொலவடைகளிலும் பொருள் இருக்கத்தானே செய்கிறது.

உண்மையில் அதன் தாக்கத்தில் எங்கள் சர்வீஸ் பூராவும் ஒரு இன்கிரிமெண்ட்டின் பாதிப்பு தொடர் நஷ்டத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் அடுத்த வருடமே ஒரு சம்பளக் கமிஷன் ஏற்பட்டதில் அந்த இன்கிரிமெண்ட் நிறுத்தம் பாதிப்பு எதையும் ஏற்படுத்தவில்லை. ஆக, ஒருவருட பலன் மட்டுமே நஷ்டம்.

அந்த ஹெட்கிளார்க்கு என்ற புதைகுழியில் சிக்கிக்கொண்டபோதிலும் அவ்வப்போது நடந்த பல சுவாரசியமான நிகழ்ச்சிகள் எங்களைத் துன்பங்களிலிருந்து வெகுதுரத்தில் நிறுத்திவைத்திருந்தன என்றால் சற்றும் மிகையாகாது. அப்படித்தான் ஒரு நிகழ்ச்சி.

அதற்கு முன்பாக ஒரு முன்னுரை - என் நண்பனின் அழகிய, விதவிதமான கையெழுத்துத் திறனும், என் புகைப்படத் திறனும் அலுவலகப் பிரசித்தம். சென்னையிலிருந்து இன்ஸ்பெக்ஷன் என்றால் பல பதிவேடுகளில் அலங்கார வேலைகள் அது இது என்று என் நண்பனிடம் கொண்டுவந்து எழுதி வாங்கிச் செல்வர். ஆர்ட் ஒர்க்கிற்கு நானும் ஆலோசனைகள் சொல்வேன். சமயத்தில் புகைப்படம் எடுத்துத்தரும் வேலை என் தலையில் விழுந்துள்ளது. மாவட்ட ஆட்சியர் நிகழ்ச்சியில்கூட புகைப்படம் எடுத்திருக்கிறேன்.

இப்போது நிகழ்ச்சிக்கு வருவோம். எங்கள் பிரிவில் ஒரு நண்பர். அவர் ஒரு நாள் எங்களிடம் (எங்கள் என்றால் நானும் ரகமத்துல்லாவும்தான்) வந்து தமது நண்பருக்கு முப்பது வயது பிறந்தநாள் வருவதாகவும், அதற்கு தாம் ஒரு சிறப்பான பரிசு தரவேண்டும் என்றும் அதனைத் தயார் செய்து தரும்படியும் கோரிக்கை வைத்தார்.

எலிப்பொறியின் மசால்வடை எங்கள் மூக்கைத் துளைத்தது. ஆலோசனை ஆரம்பமானது. கேள்விகள் கேட்டோம். அவர் ஆணா பெண்ணா? என்ன பிரிவு? எவ்வளவு ரூபாய்க்கு செய்யப்போகிறீர்கள்? இப்படியாக பல விபரங்கள் சேகரிக்கப்பட்டது.

கடைசியில் முப்பது ரூபாய்க்கு அலங்கரிக்கப்பட்ட ரூபாயாகவே தரவிரும்புவதாகச் சொன்னார் நண்பர். நாங்கள் எப்படிப் பரிசளிப்பது அதை எப்படி தயார் செய்வது என்றெல்லாம் ஸ்கெட்ச் போட்டு கட்டடம் கட்ட ஆரம்பித்துவிட்டோம். முதலில் முப்பது ரூபாயை நண்பரிடமிருந்து வாங்கிக்கொண்டு நேராக அக்கவுண்டெண்டிடம் கொடுத்து அதற்குப் புத்தம்புது முப்பது ஒரு ரூபாய் தாள்களை வாங்கிவந்தோம்.

சன்பாண்ட் பேப்பர் வாங்கிவந்து அதே சைசுக்கு வெட்டி அதனை ஒவ்வொரு தாளுக்கும் இடையில் வைத்தோம். கார்டுபோர்டில் முன் பின் அட்டைகள் தயாரானது. அடுத்து பரிசு பெறப்போகிறவர்

கிறிஸ்த்தவர் என்பதால் ஒவ்வொரு இடைத்தாளிலும் பைபிளிலிருந்து முப்பது பொன்மொழிகள் எடுத்து நண்பனிடம் தரப்பட்டது. அவன் அவற்றைத் தனது கைவண்ணத்தில் ஒவ்வொரு இடைத்தாளிலும் எழுதினான்.

நான் அவ்வப்போது கடைக்கு ஓடிச்சென்று பெவிக்கால், குளு, கோல்டு பௌடர், ஆர்ட்டிஸ்ட் பிரஷ், கலர் பாக்ஸ் என்று என் ஸ்டூடியோ நண்பரிடம் ஆலோசனை பெற்றுக் கொண்டுவந்து குவிப்பதும். அவ்வப்போது டிரையல் செய்வதுமாக பத்துநாட்கள் மும்முரமாக வேலை நடந்தது. இதிலே பலமுறை திருத்தங்கள் மாற்றங்கள் எல்லாம் ஜரூராக நடந்தது. எங்கள் பிரிவில் ஏதோ நடக்கிறது என்பது மற்றவர்களுக்கு கசிந்துவிட்டதால் அவ்வப்போது வந்து விசாரிப்புகள் வேறு. எங்கள் சிரிப்பு வில்லன் வேறு பார்த்துவிட்டு பாராட்டினார். போதாதா எங்களுக்கு.

இப்படிப்பட்ட நிலையில் என் ஸ்டூடியோ நண்பர் என்ன ஏது என்று எங்களின் மும்முரத்திற்கு காரணம் கேட்கப்போக, விபரத்தைச் சொன்னேன். பரிசு தயார் செய்ய ஆர்டர் கொடுத்த நண்பரின் யோக்கியதை என் ஸ்டூடியோ நண்பருக்கு மிக நன்றாகத் தெரியும்.

தலைவன் தன் கள்ளக்காதலியும் வேறொருவரின் மனைவியுமான ஒரு பெண்ணுக்கு பிறந்தநாள் பரிசு தருவதற்காக எங்களிடம் கொடுத்திருக்கிறான். அது தெரியாமல் நாங்கள் எங்கள் திறமையை பறைசாற்ற முயன்றுகொண்டிருந்தோம். உலகம் தெரியாத அப்பாவிகளான நாங்கள்தான் ஊகிக்கத் துப்பில்லாமல் வேலை செய்து கொண்டிருந்தோம்.

வேலையோ இன்னும் முடியவில்லை. இறுதிக் கட்டத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. நான் மறுநாள் காலை வந்தவுடன் என் நண்பனிடம் விபரத்தைச் சொல்லாமல் “போதுண்டா இதற்குமேல் செய்யவேண்டாம் நிறுத்து” என்று தடுத்துப் பார்த்தேன். ஓடிக்கொண்டிருக்கும் ரயிலுக்கு முட்டுக்கட்டை போட்டா நிறுத்தமுடியும். அதுபாட்டுக்குப் போய் நிலையத்தில்தான் நின்றது.

அதன்பின்னர் ஒரு மாதம் கழித்து ஒருநாள் அடிக்கடி நாங்கள் மனம்விட்டுப் பேசும் ஒரு இடம் - அதுதான் கெடிலம் பழைய பாலம் - அங்கே நின்று பேசிக் கொண்டிருக்கையில் பரிசுக்குரியவர் யார் என்ற விபரங்களைச் சொன்னேன். என் நண்பனுக்கோ அங்கேயிருந்து ஆற்றில் பிடித்துத் தள்ளலாம் என்று அவ்வளவு கோபம். ஒரு பெண் சம்பந்தப்பட்டது என்பதால் உண்மையாக இருந்தபோதும் நான் முன்னதாக அவனிடம் சொல்லவில்லை. இவ்வளவெல்லாம் செய்யும் அளவிற்கு நண்பனாகப் பழகிய அந்த அயோக்கியன் எங்களின் ஹெட்கிளார்க்கு கொடுமைக்கு அவ்வப்போது தூபம் போட்டுவந்தது எல்லாம் அதன்பிறகுதான் உணர்ந்தோம்.

பல ஆண்டுகள் வரை இந்த இழிசெயலில் நாங்கள் ஆட்பட்டதைப்பற்றி பேசி நொந்துகொண்டோம் என்பது இணைப்புச் செய்தி.

# 16 அதிகாரி செய்தால் எல்லாமே ஆச்சரியம்தான்

இந்தத் தலைப்பில் எதை முன்னதாக சொல்வது எதை பின்னதாக சொல்வது என்று எடிட் செய்வது மிகவும் கஷ்டம் மேலும் நிறைய சொல்ல முடிந்தாலும் நீண்டுகொண்டே போகும் என்பதால் ஒருசிலவற்றை சொல்லாம் என்று தோன்றுகிறது.

மாவட்ட அளவிலான ஒரு அதிகாரி அவர் கீழே உள்ளவர்களிடம் நோகாமல் கொள்ளையடிப்பதில் வல்லவர். இருந்தாலும் மிக நல்லவராக தோற்றமளிப்பார். அதிகாரி எப்படிப்பட்டவராக இருந்தாலும், கீழே இருப்பவர்கள் அடிக்கும் ஜால்ரா இருக்கே அது கொஞ்சம் ஓவராகவே இருக்கும்.

ஒருநாள் தம் சொந்த ஊரிலிருந்து காரில் தலைமையிடத்திற்கு வந்து கொண்டிருந்தார். ஜில்லா எல்லையைத் தொட்டதும் அவர் பணி நிமித்தமாக வந்தவராக மாறிவிட்டார். நேராக ஆய்வுமாளிகைக்கு வந்து தங்கிவிட்டார். வட்டாட்சியர் குழாம் சென்று பரிச்சாரகம் செய்துகொண்டிருந்தது.

அவர் வந்திருப்பதோ காரில். புறப்பட்ட இடமோ சொந்தவீட்டிலிருந்து. இந்நிலையில் தாம் அழுக்குத் துணிகளை எடுத்து வந்திருப்பதாகவும் அவற்றை வைப்பதற்கு ஒரு பை வேண்டும் என்றும் கேட்டார். ஆர்.ஐ. ஓடிப்போய் நல்ல துணிப்பை வாங்கிவந்தார். அதிகாரிக்கு திருப்தியில்லை. முகபாவத்தைப் பார்த்தே புரிந்துகொண்டவர் ஓடிப்போய் சற்றுப் பெரியதாக இன்னும் கொஞ்சம் விலையில் வாங்கிவந்தார். அதிலும் திருப்தியில்லை. அளவு சின்னது என்றவர் திருப்பித் தரவில்லை. மீண்டும் ஓட்டம் இன்னும் பெரிய பை வந்தது. ஊகூம்... அதுவும் சரியில்லை. எங்கெங்கோ அலைந்து நான்காவதாக ஒரு பெரிய யானைப் பை வாங்கிவந்தார். அதனை அரை மனத்துடன்

அங்கீகரித்துக்கொண்டு இந்த ஊரில் ஒரு நல்ல பைகூட கிடைக்காதா என்றவர் நான்கையும் கையிலேயே வைத்துக்கொண்டார். விடுவாரா நம்மவர். அதிகாரியின் திருப்திதானே முக்கியம்! ஒரு சூட்கேஸ் வாங்கிவிடவா என்று கேட்டார். என்ன நினைத்தாரோ அதிகாரி அதெல்லாம் வேண்டாம்யா நான் கடலூர் போய் வாங்கிக்கொள்கிறேன் என்றார். ஒரு அழுக்குத் துணி போட்டுவைக்க நான்கு பை. கேட்டது ஒன்று கிடைத்தது நான்கு!

ஒருநாள் அலுவலகத்தில் ஆய்வு செய்ய வந்திருந்தார். முன்னதாக மதிய சாப்பாட்டினை பங்களாவில் முடித்திருந்தார். ஊர்வனவற்றில் ரயிலும், பறப்பனவற்றில் ஆகாய விமானமும் நீந்துவனவற்றில் கப்பலும் தவிர அனைத்து வகைகளும் எப்பாடுபட்டாவது ஏற்பாடு செய்வது கீழ்நிலை அலுவர்களின் வேலை. அதிகாரியின் திருப்தியல்லவா முக்கியம்.

மூக்கு முட்ட சாப்பிட்டுவிட்டு வந்தார் அலுவலகத்திற்கு. உட்கார முடியாமல் மல்லாத்திக்கொண்டு அமர்ந்தார் நாற்காலியில். அவரது டபேதாரை அழைத்தார். மருந்துப் பெட்டகம் வந்தது. அதிலிருந்து ஒரு மாத்திரை எடுத்து தண்ணீர் டம்ளரில் போட்டார். நுரை பொங்கிவந்தது. சுற்றியிருந்த தாசில்தார் முதல் குமாஸ்த்தா வரை எல்லார் முகத்திலும் ஒரே ஆச்சாரியம். ‘இது என்னஙகய்யா’ என்றார் ஒருவர். ‘அட இதுகூட தெரியாத பட்டிக்காடுகளா’ என்ற பாவனையில் ஒரு பார்வை பார்த்துவிட்டு அதனை எடுத்துக் குடித்தார். அவரது கை அசைவுக்கு ஏற்ப தலையை ஆட்டி ஆட்டி, குடிக்கும் அழகைப் பார்த்து ரசித்தனர் சுற்றி இருந்தவர்கள்.

அது ஒன்றுமில்லை ‘ஈனோ’ என்று அடிக்கடி தொலைக்காட்சிகளில் விளம்பரம் வரும். செரிப்பதற்காக குடிப்பது சிலரது வழக்கம். ஓ.சி சாப்பாட்டை செரிக்கவைக்க குடித்துதானே ஆகவேண்டும். ஆனால் சுற்றி நின்ற ‘காக்கா கூட்டம்’ அது என்ன என்று பார்த்து அதன் பேர் என்ன என்று

கேட்டு நாங்கள் குடிக்கலாமா என்று விசாரித்து அறிந்துகொண்டது. கொஞ்சம் ஓவர் இல்லை. ரொம்ப ரொம்ப ஓவர். அதைவிட, தாசில்தார் அதன் பெயரை ஒரு அலுவலக உதவியாளாரிடம் வேகவேகமாக சீட்டில் எழுதிக்கொடுத்து சில மாத்திரைகள் வாங்கிவரும்படி சொன்னதுடன் அய்யாவுக்கும் சேர்த்துவாங்கிவரவா என்றார் பாருங்கள் அதுதான் ஓவரிலும் ஓவர். எதற்குத்தான் இப்படி நடிப்பார்களோ.

ஒரு அதிகாரிக்கு தமது ரிட்டையர்மெண்ட் தேதி நெருங்க நெருங்க பயம் வந்துவிட்டது. நல்லபடியாக ரிட்டையர் ஆகவேண்டுமே என்று கோயில் கோயிலாக அபிஷேகம், பூசை எல்லாம் செய்தார். முன்னதாக டூர் புரோகிராம் வந்துவிடும். அலுவலக தணிக்கை என்று போட்டு. ஆனால் நேராக கோயிலுக்குப் போய் சுவாமி தரிசனம் முடித்துவிட்டு வீட்டுக்கு போய்விடுவதுண்டு.

ஒரு முறை இல்லத்துப் பிள்ளையார் கோயிலில் அபிஷேகத்திற்கு ஏற்பாடு செய்ய உத்திரவாகிவிட்டது. தாசில்தார் அப்படி ஒரு கோயில் எங்கிருக்கிறது என்று எல்லாரையும் விசாரித்துப் பார்த்தார். எவருக்கும் தெரியவில்லை. அதிகாரியோ அங்கேதான் இருக்கிறது ரொம்ப சிறப்பானதாமே என்றார். பலரிடம் விசாரித்தும் இல்லத்துப் பிள்ளையாரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியில் ஒருவர் பெரிய கோயிலில் உள்ள ஆழத்துப் பிள்ளையார்தான் இந்தப் பகுதியிலேயே சிறப்பானது அதற்குத்தான் பரிகாரமாக சிலர் பூசைகள் செய்வர் என்றார். தகவல் அதிகாரிக்குப் பறந்தது. ஆம் அதுதான் என்றார் அதிகாரி. அதிகாலையில் வந்திருந்து பூசைகள் முடிந்தது. பங்களாவில் வந்து தங்கியிருந்தார். அதிகாரி என்ன வேலையாக வந்தாலும் கீழ் நிலை அலுவலர்கள் சென்று சலாம் செய்வது வாடிக்கை. அதிகாரியும் அப்படியே அலுவல் பற்றி சில கேள்விகள் கேட்டுக்கொண்டு தமது நாட்குறிப்பில் அன்று தாம் கீழ்நிலை அலுவலர்கள் பணி ஆய்வு செய்ததாக போட்டுக் கொள்வது வழக்கம்.

அதிகாரி குடும்பத்துடன் ரூமுக்குள் இருந்தார். நாங்கள் வெளியில் வெராண்டாவில் நின்றுகொண்டிருந்தோம். அதிகாரி அழைத்தார். நாங்கள் சங்கோஜத்துடன் உள்ளே போனால் அதிகாரி ஒரு சேரில் உட்கார்ந்திருக்க குடும்பத்தினர் கோணல்மாணலாக கட்டிலில் கிடக்க எங்களுக்குத்தான் வெட்கமாக இருந்தது. போதாதற்கு ஒரு டீப்பாயில் ஒரு இலை நிறைய சார்க்கரைப் பொங்கல் வைத்திருந்தது. அதிகாரி கொஞ்சம்கொஞ்சமாக எடுத்துச் சாப்பிட்டுக்கொண்டே எங்களை வரவேற்றார்.

எங்களையும் எடுத்துக் கொள்ளுங்கள் என்றார். நாங்கள் எப்படி அதிகாரியின் இலையில் கைவைத்து எடுப்பது. இருந்தும் எடுத்துக்கொள்ளுங்கள் என்று வற்புறுத்தவே ரொம்பவும் மாரியாதையாகவும் நாசூக்காகவும் ஒரு ஓரத்திலிருந்து ஒரு சிட்டிகை அளவு எடுத்து வாயில் போட்டுக்கொண்டோம். அத்துடன் தரிசனம் நன்றாக நடந்ததா என்று கேள்வி வேறு. புறப்படும்போது தாசில்தாரை அழைத்து ஒரு நுறு ரூபாய் நோட்டை நீட்டினார். “கடவுள் காரியங்களுக்கு நாம்தான் செலவு செய்யவேண்டும் இல்லையென்றால் அதற்கு பலன் கிடைக்காது” என்று வியாக்கியானம் வேறு. இரண்டாயிரத்திற்குமேல் செலவுசெய்த பூஜையின் மதிப்பு அவருக்கு நுறுரூபாயாகத் தெரிந்தது. ஒருவேளை டாலராக கொடுத்துவிட்டாரோ என்னமோ. இதெல்லாம் அதிகாரிகளிடம் சாதாரணமப்பா.

நான் சிதம்பரம் துணைக்கலெக்டர் அலுவலகத்தில் வேலை பார்த்துக்கொண்டிருந்தேன். ஒரு அதிகாரி வந்தார். வந்த நாள் முதல் ஒரே வசூல் வேட்டைதான். யாரையாவது அழைத்தால் அவர் ஏதோ இண்டெண்ட் வைக்கத்தான் அழைக்கிறார் என்று முடிவாகிவிடும். இப்படிப்பட்ட அதிகாரிகள்தான் பலருக்குத் தேவை. ஏனென்றால் அதிகாரிக்கு நுறுரூபாய்க்கு ஒரு காரியம் செய்து கொடுத்துவிட்டு வெளியே போய் ஆயிரம் ரூபாய் வசூல் செய்துவிடுவர். புகார் வந்தால் மீண்டும் அதிகாரி

அழைப்பார். போகும் போதே தட்சினை வழங்கிவிடுவர். அப்புறம் புகாராவது ஒண்ணாவது.

அவர் பணியேற்றதும் கீழ்நிலை அலுவலர்கள் சங்கத் தலைவர்கள் எல்லாம் போய் பார்த்தனர். ஒரு சங்கத் தலைவர் போகும்போதே கொஞ்சம் வெயிட்டாக தரிசித்துவிட்டார். அப்புறம் அவர்தான் அவருக்கு வேண்டியவராகிவிட்டார்.

அவரது மருமகள் அடிக்கடி வந்து மாமனாரைப் பார்த்துவிட்டுப் போவார். அந்த நேரத்தில் யாராவது அய்யாவைப் பார்க்க வந்தால் மருமகள் உள்ளிருந்து சற்று எட்டிப்பார்த்துவிட்டுப் போவார். உடனே அதிகாரி, வந்தவரிடம் ஏதாவது ஒரு பொருள் வேண்டும் என்பார். வந்தவர் தலையெழுத்தே என்று வாங்கித்தருவார். இப்படியாக ஒரு குடும்பத்திற்குத் தேவையான மிக்சி கிரைண்டர், கட்டில் மெத்தை உட்பட எல்லாம் வாங்கிவிட்டார் மருமகள்.

இதில் வேடிக்கை என்னவென்றால் அவர் பணியேற்க வரும்போது ஒரு சூட்கேசில் துணிமணிகளுடன் வந்து இறங்கினார். பால் காய்ச்சும் சம்பிரதாயம் புதிதாக எந்த அதிகாரி வந்தாலும் நடக்கும். அதற்காக புதிய ஸ்டவ், பாத்திரம், பால் எல்லாம் தாசில்தார் ஏற்பாடு செய்வார். ஒரு ஆண்டு கழித்து அவர் மாறுதலில் போகும்போது ஒரு லாரி நிறைய கட்டில் மெத்தை பீரோ உட்பட ஏற்றிப்போகும். அடுத்த அதிகாரி வந்தால் அவரும் இதேமாதிரிதான். எனக்குத் தெரிந்து ஓரிருவர் தவிர எல்லாரும் இப்படித்தான். வெட்கமில்லாமல் ரகசியமாக சம்பாதித்து வெளிப்படையாக ஏற்றிச்செல்வர்.

ஒருமுறை இயற்கை இடர்பாடுகள் தொடர்பாக ஒரு பயிற்சி வகுப்பு அதிகாரிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இண்டெண்ட் வைப்பதில் கைதோர்ந்த அதிகாரிக்கும் அழைப்பு வந்தது. உடனே குமாஸ்தாவை அழைத்தார். நாளை என்னுடன் வரவேண்டும் என்று சொல்லிவிட்டார். ஹெட்கிளார்கை அழைத்தார். நான் சென்னை செல்வதற்கு ஒரு சூட்கேஸ் வேண்டும் ஏற்பாடு செய்யுங்கள் என்றார். அவர் முடியாது என்றதும்

இதுவரை இண்டெண்ட் வைக்க முடியாமல் தப்பிச்செல்லும் என்னை கூப்பிட்டார். ஒரு சூட்கேஸ் ஏற்பாடு செய்யுங்கள் வந்ததும் நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள் என்று சொன்னார். நானா மசிபவன் இவர் யோக்கியதை தெரியாதா. முடியாது என்று விட்டேன். ஒரு வழியாக ஒரு ஷோல்டர் பேக்கில் இரண்டு நாட்களுக்கு துணி எடுத்துக்கொண்டு கிளம்பினார். வழிச் செலவுக்கும் சுமை தூக்கவும் ஒரு குமாஸ்த்தா வேறு. பேக்கையும் குமாஸ்தாதான் தூக்கினார். செமினார் ஆரம்பித்தது. நடத்தியவர்கள் வெளிநாட்டுத் தொண்டு நிறுவனத்தினர். வந்தவர்கள் எல்லாருக்கும் ஒரு அலங்காரமான ஷோல்டர்பேக் கொடுத்தனர். குமாஸ்த்தாவுக்கும் கிடைத்தது. ரொம்ப சந்தோஷத்துடன், போர்ட்டர் வேலை பார்த்தது, டிக்கட் எடுத்தது, எல்லாம் மறந்துபோய் பையைத் தடவித்தடவி மகிழ்ந்துகொண்டிருந்தார் குமாஸ்த்தா. மதியம் இடைவேளையில் வெளியே வந்ததும். குமாஸ்த்தாவிடம் இருந்த பேக்கை பிடுங்கிக்கொண்டார் அதிகாரி. அத்துடன் அது வேறொரு அதிகாரிக்காக கொடுக்கப்பட்டதாக ஒரு கதைவேறு விட்டுள்ளார். மேலும் அதுவரை போர்ட்டர் உத்தியோகம் பார்த்த பையையும் வாங்கி எல்லாவற்றையும் ஒன்றாகத் திணித்து தாமே வைத்துக்கொண்டாராம். பார்த்தார் குமாஸ்தா. தமக்கு ஹைகோர்ட்டில் வேலை இருப்பதாகச் சொல்லி கழட்டிக்கொண்டுவிட்டார். பாவம் அதிகாரி வரும்போது தமது பாக்கெட்டிலிருந்து டிக்கெட் எடுக்கவேண்டியதாகிவிட்டது. மறுநாள் ஆபீசுக்கு வந்து ஒரே புலம்பல் “நட்டாற்றில் விட்ட இவனெல்லாம் ஒரு குமாஸ்தாவா?” என்று.

அந்த அதிகாரி ஆபிசிற்கு வருகிறார் என்றாலே எரிச்சலாக இருக்கும். பின் என்ன! எப்போது எப்படி சம்பாதிக்கலாம் என்றே சிந்தனையில் இருந்தால் என்ன செய்வது. விடுமுறை நாட்களில் குமாஸ்த்தாக்கள் வந்து தங்கள் பிரிவு வேலைகளை செய்வது வழக்கம். அந்த நேரத்தில் அதிகாரியின் ஜீப் சத்தம் கேட்டால் போதும் அவரவரும் போட்டது போட்டபடி விட்டுவிட்டு பின்வாசல் வழியாக

ஓடிப்போய்விடுவர். ஏன்னா, அவர் அலுவலகத்தில் நுழைந்ததும் அப்படியே ஒரு ரவுண்டு வருவார். கண்ணில்பட்ட மேசை நாற்காலி ஸ்டூல் ரேக்கு என்று ஏதாவது ஒன்றை ஜீப்பில் ஏற்றிக்கொண்டு போய்விடுவார். சில சமயம் நம்மையே வண்டியில் ஏற்றிவிடச்சொல்வதும் உண்டு. அந்தத் திருட்டுக்கு உடந்தையாக இருக்கவேண்டாம் என்று ஓடிப்போய்விடுவோம். எதற்கு வம்பு என்றுதான்

அந்த அதிகாரியின் மகள் லண்டனில் இருந்தார். இங்கு அலுவலகத்தில் எஸ்.டீ.டி வசதிகூட கிடையாது. பி.ஏ.விடம் கேட்டார். அதற்கெல்லாம் மாவட்ட ஆட்சியர் அனுமதி வேண்டும் என்று சொல்லிவிட்டார். அதிகாரி என்ற வகையில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் முக்கியப் பிரமுகர் வருகை தொடர்பாக வி.சியைப் போய்ப் பார்த்தார். அத்துடன் அங்குள்ளவர்களை சினேகம் செய்துகொண்டார். வி.சி. இல்லாத நேரம் தெரிந்துகொண்டு நேராக அங்கு ஆஜராகிவிடுவார். அங்குள்ள வாட்சுமேன், தோட்டக்காரர் ஆகியவர்களிடம் வி.சியைப் பார்க்கவேண்டும் என்பார். அவர் இல்லையென்று சொன்னதும். ‘வி.சி. இல்லையென்றால் நீதான் வி.சி’ என்று கட்டிப்பிடி வைத்தியம் செய்துவிடுவர்! அதுபோதாதா. அய்யாவுக்கு என்ன வேண்டும் என்று கனிவுடன் கேட்பார் அவர். இவரோ, ‘அவசரமாக கலெக்டருடன் பேசவேண்டும் வி.சி இருப்பார் என்று பார்த்தேன்’ என்று அங்கலாய்ப்பார். அவரும் அப்பாவியாய் அதற்கென்னய்யா நீங்க பேசுங்க என்று சொல்லிவிடுவார். அவ்வளவுதான் தொலைபேசியில் லண்டன் கிடைத்துவிடும். அரைமணிநேரமாவது பேசுவார். என்ன சமையல், உட்பட கொஞ்சல் கெஞ்சல் எல்லாம் முடித்துக்கொண்டு வந்துவிடுவார்.

பக்கத்து அலுவலகத்தில் எஸ்.டீ.டி. வசதி இருப்பதை எப்படியோ மோப்பம் பிடித்துவிட்டார். அங்குபோய் பேசவேண்டும் என்று பி.ஏ.வை தூதுவிட்டார். பி.ஏ.வுக்குதான் விபரம் தெரியுமே. அங்குபோய் “இப்படி நடக்கப்போகிறது. அதிகாரி வந்தால் ‘எஸ்.டீ.டி இல்லை’ என்று சொல்லிவிடுங்கள்” என்று

சொல்லிப்பார்த்தார். அவர்களோ விஷயம் புரியாமல் அதிகாரிக்கு இல்லாததா என்று அனுமதி கொடுத்துவிட்டனர். போதாக்குறைக்கு அதிகாரிக்கு டீ பிஸ்கட் உபசரிப்பு வேறு. அவ்வளவுதான் மாவட்ட ஆட்சியருக்குப் பேசுவதாக சொல்லிவிட்டு லண்டன் பயணம் செய்துவிட்டார்.

அதுமுதல் அவ்வப்போது பக்கத்து ஆபீசையும் பதம் பார்த்துக்கொண்டிருந்தார். டெலிபோன் பில் பத்தாயிரத்துக்கு மேல் வந்துவிட்டது. அலறிப்போய் மூட்டைப் பூச்சிக்குப் பயந்து வீட்டையே கொளுத்திவிட்டனர். புரியலையா! எஸ்.டீ.டியை கட்பண்ணிவிட்டனர். அவர்களும் டிரங்க்கால் போட்டு காத்திருந்து பேச வேண்டியதாகிவிட்டது.

இப்படியாக அந்த அதிகாரி வி.சி.பங்களாவிற்கு போய்வந்து எல்லாரையும் சினேகம் பிடித்து வைத்துக்கொண்டார். ஒவ்வொரு முறை அங்கு போகும்போதும் அங்கு தோட்டத்தில் ஒரு இரும்பு ஸ்டேண்ட் வைத்து அதில் பெரிய பித்தளை ஜாடி வைத்து அதில் பூஞ்செடிகள் வைத்திருப்பதைப் பார்த்துப்பார்த்து மோகம் உண்டாகிவிட்டது. எப்படி கிளப்புவது என்று பார்த்துக்கொண்டிருந்தார்.

கடலூர் மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. முதலமைச்சர் தலைமையில் விழா விழுப்புரத்தில் நடந்தது. அதிகாரிக்கு சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது. நேராக வி.சியைப் போய் பார்த்தார். விழுப்புரம் விழாவில் மேடை அலங்காரத்திற்காக பூஞ்செடிகள் தேவையென்றும், மாவட்ட ஆட்சியர் சொன்னதாகவும் ஆறு தொட்டிகள் வேண்டும் என்றும் கோரிக்கை வைத்தார். இதில் அங்கலாய்ப்பு வேறு 'மாவட்ட ஆட்சியருக்கு எப்படி இங்கு தொட்டிகள் இருப்பது தெரியுமோ' என்று

வி.சி.யிடம் அனுமதி கிடைத்துவிட்டது. உடனடியாக ஜீப்பில் ஏற்றினார் தொட்டிகளை நேராக விழுப்புரத்திற்கு விட்டார். தொட்டி என்ன மேடைக்கா போயிற்று. விழுப்புரத்தில் இருந்த தன் மகன் வீட்டில் கொண்டுபோய் இறக்கிவிட்டார். சரி... திருப்பிக் கொடுக்க வேண்டாமா என்கிறீர்களா. விழா முடிந்து

ஒருவாரம் வரையிலும் அந்தப் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை. ஒருநாள் வி.சி.யைப் போய்ப்பார்த்தார். மூஞ்சியை ரொம்ப சோகமாக வைத்துக்கொண்டு “தங்கள் முகத்தில் விழிப்பதற்கே வெட்கமாக இருக்கிறது. விழாமேடைக்கு கொண்டுபோன பூந்தொட்டிகளை யார்தான் எடுத்துச்சென்றார்களோ கண்டுபிடிக்க முடியவில்லை. என்ன செய்வது என்றே தெரியவில்லை. என்னால் தங்களுக்கு நஷ்டம்” என்று புலம்பினார். வி.சியைப் பொருத்தமட்டும் அது கடலில் கரைத்த பெருங்காயம் அல்லவா. அவர் இவரை சமாதானம் சொல்லி அனுப்பி வைத்தார்.

“எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு” என்பதைத் தெரியாத வி.சி. என்று எண்ணுகிறேன்.

ஒரு அதிகாரி அவரது காலத்தில் எல்லா கிராம நிர்வாக அலுவலர்களையும் மாறுதல் செய்ய வேண்டிய நிலை. அவரவர்களும் தங்களுக்கு எந்த ஊர் வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். பல கிராமங்களுக்கு போட்டி அதிகமாகிவிட்டது. விடுவாரா பேரம் பேச ஆரம்பித்துவிட்டார். இதற்குள் ஒருசிலர் எம்.எல்.ஏவிடம் போய் புகார் சொல்லிவிட்டனர்.

எம்.எல்.ஏ அதிகாரியைக்கூப்பிட்டு விசாரித்தார். தில்லானா மோகனாம்பாள் திரைப்படத்தில் பாலையா இரவு தண்ணியடித்துவிட்டு ரகளை செய்திருப்பார். காலையில் சிவாஜிகணேசன் கவனத்திற்கு வந்ததும் அவரை அழைத்து கண்டிப்பார். அதற்கு பாலையா “அதுவா தம்பி ராத்திரி வயிறு சரியில்லை. வெளியே குளிர் வேறு. அப்படியே கடைப்பக்கம் போய் ஒரு ஜிஞ்சர் பீர் கேட்டேன். படுபாவிப்பய எதையோ குடுத்துட்டான். பித்த உடம்பாச்சா அப்படியே தூக்கிடுச்சு” என்று சமாதானம் சொல்வர். அதுபோல்தான் இதுவும். “அய்யா எனக்கு சர்வீஸ் கம்மி. ரிட்டையர் ஆகப் போறேன். வந்து போயி” என்று வழிந்தார். எம்.எல்.ஏ புகார் சொன்ன கிராம நிர்வாக அலுவலர்களிடம்

அந்த ஆள் அழறான்யா ஏதோ கொஞ்சம் கொடுத்து காரியத்தை முடித்துக்கொள்ளுங்கள் என்று அனுப்பிவிட்டார்.

அவ்வளவுதான் “எம்.எல்.ஏ சொல்லிட்டாகல்ல நீ இவ்வளவு கொடு” என்று கேட்டு வசூல் செய்துவிட்டார். யாரிடமும் வசூல் செய்யாமல் விடவில்லை.

இதற்கிடையில் இன்ன கிராமம் வேண்டும் என்று கேட்டு ஒருவர் வந்து முன்பணம் கொடுத்துவிடுவர். உடனே கிளார்க்கை கூப்பிட்டு இன்னாருக்கு இன்ன கிராமம் போஸ்ட்டிங் எழுதி வை என்று உத்திரவிட்டுவிடுவார். இதற்கிடையில் அந்த கிராமத்தில் உள்ளவருக்கு தகவல் போய்விடும். அவர் ஓடிவந்து அய்யா என்னை மாற்றாதீர்கள் என்று முறையீடு செய்வார். அவரிடம் உன்மேல் புகார் அதிகமா இருக்கு அதனால் உன்னை மாற்றப்போகிறேன் என்பார். அவரும் கவனித்துவிட்டால் முன்னவரை வரவழைப்பார் அவரிடம் “என்னையா நீபாட்டுக்கு போஸ்ட்டிங் போடும் முன்னரே தம்பட்டம் அடித்துவிட்டாயா ஒரே எதிர்ப்பா இருக்கு! அவர் சொன்னார் இவர் சொன்னார்” என்று சொல்வார். அவருக்கு அவரது யோக்கியதை தெரியாதா வேறு கிராமம் ஒன்றைக் கேட்பார். அதிலும் சில சமயம் இப்படி ஒரு டபிள் கேம் ஆடி அவரிடமும் வசூல் செய்துவிடுவார்.

இப்படியாக வசூல் செய்ததில் சாக்குமூட்டையில் கட்டும் அளவிற்கு பணம் சேர்ந்துவிட்டது. அதிகாரிக்கு பயம் வந்துவிட்டது. அந்தரங்கப் பியூனைக் கூப்பிட்டார். ‘இதில் உள்ள பணத்தையெல்லாம் நீ உன் வீட்டுக்குக் கொண்டுபோய் வைத்துக் கொள். உன்பேரில் யாருக்கும் சந்தேகம் வராது. நான் கேட்கும்போது கொண்டுவந்து கொடுத்தாலும் கொடு இல்லாவிட்டாலும் இல்லை’ என்று சொல்லி ஒப்படைத்து விட்டார். டிரைவரை கூப்பிட்டார். அவரிடம், ‘வீட்டில் உள்ள தட்டுமுட்டு சாமான்களை ஓ.ஏ. கேட்டார் நானும் சும்மாதானே கிடக்கிறது என்று

கொடுத்துவிட்டேன். அவரால் துக்கிச் செல்ல முடியலையாம் கொண்டுபோய் கொடுத்துவிடு’ என்று சொல்லி அனுப்பிவிட்டார். அவர் மாறுதல் ஆனபின் இந்த விபரம் எல்லாம் வெளியே வந்துவிட்டது.

ஒரு அதிகாரி வந்தார். அவர் தன் சம்பளத்திலிருந்து ஒரு பைசா கூட செலவு செய்யமாட்டார். பெரும்பாலான அதிகாரிகள் இப்படித்தான். அவரது மனைவி ஒரு மளிகை சாமான் பட்டியலை தயார் செய்து சிவில் சப்ளை தாசில்தாருக்கு அனுப்பி வைத்தார். இப்படி மாதம் இரண்டு முறையாவது வந்தால் யாரிடம் போய் நிற்பது. வெவ்வேறு கடைகளில் போய் மளிகை பிச்சை எடுத்து அனுப்பிவைப்பார். இப்படி அனுப்பும் பொருட்களில் சில சமயம் பௌடர் டப்பா வாங்கினால் அதற்கு சிறிய சோப்பு இலவசம் என்று இருப்பதுபோல் இலவசங்கள் போட்டிருக்கும். அது காசுகொடுத்து வாங்குபவர்களுக்குத்தானே பொருந்தும். ‘பிச்சை’போடும் கடைக்காரர் அதையுமா கொடுப்பார்.

அதிகாரி மனைவியோ ஒரு ஆள் அனுப்பி வாங்கிக்கொடுத்தவரிடம் இன்னின்ன பொருட்களுக்கு உரிய இலவசங்கள் வரவில்லை. அது என்னாச்சு என்று அதிகாரமாகக் கேட்பார். பாவம் வாங்கிக்கொடுத்தவரோ கடையில் வேறு ஒன்றை வாங்கி அனுப்பி வைப்பார். அதிகாரிக்கு மட்டும்தான் லஞ்சம் வாங்கும் உரிமை உள்ளதா. அதிகாரியைக் கட்டிக்கொண்டதால் அவருடைய மனைவிக்கும் அந்த அதிகாரம் வந்துவிடாதா என்ன. இப்போதெல்லாம் பெண் மக்கள் பிரதிநிதிகள் உள்ள இடத்தில் அவரது கணவர் அதிகாரம் செலுத்தும்போது இதுவும் சரிதானே.

இப்படியாக அடிக்கடி இண்டெண்ட் வைத்ததும் சக தாசில்தார்களிடம் புலம்பினார் சிவில் சப்ளை அதிகாரி. அதைக்கேட்ட அவரோ அட என்ன இது நானும் இதெல்லாம் வாங்கி அனுப்பி வைத்திருக்கிறேனே என்றார். ஆக, நான்கு அதிகாரிகளிடம் எல்லா வகை மளிகைப் பொருட்களும் மாதம் இருமுறை வாங்கி ஸ்டாக்

வைத்துவிட்டார் அதிகாரிணி. மாறுதல் ஆகிச் சென்ற பின்னர் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு காசுகொடுத்து வாங்கவேண்டியதில்லை அல்லவா.

அந்த அதிகாரியின் மகளுக்கு கல்யாணம் கூடிவந்தது. ஸ்பெஷல் இண்டெண்ட் போட்டு எல்லாவற்றையும் லாரிவைத்து அனுப்பிவிட்டார் ஊருக்கு. சர்க்கரை மூட்டைதான் கடைசியாக போக வேண்டியிருந்தது. அதையும் திருமணத்திற்கு லீவு எடுத்துக்கொண்டு போகும்போது கொண்டுபோக முடிவு செய்தார் அதிகாரி.

அதிகாரியானவர் ஊருக்கு பஸ்சில் போனால் மாரியாதையா இருக்குமா என்ன. தாசில்தார் டாக்சி ஏற்பாடு செய்துவிட்டார். அன்று மாலைவரை வசூல் வேட்டையெல்லாம் நடத்திவிட்டு இரவு புறப்பட்டார் அதிகாரி. வழித்துணைக்கு ஆபீஸ் வாட்சுமேனை முன்னறிவிப்பின்றி ஏற்றிக்கொண்டார். அதிகாரிகூட போகிறோம் அப்புறம் என்ன என்று வீட்டை விட்டு காதலனுடன் ஓடிப்போகும் அப்பாவிப் பெண்ணைப்போல் கட்டிய துணியுடன் கிளம்பிவிட்டார் வாட்சுமேனும். வண்டி நேராக மதுரை போனது. அங்கே ஏதோ சந்துபொந்தெல்லாம் சுற்றிவிட்டு ஒரு வீட்டில் போய் இறங்கிக்கொண்டார். டிரைவரும் வாட்சுமேனும் காவல் காத்துக் கொண்டிருந்தனர். இருவருக்கும் பசி வேறு. இருந்தும் அதிகாரி வந்து சாப்பிட அழைப்பார் என்று காத்திருந்தனர்.

வெளியே வந்த அதிகாரி, இருவரும் சாப்பிட்டாச்சா என்றார். இன்னும் இல்லீங்கய்யா என்றார் வாட்சுமேன். இப்போதே நேரமாகிவிட்டது. அப்புறம் பார்த்துக்கொள்ளலாம் என்று புறப்பட்டுவிட்டார். ஒன்றும் செய்ய முடியாமல் கிளம்பிவிட்டனர். ஒரு டீகூட குடிக்க நாதியில்லாமல் பயணம் போயிற்று. கடைசியில் அதிகாலையில் நாகர்கோயில் அருகில் ஒரு ஊரில் போய்தான் வண்டி நின்றது. சர்க்கரை மூட்டையை டிரைவரும் வாட்சுமேனுமாக சேர்ந்து தூக்கிக் கொண்டுபோய் உள்ளே வைத்தனர். அப்போதாவது ஒரு காபி, டீ சாப்பிடுங்க என்று

சொல்லவில்லை. சரி போய் வாருங்கள் என்று சொல்லிவிட்டார். என்னடா வாட்சுமேனை ஆபிசிலிருந்து கிளப்பிக்கொண்டு வந்திருக்கிறோமே அவனிடம் காசு இருக்கா இல்லையா என்றெல்லாம்கூட நினைக்கவில்லை அந்தப் புண்ணியவான். இருவரும் வெளியே வந்தனர்.

அதிகாரி வீட்டுச் சவாரி என்பதால் டிரைவர் மிதப்பாக வந்துவிட்டார். இனி ஜென்மத்திற்கும் அவர் அதிகாரி வீட்டுக்கு சவாரி வரமாட்டார். அல்லது தேவையான முன்னேற்பாட்டுடன் வருவார். டிரைவருக்கு நல்ல பாடம் கற்றுக்கொடுத்துவிட்டார் அதிகாரி.

வாட்சுமேனுக்கு ஒரே நடுக்கம் என்ன செய்வது என்று புரியவில்லை. பசிவேறு. இன்னும் பன்னிரண்டு மணிநேரம் கழித்துதானே வீட்டுக்கு போகவேண்டும் என்று பதட்டம். பல ஊர் தண்ணிகுடித்த டிரைவர் ஆறுதல் சொன்னார். ‘கவலைப்படாதீங்கண்ணே நான் பார்த்துக்கறேன்’ என்று. நேராக ஒரு டீ கடையில் போய் டீ பன் சிகரெட்டு என்று சிரம பாரிகாரம் செய்துகொண்டனர். நேராக நாகர்கோயில் பஸ் நிறுத்தத்தில் வந்து திருநெல்வேலிக்கு டிக்கட் ஏற்றினார். திருநெல்வேலியில் சாப்பாட்டை முடித்துக்கொண்டனர். அப்படியே ஒவ்வொரு ஊராக பலித்தமட்டும் டிக்கட் ஏற்றிக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தனர். வாட்சுமேன் இந்த உத்தியோகமே வேண்டாங்கய்யா என்று வெறுத்துப்போய் புலம்பித் தீர்த்துவிட்டார்.

அதுமட்டுமா, அதிகாரி தம்மகள் கல்யாணம் என்பதால் அலுவலகத்தில் எல்லாருக்கும் பத்திரிகை வைத்தார். மரியாதையாக இவர்கள் என்ன செய்திருக்கவேண்டும் பதிலுக்கு மொய்ப்பணத்தை வசூல் செய்து அதிகாரியிடம் கொடுத்திருக்கவேண்டும். அதைவிட்டுவிட்டு அதிகாரி வீட்டு கல்யாணத்திற்கு நாம் நேரில் போய் மரியாதை செய்ய வேண்டும் என்று வேன் வைத்துக்கொண்டு இருபது பேர் சென்றனர். காலையில் கல்யாண வீட்டுக்குப் போய் இறங்கினால்

வா என்று கூப்பிட ஒரு பாவிகூட முன்வரவில்லை. எல்லாருக்கும் ஒரு காப்பி மட்டும் கிடைத்தது. அதிகாரி இவர்களை கண்டுகொள்ளவே இல்லை. கல்யாணம் முடிந்ததும் அதிகாரியிடம் விடைகேட்டனர். சம்பிரதாயத்திற்குக்கூட சாப்பிட்டுவிட்டுச் செல்லுங்கள் என்று அதிகாரி சொல்லவில்லை. இவர்களுக்கு ரோஷம் தாங்கவில்லை. “உண்ணீர் உண்ணீர் என்று ஊட்டாதார் தம்மனையில் உண்ணாமை கோடிபெறும்’’ என்ற ஔவையாரை மனதில் தியானித்து அவர் வழி நடந்துவிட்டனர். நேராக ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு கன்னியாகுமாரி போய் சுற்றிப்பார்த்துவிட்டு காந்தி மண்டபத்தில் மன அமைதியைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தனர். இப்படிகூட சில ஜென்மங்கள் என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல.

சில்லியான பலரைப் பார்த்திருப்போம். தாம் அமர்ந்திருக்கும் சீட்டுக்கு இழுக்கு தேடக்கூடாது என்ற எண்ணம் கொஞ்சம்கூட இல்லாமல் செயல்பட்ட அதிகாரிகள் நிறையபேர். இப்படித்தான் ஒரு அதிகாரி. காலை பதினோரு மணிக்கு திடும் பிரவேசமாக தாலுக்கா அலுவலகத்தில் நுழைவார். எந்த அதிகாரி ஆபீசிற்குள் வந்தாலும் குமாஸ்தாக்களிடையே ஒரு பரபரப்பு தொற்றிக்கொள்ளும். அவர் அதைக் கேட்பாரோ இதைக் கேட்பாரோ என்று. அதிலும் ஆர்.டீ.ஓ என்றால் எப்படி இருக்கும்.

வந்தவுடன் அட்டெண்டன்ஸ் கொண்டுவா என்பார். மேசைமேல் வைக்கப்படும். சிறிது நேரம் கழித்து துணை வட்டாட்சியரை அழைத்து கடிந்துகொள்வார். ஏதோ தப்பு கண்டுபிடித்துவிட்டார் என்று நினைக்கிறீர்களா.

“ஏன்யா நான் வந்து எவ்வளவு நேரம் ஆச்சு. ஒரு டீ பிஸ்கட்டுக்குகூட யோக்கியதை இல்லையா? என்னையா ஆபீஸ் நடக்குது?” என்று கத்துவார். துணை வட்டாட்சியர் உடனே பின்பக்கம் திரும்பி “எப்போ போன ஆள் இன்னுமா வரான். அய்யா

எவ்வளவு நேரம் காத்திருக்காங்க. டபேதார்... அவனை எதுக்கு அனுப்பினீங்க அதற்கு நீங்களே போயிருக்கலாம்” என்று தன் பங்குக்கு கத்துவர். இதோ வந்துட்டுதுங்க அய்யா என்று ஒரு நாடகம் ஆடுவார்.

‘டீ’, ‘பச்சி’ (இது பஜ்ஜி என்பதற்கான அதிகாரியின் பாஷை)வந்ததும் சாந்தமாகி விடுவார். அவ்வளவுதான் இன்ஸ்பெக்ஷன் முடிந்தது. போய்க்கொண்டே இருப்பார் அதிகாரி.

சமயத்தில் பி.ஏ. போன் செய்வார். “ஆர்.டீ.ஓ. டீ கேக்கிறாங்க அனுப்புங்க” என்பார். உடனே ‘பிஸ்கட் பாக்கெட், டீ, பச்சி’ எல்லாம் வாங்கி அனுப்பி வைப்பார். போன் வரவில்லை என்றால் அன்று அதிகாரி ஆபீசுக்கு வரவில்லை என்று அர்த்தம்.

அந்த அதிகாரிக்கு ஒரு மகன் அவர் தன்போக்கில் ஊர் சுற்றிக் கொண்டிருந்தார். தேர்தல் பணிக்கு செக்ஷன் ரைட்டர்கள் ஆள் எடுத்தார்கள். அதிகாரி தன் மகனையும் அனுப்பிவைத்துவிட்டார். அதிகாரி மகனை என்ன வேலை வாங்குவது. அவரும் ஊர் சுற்றக் கிளம்பிவிடுவார். இல்லையென்றால் இருப்பவர் வேலையைக் கெடுத்துக்கொண்டு பேசிக்கொண்டிருப்பார். செக்ஷன் ரைட்டர்கள் பலர் பெண்கள். அந்த பையனோ புகைப்படக்கலையில் ரொம்ப ஆர்வம் உள்ளவர். அவர்பாட்டுக்கு வேலை செய்பவர்கள் மத்தியில் சுய ப்ரதாபம் அடித்து வேலையை கெடுக்க ஆரம்பித்துவிட்டார். என்ன செய்வதென்று புரியவில்லை. ஒருநாள் ஆபீசிற்கு வந்தவரிடம் சற்று துணிச்சலாக பேசிவிட்டார் துணை வட்டாட்சியர். அப்படியாவது வேலைக்கு அனுப்பமாட்டார் என்று எண்ணம் அவருக்கு. அதிகாரி நேராக தேர்தல் பிரிவு ஸ்டோர் ரூமுக்கு வந்தார். அங்கு ஒரு மேசை நாற்காலி போடச்சொன்னார். அங்கு மகனை உட்கார வைத்தார். கதவைப் பூட்டி சாவியை தாசில்தாரிடம் கொடுத்து மாலைதான் திறந்து விடவேண்டும் என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார்.

தாசில்தார் என்ன செய்வார் பாவம். அவர் போனதும்

கதவைத் திறந்துவிட்டுவிட்டார். பத்து நாள் வரை வேலை செய்ததில் பையனுக்கு அலுத்துவிட்டது. தந்தையிடம் சண்டை போட்டுவிட்டு ஊர் சுற்றக் கிளம்பிவிட்டார் தனையன்.

ஒரு அதிகாரி. வரும்போதே அவரது செயல்கள் முந்தைய அதிகாரிகளுக்கு கோயில் கட்டும் நிலையில் இருந்தது. யார் வந்தாலும். அவரிடம் ஒரு சிம் கார்டு வாங்கிவா என்பார். ரீசார்ஜ் கூப்பன் வாங்கிவா என்பார். குறைந்த தொகைக்கு வாங்கிவந்தால் என் பதவியைக் கேவலப்படுத்திவிட்டாயே என்று துக்கிவீசிவிடுவர். எங்கே, தன் வண்டிக்குள்ளேதான். உடனே வந்தவர் வேறொரு கூப்பன் வாங்கிவந்துவிடுவார். முன்னர் கொடுத்ததை கேட்கவா முடியும். அதிகாரிக்கு இரட்டை லாபம்.

அவர் சத்துணவு மையத்தைக்கூட விடமாட்டார். சத்துணவு பொருப்பாளரிடம் கணக்கைக் காட்டச்சொல்லி கேட்பார். பொருப்பாளர் கணக்கையும் சில்லரை செலவின கையிருப்பையும் பரிசீலனைக்கு காட்டுவார். அப்படியே தொகையைப் பிடுங்கிக்கொண்டு வந்துவிடுவர். கூடவே முட்டை வைத்திருந்தால் நாலைந்தை எடுத்துக்கொண்டு வந்துவிடுவார். பாவம் அந்த பொருப்பாளர்.

நியாயவிலைக் கடைக்குப் போனால் சர்க்கரை, அரிசி, பாமாயில் என்று கொள்ளையடித்துக்கொண்டு வந்துவிடுவார். கூடப் போனவர்கள் தலையில் அடித்துக்கொள்வர். டாஸ்மாக் கடையில் மட்டும்தான் பாட்டில் வாங்கியதாக தகவல் இல்லை.

மாணவர் ஹாஸ்ட்டலுக்குத் தணிக்கைக்குப் போனால் தனக்கு வசூல் செய்வது போதாதென்று தன் பியூனுக்கு டிரைவருக்கு என்று கேட்டு வசூல் செய்து எடுத்துக்கொள்வார். கழுதைக்கு வாழ்க்கைப்பட்ட கதையாக நொந்துபோவர் பியூனும் டிரைவரும். ஆபீசில் அனுமதி கேட்டு வரும் கோப்புகளில் சம்பந்தப்பட்டவரை விசாரணைக்கு அழைத்து அவரிடம் நீங்கள் ஆபீசில் யாருக்கும் காசு

கொடுக்க வேண்டாம் நானே கொடுத்துக்கொள்கிறேன் என்று சொல்லி அவர்களுக்கும் சேர்த்து லஞ்சம் வசூலித்து எடுத்துக்கொள்வார்.

சிம்கார்டு, செல்போன் முதல் ரேஷன் அரிசி உட்பட அவர் அடித்து சேர்த்த பொருட்களைக் கொண்டு ஒரு பல்பொருள் அங்காடி திறந்து பிழைத்துக் கொண்டிருக்கலாம். ‘கிரேஸி பாய்ஸ் இன் த சூப்பார் மார்க்கட்’ என்ற ஒரு திரைப்படம் இவர் கதைபோலத்தான் இருக்கும்.

போதாக்குறைக்கு தாம் மந்திரிக்கு சொந்தக்காரர் என்றும் மந்திரிக்கு அதைச் செய்தேன் இதைச் செய்தேன் என்றும் பில்டப் கொடுத்துக்கொண்டிருந்தார். பலருக்கு அது தற்காப்பு ஆயுதம் என்று தெரியும். ஆனால் சிலரோ உண்மை என்று நம்பி பயந்துகொண்டிருந்தனர். அவ்வப்போது மந்திரி இவரை அழைத்து கண்டித்ததெல்லாம் ஒன்றுக்கும் உதவவில்லை.

ஆறு மாதத்தில் அவர் ஆடிய ஆட்டம் ஜெகப் பிரசித்தமாகிவிட்டது. ஒருநாள் லஞ்ச ஒழிப்புத்துறை வந்துவிட்டது. இரவோடு இரவாக தப்பி ஓடிவிட்டார் புண்ணியவான். அப்படிப்பட்ட நேர்மையான அதிகாரிக்கு அரசு நல்ல வருமானமுள்ள இடம் வழங்கி அழகு பார்த்தது. அங்கே போய் மீண்டும் தாண்டவம் ஆடியதில் எப்படியோ சிக்கிக்கொண்டு சஸ்பெண்ட் ஆனதாகக் கேள்வி.

# 17 அதிகாரிகளுடன் பனிப்போர்

இந்த அதிகாரிகளுக்கும் கீழே இருப்பவர்களுக்கும் நடக்கும் பனிப்போர் இருக்கிறதே அது செம தமாஷாக இருக்கும். எப்போதென்றால் இருவரும் சம பலத்துடன் இருந்தால்! இல்லாவிடில் வலுத்தவர் மற்றவரை வீழ்த்திவிடுவார். அப்புறம் ஏது பனிப்போர்.

ஒரு அலுவலகம். அதிகாரி சட்டத்தைக் கரைத்துக் குடித்தவர். அவர் எந்த அலுவலகத்திற்கு மாற்றப்பட்டாலும் அதில் புகுந்து புறப்பட்டு கடைசியில் அந்த அலுவலகத்தால் அரசுக்கு எவ்வளவு நஷ்டம். அது தேவையில்லை மூடிவிடலாம் என்ற ரீதியில் செயல்பட்டு அறிக்கை அனுப்பிவிடுவார். அவரது நெருக்கடி தாங்காமல் அவரை வேறு அலுவலகத்திற்கு மாற்றிவிடுவர். அங்கேயும் இதே கதைதான்.

அவரை எந்த அலுவலகத்தில் போட்டாலும் தலைவலி என்று உணர்ந்து ஒரு அலுவலகத்தில் போட்டார்கள். அங்கு பொதுமக்கள் தொடர்பு ஏதும் கிடையாது. குற்றவாளிகள் திருந்தி வாழ்வதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு சிறு நகர் அது. அங்கே இவரது ஜம்பம் ஏதும் சாயாது. ஆனால் நிறைய வேலை இருக்கும். அந்த அலுவலகத்திற்கு ஒரு குமாஸ்த்தாவை மாறுதல் செய்தனர். அவரோ வல்லாளகண்டன். இரண்டு கத்திகள் ஒரு உறையில் போய் உட்கார்ந்துகொண்டன. அதிகாரியால் அவரை மாற்ற முடியவில்லை. குமாஸ்தாவோ அதிகாரிக்கு சளைக்காமல் வாயடித்துக் கொண்டிருந்தார்.

கடைசியில் இருவருக்கும் பனிப்போர் துவங்கிவிட்டது. பேப்பர் யுத்தம் நடக்க ஆரம்பித்தது. அதிகாரிக்கு கோப்பில் எழுதிவைப்பார் குமாஸ்தா. அதிகாரி அதில் பேசவும் என்று ஒரு கருத்தை எழுதி

அனுப்புவார். பொதுவாக ஒப்புதல் அளிக்க விரும்பாத அதிகாரிகள் தமது சந்தேகத்தை கோப்பில் பதிவுசெய்து விளக்கம் பெறமாட்டார்கள். மொட்டையாக பேசவும் என்று எழுதி அனுப்பிவிடுவர். குமாஸ்த்தாவோ அதிகாரி என்ன கேட்பாரோ என்று குழம்பிப்போய் நேரில் எடுத்துச்சென்று கேட்காமல் கட்டிவைத்துவிடுவார். அவசரம் வந்தாலன்றி அத்துடன் அக் கோப்பு உறங்க ஆரம்பித்துவிடும் ஏதாவது பிரச்சினை வந்தாலும். குமாஸ்த்தாதான் மாட்டிக்கொள்வார். அதிகாரி தப்பிவிடுவார்.

சில அதிகாரிகள் பேசவும் என்று போட்டால் தமக்கு இன்னும் 'லஞ்சம்' வந்து சேரவில்லை. 'தாமதப்படுத்து' என்று அர்த்தம்கூட உண்டு.

அதேபாணியில் அதிகாரி 'பேசவும்' என்று போட்டு அனுப்பிவிட்டார். அனுப்பிவிட்டார் என்றால் எங்கோ டில்லிக்கோ அன்றி இமயமலைக்கோ அல்ல. அதிகாரியின் சீட்டும், குமாஸ்தாவின் சீட்டும் ஒன்றை ஒன்று ஒட்டிதான் இருக்கும். அதிகாரி குமாஸ்தா பக்கம் முகத்தைமட்டும் திருப்பி கேட்டால் குமாஸ்த்தா பதில் சொல்லப்போகிறார். இவர்தான் அவரிடம் பேச விரும்பவில்லையே.

அதிகாரி தன் மேசையிலிருந்து எட்டி குமாஸ்த்தாவின் மேசையில் கோப்பினை வைப்பார். அவர் எடுத்துப் பார்த்துவிட்டு பேசவும் என்று எழுதியிருப்பதால் 'பேசுவதற்காகக் கோப்பு வைக்கப்பட்டுள்ளது' என்று எழுதி உடனே அதிகாரி மேசைமேல் வைத்துவிடுவார். அதிகாரிக்கு எரிச்சல்தான்வரும். ஓரிரு தினங்கள் பார்த்துவிட்டு மீண்டும் தம் கைவரிசையைக் காட்டும் வகையில் 'ஏன் பேசவில்லை' என்று கேட்டு பக்கத்து மேசைமேல் வைப்பார். குமாஸ்த்தாவோ உடனடியாக 'எப்போது பேசவேண்டும்' என்று குறிப்பிட்டு வைப்பார். இப்படியாக ஒருவர் மேசையிலிருந்து அடுத்தவர் மேசைக்கு கோப்பு பந்தாடப்படும்.

இப்படியே சுமார் ஒருமாதம் கடந்தது. எல்லாம் இப்படியே ஜாலியாக நல்லாத்தான்

போய்க்கொண்டிருந்தது. அதிகாரிக்கு குமாஸ்த்தா முகத்தில் முழிக்க விருப்பமில்லை. எனவே, அதிகாரி உளுந்தூர்பேட்டையில் தாம் தங்கியிருந்த லாட்ஜிலேயே இருந்துகொண்டார். தினசரி கோப்புகள் பியூன்மூலம் இங்கும் அங்குமாகப் போய்வந்து கொண்டிருந்தது.

கடைசியில் சம்பளம் போடப்பட்டது. ‘பே-பில்’கள் அதிகாரியின் அறைக்கு எடுத்து வரப்பட்டு ஒப்புதல் பெற்று கருவூலம் மூலமாக காசாக்கப்பட்டுவிட்டது. தற்போது அதிகாரியின் சம்பளப்பணம் குமாஸ்தா கையில். அவர்தான் பண வரவு செலவு, கையிருப்புகளுக்குப் பொறுப்பு.

அதிகாரிக்கோ குமாஸ்த்தாவிடமிருந்து தமது சம்பளப் பணத்தைப் பெற விருப்பமில்லை. அதனால் ஒரு ‘பே-ஸ்லிப்’ தயார் செய்து ஸ்டாம்பு ஒட்டி அதில் ஒப்பம் செய்து பியூன்மூலமாக அனுப்பி பணம் கேட்டார். எந்த ஒரு அலுவலராவது நேரில் வந்து சம்பளம் பெற இயலவில்லை என்றால் அவர் தமக்கு நம்பகமான ஒரு அலுவலரிடம் இப்படி ‘பே-ஸ்லிப்’ கொடுத்து விடுவார். அந்த நபரிடம் ஒப்புதல் பெற்றுக்கொண்டு சம்பளம் பட்டுவாடா செய்யப்படும். இந்த நடைமுறை பவர் ஆப் அட்டார்னி மூலம் அதிகாரம் அளிப்பதற்கு ஒப்பானது.

அதுபோலவே நம் அதிகாரியும் ‘பே-ஸ்லிப்’ அனுப்பி வைக்க, குமாஸ்தாவோ அதனை ஏற்க மறுத்ததுடன் கீழ்நிலை அலுவலர்கள் ஏதாவது முக்கியக் காரணத்தினால் நேரில் வர இயலாத நிலை ஏற்பட்டால் அப்படிப்பட்ட நடைமுறையைப் பின்பற்றலாம். அதிகாரியோ அவரே பணம் பெற்று பட்டுவாடா செய்யக் கடமைப்பட்டவர். எனவே அதிகாரிக்கு பே-ஸ்லிப் மூலம் பணம் தர இயலாது என்று மறுத்துவிட்டார்

அடுத்து, அதிகாரி பியூன் மூலம் சம்பளப்பட்டியலையும், தொகையையும் கொடுத்து அனுப்பினால், தாம் ஒப்புதல் செய்து அனுப்புவதாகத் தெரிவித்தார். குமாஸ்த்தாவோ

அதிகாரி ஒப்புதல் செய்து அவரிடம் ஒப்படைப்பது வரையிலும் அதற்குத் தாம்தான் பொறுப்பு என்றும் ஒருவேளை அதிகாரியிடம் ஒப்படைக்காமல் கையாடல் செய்துவிட்டாலோ, அன்றி தொலைத்துவிட்டாலோ அதனால் ஏற்படும் பின் விளைவுகளைத் தாம் ஏற்கமுடியாது என்று நிராகரித்துவிட்டார். அதற்குள் அவருக்கு சம்பளம் பட்டுவாடா செய்யுங்கள் என்று மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து சமாதானத்தூது அனுப்பப்பட்டது. குமாஸ்த்தாவோ அசையவில்லை. மாறாக அதிகாரியாகப்பட்டவர் தமது சூழ்நிலையைப் பற்றி தெரிவித்து தாம் நேரில் வர இயலாத நிலையில், இன்னாரிடம் தொகையை கொடுத்து அனுப்பினால் அது தமக்கு சேர்ந்ததாக கருதிக் கொள்வதாகவும். அத்தொகைக்கு வழியில் ஏதாவது ஆனால் அதற்குத் தாமே பொறுப்பு என்றும் ஒரு டிக்ளரேஷன் பத்திரம் எழுதிக்கொடுத்தால் பணத்தைக் கொடுப்பதாகத் தெரிவித்துவிட்டார்.

விடாக்கண்டனுக்கும் கொடாக்கண்டனுக்கும் இடையிலான இழுபரியினை முடித்துக்கொள்ள இயலாமல் அதிகாரி விடுப்பில் சென்றுவிட்டார். அதுவரையிலும் அவரிடம் வேலைபார்த்த குமாஸ்த்தாக்கள் கெடுபிடி தாங்காமல் ஓடிப்போவதுதான் வழக்கம். மாறாக அதிகாரி ஓடிப்போனார் இங்கே.

இன்னொரு நிகழ்ச்சி. ஒரு தனி அலுவலகம். அதில் ஒரு அதிகாரியும், ஒரு வருவாய் ஆய்வாளரும் வேலைபார்த்தனர். சில காலத்தில் இருவருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதிகாரியானவர் வருவாய் ஆய்வாளரை ஒழித்துக் கட்டவேண்டும் என்று முடிவுசெய்து காத்திருந்தார். அதற்கு வாகாக சில கோப்புகள் அலுவலகத்தில் காணாமல் போய்விட்டது. வருவாய் ஆய்வாளர்தான் அவற்றிற்குப் பொறுப்பு என்று கடினமான குற்றச்சாட்டுக்களை ஏற்படுத்திவிட்டார் அதிகாரி.

வருவாய் ஆய்வாளர் சற்றும் அசரவில்லை. தமது பதிலில் எழுதினார் இப்படி. “அய்யா தாங்கள்

அலுவலகத்திலேயே தங்கி சமையலும் செய்து வருகிறீர்கள். அப்போது தங்களின் கவனக் குறைவாக, தாங்கள் மேசைமேல் அடுப்பை வைத்து சமையல் செய்ததால் மேசை எரிந்துபோய்விட்டது. அப்போது சில கோப்புகளும் எரிந்து போய்விட்டது. அந்த மேசை இன்னும் தங்கள் அலுவலக மேசையாகப் பயன்பட்டு வருவது நன்கறிவீர்கள். அப்படி எரிந்த கோப்புகளில் தாங்கள் என்னைப் பொறுப்பாக்கி குற்றச்சாட்டு ஏற்படுத்தக் காரணமாக கோப்புகளும் சேர்ந்ததே. அதனால் நான் எந்த வகையிலும் அந்தக் கோப்புகளுக்குப் பொறுப்பல்ல. அவை எரிந்துபோனதற்கு நீங்களும் உங்களின் செயல்பாடுகளும்தான் காரணம். அதற்காக உங்கள் பேரில்தான் நடவடிக்கை எடுக்கவேண்டும்” என்று எழுதிக் கொடுத்துவிட்டார்.

பார்த்தார் அதிகாரி ‘இதென்னடா தேன்கூட்டைக் கலைத்த கதையாக இருக்கிறதே’ என்று அப்படியே விட்டுவிட்டார். ஆனால் எந்த அலட்டலும் இன்றி குமாஸ்தா காலரைத் துக்கிவிட்டுக்கொண்டு வேலைபார்த்தார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ.

ஒரு அதிகாரி இருந்தார். அவருக்குக் கீழே ஒரு குமாஸ்தா. அவர் அதிகாரியைக் காக்கா பிடித்துக்கொண்டு கீழே இருப்பவர்களிடம் மிரட்டி தொகைகளை வசூல் செய்து அதில் அதிகாரிக்கு வேண்டிய தேவைகளை செய்துகொடுத்துவிட்டு தாமும் லாபம் பார்த்துக்கொண்டிருந்தார். கடைசியில் பிரிவில் வேலை ஏதும் செய்யவில்லை. புரோக்கர் வேலையே பிரதானமாகிவிட்டது. நாளடைவில் விஷயம் அதிகாரிக்குத் தெரிந்துவிட்டது. அதிகாரி அவரது இருக்கையில் பல குறைபாடுகளைக் கண்டறிந்து பழிவாங்க முடிவெடுத்தார். குற்றச்சாட்டு ஏற்படுத்தப்பட்டது. குமாஸ்த்தா எழுதினார் தம் பதிலில். “அய்யா, நான் பிரிவில் மிகவும் கடினமாக உழைத்திருக்கிறேன். தாங்கள் எனது வருகைப்பதிவேடு மற்றும் பயணப்படி பதிவேடுகளைப் பரிசீலனை செய்தால் அது நன்கு விளங்கும். நான் மாதத்தில் இருபதுநாட்கள் வரை

கேம்ப் போயிருக்கிறேன். அப்படியிருந்தும் பிரிவில் என்னால் முடிந்த அளவிற்கு வேலை செய்திருக்கிறேன். எனவே, என்னை கடுமையாக வேலை வாங்கியதுடனல்லாமல் என்பேரில் இப்படி உள்நோக்கத்துடன் குற்றச்சாட்டு ஏற்படுத்தியிருப்பது ஞாயமா?” இப்படி இருந்தது விளக்கம்.

ஒவ்வொரு அலுவலகத்திலும் அவர்களுக்கு வழங்கப்படும் பயணப்படி அந்த குமாஸ்த்தாக்களுக்கு வழங்கப்படும் பூஸ்ட் போன்றது. ஆனால் போடுவது பாதி பொய்தான். அவரவரும் தாங்கள் அயல் பணிக்கு சென்றதாக வருகைப் பதிவேட்டிலும் பதிவு செய்து அந்த நாட்களில் அலுவலக வேலையாக வெளியூர் சென்றதாகச்சொல்லி பயணப்படி பெற்றுவிடுவர். ஆனால் பிரிவில் அமர்ந்து வேலை பார்த்திருப்பர். அதிகாரிகளுக்கும் இது நன்கு தெரியும். நம்மவர், தான் பொய்க் காரணம் காட்டி பயணப்படி பெற்றதும் அல்லாமல், கொடுத்த அதிகாரியையே சிக்க வைத்துவிட்டார். பொய்யான காரணங்களின் அடிப்படையில் பயணப்படி வழங்கினார் என்ற அளவில் அவர் போரில்தான் குற்றச்சாட்டு ஏற்படும். பின்னர் அந்த அதிகாரி போலி பயணப்பட்டியல் ஒப்புதல் செய்த பாவத்திற்காக தொகையையும் திருப்பிச் செலுத்துவதுடன் ஒழுங்கு நடவடிக்கைக்கும் ஆளாக நேரிடும்.

அப்புறம் என்ன! அதிகாரி சத்தமில்லாமல் குற்றச்சாட்டு நடவடிக்கையை கைவிட்டுவிட்டார். குமாஸ்தாவோ வேறு ஏதாவது குற்றச்சாட்டில் சிக்கிக்கொண்டால் தப்ப இயலாதே என்பதாலும் மேற்கொண்டு போலி பயணப்படி பெற இயலாத நிலையிலும் வேறு அலுவலகத்திற்கு டிரான்ஸ்பர் பெற்றுச் சென்றுவிட்டார். வருமானம் இல்லாத சீட்டில் வேலை பார்க்க அவருக்கென்ன தலையெழுத்தா!

இன்னொரு அதிகாரி. அவரிடம் ஒரு குமாஸ்த்தா. இருவரும் ஆரம்பத்தில் குடும்பார்த்த விஷயங்கள் முதற்கொண்டு பரிமாரிக்கொண்டு ரொம்ப சௌஜன்யமாக பழகிவந்தனர். ஒருவரை ஒருவர்

போட்டோ எடுத்துக்கொள்வது என்ன, ‘நீ என் நண்பேண்டா’ என்ற ரீதியில் பழகிக்கொண்டிருந்தனர்.

ஒரு நிலையில் இவர் ‘பைசா’வுக்கு லாயக்கில்லாதவர் என்பது விளங்கிவிட்டது. ஜாடைமாடையாக ‘பைசா’வின் அவசியத்தைச் சொல்லிப்பார்த்தார் அதிகாரி. அப்படி ஒரு வேலை எனக்கு வேண்டாம் என்ற ரீதியில் போய்விட்டார் குமாஸ்த்தா. அதிகாரியோ படு சீனியர். குமாஸ்த்தாவோ படு கத்துக்குட்டி. “நீ கடைசி வரை இப்படியே இருந்துவிடுவாயா? நீ இன்னும் ஆர்.ஐ. பீரியட் முடிக்கவில்லை. அப்ப தெரியும் உன் சேதி” என்றெல்லாம் உசுப்பி சூடாக்கினார் அதிகாரி. அவரோ இன்னின்னார் என் குருவுக்கு சமம் அவர்கள் எல்லாம் ஆர். ஐ. பீரியட் பார்த்தது பற்றி பலர் சொல்லி கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களால் முடிந்தது என்னாலும் முடியாதா? அப்படி முடியவில்லையென்றால் நான் இந்த உத்தியோகத்தையே விட்டுவிடுவேன். என்றெல்லாம் மறுப்பறிக்கை (வாய்மொழியாகத்தான்) விட்டார். இப்படியாக கண்ணாடியில் கீரல் விழுந்து விரிசலாக பாரிணாம வளர்ச்சி கண்டது.

இந்த நிலையில் ஒரு நாள் உள்நோக்கத்திலோ அல்லது வெளிநோக்கத்திலோ ஒரு உத்திரவு பிறப்பித்தார் அதிகாரி. அதன்படி கூடுதலாக வேறொரு பிரிவிலிருந்து சில வேலைகளைச் செய்ய வேண்டும் என்று. குமாஸ்த்தாவோ ஏற்கனவே தாம் செய்யும் வேலைகளையே இரவு வெகுநேரம் வரை வீட்டிற்குக் கொண்டுபோய் செய்வதாகவும் கூடுதல் சுமையை ஏற்க முடியாது என்றும் மற்ற குமாஸ்த்தாக்கள் சுற்றித் திரியும்போது தம்மை எதற்கு துன்பப்படுத்துகிறீர்கள் என்றும் கேள்வி கேட்டார்.

அதிகாரியோ, ‘ஒரு பார்மாலிட்டிக்காகத்தான் இந்த உத்தரவு’ என்றும் நீ கூடுதல் பணி பார்க்க வேண்டாம் என்றும் சொல்லிவிட்டார். ஆக இப்படியாகத்தானே மூன்று மாதங்களுக்கு மேல் ஓடிவிட்டது. இந்த நிலையில் குமாஸ்த்தாவுக்கு மறுநாளே மாறுதல்

செய்து கலெக்டராபீசிலிருந்து உத்தரவாகிவிட்டது.

அப்போதுதான் வேதாளம் முருங்கை மரம் ஏறிக்கொண்டது. தாம் ஏற்கனவே போட்ட உத்திரவுக்கு கீழ்படியவில்லையென்றும். அந்த கோப்புகளை எல்லாம் பெற்று வேலை செய்தால்தான் அனுப்ப முடியும் என்றும் வீம்பு பிடித்தார் அதிகாரி. அதற்குள் சம்பளம் தரும் அதிகாரி மாவட்ட ஆட்சியர் உத்திரவை நிறுத்திவைக்க இவருக்கு ஏது அதிகாரம் என்று அவரை விடுவித்து அனுப்பிவிட்டார்.

காற்றழுத்தத் தாழ்வுமண்டலம் புயலாக மாறுவதுபோல் வேகம் அதிகமாகி குற்றச்சாட்டு தயாராகிவிட்டது. இதை அறிந்த அவருக்கு வேண்டியவர். தாம் அந்த அதிகாரி வழங்கிய நிவாரணங்கள் குறித்த பட்டியலை தகவல் அறியும் சட்டப்படி வாங்கி அனைவரையும் சாட்சியாகப் போட்டு ஒரு வழக்கு தொடுத்து அவர் ஒவ்வொருவரிடமும் எவ்வளவு லஞ்சம் வாங்கினார் என்பதை நிரூபிக்கப்போவதாக ஆரம்பித்துவிட்டார். போதாக்குறைக்கு குமாஸ்த்தாவும். எந்தெந்த நேரத்தில் என்னென்ன சொன்னார். தம் பேரில் குற்றச்சாட்டு ஏற்படுத்துவதற்கு முகாந்திரமே தாம் லஞ்சம் வாங்கித் தராததுதான் என்று பக்கம் பக்கமாக விளக்கம் தயார் செய்துவிட்டார்.

அப்புறம் இருவரையும் சமாதானம் செய்து அனுப்பி வைத்துவிட்டு கோட்டாட்சியரிடம் சொல்லி விடுவிக்கும்படி ஆகிவிட்டது. ‘லஞ்சம்’ என்ற ஒரு சாதாரண சொல் அது எப்படியெல்லாம் அவதாரம் எடுத்து வாங்காதவர்களைத் துறத்துகிறது என்பதற்கு இது உதாரணம்.

எப்பவுமே பக்கத்துவீட்டுக்காரன் பழையது சாப்பிட்டா நமக்கு பொருக்காது. இப்படி சிலர் உண்டு டிப்பார்ட்மெண்ட்டில்.

ஒரு அதிகாரி உதவித் தொகை வழங்கும் பொருட்டு பல லட்சம் பணம் வங்கி கணக்கில் புரண்டது. அரசு கணக்கு என்றாலும் இருப்புக்கு ஏற்ப வட்டி வரும். அதனை அவ்வப்போது எடுத்து அரசுக் கணக்கில்

செலுத்த வேண்டும். இவர் அதனை தன்னுடைய கணக்கில் வரவு வைத்துக் கொண்டுவிட்டார். அத்துடன் ருசி கண்ட பூனையாக மேற்கொண்டும் கொஞ்சம் கொஞ்சமாக தன் கணக்கில் வரவு வைத்துகொண்டார். தணிக்கையில் எப்படி தப்பித்தாரோ.

இது அவரது ஜீப் ஓட்டுனருக்கு தெரிந்துவிட்டது. அவரும் நமக்கேன் வம்பு என்றுதான் இருந்தார். அதிகாரியோ அரசாங்க வண்டியை நமக்கு கொடுத்ததால் அது நம்ம வண்டி என்று நினைத்துகொண்டு ஸ்தல யாத்திரைக்கெல்லாம் பயன்படுத்தி வந்தார். அதில் ஒருமுறை விபத்து ஏற்பட்டு வண்டி சேதம் ஆகிவிட்டது. அதனை அரசு பணிமனையில் ரிப்பேர் செய்ய எடுத்துச் செல்லும்படி ஓட்டுனருக்கு உத்திரவு போட்டார் அதிகாரி. ஓட்டுனரோ சேதத்திற்கு தாம் பொறுப்பேற்க மறுத்துவிட்டார். விளைவு. அதிகாரி சொந்த பொறுப்பில் ரிப்பேர் செய்ய வேண்டியதாகிவிட்டது.

அந்த கோபத்தில் இருவருக்கும் வாங்கல் வந்து விட்டது. ஒருவரை ஒருவர் மிஞ்ச முடியவில்லை. கடைசியில் ஊழல் வெளிவந்துவிட்டது.

பிரச்சனை பெரிதானதும் குற்றச்சாட்டு ஏற்படுத்தப்பட்டது. கையாடல் செய்த தொகைக்கு வட்டி போட்டு லஞ்சம் கொடுத்து வெளி வந்தார் அதிகாரி. அதனாலென்ன வேறு வழியில் வந்த பணம் அவரிடம்தானே இருந்தது. என்ன லாபத்தில் நஷ்டம். அவ்வளவுதான்.

# 18 நாங்கள் மட்டும் என்ன இளைத்தவர்களா?

பெரிய அதிகாரிகள்தான் வசூல் வேட்டை நடத்துவார்களா? நாங்கள் மட்டும் இளைத்தவார்களா என்பது சில தாசில்தார்களின் நடவடிக்கையிலிருந்து தெளிவாகும். இது தாசில்தார் பற்றியது. பழையகாலத்தில் தாசில்தார்கள் தமக்குக் கீழே வேலைபார்ப்பவர்கள் மூலம் மளிகை சாமான் முதற்கொண்டு துடைப்பம் ஈராக வசூல் செய்து குடும்பம் நடத்துவது சர்வசாதாரணம். அப்படி இண்டெண்ட் வைக்காத அதிகாரியைத்தான் கேவலமாக பார்ப்பர். அவருக்கு பட்டப்பெயர்கூட வைப்பர். அதிகாரி இண்டெண்ட் வைத்தால்தானே அதைக்கொண்டு தாமும் நாலு காசு பார்க்க முடியும் என்பது கீழே உள்ள வசூல்ராஜாக்களின் பாலிசி.

ஒரு தாசில்தார் ரொம்பவும் சின்னபுத்திக்காரர். அதற்காக அவருக்குப் பட்டப் பெயர்கூட வைத்துவிட்டனர். பெயரைச்சொன்னால் யாருக்கும் புரியாது அடைமொழியுடன் சொன்னால்தான் இன்னார் என்று தெரியும். அவ்வளவு ஜெகப் பிரசித்தம்.

ஒருநாள் காலையில் அவர் அலுவலகத்தில் வந்து உட்கார்ந்தார். தபால்கள் பிரிக்கும் பணி நடந்தது. பியூன் ஒரு கவரை எடுத்து அய்யா இது உங்க பெயருக்கு வந்துள்ளது என்று கொடுத்தார். தாசில்தார் பிரித்தார். அதில் ஒரு உபயோகித்த காண்டம் இருந்தது. அதிகாரிக்கு ஒரே அதிர்ச்சி. பக்கத்தில் இருந்தவர்கள் மூலம் அலுவலகம் பூராவும் தகவல் பரவிவிட்டது. ஆனாலும் சிறிது நேரம்தான் அதிர்ச்சி எல்லாம். அவர் பாட்டுக்கு ஒன்றுமே நடக்காததுபோல் இருந்துவிட்டார். சிலருக்கு கொஞ்சம் தோல் தடிமனாக இருக்கும் அவ்வளவுதான்.

இந்த நிகழ்ச்சிக்கு துண்டுகோல் நிகழ்ச்சி ஒன்று உண்டு. அதனைச் சொன்னால்தான் நடந்தது சரியா தப்பா என்று புரியும்,

அவ்வப்போது டி.எஸ்.ஓ.-விடம் மாத்திரைகள் பெயர் எழுதி வாங்கி அனுப்பும்படி கொடுப்பார் தாசில்தார். அது தலைவலி மாத்திரையானாலும் சரி பீ.பி. மாத்திரையானாலும் சரி. வாங்கிக்கொடுத்துவிட்டு இப்படி மாத்திரைக்குக்கூட செலவு வைக்கிறாரே என்று புலம்புவார் டீ.எஸ்.ஓ. ஒருநாள் இப்படி ஒரு மாத்திரை பட்டியல் வந்தது அவரிடம். இந்த மாத்திரைகளை வாங்கிவா என்று எதிரில் நின்றவரிடம் கொடுத்துவிட்டார். அவர் மட்டும் என்ன கைவிட்டா செலவழிப்பார். சீட்டை வாங்கியவருக்கு அதிர்ச்சி. அதில் காண்டம் தேவை என்று இருந்தது. தாம் அசிங்கப் படுத்தப்பட்டதாக நினைத்து டீ.எஸ்.ஓவிடம் சண்டை வளர்த்துவிட்டார் வந்தவர். அப்புறம்தான் தாம் அடிக்கடி வாங்கித் தந்ததில் இதுவும் ஒன்று என்று தெரிந்தது இவருக்கு. இப்படியெல்லாம் இண்டெண்ட் வைக்கிறானே இந்த ஆள் என்று வழக்கம்போல் புலம்பிவிட்டார். இதனை அறிந்த யாரோ ஒருவர்தான் இப்படி உபயோகித்த காண்டத்தை ஒரு கவரில் வைத்து தாசில்தாருக்கு அனுப்பிவைத்துவிட்டார். திருடனைத் தேள் கொட்டியதுபோல் பேசாமல் இருந்துவிட்டார் தாசில்தார்.

ஒரு தாசில்தார். ஆர்.டீ.ஓ. பி.ஏ.-வாக இருந்தார். அவர் தம்மை யோக்கியமாக காட்டிக்கொள்வார். அவன் இப்படி காசு வாங்குகிறான். இவன் அப்படி காசு வாங்குகிறான் என்று எப்போதும் புலம்புவார். அவனவன் சொந்த வேலையைத்தான் ஆபீஸ் போனில் டிரங்க்கால் போட்டு பேசுகிறான். என்னைப்பார் சொந்த வேலைக்கு ஆபீஸ் போனை உபயோகிக்கமாட்டேன் என்று பெருமைவேறு பேசுவார்.

ஆனால் வெறும் கையெழுத்து வாங்கிக்கொண்டு கண்டுகொள்ளாமல் போய்விட்டான் என்றும் புலம்புவார். அவரது எதிர்பார்ப்பு என்னவென்றால்

அவர் ‘வேண்டாம் வேண்டாம்’ என்பாராம். ஆனால் எதிராளி ‘இருக்கட்டும் இருக்கட்டும்’ என்று வற்புறுத்தி காசு கொடுக்கவேண்டுமாம். லஞ்சத்திலும் ஒரு கௌரவம்.

அவர் அலுவலகத்தில் இருந்துகொண்டு மதியம் தமது வீட்டிலிருந்து சாப்பாடு கொண்டு வருவதற்கு ஒரு ஆள் அனுப்பச்சொல்லி தம் நண்பருக்கு அலுவலகத் தொலைபேசியில் தகவல் சொல்வார். கொஞ்ச நேரம் கழித்து ஆள் போயாச்சா என்று கேட்பார். சாப்பாடு வந்ததும் மீண்டும் போன் செய்து நன்றி சொல்வார். ஆக அலுவலக போனில் மூன்று கால் போட்டு ஒருசாப்பாடு வந்தது பெரிதாகத் தெரியாது. ஏன்னா அவர் லோக்கல் கால்தான் போட்டாராம். அதுமட்டும் தப்பில்லையாம். இதுமாதிரி வாரம் மூன்று நாளாவது நடக்கும்.

இன்னொன்று அவரது உறவினர் ஒருவர் சீர்காழியில் இருந்தார். அவரிடம் பேச அலுவலக போனை உபயோகிக்க மாட்டாராம். அப்போதெல்லாம் டிரங்க் கால் போட்டுதான் பேசமுடியும். ஆனால் தமது லோக்கல் நண்பருக்கு போன் செய்து அவரது எண்ணில் சீர்காழிக்கு டிரங்க்கால் புக் செய்துகொள்வதாக தெரிவிப்பார். அடுத்து அவரது நம்பரைச்சொல்லி டிரங்க் கால் புக் செய்து அதனை ஆபீஸ் எண்ணில் தரச்சொல்வார். தொடர்ந்து கால் வந்ததா என்று இரண்டொரு தடவை கேட்டுவிடுவார். அப்புறம் எக்ஸ்சேஞ்சை வேறு தொல்லைப்படுத்துவார். அங்குள்ள நண்பாரிடம் விசாரிப்பார். கடைசியில் ஒருவழியாகப் பேசிமுடித்துவிட்டு மீண்டும் நண்பருக்கு போன்போட்டு நன்றி சொல்வார். இப்படியாக நேரடியாக ஆபீஸ் போனில் சீர்காழிக்கு பேசியிருந்தால் அதிகபட்சம் மூன்று ரூபாய் ஆகியிருக்கும். அதற்குப் பதிலாக பத்து லோக்கல்கால் போட்டு முப்பது ரூபாய் செலவழித்திருப்பார். இப்படி ஒரு பசுத்தோல் போர்த்திய புலியைப் பார்த்திருக்கிறீர்களா.

ஒரு அதிகாரி வந்து சேர்ந்தார். அவருக்கு என்று தனி

இடம். அலுவலகம் அமைதியாக நடந்துகொண்டிருக்கும். திடீரென்று ‘முத்தமிடும் சத்தம்’ கேட்கும். முதலில் சற்று திகைத்தோம். தினமும் கேட்கவே சத்தம் வந்த இடத்தை ஆராய்ந்தால் அது அதிகாரி இருந்த இடத்திலிருந்துதான் வந்தது. அங்கே அவர் மட்டும்தான் தனியாக இருந்தார். ஒன்றும் புரியவில்லை. அடிக்கடி முனகலாக புலம்பும் சத்தமும் வந்துகொண்டிருந்தது. பின்னர்தான் தெரிந்தது. அவ்வப்போது அதிகாரி தனியே சூழ் கொட்டிக்கொண்டிருந்தார். நன்றாக வசூல் செய்து வசதியாக இருந்தவருக்கு இந்தமாதிரி வறண்ட அலுவலகத்தில் கொண்டுவந்து போட்டால் என்னாகும். கடைந்த மோரிலாவது வெண்ணை தேடிப்பார்க்கலாம் என்றால் அலுவலக தலைவர் சப்கலெக்டர். அவரை வைத்துக்கொண்டு மீன் பிடிப்பது எங்கே. அவ்வப்போது இப்படிப் புலம்பல் சத்தம் என்னவென்கிறீர்களா “ உச்... ... ஒண்ணுமே இல்லை... ... ஒருத்தனும் வரலை” இப்படியாகப்பட்ட புலம்பல்தான் அது. சற்று ஆழ்ந்து கவனத்தால்தான் கண்டுபிடிக்க முடியும். லோசாக வாய் விட்டு புலம்பினதால் பலவகை சந்தேகங்கள் வந்துவிட்டது.

ஒரு அதிகாரி இருந்தார். அப்போது நெல் கடத்தல் வேட்டை மும்முரமாக இருந்தது. தினமும் ரெய்டு போகவேண்டும் என்று கெடுபிடி. இவர்களுக்கா டெக்னிக் தெரியாது. கடத்தல் மன்னர்கள் தொழில் பாதிப்பு இன்றி நெல் கொண்டுபோகவும் வேண்டும். நாமும் ரெய்டு போகவேண்டும். இது பல அதிகாரிகள் செய்யும் டெக்னிக்தான்.

கடத்தல்காரர்கள் முன்னதாக அதிகாரியைக் கண்டுகொண்டுவிடுவர். அதிகாரி அன்று ரெய்டு போகமாட்டார். அல்லது அந்த லாரிபோகும் பக்கம் ரெய்டு போகமாட்டார். இப்படி ஒரு ஏற்பாட்டை செய்துகொண்டு வியாபாரம் சுமுகமாக நடந்தது. அவர்களுக்கு நினைப்பு. இது தமக்கே தெரிந்த டெக்னிக் என்று. ஆனால் அது அனைவருக்கும் தெரிந்த பகிரங்க ரகசியம்.

இப்படிப்பட்ட நிலையில் கலெக்டர் அதிகாரியை ஒரு

பிடி பிடித்துவிட்டார். உங்கள் செயல்பாடு திருப்தியில்லை என்று. தாம் தினமும் ரெய்டு போவதாகவும் தாம் ஒரு பக்கம் போனால் வேறு பக்கம் கடத்தப்பட்டு விடுவதாகவும் சமாளித்துப் பார்த்தார். கலெக்டருக்கென்ன இவர்களின் தில்லாலங்கடி பற்றி தொரியாதா என்ன. பிடிபிடியென்று பிடித்துவிட்டார். பார்த்தார் அதிகாரி வருவாய் ஆய்வாளர்களைக் காவு கொடுத்துவிட்டார். அவர்கள் இரவு நேரத்தில் ரெய்டுபோனால் கட்டுப்படுத்தலாம் என்று போட்டுக்கொடுத்து அந்த நேரத்தில் தப்பிக்கொண்டார்.

இது வருவாய் ஆய்வாளர்களுக்குத் தெரிந்தது. அந்த நேரத்தில் வேலைபார்த்த வருவாய் ஆய்வாளர்கள் எல்லாரும் ஒருநட்பு வட்டத்தைச் சேர்ந்தவர்கள். அனைவரும் கூடி திட்டம் போட்டனர். அதிகாரி எந்தப் பக்கம் போகிறாரோ அதற்கு எதிர்பக்கத்தில் கிராம சிப்பந்திகளை அழைத்துக்கொண்டு கூட்டணியாக செயல்பட்டு வண்டிகளைப் பிடித்து அலுவலகம் கொண்டுவர ஆரம்பித்துவிட்டனர். அப்புறம் என்ன. அதிகாரி இதென்னடா வேலியில் போகிறதை எடுத்து வேட்டியில் விட்டுக்கொண்டோமே என்று பரிதவித்தார்.

ஒரு அதிகாரி வெளிப்படையாகவே “காசு வாங்காமல் கையெழுத்துபோடுவது அதர்மம்” என்பார். தன் கையெழுத்துக்கு அப்போதுதான் மதிப்பு இருக்குமாம். இல்லையென்றால் தம்மிடம் இலவசமாக பெற்றுச் செல்லும் சான்றுகள் உத்திரவுகள் போன்றவற்றை தொலைத்துவிட்டு அதுதான் இலவசமாக கிடைக்கிறதே என்று மீண்டும் வந்து நிற்பராம். சரி கையெழுத்து போடத்தானே உங்களுக்கு சம்பளம் கொடுக்கிறார்கள் என்றால் என்ன சொல்வார் தெரியுமா அது சர்வீஸ் கமிஷண் தேர்வில் பல ஆயிரம் பேருக்கு மத்தியில் நான் பாசாகியிருப்பதற்காக. கையெழுத்து போடுவதற்காகவா என்பார் மகானுபவன்.

ஒரு வகையில் அவரது பாலிசி சரிதானோ என்று சில

சமயம் நடந்த சந்தர்ப்பங்கள் உணர்த்தியிருக்கின்றன. நேற்று சான்று வாங்கிப் போன ஒருவர் இன்று மீண்டும் வந்து நிற்பார். நேற்றுதானே வாங்கிச் சென்றீர். இன்று என்ன என்று கேட்டால் “அய்யா நான் நேற்று பஸ்சில் இடம் பிடிக்க என் பையை ஜன்னல் வழியாக போட்டேன். காணாமல் போய்விட்டது. அதில் வைத்திருந்த சான்றும் காணாமல் போய்விட்டது” என்பார். நாள் முழுவதும் காத்திருந்து காசும் கொடுத்து, ‘கடன்காரன்போல் காத்திருக்கிறாயே’ என்று திட்டும் வாங்கிக்கொண்டு சான்று பெற்றிருந்தால் இவ்வளவு அலட்சியம் இருக்குமா. அந்த சான்றுக்கு தனி மதிப்பல்லவா ஏற்பட்டிருக்கும் பணம் வைக்கும் இடத்தில் அதனையும் வைத்து பாதுகாத்திருப்பார் அல்லவா.

நான் ஆதி திராவிடார் நலத் தனி வட்டாட்சியராக இருந்தபோது சில ஆசிரியர்கள் தங்கள் சம்பள சான்று வழங்கக்கேட்டு மனுகொண்டுவருவர். சென்ற மாதமும் வாங்கினீர்களே என்றால் ‘இருக்கட்டுங்க அய்யா இப்ப வேறு காரணம்’ என்பர். முதலில் எனக்கு காரணம் புரியவில்லை. அப்புறம்தான் தெரிந்தது. அதற்கு முன்பெல்லாம் சம்பள சான்று தேவையென்றால் அதற்காக பக்கத்துக் கடையில் இரண்டு படிவங்கள் வாங்கிக்கொண்டு அதற்கு ஒரு மனுவும் எழுதி அத்துடன் ரூபாய் இருநூறு தட்சணையும் வைத்து கொண்டுவந்து தந்தால் இரண்டு தினங்களில் தாசில்தார் ஒப்பம் பெற்று தரப்படுமாம்.

நான் வந்தபின்னர். ஒரு மனுமட்டும் எழுதிக் கொண்டுவந்தால்போதும். அதனைப் பெற்றதும். வழங்கவும் என்று எழுதி தட்டச்சரிடம் கொடுத்துவிடுவேன். தட்டச்சர் கணிணியில் அதற்கான பட்டனைத் தட்டி நகல் எடுத்துக் கொடுத்துவிடுவார். நான் ஒப்பம் செய்து கொடுத்ததும். அதனை உரியவரிடம் கொடுத்து ஒப்பம் பெற்றுக்கொள்வார் தட்டச்சர். மனு கொடுத்ததுமுதல் அவர் சான்று பெறுவது வரையிலும் ஓரிரு நிமிடங்கள் மட்டுமே ஆகும். அந்த

நேரத்திற்குள் அவர் ஒரு டீயைக்கூட குடித்து முடித்திருக்கமுடியாது. இப்படி ஒரு டீக்கு கூட செலவில்லாமல் சான்று கிடைத்தால் சும்மா இருப்பரா. பாவம் ஆபீசில் சுற்றிக்கொண்டிருந்த சான்று வாங்கிக்கொடுக்கும் வியாபாரிகள்தான் பாதிக்கப்பட்டனர். இப்படி அவசரம் அவசரமாக காரியம் செய்து கொடுத்தால் அப்புறம் நம் கையெழுத்துக்கு மதிப்பு எங்கிருந்துவரும்.

இந்த இடத்தில் எனது தட்டச்சரைப்பற்றி கட்டாயம் சொல்லவேண்டும். அவர் தற்காலிகப் பணியாளராக முதல் முதலாக என்னிடம் பணியில் சேர்ந்தார். அதற்கு முன்னர் அவர் எந்த ஒரு அலுவலகத்தையும் மழைக்கு ஒதுங்கும் நிமித்தமாகக்கூட நாடியது இல்லை. ஆனால் வேலை கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தாலும். நேர்மையாகப் பணிபுரியவேண்டும் என்ற குறிக்கோளினாலும், (கம்ப்யூட்டரை அவர் தொட்டுப் பார்த்ததுகூட கிடையாது). கிட்டத்தட்ட ஒரு மாதத்திற்குள்ளாகவே வேலைகளை கற்றுக்கொண்டார். ஆசிரியர்கள் ஜி.பி.எப். கடன் கேட்டுவந்தால் அதனை சரிபார்த்து ஐந்து நிமிடத்திற்குள் என் மேசைக்கு அனுப்பிவிடுவார். நான் ஒப்புதல் தந்த அடுத்த ஒரு நிமிடத்திற்குள் பட்டியல் தயார் செய்யப்பட்டு என் மேசைக்கு வந்துவிடும். அதற்காக நான் கணிணியில் ஒரு புரோகிராம் செய்து கொடுத்திருந்தேன். அதனை நன்கு புரிந்துகொண்டு செய்தார். ஒரு நாள் கூட நான் அவரிடம் ஏன் இதனைச் செய்யவில்லை என்று கேட்டதே கிடையாது. அவர்தான் திருமதி லட்சுமி. தற்போது அவர் சர்வீஸ் கமிஷன் தேர்வில் வெற்றிபெற்று வேறு துறையில் பணிபுரிகிறார். அந்தத் துறைக்குக் கிடைத்த மாணிக்கம் அவர். அவரை வைத்து வேலைவாங்கும் அதிகாரி உண்மையில் புண்ணியம் செய்தவர்தான். அவர் விட்டுப்போனது வருவாய்த் துறைக்கு உண்மையில் இழப்புதான்.

இது தலைப்புக்கு ஏற்காத ஒரு வித்தியாசமான அனுபவம்.

தாசில்தாருக்கு திடீரென்று தகவல் வந்தது “தினமும் குறிப்பிட்ட இடத்திலிருந்து மணல் கடத்துகிறார்கள். ஆனால் நீங்கள் அதனை விட்டுவிட்டு வேறு இடத்தில் போய் ரெய்டு செய்கிறீர்கள்” என்று. நாங்கள் அடிக்கடி அந்த கிராமத்திற்கே போய் பல முறை வண்டி பிடித்திருக்கிறோம். பிடித்தால் பிடித்ததுதான் நேராக அலுவலகத்தில் கொண்டு வந்து நிறுத்திவிடுவோம். காசுவாங்கிக்கொண்டு விடும்பேச்சே கிடையாது. மாதத்திற்கு ஐந்து அல்லது ஆறு வண்டிகள் கட்டாயம் பிடித்துவிடுவோம். அந்த ரெய்டுகளுக்கெல்லாம் நானும் கட்டாயம் போவது வழக்கம். மற்ற வட்டங்களிலிருந்து அலுவலக நண்பர்கள் சந்திக்கும்போது தினமும் உங்கள் பெயர் பேப்பரில் வருகிறதே என்பர். அவ்வளவு பிரசித்தம்.

அப்படிப்பட்டவருக்கு ரோஷம் வந்துவிட்டது. நான் துணை வட்டாட்சியராக இருந்தேன். என்னையும் இன்னும் ஒரு துணை வட்டாட்சியர், மூன்று நான்கு ஓ.ஏக்கள் என்று ஜீப்பில் நிரப்பிக்கொண்டு இரவு பத்துமணிக்குப் புறப்பட்டு பதினோரு மணிக்கு மேல் போய் காத்திருந்தோம். ஒரு வண்டிகூட வரவில்லை. தகவல் போயிருக்க வாய்ப்பில்லையே என்று ஆற்றுக்குள் இறங்கியும் ஒரு சுற்று தேடிவிட்டோம். ஒன்றும் தட்டுப்படவில்லை. திடீரென்று நாங்கள் நின்றிருந்த இடத்திற்கு அருகில் ஒரு சரிவான பாதை தென்பட்டது. அதில் சிரம பரிகாரத்திற்காக விளையாட்டுபோல் இறங்கிப்போனால் அங்கே ஒரு டிராக்டர் மணல் ஏற்றிக்கொண்டு புதர்களுக்குள் நின்றிருந்தது. அப்படி ஒரு துறை இருப்பது வெளியே தெரியாது. அதில்தான் தினசரி மணல் கடத்தியிருக்கிறார் பேர்வழி. மாட்டியவரை விடுவோமா. டிராக்டர் டிரைவரை மிரட்டி வண்டியை ஆற்றிலிருந்து ரோட்டுக்கு கொண்டு வந்து நிறுத்தினோம்.

கீழே இறங்கியதுதான் தாமதம் எங்களுடன் வந்த ஒரு ஓ.ஏ. விட்டார் ஒரு ‘பளார்’. அவ்வளவுதான் அந்த டிரைவர் பிடித்தார் ஓட்டம் பக்கத்திலிருந்த மரவள்ளிக் காட்டின் ஊடாக. எதையும் சட்டை செய்யாமல் சிலைபோன்று வண்டியில்

உட்கார்ந்திருந்த முக்காடு போட்ட ஒரு ஆளைப் பிடித்துக்கொண்டோம். அவர்தான் அந்த வண்டியின் சொந்தக்காரரர். அவருக்கு அர்ச்சனை விழுந்தது.

டிரைவர் ஓடிப்போனதில் கோபம் எல்லாருக்கும். சுமார் அரை மணிநேரப் போராட்டத்தின் பின் ஓனர் டிரைவரைக் கூவிக்கூவி அழைத்தார். டிரைவர் சற்றே பதுங்கிப்பதுங்கி பயத்துடன் தலை நீட்டினார். ஓ.ஏ சும்மா இருந்திருக்கக்கூடாதா. ஓடிப்போய் பிடிக்கப் பாய்ந்தார். அவ்வளவுதான். டிரைவர் கண்மண் தெரியாமல் விட்டார் சவாரி.

அப்போது இரவு மணி பன்னிரண்டு இருக்கும். நேரம் ஆக ஆக எப்படி எப்படியோ அழைத்தும் ஆள் வரவில்லை. ஓனர், தாசில்தார் ஓ.ஏ. எல்லாரும் “ராசு அடிக்கமாட்டேண்டா வாடா” என்று கெஞ்சியும் கொஞ்சியும் கூப்பிட்டும் ஒரு சத்தமும் காணோம். இடமோ கும்மிருட்டுக் காடு.

அந்தப் பகுதியில் எல்லாம் ஆங்காங்கே பெரிய கிணறு வெட்டி அதில் போர் இறக்கி பாசனம் செய்வர். கிணற்றுக்கு கைப்பிடிச் சுவர் எல்லாம் கிடையாது. இருட்டில் ஓடிப்போனவர் ஏதாவது கிணற்றில் விழுந்திருந்தால் கபால மோட்சம்தான். எங்களுக்கு பயம் பிடித்துக்கொண்டது. என்ன செய்வது என்று புரியவில்லை. டிராக்டர் ஓனர் எங்களுக்கு ஆறுதல் சொன்னார். பொழுது விடியும்நேரம். கீழ்வானம் வெளுக்க ஆரம்பித்துவிட்டது. அத்துவானக் காட்டில் மெக்கானிக் யாரும் இல்லை. டிராக்டருக்கோ சாவி இல்லை. எப்படி எடுத்துச்செல்வது என்று தெரியவில்லை. விடிந்துவிட்டால் மக்கள் கூடிவிடுவர். வண்டியை எடுத்துவருவது கஷ்டம்.

திடீரென்று ஒரு ஐடியா வந்தது. முன்பு ஒரு முறை டிராக்டரை ஒருவர் ஒரு ஸ்குரூ டிரைவரால் ஸ்டார்ட் செய்ததைப் பார்த்திருக்கிறேன். அதைச் சொன்னதும். எப்படியோ தேடி ஒரு இரும்புக் கம்பி சம்பாதித்தோம். அதனைக்கொண்டு செல்ப் மோட்டாரின் இணைப்பை தொட்டு ஒருவழியாக ஸ்டார்ட் செய்தோம். அடுத்து ஓட்டி வருவது யார் என்று பிரச்சினை. அங்கே இங்கே தேடி உழவு ஓட்ட

ஏற்பாடு செய்துகொண்டிருந்த ஒரு டிரைவரைப் பிடித்து டிராக்டரை ஆபீசுக்குக் கொண்டுவந்து சேர்த்தோம்.

இரண்டு மூன்று தினங்கள் வரை யாராவது கிணற்றில் விழுந்து செத்தார் என்ற சேதி வருகிறதா என்று பயந்துகொண்டே இருந்ததை என்ன சொல்ல.

# 19 அதிகாரியின் கிறுக்குத் தனங்கள்

டான் குவிக்சாட் என்று ஒரு கேரக்டர். அவன் செய்யும் செயல்கள் எல்லாம் படித்தால் வயிறு குலுங்கும். அப்படிப்பட்ட ஒரு கேரக்டரைப் பற்றித்தான் இது.

ஒரு அதிகாரி. கோட்ட அதிகாரியின் அலுவலக வளாகத்திலேயே அவருக்கு ஆபீஸ். ஆளு கொஞ்சம் 'ஷோக்' பேர்வழி அடிக்கடி ஆசிரியர்கள் தங்கள் கோரிக்கைகளுக்காக அவரைப் பார்த்து முறையிட வருவர். கோரிக்கைகளை உடனுக்குடன் பரிசீலித்து உத்திரவிட்டால் ஏன் வந்து முறையிடப் போகின்றனர்?

வருபவர்கள் தமது பார்சனாலிட்டியைப் புகழ்ந்து பேசவேண்டும் என்பதுதான் அவருக்கு ஆசை. தாம் ஒரு அதிகாரி என்று தம்மை எண்ணிக்கொள்ளமாட்டார். எல்லாரிடமும் சகஜமாகப் பேசுவார். புகழ் ஒன்றே அவரது குறிக்கோள். அலங்காரம் ஒன்றே அவரது லட்சியம்.

ஒரு மணிநேரத்திற்கு ஒரு முறை தமது இருக்கையிலிருந்து தடாபுடாவென்று எழுவார். ஒரு டம்ளர் தண்ணீர் எடுத்து தன் முகம் கழுவிக்கொள்வார். தூக்கக்கலக்கம் என்று எண்ண வேண்டாம். அலங்காரத்திற்கு முதல்படி அது. அடுத்து தமது இருக்கையின் பின்னாலேயே வைக்கப்பட்டிருக்கும் சீப்பு கண்ணாடி பவுடர் இத்தியாதிகள் பயன்படுத்தப்படும். அவர் சீவிச்சீவியே அந்த சீப்பு கால்வாசி தேய்ந்துவிட்டது. இருக்கிற வழுக்கை மண்டையில் இல்லாத முடியை வளைத்து வளைத்து சீவி சுருட்டி பழைய காலத்து ஜெய்சங்கர் ஸ்டைலில் முன்னால் சுருட்டையை வரவழைப்பார். அப்படியே திரும்பி தனது இருக்கையில் உட்கார்ந்துகொண்டு எதிரில் நிற்பவரின் கோரிக்கையை விசாரிப்பார்.

வருபவருக்கு சிரிப்பு கொப்பளிக்கும். கொஞ்சம் பழகிவிட்ட சிலர் அய்யா இப்பதான் நீங்க ‘அந்தஸ்த்தா இருக்கீங்க’ ‘இளமையா இருக்கீங்க’ என்று ஐஸ் வைப்பர்.

அலுவலகத்தில் நான்கு ஐந்து கிளார்க்குகள் இரண்டு ஆசிரியர்கள் மூன்று பியூன்கள் என்று பட்டாளமே எப்போதும் இருக்கும். யாரும் எங்கேயும் போகக்கூடாது அலுவலக வேலை சுமாராக நடக்கும், புகழ் கோஷம் சிறப்பாக நடக்கும். பியூன்கூட அவரைப் புகழ்ந்து பேசி நையாண்டி செய்யும் அளவிற்கு நிர்வாகம் இருக்கும். அதிலும் ஒரு கிளார்க்கு கேலி பேசுவதில் பட்டம் பெற்றவர்.

அலுவலகத்தில் டீ காப்பிக்கு பஞ்சமே இருக்காது. யாராவது ஒருவர் முறையீடு செய்ய வருபவரின் தலையில் இண்டெண்ட் வைப்பார். பெரும்பாலும் தாசில்தாரே வாய்விட்டு கேட்பார் ‘தாசில்தாருக்கு டீ கூட கிடையாதா’ என்று.

சில சமயம், அதிகாரி மூடு அவுட்டாக இருப்பார். அப்போது பார்த்து யாராவது கோரிக்கை வைத்தால் கொஞ்சம் சிடுசிடுப்பார். வந்தவரும் சற்று உரச ஆரம்பிப்பார். உடனே நமது கிளார்க்கு வந்தவரிடம் “என்ன எல்லா அதிகாரியும் எங்க அய்யா மாதிரி என்று நினைத்துக்கொண்டாயா. கட்டபொம்மன் வசனம் எழுதியது யார் தெரியுமா? அய்யா திறமை என்ன தெரியுமா?” என்று அடித்துவிடுவார். அவ்வளவுதான். அதிகாரி முகத்தில் புன்னகைதான். வந்தவர் என்னவோ ஏதோ என்று போய்விடுவார். உடனே அதிகாரி தமது பாக்கெட்டிலிருந்து பணம் எடுத்துக்கொடுத்து எல்லாருக்கும் டீ வாங்கிவரச் சொல்வார். சுமார் பத்து டீ வந்துவிடும் அதிகாரி செலவில். ‘டீ’ வேண்டும் என்றால் அதிகாரியை உசுப்பேற்றிவிட்டு சாதித்துக் கொள்வது வழக்கமாகிவிட்டது. பெரும்பாலும் அவரது வழக்கு பற்றிதான் பேச்சு இருக்கும்.

அது என்னவென்றால், அவர் ரேடியோ நாடகம் எழுதுவதில் வல்லவர், குடும்பமே நாடகம் எழுதி அதனைத் தாமே பதிவு செய்து அனுப்புதல், கதை

எழுதுதல் என்று ஏகப்பட்ட எழுத்துலக திறமை அவருக்கு இருந்தது. இந்த நிலையில் அவரே சொன்ன, காட்டிய ஆதாரங்கள்தான் இவை.

1. வீரபாண்டியக் கட்டபொம்மன் திரைப்படத்திற்கான கதை வசனம் அவரே எழுதி அதில் சிவாஜிகணேசன்தான் கட்டபொம்மனாக நடிக்கவேண்டும் என்று எல்லாம் குறிப்பிட்டு பல திரைப்படக் கம்பெனிகளுக்கு எடுத்துச்சென்று காண்பித்துள்ளார். ஆனால் எல்லாரும் கதை நன்றாயில்லை. சிவாஜிக்கு ஏற்ற ரோல் இல்லை என்றெல்லாம் சிலதினங்களில் திருப்பிக் கொடுத்துள்ளனர். இந்நிலையில் ஒருநாள் வீரபாண்டியக் கட்டபொம்மன் திரைப்படம் வெளிவந்துவிட்டது. பார்த்தால் அவர் எழுதிய வசனம் அடிபிறழாமல் அப்படியே வந்துள்ளது. சிவாஜி கணேசனே நடித்துள்ளார். இவருக்கு வந்ததே கோபம். நேராக கம்பெனியில் போய் வாதாடியுள்ளார். ஒன்றும் நடக்கவில்லை. ஒரு வக்கீலை அணுகியுள்ளார். அவரோ இப்படிப்பட்ட வழக்குகளை நடத்துபவர். தாம் வழக்கை ஜெயித்துத் தருவதாகவும், ஆனால் நஷ்டஈட்டில் பாதியை தமக்கு பீசாகத் தரவேண்டும் என்றும் கேட்டுள்ளார். இவருக்கு மனம் இல்லை. வேறு பல வக்கீல்களைப் பார்த்துவிட்டு இவரது எதிர்பார்ப்புக்கு சரியில்லாததால் விட்டுவிட்டார். ஆனால் வழக்கு மனு, நோட்டீஸ் என்று ஒரு கேஸ் கட்டு எப்போதும் கையுடன் வைத்திருப்பார்.

2. ஆற்றங்கரை அழகி என்ற தலைப்பில் ஒரு நாடகம் எழுதி பாண்டிச்சேரி வானொலியில் இருமுறை ஒலிபரப்பாகியுள்ளது. அதையே ஆனந்தவிகடன் போட்டிக்கு அனுப்பி, தேர்வு செய்யப்படாமல் திருப்பி அனுப்பப்பட்டுள்ளது. ஆனந்தவிகடன் ஆபீஸ் முத்திரை இத்தியாதிகளுடன் அவரிடம் நகல் இருந்தது. அதனையும் எடுத்துச் சென்று பல கம்பெனிகளை பார்த்துள்ளார். ஆனால் யாரும்

சீண்டவில்லை. ஒருநாள் இருகோடுகள் என்று திரைப்படம் வெளியாகியுள்ளது. பார்த்தால் வசனம் உட்பட எல்லாம் இவரது எழுத்து. நேராகப் போய் மோதிப்பார்த்தார். கோர்ட்டில் பார்த்துக்கொள் என்று சொல்லிவிட்டனர். அதிலும் வக்கீலுடன் மோதல். அப்படியே விட்டுவிட்டார். அந்த கேஸ்கட்டும் கைவசம்.

3. அடுத்து ஒரு கதை எடுத்துச்சென்று பல கம்பெனிகளுக்கும் நடந்து கடைசியில் எம்.ஜி.ஆர் அவர்களைப் பாடுபட்டுப் பார்த்து காண்பித்துள்ளார். அவர் கதையைப் படித்துப் பார்த்துவிட்டு கதை மிக நன்றாக இருப்பதாகவும், தாம் அந்த நேரத்தில் படம் எடுக்கும் நிலையில் இல்லாததால் வேண்டாம் என்றும் சொன்னதுடன் இவரது கதையைக் கேட்டுவிட்டு முடிந்தால் நீங்களே படம் எடுங்கள் யாரையும் நம்பி ஏமாறாதீர்கள். திரைப்பட உலகம் மோசமாக இருக்கிறது. உங்களுக்கு நம்பிக்கை-யானவரென்றால் மட்டும் கதைகளைக் கொடுங்கள் என்று சொல்லியிருக்கிறார். அவருக்காக எழுதிய கதையும் எப்போதும் கையில் வைத்திருப்பார். எம்.ஜி.ஆரின் அறிவுரையை அடிக்கடி சொல்லிக் காண்பிப்பார்.

4. இவ்வளவுக்குப் பின்னரும் வீட்டிலேயே நாடகம் தயார்செய்து தாமே டேப்பில் பதிவுசெய்து வானொலி நிலையத்திற்கு அனுப்புவதை விடவில்லை. அவரது நாடகத் திறமையை குறைத்து மதிப்பிட முடியாது. ஆதாரங்கள் எப்போதும் கைவசம் வைத்திருப்பார். சற்று பழகிவிட்டாலும். அவரிடம் எல்லாவற்றையும் காண்பித்து பெருமை தேடிக்கொள்வார். வந்தவர் நையாண்டி செய்தாலும் அதனை புகழ்ச்சியாக ஏற்றுக்கொள்ளும் குணம் படைத்தவர்.

போதாதா இப்படிப்பட்ட அப்பாவிதானே வைத்து அடிப்பதற்கு எங்களுக்குத் தேவை. அவ்வப்போது

பயன்படுத்திக்கொள்ளத் தவறுவதில்லை.

ஒருநாள் அலுவலகத்திலுள்ள அனைவருக்கும் ஒரு அன்புக் கட்டளை. “எல்லாரும் நாளை காலை வீட்டுக்கு வரவேண்டும். டிபன் எங்கள் வீட்டில்தான்” என்று. மறுநாள் பத்து ரூபாய் டிபன் சாப்பிட இருபது ரூபாய் பஸ்டிக்கட் எடுத்துக்கொண்டு எட்டு மணிக்கெல்லாம் ஆஜராகிவிட்டோம். போகும்போதே சம்பளப் பட்டியல் மற்றும் கையெழுத்து வாங்கவேண்டிய கோப்புகளையும் கொஞ்சம் அள்ளிக்கொண்டு போய்விட்டோம்.

அன்று பார்த்து அடைமழை ரிக்கார்டுகளை எல்லாம் நனையாமல் பெருமுயற்சியுடன், பெரும் அல்லாலலுடன், கொண்டுபோனோம். அங்கேபோனால் எங்களுக்கு மட்டும்தான் உள்ளே அனுமதி.. “இன்று ரிலாக்ஸாக இருக்கவேண்டும். கோப்பு எல்லாம் ஆபீசில்தான்” என்று செக்யூரிட்டி செக்கில் கோப்புகள் வெளியேற்றப்பட்டுவிட்டன.

அன்போடு வைத்த உணவை குறை சொல்லக்கூடாது. இருந்தாலும் சொல்லாமலும் இருக்க இயலவில்லை நமது நகைச்சுவை உணர்வு. காலை டிபனுக்கு அப்பளமும் தொட்டுக்கொள்ள குருமாவும் வைத்தார் அவரது துணைவியார். இதென்னடா புதுமையா இருக்கு ரெண்டு இட்லிகூட இல்லையே என்று எங்களுக்கு ஏக்கம். அவரது துணைவியார் மற்றும் மகன் மகள்கள் அடிக்கடி அலுவலகத்திற்கு வந்துள்ளதால் அவரது குடும்பமே எங்களுக்கு அறிமுகம்.

துணைவியார் “இந்த மனிதர் படுத்திய அவசரம் பூரியெல்லாம் அப்பளம்போல் ஆகிவிட்டது” என்றார் வழிசலாக. ஒருவழியாக டிபன் முடிந்து வந்து ஹாலில் குழுமினோம்.

தன் மகன் மகளை அழைத்தார். “அந்த ‘ஒத்தல்லோ’ நாடகத்தை போட்டுக்காட்டு” என்றார். டேப்ரிக்கார்டர் வந்தது. ஆன் செய்தனர். பின்னணி இசை வந்தது. தீடீரென்று அண்ணன் தங்கையைப் பார்த்து “அன்பே ஆருயிரே” என்று வசனம் பேசினார்.

எங்களுக்கு ஒன்றும் புரியாத அதிர்ச்சி. பின்னென்ன அண்ணனும் தங்கையும் அருகருகில் நின்றுகொண்டு காதல் வசனத்தை ஆக்ஷனுடன் தீடீரென்று ஆரம்பித்தால் என்னசெய்வது. நாங்கள் டேப்ரிக்கார்டரில் போட்டுக் காட்டப்போகிறார்கள் என்று நினைத்திருந்தோம். டேப்ரிக்கார்டர் பி.ஜி.எம்-காகத்தானாம். என்ன இருந்தாலும் நேருக்கு நேர் பார்த்ததில் எல்லாருக்குமே அதிர்ச்சிதான்.

அடுத்து ஒரு நாடகம் பதிவு செய்ய ஏற்பாடு செய்திருந்தார்போலும். எங்களுக்கும் வசனம் கொடுத்தார். ஆளைவிடுடா சாமி என்று எவ்வளவோ சொல்லியும் சின்ன சின்ன ரோல்தான் என்று தலையில் கட்டிவிட்டார். ஒருவருக்கு கூட்டத்தில் வரவேற்பு, ஒருவருக்கு வழிமொழிதல் என்று எனக்கும் ஒரு ஓரத்தில் நின்று வெண்சாமரம் வீசும் காட்சி போன்று ஒன்று. ஆனால் எங்களுக்கெல்லாம் ஒரே குழப்பம். நாடகம் என்றால் எல்லாரும் சுற்றி உட்கார்ந்திருக்கிறோம். வேறு எதுவும் தென்படவில்லை.

சற்றைக்கே ஒரு பெரிய பெட்டி போன்ற டேப்ரிக்கார்டர், ஆம்ப்ளிபையர், பி.ஜி.எம்முக்கு ரிக்கார்டு பிளேயர், மைக்குகள் என்று கொண்டுவந்து வைக்கப்பட்டதும்தான் தெரிந்தது மனிதர் ஒரு மினி ரிக்கார்டிங் தியேட்டரையே வைத்திருக்கிறார் என்பது. அவரது கலை ஆர்வம் எவ்வளவு ஆழமானது என்பது அப்போதுதான் புரிந்தது.

எங்களுக்கோ பகல் சாப்பட்டிலிருந்து எப்படி தப்பிப்பது என்று ஒரே துடிப்பு. ஒருவழியாக ரிக்கார்டிங் முடிந்தது. உண்மையில் இசை ஏற்ற இறக்கங்களுடன் மிக நன்றாகவே பதிவுசெய்திருந்தார். ஒருவழியாக விடைபெறும் வேளை வந்தது. விடைபெறும் வேளையில் அனைவரது அன்பும் எங்களை மிகவும் கவர்ந்தது.

ஆனாலும் ஒரு நெருடலை ஏற்படுத்தினார் அவரது மனைவி. ஒரு தாயின் எதிர்பார்ப்பு ஆதங்கம் எல்லாம் தன் பிள்ளைகளைத்தான் சுற்றிவரும் என்பதற்கு ஒரு உதாரணம் அது.

இல்லத்தரசியார் சொன்னது. அதிகாரியின் மகளோ நல்ல கருப்பு. நல்ல குண்டு வேறு. இப்படிப்பட்டவருக்கு கணவன் கிடைப்பது எவ்வளவு அரிது என்பதை இந்த சமூகத்தின் அவல நிலையின் கண்ணோட்டத்தில் சொல்கிறேன்.

பல வழிகளிலும் தேடி பலரும் நிராகாரித்த வேளையில் ஒரு குடும்பத்தினர் வந்து பெண்பார்த்துவிட்டு பெண்ணைப் பிடித்திருக்கிறது என்று சொல்லியுள்ளனர். எல்லாருக்கும் ஒரு சந்தோஷம். கடவுளுக்கு ஸ்தோத்திரம் சொல்லியுள்ளனர். வழியனுப்பச் சென்ற நம் அதிகாரி அவர்களிடம் 'தங்கள் குடும்பம் கலைக் குடும்பம் என்றும் திருமணத்திற்குப் பின்னரும் கலைத்துறையில் ஈடுபட அனுமதிக்கவேண்டும்' என்றும் கோரிக்கை வைத்திருக்கிறார். அவர்களும் அதற்கென்ன ரொம்ப சந்தோஷம் என்று சொல்லிவிட்டு டாட்டா காட்டிவிட்டு சென்றுவிட்டனர். அவ்வளவுதான் டாட்டா மொத்தமாக காட்டிவிட்ட விஷயம் பிற்பாடுதான் தெரிந்துள்ளது. அன்றிலிருந்து, வந்த வரனையும் கெடுத்துவிட்டாரே என்ற ஆதங்கம் அவர் சொற்களில் நன்றாகவே பிரதிபலித்தது. பாவம். அதுதானே நம்மால் முடிந்தது.

இப்படிப்பட்ட அதிகாரி, ஒருநாள் நிலம் எடுப்பது சம்பந்தமாக ஒரு பங்களாவில் விசாரணை வைத்து நிலச் சொந்தக்காரர்களை வரவழைத்து விசாரித்துக் கொண்டிருந்தார். வந்தவர்களில் ஒருவர். நிலத்தின் மதிப்பு ரொம்ப குறைவா இருக்கு என்று வாதாடிக்கொண்டிருந்தார். நம்மவரோ 'அவ்வளவுதான் தரமுடியும்' என்று சொல்லிக் கொண்டிருந்தார். அதிகாரி ஒன்றும் தம் விருப்பப்படி தொகை நிர்ணயம் செய்யவில்லை. அரசு விதிகளின்படிதான் மதிப்பு நிர்ணயம் செய்திருந்தார். அதனை வந்தவரிடம் தெளிவாக சொல்லியிருக்கவேண்டும். அதைவிடுத்து 'அவ்வளவுதான் தரமுடியும்' என்று திரும்பத் திரும்ப சொல்லப்போக, வந்தவரோ அதிகாரி நினைத்தால் அதிகமாகத் தரமுடியும் என்று எண்ணிக்கொண்டு

பேசப்போக கடைசியில் வாக்குவாதம் முற்றி “வெளியே வா பால் தெளிக்கக்கூட எலும்பில்லாமல் பண்ணிவிடுகிறேன்” என்று சொல்லிவிட்டார்.

நாங்கள் எல்லாம் சுற்றி அமர்ந்து விசாரணை அறிக்கை தயார் செய்துகொண்டிருந்த வேளையில் என்ன நடக்கிறது என்பதை உணரும் முன்னமே சில வினாடிகளில் முடிந்துவிட்டது வாக்குவாதம். நாங்கள் சுதாரிப்பதற்குள் அதிகாரி எழுந்து தன் கைப்பையை எடுத்துக்கொண்டு பங்களாவைவிட்டு வெளியேறினார். சாலையோரம் வந்த பஸ்சில் கையைக்காட்டி ஏறிக்கொண்டு போயே போய்விட்டார். நாங்களோ அதிகாரி எங்கே என்று தெரியாமல் தடுமாறி அப்புறம் அங்கே இருந்தவர்கள் சொன்ன விபரத்தைக் கேட்டுவிட்டு மூட்டைகளைக் கட்டிக்கொண்டு அலுவலகம் வந்து சேர்ந்தோம்.

அலுவலகம் வந்து விசாரித்தால் தலைவர் போலீஸ் கம்ப்ளெயிண்டு எழுதி சப்கலைக்டரிடம் கொடுக்கச் சென்றிருந்தார். அங்கிருந்த அலுவலர்களை விசாரித்தால் அதிகாரி நேராக அலுவலகம் வந்ததாகவும், ஏதோ எழுதியதாகவும் அப்புறம் அலங்காரம் செய்துகொண்டு சப்கலெக்டரிடம் (பெண் அதிகாரி) சென்றதாகவும் சொன்னார்கள். சப்கலெக்டரிடம் நடந்ததை சொல்லி மனு கொடுத்திருக்கிறார். அவருக்கோ இவர் சொன்னதைக் கேட்டு சிரிப்பை அடக்க முடியவில்லை. பின் என்ன எங்கேயாவது அடிக்க வருபவர்கள் எலும்பை எண்ணிக் கொண்டிருப்பார்களா? அங்கேயே ஒரு கம்ப்ளெயிண்டை எதிரில் உள்ள போலீஸ் ஸ்டேஷனில் தந்துவிட்டு இங்கு வரவேண்டியதுதானே என்று கேட்டதற்கு அதற்குள் அவர் என்னை அடித்துவிட்டால் என்னாவது என்று புலம்பியிருக்கிறார். ‘பால் தெளிக்க எலும்பு’ இல்லை என்றால் என்ன செய்வது என்ற பயம் போலும்.

ஒரு வழியாக வந்து சேர்ந்தார். வந்து தன் இருக்கையில் அமர்ந்தார். தன் பின்னால் உள்ள ஜன்னலை மூடச்சொன்னார். இரண்டு பக்க கதவுக்கு

அருகிலும் இரண்டு பியூன்களை நின்றுகொண்டு காவல் காக்க வேண்டும் என்றும் யாரையும் விடக்கூடாது என்றும் உத்தரவாயிற்று. வந்த ஆசிரியர்களைக்கூட அனுமதிக்கவில்லை. சிறிது நேரம் சென்றது. தன் மேசையை வேறு இடத்திற்கு மாற்றிப்போடச் சொல்லி தான் இருந்த இடத்தில் ஹெட்கிளார்க்கை உட்காரச் சொன்னார். காரணம் கேட்டதற்கு வருபவன் நேராக என் இடம் தெரிந்துவந்து அடித்துவிட்டால் என்ன செய்வது மாறி உட்கார்ந்துகொண்டால் யார் வந்தாலும் கண்டுபிடிப்பதற்குள் சுதாரித்துக் கொள்ளலாம் என்றார்.

அடுத்து, வீட்டுக்குப் போகவேண்டும். எல்லா அலுவலர்களையும் கூட்டிக்கொண்டார். அங்கிருந்த ஆசிரியர்களையும் அழைத்துக்கொண்டார். பதினைந்துபேருக்குக் குறையாமல் அவரைச் சூழ்ந்துகொண்டு அழைத்துச் சென்றனர். புலிக்குப் பயந்தவனெல்லாம் என்மேல் வந்து படுத்துக்கொள்ளுங்கள் என்றானாம் ஒரு பயில்வான். அதுபோல் இருந்தது அந்த ஊர்வலம். மெயின்ரோட்டுக்கு வந்ததும். ஒரு பேருந்து வந்தது. அது ஸ்டாப்பிங் இல்லை. இருந்தும் பதினைந்துபேர் கை காட்டினால் நிறைய டிக்கட் வருகிறது என்ற ஆசையில் டிரைவர் நிறுத்திவிட்டார் வண்டியை. ஏறியதோ அதிகாரியும் வழிப்பாதுகாப்புக்கு என்று ஒரு பியூனும் மட்டுமே.

மறுநாள் காலை ரயில்வே ஸ்டேஷனில் அவர் வரும் நேரத்தில் அப்படியே ஒரு கும்பல் சென்று இருந்து அவரைச் சூழ்ந்து அழைத்து வந்தது. பாதுகாப்பு கருதி தினமும் இந்த கருப்புப்பூனைப் படை சென்றுகொண்டேயிருந்தது. வேறு வேலை ஏதும் நடக்கவில்லை. எந்த அசம்பாவிதமும் நடக்கவில்லை. பத்துப் பதினைந்து நாட்களில் பாதுகாப்பு எல்லாம் யார் உத்திரவும் இன்றி விலகிவிட்டது.

இப்படியாகப்பட்ட ஊர்வலத்தில் ஒருநாள் ரயில்வே ஸ்டேஷனில் இருந்து வெளியே வந்தார் கைப்பை

ஊசலாட. எங்களில் ஒருவர் அய்யா என்ன பை திறந்திருக்கே என்றார். அவ்வளவுதான் அதிலும் சந்தேகம் வந்துவிட்டது. அங்கேயே பையில் இருந்ததைக் கொட்டி செக்கப் செய்தார். அந்தோ பரிதாபம் தாம் என்னவெல்லாம் பையில் வைத்திருந்தோம் என்பது அவருக்கு புரியவில்லை. தெரியாத ஒரு பொருளைக் காணாமல் போக்கிவிட்ட வருத்தத்தில் அன்று பூராவும் கழிந்தது. அடிக்கடி அந்தப் பையைக் கவிழ்த்துக் கொட்டி சரிபார்த்தும் என்னதான் காணாமல் போனது என்பது மட்டும் தெரியவில்லை.

ஒரு மாதம் சென்றது. அலுவலகத்தில் ஒரு பியூன் புதிதாக சைக்கிள் வாங்கிவந்தார். வெகு அலங்காரமாக கைப்பிடிகளில் குஞ்சங்கள் இரண்டு பெல்கள் அது இது என்று குருவாயூர் யானைகணக்கில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதுவும் அதிகாரியின் கண்ணுக்கு நேராக சைக்கிள் நிறுத்தப்பட்டிருந்தது. அதிலே ஒரு ஹைலைட் என்னண்ணா அதன் பெல்தான். பெல் லீவரை அசைத்தால் கலகலவென்று ட்டிர்ர்ர்ர்ரிங் ட்டிர்ர்ர்ர்ரிங் என்று அடித்து அனைவரையும் கவர்ந்தது. இல்லையில்லை அதிகாரியை மட்டும் ரொம்பவே கவர்ந்தது.

அதிகாரி சீட்டில் உட்கார்ந்துகொண்டு பார்த்துப் பார்த்து பொருமினார். “ஒரு பியூன் சைக்கிளையும் பார் என் சைக்கிளையும் பார்” என்று வந்தவர்களிடம் எல்லாம் அங்கலாய்த்தார். கடைசியில் தம்மைக் கவர்ந்த அந்த பெல்லை தாமும் பொருத்துவது என்று முடிவு செய்தார். இதற்கிடையில் பியூனோ திருஷ்டி பட்டுவிடக்கூடாது என்று கருதி வீட்டில் வைத்துவிட்டு மறுநாள் முதல் நடந்தே வர ஆரம்பித்துவிட்டார். பார்த்தார் அதிகாரி அவரது பெல் மோகம் குறையாமல் பசலைபிடித்துப் புலம்பிய நேரத்தில் ஒரு ஆசிரியர் வந்தார். அதேமாதிரி தனக்கும் ஒரு பெல் வாங்கித் தரும்படி இண்டெண்ட் வைத்துவிட்டார்.

சைக்கிளை எடுத்துச்சென்று பெல் வைத்து வந்து நிறுத்திய பின்னர்தான் பியூன் தன் சைக்கிளை கொண்டுவந்தார் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

நம்ம அதிகாரியோ குழந்தைத்தனமாக கொஞ்சநேரத்திற்கு ஒரு முறை போய் பெல் அடித்துப் பார்த்துவிட்டு ஓட்டப்பந்தயத்தில் தங்கப் பதக்கம் வாங்கிய வீரரைப் போன்று நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு வந்து உட்காருவார்.

ஒரு வாரம் போனது. திடீரென்று ஒருநாள் மதியம் ஒரு கிராமத்திற்கு சைக்கிளில் போகவேண்டும் என்று பிடிவாதம் செய்தார். அந்தப் பகுதியில் எல்லாம் மாலை நேரத்தில் போவது சரியல்ல என்று எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. புறப்பட்டாயிற்று. அதிகாரி முன்னதாக பெல்லை அடித்து அடித்து ரசித்துக்கொண்டே குனிந்துகொண்டு முன்னே சென்றார். அவரை நானும் புதுசைக்கிள் பியூனும் தொடர்ந்துகொண்டிருந்தோம். ஒரு சாலை சந்திப்பில் டமால் என்று சத்தம் நிமிர்ந்து பார்த்தால் சைக்கிள் கீழே கிடக்க அதன்மேல் சாஷ்டாங்கமாக கிழக்கு நோக்கி நமஸ்கரித்த நிலையில் அதிகாரி. நான் சைக்கிளை விட்டு இறங்கி ஓடிப்போய் அவரைத் துக்க முயற்சித்தேன். நம்ம புதுசைக்கிள் பியூனோ ஆர அமர இறங்கி தன் சைக்கிளை பாதுகாப்பாக ஒரு கடையோரம் நிறுத்தி பூட்டிவிட்டு வந்துசேர்ந்தார்.

நான் அதிகாரியின் கையைப் பிடித்து துக்கியதில் அவர் அசையவில்லை. என் பலம் அவ்வளவுதான். அந்த நொடியில் அவர் செத்துப்போய்விட்டாரோ என்று நினைவில் வந்து எனக்கு வேர்த்து விறுவிறுத்துவிட்டது. ஒன்றும் புரியவில்லை. அதற்குள் மோதிய ஸ்கூட்டர்காரரும் வந்து தூக்கிவிட்டு சைக்கிளையும் தூக்கி நிறுத்தினார். நம் அதிகாரி என்ன செய்தார் என்கிறீர்கள். மோதியவரிடம்கூட எதுவும் கேட்கவில்லை. நேராக பெல்லை அடித்துப் பார்த்து திருப்திப்பட்டுக்கொண்டார்.

மோதியவர்பேரில் எந்த தப்பும் இல்லை. அவர் சரியான பாதையில் ஒலிகொடுத்துதான் சீராக வந்திருந்தார். நம்மவர்தான் பெல் அடிக்கும் ஜாலியில் கவனத்தை சிதறவிட்டு விபத்தை ஏற்படுத்திக்கொண்டார்.

இருந்தும், மோதியவர் தாம் சைக்கிளை ரிப்பேர் செய்து தருவதாக சொல்லிப் பெற்றுக்கொண்டு அவரை அலுவலகத்தில் கொண்டுவந்து விட்டுச் சென்றார். நம் அதிகாரியோ கூடவே ஒருவரை அனுப்பி சைக்கிள் முழுவதையும் ஓவர்ஹாலிங் செய்து பெற்றுக்கொண்டார்.

ஒரு நபர் தென்னமரக்குடி எண்ணை வாங்கிவந்து அதனை பக்கத்து வீட்டில் கொடுத்து சூடாக்கிக் கொண்டுவந்து கைகால்களில் தடவிவிட்டார். அதிகாரி போட்டிருந்ததோ வெள்ளை நிற பேண்ட் ஜிகினா சட்டை. கழுத்தில் டை வேறு. சிகரெட் பிடிக்கும் ஆவலைத் தணிக்க முடியாமல் பேண்டில் கைவிட்டு அங்காங்கே திட்டுதிட்டாக பச்சை வண்ணம் வேறு. இருந்தும் அலங்காரம் எல்லாம் செய்துகொண்டு காத்திருந்தார்.

அதோடு விட்டாரா சைக்கிள் வந்துசேர்ந்தவுடன் நேராக சப்கலெக்டரை சந்தித்து ஒரு புகார் கொடுத்துவிட்டார். அதில் ஏற்கனவே நடந்த பிரச்சினைக்கும் இதற்கும் தொடர்பு இருப்பதாகவும், அந்த நபர்தான் ஏற்பாடு செய்து இப்படி ஒரு விபத்தினை ஏற்படுத்தியிருப்பதாகவும் தெரிவித்திருந்தார்.

கேட்ட சப்கலெக்டருக்கு சிரிப்பு தாங்கமுடியவில்லை. முன்னதாகவே அவருக்கு இதன் விபரம்தான் சொல்லப்பட்டுவிட்டதே. இப்படிப்பட்ட அலங்காரத்துடன் ஒரு பபூன் அதிகாரியை அவர் வாழ்நாளில் பார்க்க முடியுமா.

இன்னொரு சம்பவம். ஒருநாள் எல்லா அலுவலர்களையும் அழைத்துக்கொண்டு நல்ல மழை நாளில் கிராமத்தில் இடம் பார்வையிடச் சென்றார். மழையில் கணக்குகள் பாழாகிவிடும்

என்பதாலும் பாதைகள் சரியாக இருக்காது என்பதாலும் வேறு ஒரு நாள் போகலாம் என்று தடுத்துப் பார்த்தோம். கேட்கவில்லை.

நாலைந்து பேராக கிராமத்திற்கு பஸ்சில்போனோம். ஸ்டாப்பிலிருந்து இரண்டு கிலோமீட்டார் துரம் நடந்துபோய் இடம் பார்த்தோம் நன்கு இருட்டிச்கொண்டது. பாதையும் சரியில்லை.

எங்களை வம்பு செய்து ஒரு பெருந்தனக்காரர் வீட்டுக்கு அழைத்துச் சென்று ஆளுக்கு ஒரு செம்பு காப்பி போட்டு வாங்கி குடிக்க வைத்தார். மழை காரணமாக வேறு இடம் பார்க்க முடியாமல் திரும்ப வேண்டிய நிலை.

அங்கு வந்த ஒருவர் நீங்கள் திரும்பிச் செல்வதற்கு, வந்த பாதைக்குப் பதிலாக தெற்கில் உள்ள வாய்க்காலைக் கடந்தால் மெயின்ரோடு வரும் அதிலிருந்து பஸ் பிடித்து போவதுதான் சுருக்கு வழி என்று சொன்னார். மேலும் சிறிது தூரம் நடந்துபோனதும் அவர் சொன்ன வாய்க்கால் வந்தது அதில் தண்ணீர் ஏராளமாக சென்றுகொண்டிருந்தது. அதனைக் கடப்பதற்கு குறுக்காக ஒரு தென்னை மரம் வெட்டிப்போடப்பட்டிருந்தது. சிலர் அதில் சர்வசாதாரணமாகக் கடந்து போய்வந்து கொண்டிருந்தனர்.

அதிகாரி இரண்டு அடிவைத்துவிட்டார். வழுக்கலாக இருந்ததும் அவருக்கு பயம் வந்துவிட்டது. அதனை எப்படிக் கடப்பது என்று தெரியவில்லை. நாங்கள் நடந்துவரவேண்டாம் உட்கார்ந்த நிலையில் ஊர்ந்து வந்துவிடுங்கள் என்று ஆலோசனை சொன்னோம். அவரது பயமோ எதையும் செய்யவிடவில்லை. சரி திரும்பிப் போய்விடுங்கள் என்றாலும் கேட்கவில்லை. ஒரு திரைப்படத்தில் வந்ததுபோன்று நடுவில் தடுமாறிக்கொண்டிருந்தார்.

அந்த வழியே வந்தவர் “தைரியமா போங்கய்யா ஆழம் அதிகமில்லை இடுப்பளவுதான்” என்று இலவச ஆலோசனை வழங்கினார். அது கொஞ்சம் தெம்பைக் கொடுத்தது. ஆனால் அவர் செய்த

பின்னிணைப்பு வார்த்தை "வாய்க்காலில் முட்கள் கிடக்கும் ஜாக்கிரதை" என்பதுதான்.

கிளிஞ்சது கிருஷ்ணாபுரம் என்கிறீர்களா. நிலைமை அப்படித்தான் ஆகிவிட்டது அதிகாரிக்கு கைகால்கள் வெடவெடத்து தடுமாற ஆரம்பித்துவிட்டார். ஆலோசனை சொன்னவர் அதிர்ந்துபோய் சரவரவென்று வாய்க்காலில் இறங்கிச்சென்று அவரைக் கையைப்பிடித்து தண்ணீரில் இறக்கி மறுகரையில் விட்டுவிட்டுப் போனார். நனைந்துபோன அதிகாரி கொஞ்சமும் வெட்கப்படாமல் நடந்துவர, பஸ் பிடித்து வந்துசேர்ந்தோம்.

சில சமயம் அலுவலகத்தில் உட்கார்ந்து வேலைபார்த்துக்கொண்டே இருப்பார். திடீரென்று எழுந்து சென்று அலுவலகத்தின் திறந்தவெளியில் கிரிக்கெட் மட்டையால் ஒருநபர் ஆட்டமாக சிறிது விளையாடிவிட்டு வருவார். சில சமயம் வந்த ஆசிரியர் யாரேனும் ஒருவர் மாட்டிக்கொண்டு பந்துவீசுவார். இவர் அடிப்பார். பலரும் சுற்றி நின்று வேடிக்கை பார்ப்பர்.

சமயத்தில் தமது துணைவியாரையும் அலுவலகத்திற்கு அழைத்து வந்துவிடுவார். அவரை அழைத்துக்கொண்டுபோய் பதிவு வைப்பறையில் தங்கவைத்துவிடுவார். அவரோ அங்குள்ள பேப்பர் நெடிதாங்காமல் போரடித்துப்போய், தலைவன் வரவை எதிர்பார்த்து கதவோரம் நின்றுகொண்டு எட்டி எட்டிப்பார்த்துக் கொண்டிருப்பார். பிரியாணி அது இது என்று ரிக்கார்டு ரூமே டைனிங்ஹால், பெட்ரூம், லிவிங்ரூம் என்று பல அவதாரங்கள் எடுத்துவிடும். நாங்கள் பதிவறையில் ஏதேனும் கோப்பு எடுக்கவேண்டுமெனில் தார்மசங்கடத்துடன் தவிப்போம்.

சமயத்தில் குடும்பத்தார் எல்லாரும் வந்துவிடுவர். அவர்கள் மாலையில் அதிகாரியுடன் கிரிக்கெட் விளையாடுவர். அது தற்காலத்தில் பள்ளிமாணவர்கள் எந்த வரைமுறையும் இல்லாமல் ஒரு சிரிய இடத்திற்குள் நாலைந்துபேர் மட்டும்

சேர்ந்துகொண்டு சாலையோரத்தில் விளையாடும் கிரிக்கெட் ஆட்டம் போல் இருக்கும் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள். ஒரு செங்கல் மூன்று வேப்பங்குச்சி இவைதான் ஸ்டம்ப்.

அந்த அதிகாரியின் கூத்துக்கள் சொல்லிமாளாது. எப்போதும் அலுவலகத்தில் ஹீரோ. ஜோக்கர், வில்லன் எல்லாமும் அவர்தான். நாங்கள் எல்லாம் டிக்கட் எடுக்காமல் பார்க்க வந்த வி.ஐ.பிக்கள். அலுவலகத்தில் வேலை என்னாவது என்கிறீர்களா. அதுதான் ஒரு இளிச்சவாய் அதிகாரி அவருக்கு முன்னதாக கடுமையாக உழைத்து நிறைய நில எடுப்பு கோப்புகள் தயார் செய்து வைத்துவிட்டுப் போயிருக்கிறாரே. அவற்றை நகாசு செய்து அறிக்கை அனுப்பி வைத்தால் அலுவலகத்தில் வேலை நடப்பதாக உயர் அதிகாரிகள் மெச்சிவிடுகின்றனர்.

எப்போதுமே நமக்கு முன்னதாக ஒரு நல்ல உழைப்பாளி இருந்து வேலை செய்துவிட்டுச் சென்றால் அடுத்து நாம் போய் கால் மேல் கால்போட்டு ஓய்வெடுத்து நற்பெயர் சம்பாதித்துவிடலாம்.

# 20 சப்ளை அண்டு சர்வீஸ்

பொதுவாக எல்லா அதிகாரிகளும் கீழே உள்ளவன் செலவில் எப்படி வயிறு வளர்ப்பது என்பதிலேயே குறியாக இருப்பர். அதிலும் கொஞ்சம் இளிச்சவாயன் கிடைத்துவிட்டான் என்றால் போதும். சினிமாவில் வரும் வடிவேலு ஓட்டிலில் ஒரு குழந்தையை ஏமாற்றி சாப்பிட்டுவிட்டு அதோடு வீட்டுக்கும் பார்சல் கட்டி எடுத்துச் செல்ல முயற்சிப்பதுபோல் வீட்டுக்கு பார்சலும் கட்டியவர்களும் உண்டு.

ஒரு அதிகாரி இருந்தார். நான் வருவாய் ஆய்வாளராக இருந்த சமயம். அவர் எனக்குக் கண்காணிப்பு அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அந்த நேரம் நிலவரி கடன் என்று அரசு பாக்கிகள் வசூல் பணி மிக கெடுபிடியாக இருந்தது.

ஒவ்வொரு கண்காணிப்பு அதிகாரியும் அதிகாலையில் கிராமங்களுக்குச் சென்று வசூல் பணிகளைக் கண்காணித்துவிட்டு அலுவலகத்திற்கு வந்து வேலை பார்ப்பர். எனக்கு வாய்த்தவரோ பகல் பன்னிரண்டு மணிக்கு கேம்ப் கிளம்புவார். ஜீப்பில் நாலைந்து கிராமங்களுக்குப் போய் ‘நானும் வேலையில் ஈடுபட்டிருக்கிறேன் என்பதாக படம் காட்டிவிட்டு தலைமையிடத்துக்கு வந்துவிடுவார். வண்டி நேராக முனியாண்டி விலாசுக்கு போய்தான் நிற்கும். மற்ற இடத்தில் பிரேக் பிடிக்காது. டிரைவர், ஓ.ஏ. சகிதமாக உள்ளே புகுந்து ஒரு பிடி பிடிப்பார். எல்லாம் ஆர்.ஐ. கணக்குத்தான். சாப்பிட்டுவிட்டு நேராக தமது இருக்கையில் போய் உட்கார்ந்து தம் பிரிவு வசூல் வேலைகளைப் பார்ப்பார். அவரால் அரசாங்கத்திற்கு அன்றைய வசூல் பூச்சியம். வருவாய் ஆய்வாளருக்கு செலவு நூறோ நூற்றைம்பதோ.சில சமயம் கி.நி.அ.-கள் கைகொடுப்பர். ஆர். ஐ. தப்பிப்பார்.

சில நாட்களில் அவருக்கு குஷிவந்துவிடும். கூட வந்த தலையாரிகளையும் வி.ஏ.ஓவையும் சாப்பிட

அழைப்பார். அவர்கள் மருகுவர். இவரோ கூச்சப்படாதே உன்னைவிட்டு சாப்பிட மனது வரவில்லை என்று ஆர்.ஐக்கு செலவு வைக்க முயற்சிப்பார்.

வாரத்தில் இரண்டு நாளாவது நேராக ஒரு கிராமத்திற்குப் போவார். ஒரு குறிப்பிட்ட வீட்டின் முன்பாக வண்டி நிறுத்தப்படும்.

அங்கே ஒரு பெண். அவர் ஏற்கனவே சாராயக்கடை நடத்திய தைரியசாலி. அவரும் நிறைய பாக்கி வைத்திருந்த பேர்வழிதான். அவரிடம் பணம் கட்டுங்க என்று குழைந்துகொண்டு கேட்பார். அவரும் அதிகாரி வந்திருக்கீங்க சாப்பிட்டுப் போங்க பணம் கட்டிடலாம் என்று சமாதானம் சொல்வார். உடனே இருவரும் நட்பு ரீதியாக பேச்சு வார்த்தை நடத்திக்கொண்டிருப்பர். வேறென்ன ஜொள்ளுதான். இந்த லொள்ளு தாங்க முடியாமல் அந்த கிராமத்தைத் தவிர்த்தாலும் உடன் வரும் ஒரு குமாஸ்தா உதவியாளர் கரெக்டாக அந்த இடம் வரும்போது நினைவூட்டுவார். இப்படியாக நம் வேலையையும் கெடுத்து தானும் வேலை செய்யாமல் படுத்துகிறாரே என்று பொருமுவோம் நாங்கள்.

ஒருநாள் அவர் தண்ணீர் வாங்கிக் குடித்த டம்ளர் கைநழுவி கீழே விழுந்துவிட்டது. ஒரே எண்ணைப் பசை. இவர் டம்ளரை நன்கு கழுவிக் கொடுக்கக்கூடாதா என்றார். எனது தலையாரி அவரிடம் ரகசியமாக “அது ஒண்ணுமில்லைங்க அய்யா, ஞாயிற்றுக் கிழமையில் இங்கேயெல்லாம் பன்றி இறைச்சி சாப்பிடுவாங்க. அது மறுநாளும் எல்லா பாத்திரத்திலும் கொழுப்பு பிசுபிசுக்கும்” என்று சொல்லிவிட்டார். அதிகாரிக்கு குமட்டிக்கொண்டு வந்துவிட்டது.

அன்றுமுதல் அந்த வீட்டில் போய் நின்றிருக்கமாட்டார் என்று நினைத்தால் ஏமாந்துபோவீர்கள். அதன் பின்னரும் அங்கு போய் உட்கார்ந்துகொண்டு தமக்கு சாப்பாடு வேண்டாம் என்றும் பலாப்பழம் கொடு, வாழைப்பழம் கொடு, மல்லாட்டை (மணிலா கொட்டை) கொடு என்று

ஜொள்ளுவிட ஆரம்பித்துவிட்டார். ஒருநாள் அவர் ஒரு தாம்பாளம் நிறைய உரிக்காத மணிலாவை லேசாக சூடுகாட்டி வைத்துவிட்டார். இவர் சாப்பிட்டுப் பார்த்தார். ஒன்றும் சரி வரவில்லை. எல்லாத்தையும் ஒரு பொட்டலம் கட்டிக்கொண்டு வந்துவிட்டார்.

அப்போதுதான் எயிட்ஸ் என்ற நோய் பயங்கரமாகப் பயமுறுத்திய நேரம். என் நண்பர் ஒருவர் அந்தக் கிருமிகளைப் பற்றி இப்படி புகழுவார். சிகரெட்டை வாயில் வைத்துக்கொண்டு “இந்த சிகரெட் நெருப்பில் பட்டால்கூட எயிட்ஸ் வைரஸ் உயிரோடிருக்கும் தெரியுமா. அதை அழிக்க இன்னும் மருந்து வரவில்லை. கண்டுபிடிக்கவும் முடியாது தெரியுமா” இலவசமாகவே எயிட்ஸ் எதிர்ப்பு பிரச்சாரம் செய்வார்.

என்னிடம் வேலை பார்த்த கிராம நிர்வாக அலுவலர், ஒருநாள் அதிகாரியிடம் “அய்யா அந்த ஏரியாவெல்லாம் போய் பழகாதீங்கய்யா. இங்கெல்லாம் எயிட்ஸ் ரொம்ப சர்வசாதாரணம். நாங்கள்ளாம் இந்தப் பக்கம் யாரிடமும் வச்சிக்கறதே இல்லை. கண்டாலே ஓடுறோம் நீங்க வரதால இங்க வரவேண்டியதா இருக்கு” என்றார். தலையாரியும் ஆமாங்கய்யா என்றார் பாருங்க. அதோட சரி. வண்டி அப்புறம் கோர்ட்டில் ஸ்டே வாங்கியது மாதிரி நேராகப் போய்விடும்.

சரி ஒரு தொல்லை விட்டது என்று பார்த்தால் அடுத்த தொல்லை ஆரம்பமாயிடுத்து. என்றோ ஒரு நாள் பக்கத்து ஊரில் போய் சாப்பிட்டிருக்கிறார். அதை வைத்துக்கொண்டு நேராக அங்கே போய் அங்கிருந்த ஒரு பெண் வருவாய் ஆய்வாளருக்கு தொந்தரவு தர ஆரம்பித்துவிட்டார் புண்ணியவான். அங்கு போய் உட்கார்ந்துகொண்டு அந்த கடையில் பிரியாணி வாங்கிவாருங்கள் என்று கேட்டு அவர் வேலையைக் கெடுக்க ஆரம்பித்துவிட்டார். அதற்கும் ஒரு சதியாலோசனை நடத்தி ஒருவர் மூலம் “அய்யய்யோ அந்த கடையிலேயா போய் சாப்பிடுறீங்க அங்கே சமயத்தில் பெருச்சாளிக் கறியெல்லாம் கலந்து போடுறான். நாங்கள்ளாம் அந்த கடைக்கு டிபன்

சாப்பிடக்கூட போகமாட்டோம்" என்று சொல்லிவிட்டோம். அதோடு விட்டது தொல்லை. அவ்வப்போது என் செலவில் முனியாண்டி விலாஸ் சாப்பாட்டுடன் போயிற்று.
மனிதனின் மனதில் பயமோ குழப்பமோ விதைத்துவிட்டால் அப்புறம் பிரச்சினையை சுலபமா சமாளித்துவிடலாம்.

யாராவது அதிகாரி வந்தால் கீழே இருப்பவர்கள் காக்கா பிடிப்பதற்காக தமக்குக் கீழே இருப்பவரிடம் இண்டெண்ட் வைத்து வசூல் செய்து அதிகாரியின்பேரில் கரிசனத்துடன் வாங்கி வந்திருப்பதாகச் சொல்லிக் கொடுத்துவிட்டு தாமும் புறங்கையை நக்கிக்கொள்வார். சிலர் அதிகாரி பெயரைச் சொல்லி முழங்கை வரையிலும்கூட நக்கிக்கொள்வதுண்டு. யார் போய் அதிகாரியிடம் கேட்கப் போகிறார்கள் என்ற தைரியம்தான்.

ஒரு துணை கலெக்டர் புதிதாக வந்து சேர்ந்தார். நல்ல மாதிரியானவராகவே காணப்பட்டார். எனது தாசில்தாரோ கொஞ்சம் அப்படி இப்படி. அதனால் முதல் கேம்ப் வந்து சென்றவுடன் என்னை அழைத்து அதிகாரிக்கு பழங்கள் வாங்கி அனுப்பினாயா என்றார். நானும் அப்பாவியாக அதெல்லாம் இதுவரை இல்லை. புதிய பழக்கம் எல்லாம் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். தாசில்தாரோ "அதான் அய்யா போகும்போது மூஞ்சி சுழிச்சமாதிரி போனார் போல. நீ என்ன செய்றே.... கொஞ்சம் ஃபுரூட்ஸ் வாங்கிக்கொண்டுபோய் பங்களாவில் கொடுத்துவிட்டு வா" என்று துரத்தினார் என்னை.

எனக்கு வந்ததே கோபம். யாரிடம் காட்டினேன் தெரியுமா? எனக்குள் ஒருவன் பொருமிக்கொண்டே இருக்கானே, அதான் என் மனம். அவனிடம் வடிவேலு பாணியில் இதெல்லாம் உனக்கு தேவையா... தேவையா... என்று ஒரு கத்து கத்திவிட்டு நேராக பங்களாவுக்குப் போனேன். டிரைவரிடமும் டபேதாரிடமும் இன்ன சமாச்சாரம் என்றேன். அவர்கள் இருவரும் அய்யா ரொம்ப நல்லவர். ரொம்ப சிம்பிளானவர். அவர் எதுவும்

எதிர்பார்க்கவில்லை. நீங்கபாட்டுக்கு போங்க என்று சொல்லிவிட்டனர்.

அடுத்தடுத்து அதிகாரி வரும்போதெல்லாம் தாசில்தார் எனக்கு உத்திரவிடுவதும் நான் நேரில் அய்யாவிடம் கொடுத்துவிட்டேன் என்பதுமாக சில முறை நடந்ததும் எப்படியோ தாசில்தாருக்குத் தெரிந்துவிட்டது. அப்புறம் இந்த வேலையெல்லாம் வைத்துக் கொள்வதை விட்டுவிட்டார். ஒருநாள் அய்யா சாப்பாடு வாங்கிவரச் சொன்னார் என்று டபேதார் வந்தார். நானோ "வி.ஐ.பி வந்தால் சாப்பாடு போடுவேன். மற்றவர்களுக்கு எல்லாம் போடமாட்டேன். போய் சொல்" என்று சொல்லிவிட்டேன். என்னைப் பற்றி நன்கு தெரிந்தவர்கள் தாசில்தாரிடம் சொல்லிவிட்டனர். அதன் பின் என்னிடம் கடுகடுவென்றுதான் இருந்தார். ஆனால் எதுவும் கொஞ்சகாலம்தான். ஒரு சட்டம் ஒழுங்கு பிரச்சினையில் எம்.எல்.ஏவின் அதிருப்திக்கு ஆளாகி மாறுதலில் போய்விட்டாரோ, நானும் தப்பிச்சேனோ.

இங்கே ஒன்றைச் சொல்லவேண்டும். நான் ஆர்.ஐ.யாக பணியேற்கும்போதே என் வீட்டில் "நான் சம்பளம் வாங்கி மீந்தால்தான் தருவேன். மற்றபடி என் சம்பளத்தை எதிர்பார்க்கக்கூடாது" என்ற கண்டிஷண் அடிப்படையில்தான் வந்து சேர்ந்தேன். நான் வந்த நேரம் பெயர் அறியாத அந்த ஊருக்கு உலகம் முழுக்க தெரியும் நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நடந்து டில்லியிலிருந்தெல்லாம் முக்கியப் பிரமுகர்கள் வர ஆரம்பித்துவிட்டனர். எந்த வி.ஐ.பி - துணை கலெக்டர் உட்பட - யார் வந்தாலும் ஆர்.ஐ. தலையில்தான் செலவு விடியும் அந்த நாளில். என் சம்பளத்தை வாங்கி ஓட்டல் அக்கவுண்டை அடைக்கத்தான் சரியாக இருந்தது.

ஆபீசிற்குள் ஆர்.ஐ. வந்தாலே உடனே முக்கிய குமாஸ்த்தாக்கள் முதல் அதிகாரி வரை டீ பிஸ்கட் கேட்பர். சில சமயம் ஆர்.ஐ.யை தள்ளிக்கொண்டுபோய் டிபனும் சாப்பிட்டுவிடுவர். இரண்டு கையாலும் சம்பாதிப்பவர்களுக்கு

அதெல்லாம் கட்டுப்படியாகும். அதற்கெல்லாம் நான் என்ன செய்ய. அதனால் ஆபீசில் நுழைந்தவுடன் யாராவது என்னிடம் உரிமையாக டீ கேட்டால் ஆர்.ஐ. என்ற முறையில் கேட்கிறாயா என்னிடம் நடக்காது. நண்பர் என்ற முறையில் கேட்கிறாயா என்னிடம் காசு இல்லை நீ வாங்கிக்கொடு என்று சொல்லிவிடுவேன். இது எனக்கு முன்னதாக ஆர்.ஐ.யாக இருந்த என் நண்பனின் டெக்னிக். அதை அப்படியே பிடித்துக்கொண்டேன்.

இப்படியெல்லாம் இருந்தும் கடைசி ஆறு மாதம் பெரும்பாலும் மதியம் நான் சாப்பிடாமல் இருந்துதான் எனது ஓட்டல் அக்கவுண்டுகளை பைசல் செய்துவிட்டு வரவேண்டியதாகியது என்றால் யாராவது நம்புவார்களா.

இது ஒரு வித்தியாசமான நிகழ்ச்சி. ஒரு முறை வங்கக்கடலில் ஏற்பட்ட புயலானது போகும் வழி தெரியாமல் சிதம்பரம் வழியாகப்போனால் சீக்கிரம் போகலாம் என்று நினைத்து கரைகடந்து போய்விட்டது. ஏகப்பட்ட சேதம்.

இந்த புயல் வெள்ளம் என்று இயற்கை இடர்பாடுகள் ஏற்பட்டால் அது அடித்து ஓய்ந்து வெள்ளம்கூட வடிந்திருக்காது. அங்கே மேலே உட்கார்ந்துள்ள சுகவாசி அதிகாரிகளுக்கு கீழே என்ன நடந்தது என்றுகூட தெரியாது. இருந்த இடத்திலிருந்தே உடனடியாக சேதத்தின் மதிப்பு என்ன என்று கேட்பர். ஊருக்குள்ளேயே போக முடியாதவர்கள் அதிகாரிகளின் பிடுங்கல் தாங்காமல் ஏதோ ஒரு புள்ளிவிபரத்தை அந்த நேரத்தில் கொடுத்துவிடுவர். இருக்கும் கீழ் நிலை அதிகாரிகளும் “மானுக்கு ஒரு புள்ளி ஏறுனா என்ன இறங்கினா என்ன கொடு பார்த்துக்கலாம்” என்று ஊக்குவிப்பர். அவர்தானே மேலேயிருந்து பாட்டு வாங்குபவர் அதனால் அவர் குறுக்கு வழி தெரியாதவனுக்கு சொல்லிக்கொடுத்து தப்பித்துக் கொள்வார். அப்புறம் எப்படி சரியான நிவாரணம் கிடைக்கும். தில்லுமுல்லு நடக்காமல் இருக்கும்.

இந்த முறை பலத்த சேதம். மழை பெய்ய

ஆரம்பித்தவுடன் சிதம்பரம் ஆர்.டி.ஓ. மழை இப்படிப் பெய்கிறதே நான் போய் வெள்ளம் வரக்கூடிய இடங்களை ஆய்வு செய்கிறேன் போர்வழி என்று சேத்தியாதோப்புக்கு போனார். ஆனால் வரவில்லை. அதற்குள் வெள்ளம் பெருகி ரோடுகள் அடித்துக்கொண்டு போய்விட்டது. அவர் எந்த வழியாகவும் வரமுடியவில்லை. அப்படிப்பட்ட வெள்ளம் அது. போதாக்குறைக்கு புயல் அடித்து கொஞ்சம் நஞ்சமிருந்த மரங்களும் சாய்ந்துவிட்டது. சிதம்பரம் பகுதி எல்லா வகையிலும் தீவாக மாறிவிட்டது. கலெக்டரோ கால்நடையாகவும் பல வகையிலும் வந்து சேர்ந்து நிவாரணப் பணிகளை கவனித்துக் கொண்டிருந்தார்.

ஒரு வாரமாக சிதம்பரத்தில் மின் சப்ளை கிடையாது. குடிநீர் கிடையாது. எல்லா வகையிலும் ஒரு பாலைவனம் போல் ஆகிவிட்டது. இப்படிப்பட்ட நிலையில் சென்னையிலிருந்து பெரிய அதிகாரியை நிவாரணப் பணி பார்க்க அனுப்பி விட்டனர்.

பெரிய அதிகாரி வந்துசேர்ந்தார் எப்படியோ. வந்தவருக்கு சாப்பாடு போடவேண்டும். அத்தியாவசியப் பொருட்கள் ஊருக்குள்ளேயே வர வழி தெரியவில்லை. எல்லாரும் கஞ்சிகாய்ச்சிக் குடிக்கும் நிலை. அதிகாரிக்கு எப்படியோ சமையல் செய்து சாப்பாடு போட்டார் ஆர்.ஐ. நாமாயிருந்தால் இதாவது கிடைத்ததே என்று சாப்பாடு போட்ட புண்ணியவானை வாழ்த்திவிட்டு போவோம். சொகுசாக இருந்த அதிகாரியை இப்படி கஷ்டத்தில் மாட்டிவிட்ட கோபத்தில் என்ன சாப்பாடு இது என்று கோபித்துக்கொண்டு போய்விட்டார். அப்புறம்தான் தெரிந்தது சாப்பட்டுக்கு கொத்தவரைக்காய் போட்டிருந்த விஷயம். ஒரு காய்கறியும் வரத்து இல்லாமல் ஒரு வாரமாக அவதிப்பட்ட ஊரில் அதுவாவது நமக்குக் கிடைத்ததே என்று திருப்திப்படாமல் போய்ச்சேர்ந்தார் அதிகாரி. விளைவு. கொத்தவரங்காய் போட்டவருக்கு மாறுதல்தான்.

நான் ஆர்.ஐ.யாக இருந்தபோது ஒரு பெரிய கலவரம்

நடந்து துப்பாக்கிச்சூடு வேறு நடந்துவிட்டது. அதனை சாக்கு வைத்து பெரிய அதிகாரிகளும். முக்கியப் பிரமுகர்களும் கொத்துக்கொத்தாக வர ஆரம்பித்துவிட்டனர். அந்த முன்னேற்றம் இல்லாத ஊருக்கு பெரிய அந்தஸ்த்து வந்துவிட்டது. வழக்கம்போல் வருபவர்களுக்கு எல்லாம் உண்டைக்கட்டி வழங்கும் வேலை என்னுடையதாகிவிட்டது. ஒவ்வொருமுறையும் வருபவர்களுக்கு டீ பிஸ்கட் கொடுப்பதற்காக அவர்கள் அந்தஸ்த்து கருதி கோப்பைகள் ஏற்பாடு செய்ய வேண்டியதாகிவிட்டது. பின் என்ன அவர்கள் அந்தஸ்த்துக்கு நம்மை மாதிரி டீக்கடை கிளாசில் எல்லாம் குடிப்பார்களா என்ன. மேலேயிருந்து உத்தரவு வேறு நல்லமுறையில் கவனிக்கும்படி. நான் தவித்த நேரத்தில் ஒரு முஸ்லிம் நண்பர் கைகொடுத்தார். என்னை அவரது வீட்டுக்கு அழைத்துப்போய் ஒரு சாக்குமூட்டையை ஒப்படைத்தார். அதில் வெளிநாட்டிலிருந்து வாங்கிவந்த பீங்கான் டீ கப்புகள் அழகழகாக ஐம்பதுக்கு மேல் இருந்தன. போதாக்குறைக்கு தாம் டீ போட்டுத் தருவதாகவும் உதவிசெய்தார்.

ஆக வந்தவர்களுக்கு மிக அழகான கோப்பைகளில் மிக சுவையான மொகலாய டீ பாரிமாறப்பட்டது. வந்தவர்களில் பலர் டீயை ருசிப்பதற்குப் பதிலாக கோப்பையை ரசிக்க ஆரம்பித்துவிட்டனர். சிலர் கோப்பையை லவட்டிக்கொண்டு போவதில் குறியாக இருந்தனர். நம்மிடம் இல்லாத ஒன்று பிறரிடம் இருக்கலாமா. அதனை நாம் கைப்பற்றி நம்முடையதாக்கிக் கொள்ளவேண்டாமா? அறிவைத் தவிர அது வேறு எதுவாக இருந்தாலும்!
என்னுடைய ஜவான் வல்லாள கண்டன். தலையாரிகளைக் கையில் வைத்துக் கொண்டு கோப்பைகளைக் கண்காணித்து வண்டியில் ஏறியவரிடமிருந்துகூட பிடுங்கி வந்திருக்கிறார்.

இங்கே ஒன்றைச் சொல்லவேண்டும். திருமதி மரகரம் சந்திரசேகர் அவர்கள் வந்தார்கள். ஒரு அரசியல் வாதியும்கூட என்பதால் அவருடன் ஒரு படை புடைசூழ வந்தது. பங்களா வாசலில் வரவேற்ற

எங்களை தாம் சீக்கிரமாக செல்லவேண்டும் என்றும் நேராக வந்த வேலையை கவனித்துவிட்டு செல்வதாகவும் சொல்லிவிட்டார். நாங்கள் வழிகாட்டிச் சென்றோம். அவர் ஒரு கட்சியின் முக்கிய பிரமுகர் என்பதால் கடைத் தெருவில் பெரும் கூட்டம் கூடிவிட்டது. அது தாலுக்கா ஆபீஸ் வாசல். அங்கிருந்து அவர் விடைபெறும் சமயம். தாசில்தாரை அழைத்தார். நான் இப்படியே புறப்படுகிறேன். மிக்க நன்றி என்று சொன்னவர் “ஒரே ஒரு டீ கிடைக்குமா” என்றார்.

அவ்வளவுதான். தெருவில் நின்ற ஒவ்வொருவரும் ஓடிப்போய் தள்ளுமுள்ளு செய்து டீ என்ன, பிஸ்கட் பாக்கெட் என்ன, பழம் என்ன சோடா என்ன என்று அவரை நோக்கி நீட்டினர். அந்த இடத்தில் சுமார் ஆயிரம் பேர் கூட்டம் கூடிவிட்டது. எந்த வி.ஐ.பி. வந்தாலும் நானும் என்னுடைய ஜவானும் எப்போதும் டீ வகையறாக்களை கையுடனே எடுத்துச் செல்வது வழக்கம்.

அந்த வி.ஐ.பி. யாரையும் சட்டை செய்யவும் இல்லை. முகம் சுழிக்கவுமில்லை. “நான் தாசில்தாரிடம்தான் கேட்டேன்” என்றார். தாசில்தார் தாலுக்கா ஆபீசில் வந்து அமர்ந்து சாப்பிட்டுவிட்டு போகலாமே என்றார். ஆனால் அவரோ பரவாயில்லை இங்கேயே கொடுங்கள் என்று கேட்டுவாங்கிச் சாப்பிட்டுவிட்டு நன்றி தெரிவித்துச் சென்றார். அவருக்கு பந்தா பண்ணத் தெரியாதுபோலும்.

இன்னொரு சம்பவம். நான் ஆர்.ஐயாக இருந்தபோது நடந்தது. ஒரு முக்கியப் பிரமுகர் வீட்டு விசேஷத்திற்காக வெளி மாநில கவர்னர் வருவதாக வரவேற்பு போஸ்ட்டர்கள் ஒரு வாரம் முன்னதாகவே நகர் முழுவதும் ஒட்டப்பட்டிருந்தது. நான் போய் தாசில்தாரிடம் விஷயத்தை சொல்லி நமக்கு ஒரு தகவலும் வரவில்லையே கலெக்டர் ஆபீசில் கேளுங்கள் என்றேன். அவரோ “நீ வேறே கவர்னராவது இங்கெல்லாம் வர்றதாவது” என்று சொல்லிவிட்டார்.

மெல்ல மெல்ல விசேஷ தினமும் வந்தது. கலெக்டர்

ஆபீசிலிருந்து தாசில்தாரைப் பேசச்சொல்லி போன் வந்தது. அவரோ ஒரு தியேட்டரில் நடந்த இசைக் கச்சேரிக்கு ஓசி டிக்கட்டில் போய் ரசித்துக்கொண்டிருந்தார். போன சேதியும் யாருக்கும் தெரியாது. ஒரு துணை வட்டாட்சியரை அழைத்து கவர்னர் வருவதையும் மற்றும் ஒரு அமைச்சர் வருவதையும் சொல்லி ஏற்பாடு செய்யச் சொல்லிவிட்டனர். அவரோ என்னை அழைத்து உங்க தாசில்தார் போன இடம் தெரியவில்லை. டி.ஆர்.ஓ. சொன்னார் நாம் போவோம் என்று சொல்ல, ஜீப்பை எடுத்துக்கொண்டு பங்களா போய் ஏற்பாடு செய்தோம். இரண்டு ரூம்களிலும் கவர்னருக்கு ஒன்றும், அமைச்சருக்கு ஒன்றுமாக டீ பிஸ்கட் இத்தியாதிகள் ஏற்பாடு செய்துவிட்டு அமைச்சரை வரவேற்க திருநாரையூருக்குப் போய்விட்டோம். பங்களாவில் ஒரு வருவாய் ஆய்வாளாரிடம் இன்னின்ன ஏற்பாடுகள் என்று தெரிவித்துவிட்டுச் சென்றுவிட்டோம்.

அமைச்சர் வந்தார். அவரை அழைத்துவந்து பங்களாவில் விட்டுவிட்டு நிமிர்ந்தால் கவர்னர் கார் வந்துவிட்டது. அவரை டி.ஆர்.ஓ. அழைத்து வந்திருந்தார். கவர்னரோ தாம் நேராக நிகழ்ச்சிக்குப் போவதாகவும், தமக்கு ஏதும் தேவையில்லை என்றும் சொல்லிவிட்டார். நம் வீட்டுக்கு வந்தவரை அப்படி அனுப்பிவிட்டால் நம் பண்பாடு என்னாவது. டீ.ஆர்.ஓ அவரை வற்புறுத்தி டீ மட்டும் சாப்பிட்டுச் செல்லும்படி கேட்டுக்கொண்டார். பணியில் இருந்த ஆ.ஐ.யிடம் டீ கொண்டு வரச்சொன்னார்.

டீ வந்தபாடில்லை. கவர்னரோ பரவாயில்லை நான் போகிறேன் என்று சொல்ல, அதிகாரி பொறுமையிழந்து டீ வர ஏன் தாமதம் என்றறிய கவர்னர் தங்கியிருந்த அறையின் பின்பக்கக் கதவைத் திறந்திருக்கிறார். அங்கே இருந்த ஆர்.ஐ. முதல் தலையாரி வரை எல்லாரும் ஆளுக்கு ஒரு கப்பில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்திருக்கின்றனர். அப்போதுதான் நுழைந்த நான் அதிர்ச்சி அடைந்து இங்கே கவர்னருக்கு டீ வைத்திருந்தேனே எங்கே என்று கேட்க அதனை அமைச்சருடன் வந்த

கட்சிக்காரர்கள் சாப்பிட்டுவிட்டதாகவும் வேறு டீ வாங்க ஆள் அனுப்பியிருப்பதாகவும், சொன்னார்கள். அங்கே டீக்கடை ஏது. ஒரு கிலோமீட்டர் தள்ளிச்சென்றால் ஒரு சாதாரண டீக்கடை இருக்கிறது. நான் பின்பக்கமாக ஓடிப் பார்த்தால் அங்கே என்னிடம் வேலை செய்த தலையாரி டீ வாங்கிக்கொண்டு ஆசுவாசமாக வெற்றிலை போட்டுக் குதப்பிக்கொண்டு தலையைக் குனிந்தவண்ணம் எதையோ சிந்தித்துக்கொண்டு நடைபயின்றுவந்தார். அவரிடமிருந்து பிளாஸ்க்கைப் பிடுங்கிக்கொண்டு வந்து உள்ளே நுழைந்தால் கவர்னரோ, நிகழ்ச்சிக்கு நேரமாகிறது என்று போயே போய்விட்டார்.

இந்தக் களேபரத்தில் இசைக் கச்சேரிக்குச் சென்ற தாசில்தார் எப்படியோ கேள்விப்பட்டு ஆபீசுக்குப் போக அங்கே எல்லோரும் சொல்லாமல் கொள்ளாமல் எங்கு போனீர்கள் என்று வசவு வழங்க, அடித்துப் புரண்டு பங்களாவுக்கு வந்து சேர்ந்தார்.

பங்களாவிலேயே விசாரணை ஆரம்பமானது. துணை வட்டாட்சியரிடமும் என்னிடமும் நீங்கள் ஏன் இங்கிருந்து பார்க்கவில்லை என்று கோபித்துக்கொண்டார் அதிகாரி. நீங்கள்தானே என்னையும் ஆர்.ஐ.யையும் திருநாரையூரில் இருந்து அமைச்சரை வரவேற்கும்படி சொன்னீர்கள். நாங்கள் தேவையானதையெல்லாம் தனித்தனியாக ஏற்பாடு செய்துவிட்டுத்தானே போனோம் என்று தைரியமாக எதிர் கேள்வி கேட்டார். டி.ஆர்.ஓ.விற்கு எங்களைப் பற்றி நன்கு தெரியும். அதனால் சரியென்று போய்விட்டார்.

மறுநாள் காலையில் தொலைபேசியில் தாசில்தாருக்கு மாறுதல் வந்துவிட்டது. வருத்தப்பட்ட துணை வட்டாட்சியர், டி.ஆர்.ஓவிடம் உரிமையாக சண்டை பிடித்தார். ‘அவர் ஒரு அப்பாவி. அவரை நீங்கள் இப்படி பழி வாங்கியிருக்கவேண்டாம்’ என்று.

அப்புறம்தான் தெரிந்தது. இந்த ஒரு சம்பவத்திற்காக மட்டுமில்லை என்பது. தாசில்தார் சற்று முடியாதவரும்கூட. அதனால் மதியம் சாப்பிட்டவுடன்

சற்று நேரம் படுத்து ஓய்வெடுப்பது வழக்கம். அவர் தமக்குத் துணையாக ஒருவரை வைத்திருந்தார். அவரும் கம்பிக் கதவைப் பூட்டிவிட்டு படுத்துவிடுவார். படுத்ததுதான் படுத்தனர் கண்மறைவாக உட்புறமாகப் படுத்துத் தொலைக்க வேண்டியதுதானே. வாசலுக்கு நேராகப் படுத்துக் கொள்வர். அதிலும் வயதான முடியாத இருவரும் சற்று அப்படி இப்படியாக தூங்கியுள்ளனர். தாசில்தாரைப் பார்க்கவந்தவர் யாரோ கம்பிக் கதவு வழியாகப் பார்த்துவிட்டு கலெக்டருக்கு புகார் தெரிவித்துவிட்டனர். தாசில்தார் குடித்துவிட்டு விழுந்துகிடப்பதாக. போதாதா. இப்போது நடந்தது ஒரு நல்ல காரணமாகிவிட்டது. மாற்றிவிட்டார்கள்.

ஒரு விஷயம். நல்ல வேளை கவர்னருக்கு என் தலையாரி வாங்கிவந்த அந்த டீயைக் குடிக்கக் கொடுத்திருந்தால் இன்னும் என்னென்ன நடந்திருக்குமோ.

இன்னொரு சம்பவம். நான் ஆர்.ஐ.யாக இருந்த வரையில் பெரிய அதிகாரி வந்தால் பெரும்பாலும், ஏரியிலிருந்து மீன் பிடித்து வந்து தனியே சமையல் செய்து பரிமாறுவோம். அதேபோல்தான் கோழியும். இப்படியாக ஒரு அதிகாரி குடும்பத்துடன் வந்துவிட்டார். அதற்காக விரால் மீன் ஸ்பெஷலாக பிடித்துவந்து சமையல் செய்து பரிமாறப்பட்டது. இதற்கெல்லாம் எனக்கு ஒரு வயது முதிர்ந்த அலுவலக உதவியாளர் கைகொடுப்பார். அவருக்கு குஜராத்தி வங்காளி உட்பட பல பாஷைகள் தெரியும். அவரவரது மொழியில் பேசிக் கவர்ந்துவிடுவார். வி.ஐ.பி வந்தால் அவர் செல்லும் வரையிலும் என்னுடன் இருந்து வழியனுப்பிவிட்டு என்னை உட்கார்த்தி சாப்பிட வைத்துவிட்டுத்தான் செல்வார்.

அன்று அந்த அதிகாரிக்கு பரிமாறிவிட்டு வந்தவர் அய்யா அவ்வளவு மீன் வாங்கிக் கொடுத்திருந்தும் பத்தவில்லையே என்று அங்கலாய்த்தார். எனக்கு சமையல் செய்தவர் பேரில் சற்று சந்தேகம் வந்தது. இருந்தாலும் இப்படி ஒருநாளும் நடந்தது கிடையாது. நான் இன்னாரிடம்தான் கொடுத்தனுப்பினேன் என்று

சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு தலையாரி துப்புக் கொடுத்தார். “அய்யா காலையில் அவன் சைக்கிளில் ஒரு மீன் எடுத்துச்சென்றான்” என்று. ‘எந்த தப்பு செய்பவரும் குறைந்தது ஒரு சாட்சியத்தை விட்டுச்செல்வார்’ என்று போலீசில் சொல்வர்.

அது இங்கேயும் நடந்தது. அந்த தலையாரி மீனைக்கொண்டுபோய் சமைக்கக் கொடுக்கும்போது ஒன்றை எடுத்துக்கொண்டு விட்டார். அதனை சைக்கிள் கேரியரில் வைத்து தன் வீட்டுக்கு எடுத்துச் சென்றுள்ளார். அதனை ஒருவர் பார்த்துவிடுவார் என்று நினைக்கவில்லை. மறுநாள் தலையாரி வந்தார்.

நான் எதுவும் கேட்கவில்லை.
“அய்யா வணக்கம்” என்றார்.
நமக்குத்தான் நாக்கு துடித்துக் கொண்டிருக்கிறதே. “என்னப்பா மீன் நல்லா இருந்ததா? குடும்பத்துக்கு முழுவதும் மீன் பத்துச்சா”
அவரோ அப்பாவியாக “அப்படியெல்லாம் ஒண்ணுமில்லீங்களே”
“அய்யா, நீங்க சைக்கிளில் மீன் எடுத்துக்கொண்டு போனது, வீட்டிலே கொண்டுபோய் கொடுத்துட்டு பங்களாவுக்கு வந்தது எல்லாம் நான் பார்த்துட்டுதான் இருந்தேன்” என்று போட்டு வாங்கினேன்.
“அதுங்க அய்யா நீங்க மீன் கொடுத்தனுப்பினீங்களா நான் கேரிலில் வச்சி எடுத்துட்டுப்போம்போது லால்பேட்டை பாலத்துல கீழவிழுந்து மண்டை வெடிச்சு செத்துப்போயிட்ச்சிங்க. அதான் அதனை வீட்ல கொண்டுபோய் கொடுத்தேன்.”

வந்ததே கோபம் எனக்கு “என்ன எனக்கு விக்கிரமாதித்தன் கதை சொல்றியா” என்று கடிந்துகொண்டு ஒரு பேப்பரைக் கையிலெடுத்து நடந்ததை எழுதி அறிக்கையை அவரிடமே கொடுத்து வட்டாட்சியரிடம் அனுப்பிவிட்டேன்.

அவரோ தம் பேரில்தான் ரிப்போர்ட் போகிறது என்று தெரியாமல் ஏதோ தபால் நம்மிடம்

கொடுத்திருக்கிறார். நம்பேரில் ஆர்.ஐ.க்கு கோபம் தணிந்துவிட்டது என்று நினைத்து கடமையைச் சரியாகச் செய்துவிட்டார். அடுத்த நாளே அவருக்கு ஆப்பு வைத்துவிட்டார்கள் ஆபீசில்.

பக்கத்தில் இருந்த ஒரு கிராம நிர்வாக அலுவலர் ரொம்ப கண்டிப்பானவர். நேர்மையானவர். அதனால் வரிபாக்கி வைத்திருந்த ஒரு பெரிய பெருந்தனக்காரருக்கே சவாலாக இருந்தவர். அவரிடம் மாறுதல் செய்துவிட்டனர். நம்மாளு ஓடிவந்து எவ்வளவோ கெஞ்சியும் என் மனம் இறங்கவில்லை. பின் என்ன. நான் எந்த கீழ் நிலை அலுவலரிடமும் அல்லது பெருந்தனக்காரர்களிடமோ வசூல் செய்து செலவு செய்யவில்லை. என் காசைக் கொடுத்து மீன் வாங்கி அனுப்பினால் அது தலையாரி வீட்டு சமையலுக்கு போனால் எப்படி.

இதிலே இன்னொரு சுவாரசியமும் சேர்ந்துகொண்டது. மீன் திருடிய அந்த நபர் தன்னுடன் வேலைபார்த்த வேறொரு தலையாரிதான் தன்னை போட்டுக் கொடுத்துவிட்டார் என்று எண்ணி என்னிடம் அவர் இன்ன தப்பு செய்தார். அது எனக்குத் தெரியும். அதனால்தான் என்னை இப்படி காட்டிக்கொடுத்துவிட்டார் என்று முறையிட்டார்.

அதுஒன்றும் பெரிய தப்பு இல்லைங்க. அந்தத் தலையாரி மாலையில் சரக்கு வைத்துக்கொண்டு பெண்டாட்டியிடம் போய் தகறாரு செய்வது அடிப்பது. கிராமத்தில் அலம்பல் செய்வது என்று இருந்திருக்கிறார். நமது மக்களிடம் ஒரு குணம் உண்டு. எவனாவது குடித்துவிட்டு கலாட்டா செய்தால் அவன் என்ன நிதானத்திலா இருக்கான். அவனைப்போய் கண்டித்து என்ன செய்ய என்று சமாதானப் படுத்திக்கொள்வர். நம்மாளு ஒருநாள் போதை அதிகமாகி தன் மனைவியை இழுத்துவந்து அவர் கையில் துணியைச் சுற்றி எண்ணையும் ஊற்றி நெருப்பு வைக்க முயற்சி செய்திருக்கிறார். எப்படியோ அக்கம்பக்கத்தினர் தலையிட்டு காப்பாற்றியுள்ளனர். இந்த பிரச்சினையில் அந்த இனிய தகவல் கிடைத்துவிட்டது.

சம்பந்தப்பட்டவரை பெண்டாட்டியுடன் அழைத்துவந்து விசாரணை செய்தால் அப்படி ஏதும் நடக்கவில்லை என்றார். மனைவியோ கள்ளானாலும் கணவன், புல்லா(Full)னாலும் புருஷன் என்று காட்டிக் கொடுக்கவில்லை. ஆனால் இவரோ தம் மனைவிதான் ஆர்.ஐ.யிடம் புகார் தெரிவித்துவிட்டார் என்று நினைத்து மேலும் டார்ச்சர் செய்ய அவர் விட்டால் போதும் என்று கணவனை விட்டே ஓடிவிட்டார்.

# 21 தேர்தல் திருவிழா

தேர்தல் வந்துவிட்டாலே திருவிழாதான். அரசியல் கட்சிக்கல்ல. வருவாய்த் துறை அலுவலர்களுக்குத்தான். எப்படி என்கிறீர்களா?

பள்ளிக்குச் செல்லும் பிள்ளைகளுக்கு மழை, தேர்த்திருவிழா, முக்கியப் பிரமுகர் இறப்பு என்று எதிர்பாராத காரணங்களால் விடுமுறை அறிவிக்கப்பட்டால் எப்படி இருக்குமோ அப்படித்தான் வருவாய்த்துறையில் வேலைபார்க்கும் குமாஸ்தாக்களுக்கு. ஏன்?

1. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை பதிவேடுகள் தணிக்கைக்கு வைக்கும் சுமை இருக்காது.
2. மேலதிகாரிகளிடமிருந்து எந்த அவசரக் கடிதம் வந்தாலும் தேர்தல் பணி என்று சொல்லித் தப்பித்துக்கொள்ளலாம்.
3. பொதுமக்கள் தொல்லை அறவே இருக்காது. அவர்கள் கட்சி வேலையைப் பார்ப்பார்கள்.
4. பிரதி திங்கள் பொதுமக்கள் குறை தினம் போன்ற திட்டங்கள் கிடையாது.
5. வசூல் புள்ளி அந்த புள்ளி இந்த புள்ளி கரும்புள்ளி செம்புள்ளி என்று எதுவும் கேட்க மாட்டார்கள்.
6. இரவு பகல் என்று வேலை செய்தாலும். டிபன் சாப்பாடு என்று வேளைக்கு கிடைத்துவிடும். அதைவிட ஓவர் டைம் பார்த்ததற்கு சன்மானமும் கிடைக்கும்.
7. ஆகமொத்தம் தினசரி நடவடிக்கைகள் முழுவதும் முடங்கிப்போய் எந்த அவசரமும் இல்லாமல் இட்ட பணியைச் செய்தால் போதும்.
8. அதைவிட ஏதாவது தப்பு நடந்தால் அதிகாரிக்குதானே பொறுப்பு. நமக்கென்ன.

அப்புறம் யார்தான் தேர்தல் வந்தால் வரவேற்கமாட்டார்கள். இப்படியாகப்பட்ட

திருவிழாவில் அடிக்கும் கூத்துக்கள் சொல்லி மாளாது. அதில் ஒருசிலவற்றை மட்டும் சொல்லலாம் என்று எண்ணுகிறேன்.

நான் வேலைக்கு வந்த புதிது. ஒரு துணைக்கலெக்டர். அவரும் ஒரு உதவித் தேர்தல் அதிகாரி. தேர்தலுக்கு சில தினங்களுக்கு முன்னர் வாக்குச்சாவடிக்கு அனுப்பும் வாக்காளர் பட்டியல் தயார் செய்யப்படும் கடைசிப் பணி. தேர்தல் பணியில் ஈடுபடுபவர்கள் தங்கள் வாக்குகளை வேலைபார்க்கும் இடத்திலேயே செலுத்தவோ அல்லது தபால் மூலம் செலுத்தவோ வசதியாக முன்னதாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். அவர்களின் சொந்த வாக்குச்சாவடியில் அவர்கள் பேரால் யாரும் கள்ள ஓட்டு போட்டுவிடக்கூடாது என்பதற்காக தபால் ஓட்டு அனுப்பட்டதாயின் அவர்கள் பெயருக்கு எதிரில் 'PB' என்றும் பணிச்சான்று வழங்கப் பட்டிருந்தால் 'EDC' என்றும் பதிவு செய்ய வேண்டும் என்பது விதி

அந்தத் துணைக்கலெக்டரும், இரண்டு ஹெட்கிளார்க்கும் வேலை செய்து கொண்டிருந்தனர். அவருக்கு எடுபிடியாக நானும் இன்னொரு நண்பரும் அழைக்கப்பட்டோம். கேட்கும் கட்டுகளை எடுத்துக் கொடுத்து திரும்பப்பெற்று அடுக்கி வைப்பதுதான் எங்கள் வேலை. அப்படியென்றால் எடுபிடி என்பது சரிதானே.

ஒவ்வொரு பெயருக்கும் எதிரில் 'PB' அல்லது 'EDC' போடும் வேலை அவர்களுடையது. திடீரென்று அவர்களுக்கு, திருவிளையாடல் திரைப்படத்தில் வரகுண பாண்டியனுக்கு வந்ததுபோன்று ஒரு பெரும் பிரச்சினையில் பெருத்த சந்தேகம் வந்துவிட்டது. இந்தக் குறியீட்டை வாக்காளர் பெயரைத் தொடர்ந்து போடுவதா அல்லது பெயருக்கு முன்னால் போடுவதா என்பதுதான் அது. சட்டப் புத்தகத்தை ஆராய்ந்தனர். சட்டம் எழுதிய படுபாவிகள் இப்படியெல்லாம் சந்தேகம் வரும் என்று எதிர்பார்க்கவில்லை போலும். 'against the voter's name' என்று மொட்டையாக போட்டு விட்டிருந்தனர்.

யாரிடமெல்லாமோ தொலைபேசியில் பேசினர். அவர்களுக்குச் சாதகமான விளக்கம் தரவில்லையோ என்னவோ. எந்த ஆலோசனையும் ஏற்கப்படவில்லை. நேரம் கடந்து கொண்டிருந்தது. கடைசியாக அவர்களுக்குள்ளேயே ஒரு முடிவுக்கு வந்தனர்.

கன்னடத்து விருந்துக்கு போனானாம், வேறு மொழி கற்கமாட்டோம் என்று உறுதியெடுத்த தமிழன் ஒருவன். விருந்தில் பரிமாரிக்கொண்டிருந்தவர் சாதத்தை இலையில் கொட்டி “சாக்கா - பேக்கா” என்றானாம். மொழி தெரியாத நம் அப்பாவி அது ஏதோ பலகாரம் என்று எண்ணிக்கொண்டு “சாக்கில ரெண்டு பேக்கில ரெண்டு போடு” என்றானாம். அந்தக் கதையாக வாக்காளர் பெயருக்கு முன்னும் பின்னும் இரண்டு பக்கமும் பதிவு செய்யுங்கள் என்று சொல்லிவிட்டார்.

வாக்காளர் பட்டியலைப் பார்த்தவர்களுக்குத் தெரியும். அந்நாளில் மூன்று வரிசைகள் நெருக்கமாக இருக்கும். அதில் இரண்டு பக்கமும் போட்டால் ஒருவருடைய பதிவு இரண்டு பேருக்கானதாகத் தெரியும். இந்த முடிவை அறிவித்தவுடன் வேலை துவங்கும் சமயம். எனக்குப் பொருக்கவில்லை. அய்யா இரண்டு பக்கம் பதிவு செய்தால் பக்கத்து வரிசையில் உள்ள வாக்காளருக்கும் அந்தப் பதிவு குறிப்பிடுவதாக அமைந்துவிடாதா என்று அப்பாவியாக ஒரு கேள்வியைக் கேட்டுவைத்தேன். எப்போதுமே அதிகாரிகளிடம் ஒரு மிக நல்ல குணம் உண்டு. அவர்களுக்குக் கீழே உள்ளவர்கள் யாரும் ஆலோசனை சொல்லக்கூடாது. கோபம் வந்துவிடும். அப்படித்தான் நடந்தது அப்போதும்.

“ஏன்யா உன்னைய வடய எண்ணச்சொன்னா தொளைய எண்ணிக் கிட்டிருக்கே” என்று கடித்துவிட்டார். காதில் ஒரு துளியோண்டு ரத்தம். அப்புறம் ஏன் நான் வாயைத் திறக்கிறேன். அதற்குள் என்ன நினைத்தார்களோ மறுநாள் பார்த்துக் கொள்ளலாம் என்று எங்கள் இருவரையும் போகச்சொல்லிவிட்டனர். மறுநாள் எங்களைக்

கூப்பிடவில்லை. Against என்பதற்கும் In front of / before என்பதற்கும் வித்தியாசம் தெரியாமலே தேர்தல் பணி நடந்தால் என்ன செய்வது.

மற்றொரு சமயம் தேர்தல் அதிகாரி ஒருவர் எனக்கு ஒரு வேலை கொடுத்தார். வாக்குப் பெட்டிகள் வைக்கும் அறைக்கு நல்ல பெரிய பூட்டு வாங்கி வரவேண்டும் என்று சொன்னார். நான் போய் கோத்ரேஜ் கம்பெனியின் மிகப் பெரிய பூட்டு வாங்கி வந்தேன். அனால் அதிகாரிக்குத் திருப்தி இல்லை. தமக்கு பெரிய பூட்டுதான் வேண்டும் என்றார். நானும் அலையாய் அலைந்து பார்த்தேன். அதைவிட பெரியதென்றால் கம்பெனியில் சொல்லித்தான் செய்யவேண்டும் என்று கடைக்காரர் கிண்டலடித்தார். காட்டுமன்னார்கோயிலிலிருந்து கும்பகோணத்திற்கும் சென்று அலைந்து திரிந்தும் அவர் கேட்டது கிடைக்கவில்லை. “வஞ்சர மீன் இருகுன்றான், நெத்திலிமீன் இருகுன்றான், சுறாமீன் இருகுன்றான், திமிங்கிலம் கூட இருகுன்றான் நீங்க கேட்ட ஜாமீன் மட்டும் கிடைக்கல. ஏன் கடலலையே இல்லையாம்” – என்ற கதைதான்.

திண்டுக்கல்லுக்கோ அங்கும் கிடைக்கவில்லை என்றால் அலிகாருக்கோ போக சட்டம் இடம் கொடுக்கவில்லையோ என்னவோ அங்கு போய் வாங்கச்சொல்லவில்லை அந்த அதிகாரி. தேர்தல் துணை வட்டாட்சியரோ அதிகாரியின் முன் தாக்குப்பிடிக்க முடியாமல் திணறினார். அதிகாரி கடைசியில் ஒரு வார்த்தை சொன்னார். கோயிலில் எல்லாம் பூட்டு தொங்குமே அதுமாதிரி பெரிய பூட்டு என்றார். அத்தகைய பூட்டுகள் அளவில்தான் பெரிதாக இருக்குமே தவிர சாதாரணமாக ஒரு கம்பியை வைத்து திறந்துவிடலாம். பெரிய பூட்டு என்று சொல்லி எங்கள் தலை கிறுகிறுக்க வைத்தார் அந்த அதிகாரி. கடைசியில் ஒரு நாட்டுப் பூட்டினை பெரியதாக வாங்கிவந்து காட்டினோம். அவர் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை என்றாலும் அதில் பாதி இருந்தது அது. முற்றிலும் துணி சுற்றி அரக்கு சீல் வைத்து 24 மணி நேர போலீஸ் பாதுகாப்பு போடப்போகும் பூட்டுக்கு அவ்வளவு அலைச்சல்

தேவையா என்பதுதான் கடைசிவரை விளங்கவில்லை.

பார்லிமெண்ட் தேர்தல் என்றாலே சிதம்பரம் தொகுதிக்கான அனைத்து வாக்குப் பெட்டிகளும் சிதம்பரம் அரசு கலைக்கல்லூரியில் வைத்துப் பாதுகாக்கப்படும். வாக்கு எண்ணுவதும் அங்குதான். முதல் தளத்தையும் இரண்டாம் தளத்தையும், ஆறு சட்ட மன்றத் தொகுதிகளுக்கும் பிரித்துக் கொடுத்துவிடுவர். வாக்குப் பதிவு முடிந்தவுடன் அந்தந்த வாக்குச் சாவடியிலிருந்தும் பகுதி அலுவலர்கள் பெட்டிகளைப் பெற்றுக்கொண்டு நேரடியாக அங்கே வந்துவிடுவர். அந்தப் பகுதியில் வாக்குப் பதிவு தொடங்கியது முதல் வாக்கு எண்ணி முடித்து கடைசியாகப் பெட்டிகள் கிடங்கிற்கு கொண்டு செல்லப்படும் வரையிலும் போலீஸ் பாதுகாப்பு செய்யப்பட்டுவிடும்.

அந்த இடத்தை ஒரு மாதம் முன்னதாகவே தேர்தல் பார்வையாளர், மாவட்ட ஆட்சியர், காவல் துறையின் உயர் அதிகாரிகள், பொதுப்பணித்துறை உயர் அதிகாரிகள் என்று பலரும் பார்வையிட்டு பாதுகாப்பு, குடிநீர் கழிப்பறை வசதி உட்பட சகல வசதிகளையும் உறுதி செய்துகொண்டு தேர்தல் ஆணையத்திற்கு அறிக்கை அனுப்பி அங்கீகாரம் பெற்றபின்னர்தான் வாக்கு எண்ணுமிடமாக அறிவிக்கப்படும்.

இப்படிப்பட்ட நிலையில் சகல ஏற்பாடுகளும் முடிந்து வாக்குப் பதிவும் முடிந்து ஒரு சில மணி நேரங்களில் பெட்டிகள் வரும் என்ற சூழ்நிலை. ஒரு தேர்தல் பார்வையாளர் வந்தார். கட்டிடத்தைச் சுற்றிப் பார்த்தார். கடைசியாக மொட்டை மாடிக்குச் சென்றார். பெரிய தண்ணீர் டாங்க் அவரது கவனத்தைக் கவர்ந்தது. சின்னஞ்சிறு உலகம் நாகேஷ் கணக்கில் சிந்தித்தார். அதில் தண்ணீர் இருப்பதால் அது இடிந்தால் அதிலுள்ள தண்ணீர் வழிந்து வாக்குப் பெட்டிகள் வைக்கும் இடங்களில் சேதம் அடைந்துவிடும் என்றும் அதனால் அதில் உள்ள தண்ணீரை முழுவதும் காலி செய்ய வேண்டும்

என்று உத்திரவிட்டதுடன் அருகிலேயே நின்றுகொண்டு திறந்துவிட வைத்துவிட்டார்.

உள்ளே வேலையாக இருந்த எங்களுக்கு மழைபெய்வதுபோன்று தொடர்ந்து சத்தம் கேட்கவே இந்த நேரத்தில் மழைவந்து வேலையைக் கெடுக்கிறதே என்று வெளியே வந்து பார்த்தால் கட்டிடத்தின் நாலா புறமும் தண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது.

கீழே வந்த பார்வையாளருக்கு திடீர் ஞானோதயம் வந்தது. அதிகாரிகளை அழைத்தார். இங்கு வேலை பார்க்கும் எல்லாருக்கும் உடனடியாக குடிநீர் ஏற்பாடு செய்யுங்கள் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். அவர் கடமை முடிந்துவிட்டது. அப்போது இரவு மணி பதினொன்று.

ஆர்.டீ.ஓவும் தாசில்தாரும் பெருமுயற்சிக்குப்பின்னர். சிதம்பரம் நகர சேர்மனைத் தொடர்புகொண்டு விபரம் தெரிவித்தனர். அந்த அர்த்த ராத்திரியில் அவர் யார்யாரையோ பிடித்து நகராட்சி தண்ணீர் டாங்கர் டிரைவரை வரவழைத்து தண்ணீருக்கு ஏற்பாடு செய்துவிட்டார். இரண்டு மூன்று டாங்கர்களில் தண்ணீர் வந்து நின்றுவிட்டது. பகலெல்லாம் அலைந்து திரிந்து வாக்குச்சாவடிகளைப் பாதுகாத்து பெட்டிகளை எடுத்துவந்த ஆயிரத்துக்கு மேற்பட்ட அலுவலர்களும் காவலர்களும் அங்கே பணியில் ஈடுபட்டிருந்தவர்களும் என்று பலரும் தங்கள் ஆயாசம் தீர தண்ணீரைக் குடித்து தாகசாந்தி செய்துகொண்டனர். மறுநாள் காலையிலேயே பலருக்கு சுரம் ஜலதோஷம் என்று வந்துவிட்டது. அந்த ராத்திரியில் எந்த இடத்திலிருந்து தண்ணீர் பிடித்துவந்தனரோ. அதிகாரிகளின் எதேச்சாதிகார முடிவுகள் இப்படித்தான் முடியும் என்பதற்கு இது ஒரு உதாரணம்.

எனக்கு ஒரு சந்தேகம். அந்த கல்லுரியில் பயிலும் ஆயிரக்கணக்கான மாணவர்கள் இத்தனை ஆண்டுகளாக அந்தத் தண்ணீர் தொட்டியில் சேமிக்கப்படும் தண்ணீரைத்தானே பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அத்தனை ஆயிரம்

மாணவர்களுக்கு தொட்டி இடிந்து பாதிப்பு வந்தால் பரவாயில்லையா. மாணவர்களின் மனித உயிரைவிடவா வாக்குப் பெட்டிகள் மதிப்பு வாய்ந்தவை. அட இந்த வாக்குப்பெட்டிகள் அழிந்துபோனால்தான் என்ன. மறுதேர்தல் நடத்திவிட்டால் போகிறது. இவ்வளவு பாதுகாப்பையும் மீறி வேறு அசம்பாவிதம் நடந்துவிட்டால் என்ன செய்திருப்பார். அதற்கு யார் கியாரண்டி.

பொதுவாக தேர்தல் பார்வையாளர்கள் வரும்போது அவருக்கு ஒரு தாசில்தாரை உதவியாக நியமித்துவிடுவர். மாவட்ட ஆட்சியர் கூட்டம் நடத்தி பார்வையாளர்கள் எந்த குறையும் சொல்லாத அளவில் கவனித்துக் கொள்ளவேண்டும் என்று கடுமையான அறிவுரைகள் வழங்கிவிடுவர். பார்வையாளர் பயன்பாட்டுக்கு என்று புதிதாக பிரிட்ஜ், டி.வி., கம்யூட்டர், இத்தியாதிகளெல்லாம் ஏற்பாடு செய்வதுகூட உண்டு. அப்புறம் என்னாகும் என்பது தெரியாது.

ஒரு பார்வையாளர் வந்தார். அவர் தாம் சுத்த சைவம் என்றும் மற்ற பார்வையாளர்களைப் போன்று தமக்கு செலவளிக்க வேண்டாம் என்றும் தெரிவித்துவிட்டார். கடைசியில் அவர் பிரிட்ஜ் ஏற்பாடு செய்யச்சொல்லி அதில் பலவகைக் காய்கறிகளை முழுக்க முழுக்க அடுக்கி வைத்துக்கொண்டு வெறும் ஜூசாக வடித்துச் சாப்பிட்டார். வேறு எதுவும் சாப்பிடவில்லை. அவர் திமிங்கிலக் கறி கேட்டிருந்தால்கூட அதைவிட குறைந்த செலவில் ஏற்பாடு செய்திருக்கலாம். போதாக்குறைக்கு அவர் பங்களாவைவிட்டு வெளியே போகவே இல்லை.

ஒரு பார்வையாளர் வந்தார் காலையில் அவர் வாக்கிங் போகும்போது அவருக்கு பிளாக் கேட் ரேஞ்சில் ஒரு வருவாய் ஆய்வாளர் கூடவே நடக்க வேண்டும். அவருக்கு வாலாக ஒரு தலையாரி செல்வார். அவரிடம் ஒரு கூடையில் குறைந்தது நாலைந்து தண்ணீர் பாட்டில்கள் இருக்கும். பார்வையாளர் கை நீட்டும் போதெல்லாம் ஒரு

தண்ணீர் பாட்டிலைத் தரவேண்டும். அதன் சீல் உடைபட்டிருக்கக்கூடாது. அவர் தாமே திறந்து ஒரு வாய் தண்ணீர் குடித்துவிட்டு வீசிவிடுவார். அவ்வளவு ஆடம்பரம். ஆனால் இவரெல்லாம் தம் வீட்டில் இப்படித்தான் சொந்தக் காசில் குடிப்பாரோ அல்லது முனிசிபல் தண்ணீரைக் குடிப்பாரோ?

மற்றும் ஒரு பார்வையாளர் வந்தார். அவர் வந்தவுடன் மறுநாள் கிளம்பிப் போய்விட்டார். அடுத்து வரும்போது தம்முடன் ஒரு சமையல்காரரை அழைத்து வந்துவிட்டார். அவருக்கும் சகல அந்தஸ்த்துடன் சோடச உபசாரங்கள் நடந்தது என்றால் நம்பவா போகிறீர்கள். அவர் வந்துபோன செலவு எல்லாமும் அரசாங்க தேர்தல் செலவில்தான்.

ஒரு பார்வையாளர் அவர் தமிழர். அவரை வெளி மாநிலத்தில் பணியில் அமர்த்தியிருந்தது அரசு. அவருக்கு தேர்தல் பார்வையாளர் பணி. அவர் வந்தார் கோயில் குளம் என்று சுற்றினார். தமக்கு அமர்த்தப்பட்ட வீடியோகிராப்பர் சரியில்லை என்று சொல்லி தாமே ஒருவரை நியமித்துக்கொண்டார். கடைசியில் தாம் ஒரு புத்தகம் எழுதியிருப்பதாகவும் அதனை அரங்கேற்ற வேண்டும் என்றும் சொல்லி அரசாங்க செலவிலேயே பிரிண்ட் செய்து கோவிலில் வைத்து பூசை புனஸ்காரங்களுடன் அரங்கேற்றிக்கொண்டார். வீடியோ உட்பட செலவு செய்ததாக ஒரு தொகையையும் கைப்பற்றிக்கொண்டார் அவர்.

ஒரு பார்வையாளர் நல்ல பிள்ளையாக வலம் வந்தார் ஓரிரு நாட்கள். தேர்தல் நெருக்கம். தமக்கு பட்டுப் புடவைகள் வேண்டும் என்று கேட்டு வாங்கிக்கொண்டார். அடுத்து புலிப்பால் வேண்டும் என்று கேட்பது போல் 14 கேரட்டில் தங்க நகை வேண்டும் என்றார். பிரபல நகைக்கடைகளில் கேட்டால் சிரிக்கிறார்கள். அப்படி எதுவும் தயாரிப்பதுகூட இல்லை என்று சொல்லி, தேவையானால் 22 கேரட் நகைகள் வாங்கிக் கொள்ளலாம் என்றால் கேட்கவே இல்லை. கடைசியில் எங்கள் ஊரில்போய்

வாங்கிக்கொள்ளுகிறேன் என்று சொல்லி ஒரு தொகையைப் பெற்றுக்கொண்டு போய்விட்டார். அவருக்கு வாங்கிக்கொடுத்த செல்போனைக்கூட திரும்ப ஒப்படைக்கவில்லை.

பிடிவாதமாக இந்தியில் பேசி பாடாய்ப்படுத்திய பார்வையாளார்கள் உண்டு. அவர்களுக்கு உண்மையில் ஆங்கிலம் தெரியாதோ என்னவோ.

அங்கே இங்கே சுற்றுலா போன அதிகாரிகள் பலர் உண்டு. தேர்தல் பார்வையாளர் டில்லியிலிருந்து போன் செய்வார். தாம் இன்ன ஃப்ளைட்டில் வருவதாகவும் தாம் நேராக அருகில் உள்ள திருப்பதிக்கு போய் வரவேண்டும் என்றும் சொல்லிவிடுவார். ஏதோ திருப்பதி, கடலுருக்கு அடுத்த கிராமம் என்பது போன்று. ஒரு பார்வையாளர் மதுரைக்கு வந்து இறங்கிக்கொண்டு சுற்றுலா முடித்துவிட்டு அப்படியே கொஞ்சம் தேர்தல் கண்காணிப்பு வேலையையும் செய்துவிட்டு போவார். இப்படி பல பார்வையாளர்கள் ஜாலி டிரிப்பாகத்தான் வந்து சென்றனர். தற்போதுதான் பத்து ஆண்டுகாலத்தில் திருந்தியுள்ளனர். இதற்கெல்லாம் மீடியாக்களின் புண்ணியம்தான் என்றால் மிகையாகாது.

தேர்தலுக்கு முன் தினம் எல்லா வாக்குச்சாவடிக்கும் பொருட்கள் அனுப்பப்படும் நிலையில் வந்து நின்றுகொண்டு வாக்குப் பதிவுக்கான பொருட்களை மூட்டையை அவிழ்த்து சரிபார்க்கிறேன் பேர்வழி என்று படுத்திய பார்வையாளர்கள் உண்டு. வாக்குப் பதிவுப் பொருட்கள் அனைத்தும் ஓரிரு தினம் முன்னதாகவே சரிபார்த்து அடுக்கிவைத்து சீல் வைத்து காவல் துறை உதவியுடன் பாதுகாக்கப்படும். அந்த நேரத்தில் வந்து தணிக்கை செய்தால் அவர்கள் கௌரவம் என்னாவது.

தேர்தல் ஆணையம் பார்வையாளர்களைக் கண்காணிக்கத் தனியே ஒரு ஏஜென்சியை ஏற்பாடு செய்தால்தான் அவர்கள் அடிக்கும் கொட்டம் வெளியில் தெரியும்.

வாக்குப் பதிவுக்கு வரும் அலுவலர்கள் இருக்கிறார்களே அவர்கள் அடிக்கும் கூத்து பலவகை. நான் விருத்தாசலம் தாலுக்காவில் பணியில் இருந்த நேரம் அடுத்துள்ள பள்ளிக்கூடத்தில் வந்து தங்கியிருந்த சில அலுவலர்கள் தங்களுக்கு அதிகாலையில் வென்னீர் வேண்டும் ஷேவ் செய்ய பொருட்கள் வேண்டும். என்றெல்லாம் பிரச்சினை செய்தனர். முன்தினம் முதல் சமாளித்த கிராம நிர்வாக அலுவலர்களுக்கு அவர்கள் படுத்திய பாடு தாங்காமல் என்னிடம் வந்து முறையிட்டார். நான் என் உதவியாளர் ஒருவரை அனுப்பி வைத்து இன்னும் ஐந்து நிமிடத்திற்குள் வாக்குப் பதிவுக்குத் தயாராக இருக்காவிடில் அவர்கள் பேரில் தேர்தல் பணியில் குறைபாடு தொடார்பாக காவல் துறை மூலம் நடவடிக்கை உள்ளிட்ட நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்றும், அலுவலகத்தில் தயார் நிலையில் உள்ள ரிசர்வ் அலுவலர்களைக்கொண்டு வாக்குப் பதிவு நடத்தப்படும் என்றும் பின்னாடியே சஸ்பென்ஷன் வருகிறது என்றும் கடுமையாக எச்சரித்தபின்னர் வாலைச் சுருட்டிக்கொண்டு வேலை பார்த்தனர். இப்படிப் பல அலுவலர்கள் வரும்போதே தமக்குத் தேவையானதை கொண்டு வராமலும், காசும் கொடுக்காமலும் கிராம நிர்வாக அலுவலர்களையும், தலையாரிகளையும் வாங்கித் தரச்சொல்லி டார்ச்சர் செய்வர்.

வாக்குப் பதிவுக்கான பொருட்கள் பட்டியலில் குண்டூசி, நூல், கோந்து டிராயிங் பின் உட்பட பல பொருட்கள் பட்டியலிட்டு வழங்கப்படும். வாக்குப் பதிவு முடிந்தபின்னர் திரும்பப் பெறவேண்டிய பட்டியலிலும் இந்தப் பொருட்கள் இடம்பெற்றிருப்பதுதான் அபத்தம். சில அலுவலர்கள் பென்சில் கோந்து எரிந்த மெழுகுவார்த்தி உட்பட இந்த பொருட்களைக்கூட கணக்கிட்டு பொறுப்பாக வாங்கிக்கொண்டுவந்து ஒப்படைப்பர்.

வாக்குப் பதிவுக்கு வரும்போதே சில அலுவலர்கள் வீட்டிலிருந்து மகாத்மா காந்தியின் புளுக்கைப்

பென்சில், எரிந்த சிறிய மெழுகுவர்த்தித் துண்டு, முதற்கொண்டு கொண்டுவந்து போட்டுவிட்டு வழங்கப்பட்டதை லவட்டிக்கொண்டு போனவர்கள் உண்டு. பெரிய பெரிய அளவில் கொள்ளையடித்து புகழ் பெறுபவர்களைக் கொண்ட இந்த திருநாட்டில் இப்படி அல்பத்தனமாக ஆசைப்படுபவர்களை என்ன சொல்ல.

ஆரம்ப காலத்தில், முதல் பயிற்சிக்கூடத்திலேயே அவரவர்களுக்கு எந்த வாக்குச் சாவடியில் பணி என்பது தெரிவிக்கப்பட்டுவிடும். சிலர் தங்களுக்கு அந்த ஊரில் என்னென்ன வசதிகள் கிடைக்கும் அல்லது கிடைக்காது என்பதை உறுதி செய்துகொண்டு அதற்குத் தக்கபடி மாற்றிக் கேட்பர். இதற்காக பல தரப்பட்ட சிபாரிசுகள் வந்ததுண்டு. இவர்களின் தேர்தல் பணி எப்படி நேர்மையாக இருக்கமுடியும்.

ஒரு தேர்தலின்போது ஒரு குறிப்பிட்ட ஊரில் மட்டும் அமைந்திருந்த சுமார் பத்துக்கு மேற்பட்ட வாக்குச்சாவடிகளில் 99 சதவீதம் வாக்குப் பதிவு நடந்திருந்தது. பிற்பாடுதான் தெரிந்தது. அந்த ஊரில் பணிக்கு வந்தவர்கள் அனைவரையும் விருந்துவைத்துக் கவனித்துவிட்டு வெளிநாட்டில் இருக்கும் வாக்காளர்கள் உட்பட எல்லாருக்கும் வாக்குப் பதிவு செய்யப்பட்ட விபரம். 100 சதவீதம் பதிவு செய்துவிட்டால் சந்தேகம் வந்துவிடும் என்று கருதி 99ல் நிறுத்திக்கொண்டனர் போலும். அந்த ஊர் கட்டுப்பாட்டின்படி இன்ன கட்சிக்கு என்று முடிவு செய்துவிட்டால் யாரும் மாற்றிப் போடமாட்டார்கள் அந்நாளில்.

ஊர் இரண்டுபட்டால்தானே கூத்தாடிக்குக் கொண்டாட்டம். ஒரு ஊரில் இரண்டு பிரிவுகளுக்கு இடையில் சச்சரவு ஏற்பட்டு சமாதானக் கூட்டங்கள் பாதுகாப்பு எல்லாம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சில காலம் கழித்து தேர்தல் வந்தது. அப்போது தேர்தல் பாதிக்கப்படக்கூடாது என்று கருதி அந்த ஊருக்கான வாக்குச்சாவடியை கடைசி நேரத்தில் இரண்டாகப் பிரித்து அந்தந்தப் பகுதியிலும் ஒரு

வாக்குச்சாவடியாக அமைத்துவிட்டனர். ஆனால் சமாதானமாகிவிட்ட அந்தப் பிரிவினர் இருவரும் ஒரே வாக்குச்சாவடியில் சென்று வாக்குப் பதிவு செய்துவிட்டனர். ஒரு வாக்குச் சாவடியில் பெயருக்கு ஒருசிலர் வாக்குப் பதிவு செய்திருந்தனர். இது விபரம் தெரியமால் வாக்குப் பெட்டிகள் வந்தவுடன் வாக்குப் பதிவான விபரங்களை ஒருங்கிணைக்கும் பணியில் இருந்த நான் அந்த ஊருக்கு பதிவு செய்யும்போது ஒரு வாக்குச் சாவடியில் 5 சதவீதமும் அடுத்த வாக்குச்சாவடியில் 140 சதவீதமும் பதிவானது போன்று வந்ததைக் கொண்டு நெடுநேரம் தலையைப் பிய்த்துக்கொண்டேன். பின்னர்தான் தெரிந்தது. இரண்டாகப் பிரித்த விபரம் தெரியாமல் வாக்குச்சீட்டுக்களை மொத்தமாக இரண்டு வாக்குச்சாவடிகளுக்கும் அனுப்பிய விபரம்.

வாக்குப் பதிவு அலுவலர்கள் சில சமயம் என்ன எழுதுகிறோம் என்பது தெரியாமல் அதிகாரிகள் அவசரப்படுத்தும்போது மொத்தத்தை நிகரத்திலும் நிகரத்தை மொத்தத்திலும் என்று மாற்றி மாற்றி எழுதி நம் மண்டை காயவைப்பர். இப்படியாக ஒரு வாக்குச் சாவடி அலுவலர் அதே கட்டிடத்தில் உள்ள வேறு வாக்குச்சாவடி அலுவலரின் கணக்கைப் பார்த்து அப்படியே ‘காப்பி’ அடித்து அனுப்பிவிட்டார்.

சில அலுவலர்கள் சீல் வைக்க வேண்டிய முக்கியமான கவர்களுக்குப் பதிலாக குப்பைக் காகிதங்கள் பொருட்கள் அடங்கிய உறைக்கு சீல் வைத்து பயபக்தியுடன் ஒப்படைப்பர். ஆனால் முக்கிய ஆவணங்கள் திறந்த நிலையில் கிடக்கும்.

அப்போதெல்லாம் வாக்குப் பெட்டியினைத் திறந்து கொட்டியவுடன் ரூபாய் நோட்டுக்கள், விபூதி பொட்டலம், கோரிக்கை மனுக்கள் எல்லாம் கிடைக்கும். நம் மக்களைச் சொல்வதா, அல்லது கண்காணிப்பு பணியில் இருந்த அலுவலர்களைச் சொல்வதா.

வாக்குப் பதிவு அலுவலர்களுக்கு மூன்று முறை வகுப்பு நடைபெறும். பெரிய மண்டபத்தில் ஏற்பாடு

செய்யப்படும். உயர் அலுவலர்கள் எல்லாம் வந்து பயிற்சி வகுப்பில் கலந்துகொண்டு லெச்சர் கொடுப்பர். ஒரு சிலர் மட்டுமே என்ன சொல்கிறார்கள் என்று கவனிப்பர். பெரும்பாலானவர்கள் நாற்காலிகளை வட்டவட்டமாகப் போட்டுக்கொண்டு தங்கள் சொந்தக் கதைகளைப் பேசிக்கொண்டிருப்பர். கூட்ட முடிவில் சந்தேகம் இருந்தால் கேளுங்கள் என்பார் பயிற்சியாளர்.

சிறிது அமைதிக்குப் பின்னர் பலர் கேட்கும் ஒரே கேள்வி தங்களுக்கான தேர்தல் பணிச் சம்பளம் எப்போது தரப்படும், எவ்வளவு தரப்படும் போன்றதுதான். தேர்தல் நடத்துவது தொடர்பான எந்த சந்தேகமும் கேட்கமாட்டார்கள். அவர்களுக்கு ஒரு நம்பிக்கை நம்முடன் வரும் மற்ற மூன்று அல்லது நான்கு அலுவலர்கள் நன்கு தெரிந்து வைத்திருப்பார் அவர்களை வைத்து சமாளித்துக் கொள்ளலாம் என்று. சில சமயம் துரதிருஷ்டவசமாக, நான்கு வியாபாரிகள் சோறு வடித்த கதையாக எல்லாரும் ஒன்றுபோல் அமைந்து பகுதி அலுவலரின் கழுத்தை அறுத்ததும் உண்டு.

அது என்ன சோறு வடித்த கதை என்கிறீர்களா. வியாபாரத்திற்குப் போன இடத்தில் நாலைந்து பேர் கூடினர். அவர்கள் அனைவரும் தனித்தனியே சமையல் செய்வானேன். ஒன்றாகவே உலை வைத்துக்கொண்டால் சிக்கனமாகப்போயிற்று என்று முடிவு செய்து உலை வைத்தனர். ஒவ்வொருவரும் தங்கள் பங்குக்கு ஒரு பிடி அரிசி உலையில் இடவேண்டும் என்று முடிவானது. ஒவ்வொருவரும். தம் கணக்கிற்கு அரிசி போட்டதாகப் பாவனை செய்தால் போயிற்று மற்றவர்தான் அரிசி போடுகிறாரே அதில் தமக்கு பங்கு வந்துவிடப்போகிறதே என்ற மிதப்பில் ஒவ்வொருவரும் வெறும் கையில் முழம் போட்டுவிட்டனர். கடைசியில் அடுப்பிலிருந்து இறக்கிப் பார்த்தால் ஒரு பருக்கைகூட இல்லை அந்த நிலைதான் மேலே சொன்னது.

ஒரு முறை தபால் ஓட்டுக்கள் வாக்காளர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. வாக்குச் சீட்டுக்களை அதிகாரி முன்னிலையில் உரிய கவர்களில் போட்டு மூடி ஒட்டி அதன் தொடர்புடைய ஆவணங்களை இணைத்து தனி கவரில் போட்டு வாக்காளர் முகவரிக்கு தனி கவரில் அனுப்பி வைக்க வேண்டும். வாக்காளர் அக்கவரைப் பிரித்து அதில் உள்ள ஆவணங்களின் அடிப்படையில் வாக்குப் பதிவுசெய்து உரிய கவரில் இட்டு தபால் பெட்டியில் போட்டால் மிகச் சரியாக வந்து சேர்ந்துவிடும். எந்த குழப்பமும் இல்லாத அளவில் மூன்று கவர்கள் வழங்கப்படும். வாக்காளர்களுக்கு அனுப்பவேண்டிய கடைசி கவரில் போட வேண்டிய அனுப்புனர் (தேர்தல் அலுவலர் முத்திரையை) முத்திரையை பெறுநர் இடத்தில் அடித்து தபாலில் சேர்த்துவிட்டார். போஸ்டாபீசில் அனுபவம் வாய்ந்த அந்த அலுவலருக்கு ஏதோ சந்தேகம் வந்துவிட்டது. மறுநாள் காலையில் போன் செய்துவிட்டார். இப்படி வந்துள்ளதே என்ன என்று. அவ்வளவுதான் அலரிப் புடைத்துக்கொண்டு ஓடிப்போய் அனைத்து கவர்களையும் வாங்கி வந்து சரிசெய்து மீண்டும் அதிகாரியே எடுத்துச்சென்று தபாலில் போட்டார்.

ஒரு சில தபால் ஓட்டுக்களைப் பிரிக்கும்போதே தமாஷாக இருக்கும். வாக்குசீட்டிளை ஒரு கவரில் போட்டு ஒட்டி அனுப்புவதற்குப் பதிலாக வாக்குச்சீட்டு வாயைப் பிளந்துகொண்டு முழித்துக்கொண்டிருக்கும் அதற்குப் பதிலாக அறிவுரைக் கடிதங்கள் போன்றவை எல்லாம் கவரில் வைத்து சில சமயம் சீல் கூட வைத்து இணைத்து அனுப்பப்பட்டிருக்கும்.

இந்த தபால் ஆபீஸ்காரர்கள் இருக்கிறார்களே அவர்கள் நுல் பிடிக்கும் அழகே அழகுதான். ஒவ்வொரு தேர்தல் நடத்தும் அலுவலருக்கும் ஒரு சீக்ரட் சீல் வழங்கப்படும். வாக்கு எண்ணி முடித்த 24 மணி நேரத்திற்குள் அதனை சீல் வைத்து பார்சலில் புதுதில்லிக்கு அனுப்பி வைத்துவிட்டு அந்த விபரத்தையும் தந்திமூலம் தெரிவிக்க வேண்டும்.

ஒரு முறை தேர்தல் முடிந்து அந்த சீக்ரட் சீலை ஒரு மரப் பெட்டியில் வைத்து அதனை கேன்வாஸ் துணியில் பொதிந்து சுற்றிலும் அரக்கு சீல் வைத்து தபாலாபீசில் கொண்டுபோய் கொடுத்தால் அதனை வாங்கிப் பார்த்த அதிகாரி ஓரங்களில் சீல் வைத்தால் போதாது பக்கம் பக்கத்தில் சீல் வைக்க வேண்டும் என்று திருப்பித் தந்துவிட்டார். அடுத்து ஆபீசுக்கு ஓடிப் போய் கூடுதல் அரக்கு சீல்கள் வைத்து கொண்டு வந்து கொடுத்தால் அப்போதும் திருப்தி அடையவில்லை. இரண்டு அங்குல இடைவெளிக்குள் இருக்க வேண்டும் என்று தெரிவித்து திருப்பிக் கொடுத்துவிட்டார். மீண்டும் ஓடி விஷயத்தை அதிகாரியிடம் சொன்னவுடன் அவர் சிரித்துக்கொண்டே ஒரு அங்குலத்திற்கு ஒரு சீல் வைத்துவிடுங்கள் என்று சொல்லிவிட்டர். அடுத்து பெரியம்மை வார்த்த முகம் போன்று அட்ரஸ் தவிர எல்லா இடங்களிலும் சீல் தெரியும்படி கொண்டுபோய் கொடுத்தவுடன் அதனை புரட்டிப் புரட்டிப் பார்த்தார். அது இன்ஷூர்டு பார்சல் என்றவுடன் அவருக்கு பயம் வந்துவிட்டது போலும். அடுத்து பெரிய அதிகாரியிடம் கொண்டு போய் காண்பித்தார்.

அவர் அதனை வாங்கிக் குலுக்கிப் பார்த்தார். உடனே உள்ள இருப்பது ஆடுகிறது என்று சொல்லி திருப்பித் தந்துவிட்டார். நாங்கள் ஆட்டிப் பார்த்தால் எதுவும் ஆடவில்லை. ஆனால் பிடிவாதமாக மறுத்துவிட்டார். மீண்டும் அதனை எடுத்துப்போய் அலுவலகத்தில் ஒப்படைத்து அந்த பண்டலைப் பிரித்து உள்ளே குப்பை காகிதங்களைத் திணித்து மீண்டும் முன்போலவே அரக்கு முத்திரைகள் வைத்து கொண்டு வந்து கொடுத்தால் மதியம் ஆகிவிட்டது. வாங்கமாட்டேன் என்று சொல்லிவிட்டனர். எங்கள் அதிகாரிக்கு வந்தது கோபம். தொலைபேசியில் கூப்பிட்டு தலைமைத் தேர்தல் ஆணையருக்கு புகார் அனுப்பிவிடுவேன் என்று ஒரு பிடி பிடித்துவிட்டார். உடனே வாயை மூடிக்கொண்டு வாங்கிக்கொண்டு ரசீது கொடுத்துவிட்டார் அந்த அதிகாரி. “அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவமாட்டான்” என்று சொல்வது இதுதான் போலும்.

# 22 வி.ஏ.ஓக்கள் பலவிதம் ஒவ்வொருவரும் ஒரு விதம்.

ஒரு வி.ஏ.ஓ. அவர் சாதாரணமானவர் அல்ல. எதையும் ரொம்ப வேகமா கற்பனை செய்துக்குவார். ஒரு உதாரணம். தூறல் போட்டாலும் போதும். சின்னஞ்சிறு உலகம் நாகேஷ் கணக்கில் மழை வெள்ளமாகி, வாய்க்காலில் தண்ணீர் வந்து அது தம் ஊரில் புகுந்துவிட்டால் என்ன செய்வது. உடனே வெள்ள நிவாரணம் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று வந்து நிர்ப்பார்.

அதுவும் நேராக என் ஆபீசிற்குள் நுழைந்துகொண்டே “அய்யா என்ன செய்யப்போறீங்க என்ன ஏற்பாடு செய்திருக்கீங்க” என்ற ரீதியில் பேசுவார். அவர் என்ன கேட்கிறார் என்றே புரியாது நமக்கு சற்று கோபம்கூட வரும்.

ஏதோ தம் ஊர் மட்டும்தான் பள்ளக் கையில் இருப்பது போலவும், அதைத் தவிர வேறு எங்கும் வெள்ளம் வராது போலவும். அந்த ஊருக்கே தாம் மட்டும்தான் பாதுகாவலர் போலவும் பில்டப் கொடுப்பார். அதன் பின்னர் அவர் வரும்போதே வெள்ள நிவாரணம் தயார் செய்துவிடலாமா என்று அவர் பாணியிலேயே ஆரம்பிப்பேன். அதைவிட நேராகப் போய் வீராணத்தில் எவ்வளவு தண்ணீர் திறக்கிறாங்க என்று தெரிந்துவரச் சொல்வேன். அப்புறம்தான் அடக்கி வாசிக்க ஆரம்பித்தார். இருந்தாலும் உடன் பிறந்த அரிப்பு மட்டும் கடைசிவரை விடவில்லை.

அவரது கற்பனைக்கு உச்சக்கட்டமாக ஒரு சம்பவம் நடந்தது. கொஞ்சநாள் கழிந்தது. அவருக்கு நோய் ஏற்பட்டது. தாம் பிழைக்க மாட்டோம் என்று எண்ணிக்கொண்டு ஒரு காரியம் செய்தார். தம்

சொத்துக்கள் அனைத்தையும் தம் தம்பிக்கு செட்டில்மெண்ட் எழுதிவைத்து தம் மனைவியைகே கடைசிவரை நன்கு பார்த்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லிவிட்டார். அந்த மகானுபாவனுக்கு தம் மனைவிபேரில் சொத்து இருந்தால் அவரே தம்மை காப்பாற்றிக் கொள்வார் என்று தோன்றவில்லை.

நேராகப் போய் மருத்துவம் செய்துகொண்டார். அப்போதும் அவரது மனைவிதான் உடனிருந்து எல்லாம் கவனித்துக் கொண்டார். அவரது மனைவி ஒன்றும் படிப்பறியாதவர் அல்ல. அந்த நாளிலேயே நன்கு படித்தவர். மிகக் குணமானவர். உலக விபரம் அறிந்தவர். உண்மையில் இவர்தான் மக்கு என்று சொல்ல வேண்டும்.

சில மாதங்களில் அவர் பூரண குணமடைந்துவிட்டார். வேலைக்கும் வந்துவிட்டார். தம்பியிடம் சொத்தைத் தரும்படி கேட்டார். கைக்குக் கிடைத்த சொத்தை விட்டுக்கொடுக்க அவர் என்ன இளிச்சவாயரா - அதுவும் செட்டில்மெண்டு எழுதிப் பதிவுசெய்து கொடுத்தபின்னர். இருவருக்கும் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. இந்த நிலையில்தான் எனக்குத் தெரியவந்தது. என்னிடம் வந்து வழி சொல்லுங்கள் என்று புலம்புகிறார். அவர் மனைவியிடம் நீங்கள் ஏன் இப்படி நடக்க இடம் கொடுத்தீர்கள் என்றால் கணவன் பிடிவாதத்தின் முன் நான் ஒன்றும் செய்ய முடியவில்லை என்றார். இழுத்துப்போட்டு உதைக்க வேண்டியதுதானே என்றேன் நான். வேறு என்ன செய்ய. எல்லாம் போனது போனதுதான். பின்னர் வழக்கு தொடர்ந்தார் என்ன நடந்ததோ தெரியாது.

இது இன்னொரு வி.ஏ.ஓ பற்றியது. நான் ஆர்.ஐ.யாகப் பதவியேற்ற ஒரு மாதத்தில் கலெக்டர் ஜமாபந்தி வந்தது. என்னென்ன செய்ய வேண்டும் என்றெல்லாம் புரியாத நிலை. ஒரு வி.ஏ.ஓ. வந்தார் “அய்யா நீங்கபாட்டுக்கு கவலையில்லாமல் இருக்கீங்க. கணக்கெல்லாம் யாரும் எழுதலை. கலெக்டர் ஜமாபந்தி. அப்புறம் ‘ரொம்ப’ கஷ்டமாயிடும்” என்றெல்லாம் எனக்கு வார்ணிங்

கொடுத்துவிட்டு இரண்டு மேசைகளை எடுத்து என் அலுவலகத்திலேயே அரேஞ்ச் செய்து கணக்குகளைப் பிரித்து வைத்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டார்.

எனக்கு பயம் கண்டுவிட்டது. வேலை நடக்கவில்லை என்று சொல்லி புளியைக் கரைத்துவிட்டார். இவர் பொருப்பாக வேலை பார்க்கிறார் மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று தெரியவில்லையே என கவலை வந்துவிட்டது. அப்போது எனக்கு இருபத்தாறு கிராமங்களுக்கும் ஆறு வி.ஏ.ஓக்கள் தான் இருந்தனர். மற்றவர்களைக் கேட்டால் அவர்கள் தங்கள் கணக்குகள் டைமுக்கு வந்துவிடும் என்றும் அவரை நீங்கள் கண்காணித்தால் போதும் என்றும் சொல்லிவிட்டனர்.

நாட்கள் கடந்தது. எல்லாக் கணக்குகளும் வந்து நானும் மொட்டைக் கையெழுத்து போட்டு தாலுக்காபீசுக்கு அனுப்பிவிட்டேன். இந்த வி.ஏ.ஓ மட்டும் எழுதினார். எழுதிக்கொண்டிருந்தார். எழுதிக்கொண்டேயிருந்தார். அப்புறம்தான் தெரிந்தது. அவர் எதுவும் செய்யாமல் குழப்பிக் கொண்டிருக்கிறார் என்பது. ஒரு தலையாரி வந்து “அய்யா அவர் வேலையே இப்படித்தான் மாற்று ஏற்பாடு செய்தால்தான் தேறும்” என்று சொன்னார்.

என் மந்திரி சபையைக் கூட்டி அவசர ஆலோசனைக் கூட்டம் நடத்தி மற்ற இரண்டு பேரிடம் பிரித்துக் கொடுத்துவிட்டு ஒரு கிராமத்தைமட்டும் ஒரு முன்னாள் கார்ணம் அவர்களை வரவழைத்து அவரிடம் ஒப்படைத்தேன். அவர் கணக்கில் கில்லாடி அவரைப்பற்றி முன்பே சொல்லியிருக்கிறேன். அவரோ அதற்கென்ன காலையில் கணக்கு இருக்கும் பயப்படாதீங்க என்று சொன்னார். கணக்குகள் அவர் வீட்டுக்குப் போய்விட்டது. ஒரு தலையாரி எப்போதும் அவர் அருகில் இருந்தார். காலை பத்து மணிக்கு என் அலுவலகத்திற்கு கணக்கு தயாராகி வந்துவிட்டது.

அவரது கணக்குகளை தாலுக்காவுக்கு அனுப்ப வேண்டும் அதற்கு முன்னதாக வசூல் கணக்குகள் தணிக்கை செய்ய வேண்டும். அப்போதெல்லாம். பதினைந்து ஆண்டுக்கு மேல் வரி பாக்கி இருந்தது.

மற்ற வி.ஏ.ஓக்கள் எல்லாம் வசூல் விவரத்தினை சிட்டாவில் பதிவு செய்யும்போது கூடுதல் தாள் ஒட்டியோ தனியே கலம் கட்டியோ விபரம் பதிவு செய்வர். ஏனென்றால் அரசாங்கப் படிவத்தில் ஒரு ஆண்டுக்கு மட்டும்தான் பதிவு செய்ய இடம் இருக்கும்.

நண்பரோ அந்த படிவத்திலேயே சின்னச்சின்ன இடம் ஒதுக்கி பல ஆண்டுகளை தனித்தனியே பதிவு செய்வார். அதிலும் அவரது கையெழுத்து. ஊகூம். சொல்லக்கூடாது. ஒரு கலம் அடுத்த கலத்தில் முக்கைநீட்டிப் பதிவாகும். இப்படியாக பல குழப்பங்கள் இருக்கும். கடைசியில் கூட்டும்போது பாம்பு ஊர்வது போல் வளைந்து வளைந்து கூட்டவேண்டும். அதிலும் அவர் கூட்டுப்புள்ளி போடும் அழகே அழகு. அவருக்கு கைவிரல்கள் போதாது. கால் விரல்களும் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும்.

ஒரு ஆண்டு வசூல் விபரத்தையும் இரண்டு மூன்று பேராக உட்கார்ந்து தனித் தாளில் எழுதி கூட்டிப் பார்த்தால் ஒரு வாரத்தில் தொகையைக் குறைத்துக் கட்டியிருப்பார். அடுத்த வாரத்தில் தொகையைக் கூட்டிக் கட்டியிருப்பார். தப்புத் தப்பாக கூட்டுப்புள்ளி போட்டால் கையில் இருப்பு அதிகமாக இருக்கும். எது என்று கண்டுபிடிக்கத் தெரியாமல் அடுத்த வாரம் அதனையும் சேர்த்து கட்டியிருப்பார்.

இப்படியாக ஆடிட் செய்ததில் அவர் அறுநுற்றுச் சொச்சம் கட்ட வேண்டியதாக கண்டுபிடிக்கப்பட்டது. அவரிடமோ காசு இல்லை. கணக்கோ தாலுக்காவுக்கு அனுப்பியாக வேண்டும். வேறு வழியில்லாமல் என் மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்து அடகு வைத்து பணம் கட்டி ஜமாபந்தி முடிந்தது. அன்று மோதிரத்தைக் கழற்றியவன்தான் மோதிரம் போடும் ஆசையே போய்விட்டது.

கிராம நிர்வாக அலுவலர்கள் பணியிடம் ஏற்படுத்தப்பட்டு முன்னாள் கிராம மணியம் கர்ணம் ஆகியவர்களுக்கு தகுதி அடிப்படையில் பணி வழங்கப்பட்டிருந்த நேரம். என் நண்பன் வருவாய் ஆய்வாளராக இருந்தார். முன்னாள் மணியம்

என்பதால் அந்த பழைய கித்தாய்ப்பிலேயே வேலை செய்துகொண்டிருந்தார் பெருந்தனக்காரர் ஒருவர். கிராமத்திற்கு வருவது கிடையாது. பணியையும் ஒழுங்காகச் செய்வது கிடையாது. தாம் பெருந்தனக்காரர் என்ற நினைப்பிலேயே எல்லா நடவடிக்கைகளும் இருந்துவந்துள்ளது. இப்படியாக காலம் நகர்ந்து கொண்டிருக்கையில் ஒருநாள் வசூல் பணிகள் ஆய்வு பற்றி ஆய்வுக்கூட்டம் நடத்தினார் வருவாய் ஆய்வாளர்.

அப்போது மிகவும் திமிர்த்தனமாக நடந்துகொண்டார் அந்த பெருந்தனக்கார வி.ஏ.ஓ. பொறுத்துப் பொறுத்துப் பார்த்த ஆர்.ஐ.க்கு ரோஷம் வந்துவிட்டது. நாளை காலை உங்கள் கிராமத்திற்குப் பயிராய்வு செய்ய முகாம் வருகிறேன் என்று ஒரு தாக்கீது வழங்கிவிட்டார். அவ்வளவுதான் தம்மை பெண்டு நிமிர்த்திவிடுவார் ஆர்.ஐ. என்று உணர்ந்துகொண்ட அந்த வி.ஏ.ஓ லீவுகொடுத்துவிட்டார்.

அந்த காலத்தில் மணியம் கர்ணம் பணிசெய்தவர்கள் அதிகாரியுடன் ஒத்துவரவில்லை என்றால் டக்கென்று ஆறு மாதம் ஒரு வருடம் லீவு எடுத்துவிடுவர். அதே பழக்கத்தில் லீவு போட்டவர்தான். அடுத்தடுத்து லீவில் இருந்துவந்தார். வேறு ஒரு ஆர்.ஐ.யாக இருந்திருந்தால் காட்டவேண்டியதைக் காட்டி தரவேண்டியதைத் தந்து சரிக்கட்டியிருப்பார். காசுக்கு மயங்காத இந்தக் கெட்டவனிடம் எதுவும் முடியவில்லை. கிட்டத்தட்ட ஒரு ஆண்டு கழிந்தது. ஆர்.ஐ. மாறுதல் செய்யப்பட்டு விட்டார்.

அடுத்து வந்தான் ஒரு கிராதகன். அது வேறுயாருமல்ல நான்தான். ‘புதிய ஆர்.ஐ. பணியேற்றிருக்கிறார். நாம் சரி செய்துகொள்ளலாம்’ என்ற தைரியத்தில் வந்து என்னைப் பார்த்து தாம் நெடுநாளாக விடுப்பில் இருப்பதாகவும். பணியில் சேருவதாகவும் தெரிவித்தார். இருபது பேர் இருக்கவேண்டிய பிர்க்காவில் ஆறுபேரை வைத்துக்கொண்டு தடுமாறிய எனக்கு சந்தோஷம்.

எப்போதும், ஒரு அதிகாரி புதிதாக வந்து சேர்ந்தார் என்றால் கீழ் நிலையில் உள்ளவர்கள் அவரைப்பற்றி பல வழிகளிலும் விசாரித்து நமக்கு ஒத்துவருவாரா என்றெல்லாம் முன்னதாக அலசி ஆராய்வர். அப்படியாக இவரும் நண்பர்கள் மத்தியிலும் அலுவலகத்திலும் ஆர்.ஐ. எப்படி என்று உசாவியுள்ளார். அவருக்குக் கிடைத்த உளவுத் துறை அறிக்கைப்படி, அவனே பரவாயில்லை இவன் அவனைவிட மோசமானவன். அவனுடைய நண்பன்தான் இவனும், என்று பேதி கொடுத்துவிட்டனர்.

அவ்வளவுதான். தாம் பணியேற்பதாக என்னிடம் சொல்லிவிட்டுப் போனவர், ‘இந்த ஆள் இன்னும் குறைந்தபட்சம் இரண்டு வருடம் வேலை பார்ப்பான். நமக்கு எதற்கு வம்பு’ என்று தன் பணியையே ராஜினாமா செய்துவிட்டார். ஆனால் ஒன்று அவருடைய வசதிக்கு இந்த வேலையெல்லாம் அனாவசியம்.

இன்னொரு கிராம நிர்வாக அலுவலர். அவருக்கு வரி வசூல் பணி என்றால் கொஞ்சம் கசப்பு. பாவம் பட்டாதார்களை ஏன் தொந்தரவு செய்யவேண்டும் என்று எண்ணம் போலும். நானோ இன்னும் அலுவலகத்திலிருந்து யாராவதோ போய் வசூல் செய்தால் அந்த தொகைமட்டும்தான் கஜானாவுக்கு வரும். அதிகாரிகளோ ஜப்தி செய்தாகிலும் வசூல் செய்யவேண்டும் என்று கெடுபிடி செய்வர்.

ஒருநாள் நான் ஜீப்பில் போய் ஒவ்வொரு கிராமமாக வசூல் வேலையைக் கண்காணித்துக்கொண்டே வந்தேன். எல்லா கிராமத்திலும் வேலை ஜரூராக நடந்துகொண்டிருந்தது. கடைக்கோடியில் இருந்த இந்த கிராமத்திற்குப்போய் ஆபீஸ் வாசலில் இறங்கினால் வி.ஏ.ஓ. ஒரு ஈசிசேரில் அமர்ந்தவண்ணம் அவரைச் சுற்றி நான்கு தலையாரிகளும் அவருக்குத் துணையாக இரண்டு பார்வையாளார்களாக பக்கத்து கிராமத் தலையாரிகள் இருவரும் வட்டமாக உட்கார்ந்து கதாகாலட்சேபம் நடந்துகொண்டிருந்தது.

டிரைவர் படி, டீசல் உட்பட என் சொந்த செலவில் (பின் என்ன அதிகாரி ஜீப்புதான் தருவார். அதுவே பெரிதில்லையா) போட்டுக்கொண்டு வந்தால் இங்கே ஹாயாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்தால் எப்படி. வந்ததே கோபம். ஏதோ அவருக்கு இரண்டு அறை விடுபவன் போல் கோபத்தோடு ஜீப்பிலிருந்து குதித்து ஓடினேன். ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டல்லவா. தாழ்ந்த கூரையின் மூங்கில்கள் நீட்டிக்கொண்டிருக்க நான் வேகமாகக் குனிந்து நுழைந்தவன் முதுகில் ஒரு மூங்கில் சரியாக பாடம் புகட்ட, தவித்துப்போனேன். அத்துடன் அவரைத் திட்டிவிட்டு நேராக அலுவலகம் வந்துவிட்டேன்.

மறுநாள் தாலுக்கா ஆபீசுக்குப் போனவன் என் நண்பரான துணை வட்டாட்சியரிடம் என் ஆற்றாமையைச் சொன்னேன். அவரோ காட்டுடா பார்க்கலாம் என. நானும் அப்பாவியாக என் சட்டையைக் கழற்றி முதுகைக் காட்டப்போக வெடுக்கென்று எட்டி அந்த இடத்தை ஒரு கசக்கு கசக்கிவிட்டார். எனக்கு மயக்கமே வந்துவிட்டது. என்னை அறியாமல் கண்டபடி திட்டிவிட்டு வந்தது தனிக் கதை.

வருவாய் ஆய்வாளர் பணியேற்றதும். என்னிடம் வேலை பார்த்த ஆறு கிராம நிர்வாக அலுவலர்களும் வந்து மரியாதை நிமித்தமாக கண்டுகொண்டனர். அய்யா எப்படிப்பட்டவர் என்பது புரிபடும் வரையிலும் எப்போதும் சில தினங்கள் விட்டுப் பிடிப்பர். அதன் பின்னர்தான் நம்மை வளைக்க முயற்சிகள் மேற்கொள்வர்.

நான் வேலையில் சேர்ந்த நாள் முதல் என் அரசாங்க இல்லத்திலேயே தனியே தங்கி ஓட்டலில் சாப்பிட்டுக்கொண்டு இருந்தேன். இப்படியாக ஒரு வாரம் கழிந்தது. ஆக பணியேற்றாச்சு. எல்லா வி.ஏ.ஓக்களும் அறிமுகம் ஆனார்கள். ஒருவர் என் கட்டடத்தை சுற்றிப் பார்த்தார். அவருக்கு என் தட்டுமுட்டு சாமான்கள் போதுமானதாகத் தெரியவில்லை. அய்யா எங்க படுக்கப் போறீங்க என்றார். தரையில்தான் என்றதும் ‘அதிகாரி’

தரையில் படுப்பது அவருக்கே கௌரவக் குறைச்சலாகப் போய்விட்டது. உடனே என் ஓ.ஏ. மூலம் பேசி எனக்கு ஒரு நாடா கட்டில் ஏற்பாடு செய்வதாக சொன்னார்.

இவர் பாட்டுக்கு மரம் வெட்ட ஏற்பாடு செய்கிறாரோ என்று எனக்கு பயம். நான் மறுத்தும் கேளாமல் கட்டாயப்படுத்தவே நான் இலவசமாக வாங்கமாட்டேன் என்று சொல்லிவிட்டேன். பல்வேறு கண்டிஷனுக்குப் பின் என்னிடம் வேண்டா வெறுப்பாக பணம் வாங்கிக்கொண்டார். முப்பது ரூபாய் அப்போதே கைமாறியது. இரண்டு நாளில் ஸ்பேர் பார்ட்ஸாக கட்டில் வந்தது. ஒரு வாரத்தில் அவர் வந்து பொறியியல் இஞ்சினீயராக மேற்பார்வையிட தலையாரி கட்டிலை இணைத்துப் பின்னி என்னிடம் ஒப்படைத்தார்.

வாழ்வில் முதன் முதலாவது கட்டில் படுக்கை சுகமாகவே இருந்தது. இரண்டு நாள் கழித்து ஒரு பக்கம் லேசான விரிசல். ஒருவாரத்தில் பல விரிசல்கள். பயம் கண்டு தரையிலேயே படுக்க ஆரம்பித்தேன். வந்தபோதே கட்டில் முழுகாமல் இருந்ததோ என்னவோ. பத்து பதினைந்து நாட்களுக்குள் மற்றொரு கட்டிலைப் பிரசவித்துவிட்டது. ஆம் எல்லா சட்டங்களும் நான்கு கால்களும் இரண்டிரண்டாக பிளந்துவிட்டது. என் ஓ.ஏ.விற்கு ரொம்ப கோபம். அந்த வி.ஏ.ஓவை பிலுபிலுவென்று பிடித்துவிட்டார். மறுநாள் கட்டில் செய்தவன் ஏமாற்றிவிட்டான் என்று சொல்லி எடுத்துச் சென்றுவிட்டார்.

அப்புறம் ஒரு மாதம் வரை சர்க்கார் வேலை மாதிரி இழுபறி செய்து கடைசியில் வேறு ஒரு கட்டில் வந்து சேர்ந்தது. அதுவும் ஏனோ சரிப்பட்டு வரவில்லை. நான் வழக்கம்போல் தரையிலோ அல்லது மேசைமேலேயோ படுத்துத்தான் கடைசி வரை துங்கினேன். அவருக்கு நல்ல புறம்போக்கு மரம் ஏதும் கிடைக்கவில்லை போலும். கட்டில் வாங்கிய நான் தூக்கத்தை வாங்கத் தவறிவிட்டேன் போலும். தரையில் படுக்கிற சுகத்தை விட எனக்குத்தான்

மனம் வரவில்லை.

இந்த வி.ஏ.ஓ.-க்கள் சில சமயம் செய்யும் லூட்டி கொஞ்சம் ஓவராகவே இருக்கும். ஒருவர் என் அலுவலகத்திற்கு வருவார் அங்கு இருக்கும் தலையாரியை விளித்து “அய்யா வீட்டை சுத்தம் செய்யக்கூடாதா” என்பார். ஒருவர் தாமே கட்டடத்திற்கு வெள்ளை அடித்துத் தருகிறேன் என்பார். ஒருவர் சுற்றிலும் செடி வைத்தால் நல்லா இருக்கும் என்பார். யாரும் செயல்படுத்தமாட்டார்கள். எனக்கு என்று ஒருசில தலையாரிகள், -சொல்லப்போனால் அவர்கள் தலையாரிகள் அல்ல பழக்கத்தால் என் சகோதரர்கள் - அவர்கள்தான் அவ்வப்போது இந்த மாதிரி வேலைகளை நான் முகாம் சென்றிருக்கும் வேளைகளில் செய்து நான் உள்ளே நுழைந்ததும் அதையெல்லாம் செய்ததற்காக என்னிடம் கடியும் வாங்கிக் கொள்வர்.

அவர்கள் அரசாங்கப் பணியாளார்களேயன்றி என் சொந்த வேலைக்காரர்கள் அல்ல என்பதால் என்னிடம் திட்டு வாங்குவர். ஆனால் அடுத்தும் அவர்கள் அப்படியே நடந்துகொள்வர்.

இப்படிப்பட்ட நிலையில் ஒரு வி.ஏ.ஓ. வந்தார். வீட்டை சுத்தம் செய்யப் புகுந்தார். நான் முகாமிலிருந்து வந்தால் வீடு சுத்தம் செய்து கழுவி விடப்பட்டிருந்தது. ஒரு பக்கம் இருந்த பூஞ்செடிகளைக் காணோம். எல்லாம் பின் பக்கம் கொண்டு வைக்கப்பட்டிருந்தது. வெளிச்சம் நல்லா வருமாம் அதற்காக. அங்கே பார்த்த எனக்கு ஒரே அதிர்ச்சி. ஒரு தொட்டியில் இருந்த நன்கு வளர்ந்த ரோஜாசெடி பிடுங்கப்பட்டு சாத்தி வைக்கப்பட்டிருந்தது. தலையாரிகள்தான் இப்படி துப்புகெட்டு காரியம் செய்திருக்கிறார்கள் என்று சற்று கடிந்துகொண்டேன். ஆனால் நடந்தது வேறு. மேனேஜ்மெண்ட் பார்த்த வி.ஏ.ஓ.தான் தொட்டியை நகர்த்திப் பார்த்திருக்கிறார். அவரால் நகர்த்த முடியவில்லை. செடியைப் பிடித்து துக்கியுள்ளார். செடி கையோடு வந்துவிட்டது. அப்படியே சத்தமில்லாமல் ஓரமாக வைத்துவிட்டுச்

சென்றுவிட்டார். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த அவரே இப்படியென்றால் மற்றவர்களை என்ன சொல்வது. இப்படியும் சில அனுகூலச் சத்துருக்கள் உண்டு.

ஒரு வி.ஏ.ஓ. நேர்மையும் அஞ்சா நெஞ்சும் மிக்கவர். அவரது கிராமத்தில் ஒரு மிகமிகப் பெரிய மனிதர். பெரிய மனிதர் என்றாலே அரசாங்கத்திற்கு பாக்கி வைக்க வேண்டும் அல்லவா. அவரிடம் வசூல் செய்வதை தன் லட்சியமாக ஏற்றுக்கொண்டார் வி.ஏ.ஓ. ஒருநாள் அவர் வந்து வாசலில் இறங்கும்போது இவர் சைக்கிளில் போய் காலை ஊன்றி நின்றுகொண்டு வாரிபாக்கியைக் கேட்டார். அவர் முன்பாக வருபவர்கள் செருப்பைக் கழற்றி துரத்தில் விட்டுவிட்டு தோள் துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு அவர் சொல்வதைத்தான் கேட்க முடியுமே அன்றி அவரை கேள்வி கேட்க முடியாது. அப்படிப்பட்டவரை சைக்கிளில் தெனாவட்டாக உட்கார்ந்துகொண்டு காலை ஊன்றிக்கொண்டு வரிபாக்கியைக் கேட்டால் அவர் கடவுளே ஆனாலும் மன்னிக்க முடியுமா என்ன!

கை சுத்தமாக இருந்ததால் அவரை ஒன்றும் செய்ய இயலவில்லை. தினசரி வீட்டுக்குப் போய்ப் பார்த்தார். வி.ஏ.ஓ-விற்கும் ஒன்றும் பெயரவில்லை. பணம் கட்டவில்லை. பதில்கூட கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு காரியம் செய்தார். போஸ்ட் கார்டுகள் வாங்கினார். சிகப்பு மையினால் அவருக்குக் கடிதம் எழுதினார். தாங்கள் அரசாங்கத்திற்கு இவ்வளவு பாக்கி வைத்திருக்கிறீர்கள். இத்தனை முறை கேட்டும் தாங்கள் தொகை செலுத்தாமல் இருப்பதால் உங்களுக்குக் கடிதம் மூலம் நினைவுட்டப்படுகிறது என்ற ரீதியில் தினமும் கடிதம் போட ஆரம்பித்துவிட்டார்.

ஒருநாள் ஏதோ முக்கிய விசேஷம். பிரமுகர் வீட்டில். பல உறவினர்களும் கூடியிருந்த வேளையில் போஸ்ட்மேன் அந்தக் கடிதத்தினை வீட்டில் கொண்டுபோய்க் கொடுக்க அவர் யோக்கியதை

உறவினர்களுக்கும் தெரிந்துவிட்டது, அதிகாரிகளிட-மெல்லாம் முறையிட்டுப் பார்த்தார். வி.ஏ.ஓ. எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை.

கடைசியில் தம்மை அவமானப் படுத்திவிட்டதாகவும் நஷ்ட ஈடு கேட்கப் போவதாகவும் நோட்டீஸ் அனுப்பினார். அதற்கும் வி.ஏ.ஓ. பதில் சொல்லவில்லை. அப்புறம் வழக்குப் போட வக்கீலை நாடியிருக்கிறார். அவரோ பாக்கியை கட்டிவிட்டுப் போட்டால்தான் செல்லும் என்று சொல்லியிருப்பார் போலும். ஒருநாள் முழுபாக்கியையும் செலுத்திவிட்டார். அடுத்து கேசும் போட்டார். எதற்கும் கவலைப்படவில்லை வி.ஏ.ஓ. பின்னர் வழக்கு என்ன ஆனது என்பது தெரியவில்லை.

ஒரு முன்னாள் மணியம். அவருக்கு ஒரு கிராமத்தில் ஏராளமான நிலம் இருந்தது. வரிமட்டும் பாக்கி வைத்திருந்தார். வி.ஏ.ஓ. கேட்டால் கட்டுவோம் என்பார். ஒருநாள் வி.ஏ.ஓவிடம் கூடுதலாகக் கட்டியவர்களிடமிருந்து அட்ஜஸ்ட் செய்து கொள்ள வேண்டியதுதானே என்று ஆலோசனை கூறியிருக்கிறார். என் காதுக்கு வந்தது. எனக்கோ கோபம். ‘ஊரில் பெரிய மனிதராக நடமாடிக்கொண்டு வரிகட்டக்கூட யோக்கியதை இல்லாமல் இருக்கிறாரே. ஏழைகள் எல்லாம் காலம் தவறாமல் வரி செலுத்தும்போது இவருக்கு என்ன கேடு’ என்று மனதில் பலவாறாக பொருமிக்கொண்டிருந்தேன்.

ஒருநாள் குரூப் கலெக்ஷன் டவுணில் நடத்தினோம். பத்து பதினைந்து கிராம சிப்பந்திகளும் வி.ஏ.ஓக்களும். தெருத்தெருவாக வசூல் வேட்டையில் ஈடுபட்டோம். பாக்கிதாரரர் வீட்டு முன்பாக தண்டோரா அடித்து சத்தமாக கூவுவார் தலையாரி. பாக்கி வைத்திருப்பவர் யோக்கியதை அக்கம் பக்கம் தெரிந்துவிடும். அவரது தெருவிற்குள் நுழைந்ததும் ஒரு தலையாரியை அழைத்து “மணியார் இருக்காரா பார்” என்றேன். பதவி போய் நாலைந்து ஆண்டுகள் ஆனாலும்கூட மணியம் கர்ணம் வீடுகளை அவர் பதவியைச் சொல்லி அழைப்பதுதான் மக்கள் வழக்கம்.

தோளில் தண்டோரா சட்டி தொங்க நேராக (முன்னாள்) 'மணியார்' வீட்டு முன்போய் நின்று "ஆச்சியோவ் மணியார் இல்லிங்களா" என்று கூவினார் தலையாரி. நபர் உள்ளே இல்லை. ஆச்சிதான் எட்டிப்பார்த்தார். நிர்வாகம் எல்லாம் ஆச்சி கையில்தான். எட்டிப் பார்த்தவருக்கு ஒரே அதிர்ச்சி தன் வீட்டு வாசலில் செருப்புகூட இல்லாமல் கைகட்டி வாய்பொத்தி சேவகம் செய்த தலையாரி வாசலில் தண்டோராவுடன் காட்சி அளித்ததும் கோபம் அவமானம் எல்லாமும் வந்துவிட்டது. ஆச்சி கத்த, தலையாரி பயந்துபோய் ஓடிவர, நாங்கள் ஓடிப்போய் என்னவென்று பார்க்க அந்த அம்மாவோ தம் வீட்டு வாசலில் தண்டோராவுடன் வந்தது கௌரவம் குறைந்ததாக வாதாடினார்.

"தண்டோரா அடித்தாரா? இல்லையே, தண்டோராவுடன் வந்ததே கௌரவக் குறைவாக நீங்கள் நினைக்கிறீர்கள். ஆனால் உங்கள் வீட்டைப் பற்றி பாக்கி கட்டாதவர் என்று மற்றவர்களும் அதிகாரிகளும் நினைக்கிறார்களே. அது தொரியுமா?" என்று நான் கேட்டேன். அதோடு தலையாரியைப் பார்த்து அவர் ஏதோ கூடாத பெரும் தவறு செய்தவர் போல் கடுமையாகப் பேசி தராதரம் பார்த்து நடந்துகொள் என்று கண்டித்து அனுப்பிவிட்டேன். நான் பேசியது கொஞ்சம் குத்தலாகவும் அவருக்கு சாதகமாகவும் இருந்ததால் சற்று மனதில் தைத்துவிட்டது போலும்.

பின்னர் தலையாரியை அழைத்து 'நல்ல காரியம் செய்தாய்' என்று பாராட்டி சமாதானப் படுத்தி அனுப்பிவிட்டேன். மறுநாள் அவர் கட்டவேண்டிய ஆயிரக் கணக்கான பாக்கியும் பைசா சுத்தமாகப் பைசலாகிவிட்டது.

சில சமயம் இப்படிப்பட்ட நாடகம் எனக்கும் தலையாரிக்கும் இடையில் நடக்கும். சில முறட்டு கேஸ்கள் அவர்கள் நடந்துகொள்ளும் விதம் அப்படியே அறையலாம் போல் இருக்கும். கொஞ்சம் ஓவராகவே அலம்பல் செய்வர். நான் என் தலையாரியை வாங்குகிற வாங்கில் தலையாரிக்காக

பட்டாதார் பரிந்து பேச நான் தலையாரியை அடிக்கப் போக கடைசியில் மிரண்டுபோன பட்டாதாரர் பணத்தைக் கட்டிவிடுவார். ஒரு சிலருக்கு இது நாடகம் என்று தெரியும். இருந்தாலும் எதுவும் செய்ய இயலாத நிலைமை ஏற்பட்டுவிடும்.

ஒரு கிராமத்தில் ஒரு பெருந்தனக்காரர் இருந்தார். தலையாரிகள் அவரிடம் வசூல் செய்ய முடியாமல் ரொம்பக் கஷ்டப்பட்டனர். காரணம் கிராம நிர்வாக அலுவலரின் உள் குத்து என்பது தெரிந்தது. அதே கிராமத்தில் ஏழைகள் புறம்போக்கில் வசிப்பவர்கள் எல்லாரும் பாக்கியைக் கட்டிவிட்டனர். அந்த கிராமத்தில் குடியிருந்த ஆலமரத்துப் பேயாக இவர் மட்டும் பாக்கிப் பட்டியலில் இருந்து வெளியேறாமல் இருந்தார். ஒருநாள் ஜீப்பில் கிராமத்திற்குப் போய் இறங்கினேன். வி.ஏ.ஓ. இல்லை. பட்டாதார் களத்துமேட்டில் இருப்பதாகத் தகவல் தெரிந்தது. நான் தெருவில் நின்றுகொண்டு தலையாரிகளை அடிக்காத குறையாக திட்டினேன். “வரி கட்டாதவன் எவனா இருந்தாலும் களத்து மேட்டில் மறிக்க வேண்டியதுதானே”. அப்படி இப்படி என்று ஏக வசனத்தில் பாடினேன். “புறம்போக்கில் குடியிருக்கும் அன்னாடங் காய்ச்சிகளிடம்தான் உன் வீரத்தைக் காட்டி வசூல் செய்வியா. இவனுக்கெல்லாம் என்ன கேடு” என்ற ரீதியில் பத்து நிமிஷம் பொழிந்து தள்ளிவிட்டேன். கூடவே வீ.ஏ.ஓவையும் ஒழித்துவிடுகிறேன் அவன்-இவன், அப்படி-இப்படி என்று திட்டல் வேறு.

அவ்வளவுதான் மறுநாள் வரி கட்டாத பெருந்தனக்காரர் வாரிபாக்கியில்லாத பெருந்தனக்காரர் ஆகிவிட்டார். கொசுறாக என் சாதிப் பெயரைச் சொல்லி இவர் வாயிலிருந்து இப்படியெல்லாம் வரலாமா என்று அங்கலாய்ப்பு வேறு. இதிலே விசேடம் என்னவென்றால் வாய்க்கால் ஓரம் குடியிருந்த ஏராளமானவார்களுக்கு நான் வேண்டியவனாகிவிட்டேன்.

அத்துடன், அந்த ஏழைகள் வசதிக்காக தண்ணீர் தொட்டி சிறு பாலம் போன்ற வசதிகள் தேவை

என்றும் வெள்ளக் காலங்களில் அவர்கள் படும் பாட்டையும் குறிப்பிட்டு ஒரு சிறப்பு அறிக்கை தயார் செய்து அனுப்பி வைத்தேன். எல்லாம் கொஞ்சம் தாமதமாக நிறைவேறிவிட்டதை சமீபத்தில் அறிந்தேன். தாமதம் ஒன்றும் அதிகமில்லை. ஒரு இருபது வருடங்கள்தான்.

மறுநாள் வி.ஏ.ஓ. நேரில் வந்து அய்யா இப்படி பேசிவிட்டீர்களே தெருவில் எல்லாரும் எட்டிப் பார்த்து பெரிய மனிதருக்கு அவமானமாகப் போய்விட்டதாக வருத்தப்படுகிறார் என்றார். நானோ ஒரு வருடத்திற்கு மேலாக அவருக்கு மாரியாதை கொடுத்து வந்ததை அவர் கெடுத்துக்கொண்டாரே. நீங்கள் அவரிடம் ஏன் சொல்லவில்லை என்றேன். வி.ஏ.ஓ வந்தது, “என்னை ஏன் திட்டினீர்கள்” என்று கேட்கத்தான். ஆனால் அவருக்குக் கேட்கத் தைரியம் இல்லாமல் போய்விட்டது.

ஒரு வி.ஏ.ஓ. புதிதாகப் பணி ஏற்றார். நாலைந்து வி.ஏ.ஓக்கள் சேர்ந்து ஒரு வீட்டை எடுத்துக்கொண்டு தங்கியிருந்தனர். இவர் கொஞ்சம் சினிமாப் பைத்தியம். கதை எழுதப்போறேன். பாட்டு எழுதப்போறேன் என்று ஒருதலைக்காதலாக அலைந்து கொண்டிருந்தார். மனதிற்குள் மட்டும் நினைத்துக்கொண்டு திரிந்துகொண்டிருந்தால் அப்படித்தானே.

எல்லாரும் அரட்டை அடித்துவிட்டு பத்துமணிக்கு மேல் படுத்துத் துங்கும்போது இவரது சினிமாக் கதை உணர்ச்சி விழித்துக்கொள்ளும். இவர்பாட்டுக்கு தூக்கத்தில் நடக்கும் வியாதிக்காரன்போல் எழுந்து கதவைக்கூட சாத்தாமல் வெளியே கிளம்பிவிடுவார். எப்போது வருவார் என்று தெரியாது. உடனிருந்தவர்கள் இவரது ரவுசு தாங்காமல் என்னிடம் புலம்புவர். யாராவது வீட்டில் புகுந்து கணக்குகளை கிளப்பிக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவர்களுக்கு.

அவரை அழைத்து கண்டித்தால் தாம் விரைவில் சினிமாவுக்குப் போகப் போவதாக சொல்வார். அவருக்கு வேண்டியவர் யாரோ திரைத் துறையில்

இருந்ததன் தாக்கம் அது. எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. அவர் நம்மிடமே "சார் நீங்க தத்தரக்கா சொல்லுங்க. நான் பாட்டுக் கட்டுறேன்" என்று நம்மையும் கூட்டணி சேர்ப்பார். வீட்டிலேயே இருந்து உன் கற்பனைக் குதிரையில் சவாரி செய்யவேண்டியதுதானே என்றால். தோப்பு துறவில் போய் இருந்தால்தான் சந்தம் எல்லாம் வரும் என்பார். இதுவரை எழுதியதை எடுத்துவா என்றால் 'இன்றுபோய் நாளை வருகிறேன்' என்று போயே போய்விடுவார்.

ஒருநாள் என் அலுவலக உதவியாளர் ஒரு பிட்டைப் போட்டார்.

- "வி.ஏ.ஓ. சார்! நீங்கபாட்டுக்குக் கண்ட இடத்திற்கும் ராத்திரியில் போகாதீங்க இங்கல்லாம் காத்து கருப்பு நடமாட்டம் இருக்கு"
- "அடப் போப்பா. இந்த காலத்திலும் நீங்க இதையெல்லாம் நம்பறீங்களே"
- "சார் நீங்க நம்புனா நம்புங்க இல்லாட்டி போங்க ஒரு நாளைக்கு பாத்தாதான் நம்புவீங்க. அப்புறம் ஒண்ணும் செய்ய முடியாது"

இதற்குள் நான் குறுக்கிட்டு "வி.ஏ.ஓ. நீங்க நம்பாட்டி இல்லைன்னு ஆகிடாது. வேணும்ணா நீங்க என்னோட வியாழக்கிழமை லால்பேட்டை பங்களாவுக்கு வாங்க. இரவு என்னோட தங்குங்க. அப்புறம் முடிவு பண்ணுங்க" என்றேன்.

தம்பி மனதில் பயம் சிறிது உதயமாகிவிட்டது. மெதுவாக அது என்ன என்று கேட்டார். அதுதானே எனக்கு வேணும்.

அது ஒன்றுமில்லை. ஒருமுறை லால்பேட்டை பங்களாவில் கோட்டாட்சியர் தங்கியிருந்ததால் நானும் பக்கத்து அறையில் படுத்துக்கொண்டேன். நள்ளிரவில் ஒரே இறைச்சல். ஏதோ நூறு நாய்கள் கத்துவது போன்று சத்தம். நான் ஏண்டா தங்கினேன் என்று நொந்துகொண்டேன். மறுநாள் அந்த பங்களா வாட்சுமேனிடம் இதுபற்றி சொன்னதும் அவர் சொன்ன தகவல் என் மனதில் கொஞ்சம் புளி

கரைத்துவிட்டது.

அதாவது லால்பேட்டை பங்களா இருப்பது வீராணம் ஏரிக்கரையில் ஷட்டர்களுக்கு அருகில். அதில் முனீஸ்வரன் இருக்கிறாராம். வியாழக்கிழமை நள்ளிரவில் அவர் ஊர்வலம் புறப்படுவாராம். அப்படியே ஏரிக் கரையில் சிறிது போய் அங்கிருந்து கீழிறங்கி மெயின்ரோட்டுக்கு வந்து அங்கிருந்து பங்களா வழியாக மீண்டும் ஏரிக்கரைக்குப் போய்விடுவாராம். அந்த நேரத்தில் நாய் குரைக்குமாம். “நீங்க வேணா பாருங்க முதலில் நாய்கள் ஏரிக்கரைப்பக்கம் குரைக்க ஆரம்பித்து திசை மாறிக்கொண்டே வந்து கடைசியில் ஏரிக் கரையில் போய் முடிந்துவிடும். அப்புறம் எதுவும் நடக்காது” என்றார். அதற்குப்பின் நான் ஏன் பங்களாவில் படுக்கிறேன். எத்தனை மணி ஆனாலும் வீட்டுக்கு வந்துவிடுவேன். அல்லது வி.ஏ.ஓ. வீட்டுக்கு ஓடிவிடுவேன்.

இந்த கதையை கேட்டதால் ஆடாத மனமும் ஆடுதே என்ற நிலை ஏற்பட்டது தலைவருக்கு. அத்துடன் நள்ளிரவுப் பயணத்தை விட்டுவிட்டார்.

ஒரு வி.ஏ.ஓ. அவர் குடும்பத்துடன் தங்கியிருந்தார் கிராமத்தில். அவர் வீடும் ஆபீசும் ஒன்றுதான். நான் எப்போது போனாலும் என்னை உபசரிக்கத் தவறமாட்டார் அவரது தர்மபத்தினி. மிக நல்ல பெண்மணி. நன்கு படித்தவரும் கூட. அவர் பிரசவத்திற்காக கொள்ளிடத்திற்கு அக்கரையில் மயிலாடுதுறை தாலுக்கா கிராமம் ஒன்றில் போய் தங்கியிருந்தார். நானும் என் அலுவலக உதவியாளரும், மற்றும் இரண்டு வி.ஏ.ஓக்களும் அவரது கிராமத்திற்குப் போனோம். அங்கு வி.ஏ.ஓ. இல்லை. தலையாரியை வரவழைத்தால் அவருக்கும் எங்கு போனார் என்பது தெரியவில்லை. பக்கத்து வீட்டுக்கார அம்மாள் இலவச தகவல் சொன்னார். அவரது மனைவிக்கு குழந்தை பிறந்துவிட்டதாகவும், அவரைப் பார்க்கக் காலையிலேயே போயிருப்பதாகவும் சொன்னார். அவர் அத்துடன் விட்டிருக்கலாம். கூடவே ஒரு வீட்டைக் குறிப்பிட்டு

அந்த அம்மாவையும் கூட்டிக்கொண்டு சிதம்பரம் வழியாகப் போயிருக்கிறார் என்றார்.
எங்களுக்கு எதுவும் பெரிதாகத் தெரியவில்லை. எங்களுக்கும் வேலை எதுவும் இல்லை. கூட வந்த வி.ஏ.ஒக்கள் இருவரும் அவருக்கு நண்பர்கள். ஒருவர் சொன்னார் “அய்யா வாங்க நாம் இப்படியே போய்ப் பார்த்துவிட்டு பக்கத்திலேயே ஒரு பட்டாதாராார் நிலவரி, லோன் எல்லாம் கட்டவேண்டும் அதையும் கேட்டுவிட்டு வருவோம்” என்றார். அவசர ஆலோசனைக் கூட்டத்தின் முடிவில் சைக்கிளிலேயே போவதென்று முடிவாகிவிட்டது. அப்போது காலை பதினோரு மணி இருக்கும் நால்வரும் அங்கிருந்து காட்டுமன்னார்கோயில் போய் அங்கிருந்து முட்டம் கிராமம் வழியாக ஆற்றைக் கடந்து அக்கரை போய்ச் சேர்ந்தோம்.

ஊர் பெயர். விலாசம் எல்லாம் எங்களுக்குத் தெரியாது. ஒரு உரக்கடை இருந்தது. அங்குபோய் இன்ன பேர்வழி பொண்ணு கட்டியது இந்தப்பக்கம் யாராவது இருக்காங்களா தெரியுமா என்று கேட்கப்போக அவரோ வி.ஏ.ஓ.-வின் அங்கமச்ச அடையாளம், சாதகக் குறிப்பு உட்பட புட்டுப்புட்டு வைத்துவிட்டார். எங்களுக்கு ஆச்சரியம். கடைசியில் அவர் இவரது மைத்துனர் என்று தெரிந்தது. ஆக அவரது வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

பிரசவமான அந்த பெண்மணிக்கு தன் கணவர்கூட வரவில்லை அதற்குள் ஆர்.ஐ., வி.ஏ.ஓ. எல்லாம் வந்துவிட்டார்கள் என்பதில் ஏக மகிழ்ச்சி. நாங்கள் சும்மா இருக்கக்கூடாதா. காலையில் போய்ப் பார்த்ததையும் அங்கு தகவல் கிடைத்து வருவதையும் சொன்னதுடன் “நாங்களே வந்துவிட்டோம். எங்களுக்கு முன்னரே புறப்பட்டவர் இன்னுமா வரவில்லை அதுவும் சிதம்பரம் சுற்றிக்கொண்டு ஏன் வரவேண்டும்” என்று சந்தேகத்தை எங்களை அறியாமலே விதைத்துவிட்டோம்.

அவரது பிடிவாதத்தால் மதியம் சாப்பிட்டுவிட்டு அங்கிருந்து மூன்று மணியளவில் புறப்பட்டோம்.

அதுவரை தம்பிரான் வந்து சேரவில்லை. அப்படியே பாக்கிதாரர் கிராமத்திற்குப் போய்ப் பார்த்து வரி வசூல் செய்துவிட்டு அருகிலேயே திருமணஞ்சேரி இருப்பதாகக் கேள்விப்பட்டு என்னுடன் வந்த வி.ஏ.ஓ. ஒருவருக்கு திருமணத்திற்கு பிரார்த்தித்துவிட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். கிட்டத்தட்ட ஐம்பதுகிலோ மீட்டராவது சைக்கிளில் போயிருப்போம்.

நாலைந்துநாள் கழித்து விடை கிடைத்தது. வந்தார் வி.ஏ.ஓ. அவருக்கு கோபமும் சிரிப்பும் பொங்கியது. “அய்யா நீங்கபாட்டுக்கு வீட்டில போய் ஒண்ணுகிடக்க ஒண்ணு சொல்லிட்டு வந்திட்டீங்க வீடே பெரிய போர்க்களமாயிட்டுது” என்றார்.

நடந்தது இதுதான். தலைவர் ஒரு பெண்ணையும் அழைத்துக்கொண்டு சிதம்பரம் போய் சினிமா பார்த்துவிட்டு ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு நடந்த விபரம் எதுவும் தெரியாமல் மாலையில் மாமியார் வீட்டுக்குப் போய் நுழைந்திருக்கிறார். மனைவியோ யார் வந்தார். எப்படி தகவல் வந்தது என்பதையெல்லாம் சொல்லாமல் ‘எப்போது புறப்பட்டீர்கள்’ என்று கேட்க ‘இப்பத்தான் நேரா வறேன்’ என்று அப்பாவியாகப் பதில் சொல்ல ‘எப்படி வந்தீர்கள்’ என, ‘வழக்கம்போல் கொள்ளிடம் ஆற்றைக் கடந்துதான்’ என பதில் சொல்ல, வசமாக மாட்டிக்கொண்டார். எரிமலை பூகம்பம் சுனாமி என்று எல்லாமாக தாக்குதல் நடத்த திக்குமுக்காடிப்போனார்.

அதன்பின் அடிக்கடி அக்கறைக்கு போகலாமா என்று கிண்டல் செய்ய ஆரம்பித்துவிட்டனர் நண்பர்கள்.

# 23 சம்பளப் பட்டியல்

ஒரு சாதாரண நிகழ்ச்சியை ரொம்பவும் பில்டப் கொடுத்து அப்படியே தூக்கு தூக்குண்ணு தூக்கினால் அப்புறம் "எச்சச்ச கச்சச்ச, கச்சச்ச எச்சச்ச"மாகிவிடும்.

சோ... கொஞ்சம் சுருக்கி வாசிக்கலாம்ன்னு தோணுது. சின்னச் சின்ன நிகழ்ச்சிகள் என்றாலும் சுவாரசியமாக இருக்கும் என்று எண்ணியே இவற்றை சொல்ல விரும்புகிறேன்.

சிதம்பரம் தாலுக்கா ஆபீசில் சிறு குமாஸ்தாவாக இருந்தபோது (அதாவது) காடா கிளார்க்கையெல்லாம் பார்த்தும், முக்கியமான பிரிவு பார்ப்பவர்களைப் பார்த்தும் நம்மால் முடியாது என்று மலைப்புடன் இருந்த கத்துக்குட்டி காலம். அதிலே ஒன்று இந்த 'எஸ்ட்டாபிளிஷ்மெண்ட்' பிரிவு. அப்போது தாலுக்கா ஆபீசில் 200 பேருக்குமேல் சம்பளம் மற்றும் அதன் தொடர்புடைய பணிகள் கவனிக்க வேண்டும். அதற்கென்று பில் போட ஒருவரும். அறிக்கைகள் தயார் செய்ய ஒருவரும் இரட்டை மாட்டு வண்டியாக ஒரே பிரிவு இயங்கிவந்தது. அவரவர்களும் கொடுத்த பில்டப் எல்லாம் என்னைப் போன்றவர்களுக்கு அந்த பிரிவில் வேலை பார்க்க முடியாது என்ற தோற்றத்தை பதிவு செய்திருந்தது. அதிலும் சம்பளம் போடும் ஒரு குமாஸ்த்தா ஒருவாரம் பட்டியல் போடுவார். அப்புறம் ஒரிருநாள் இரவு ஆபீசில் தங்கியிருந்து பில் போடுவார்.

இப்படிப்பட்ட நிலையில் ஒரு துணை வட்டாட்சியர் எங்கள் செருக்கை அடக்க வேண்டும் என்று நினைத்தார். தாசில்தாரிடம் சொல்லி என்னையும் என் நண்பரை (திரு கலியபெருமாள்)-யும் அந்தப் பிரிவில் போட்டுவிட்டார். இரண்டுபேரும் பயந்துகொண்டுதான் அந்தப் பிரிவில் பணியேற்றோம். பட்டியல் போடும் வேலை எனக்கு.

ஒரு மாதம் மட்டும் கஷ்டமாக உணர்ந்தோம். முதன் முதல் சிகரெட் பிடிப்பவனுக்குதானே இருமல், தும்மல், முக்கல், முனகல், சிக்கல் எல்லாம் வரும். அப்புறம் சுருள் சுருளா விட்டு அசத்துவான் இல்லையா. அப்படிதான் இதுவும். ஒரு மாதத்தில் “என்னைவிட்டால் யாருமில்லை” என்ற நிலையை ஏற்படுத்தக் கற்றுக்கொண்டோம்.

பழிவாங்க நினைத்த துணை வட்டாட்சியரை அவரது விதி அவர்மீதே பாய்ந்து மாறுதலில் அனுப்பிவிட்டது. அப்புறம் எங்கள் வித்தைக் கிறுக்கு கொடியேற்றம் நடத்திவிட்டது. ஒரு வாரம் பட்டியல் போட்ட ‘ஸ்லோ மோஷெண்’ எல்லாம் முடிவுக்கு வந்துவிட்டது. காலையில் ஆரம்பித்தால் மறுநாள் காலையில் அதிகாரிக்குப் போய்விடும். ஆக இப்படியாக செல்வாக்கு வளர்ந்துவிட்டால் அப்புறம் வாலை அவிழ்த்துவிட வேண்டியதுதானே.

சம்பளப்பட்டியல் கிளார்க்கு என்றால் சும்மாவா. எல்லாரும் தனி மரியாதை வேறு கொடுக்க ஆரம்பித்துவிட்டனர். நாங்கள் எங்கள் இருக்கையை ஆபீசில் நுழைந்தவுடன் பார்வையில் படும்படியான முக்கியமான இடத்தில் கொண்டுவந்து போட்டுக்கொண்டோம்.

வந்து சேர்ந்தார் ஒரு பெரிய குமாஸ்த்தா. அனுபவத்தாலும், வேலைத் திறத்தாலும். இன்னும் பல இத்தியாதிகளாலும், அவர் பெரியவர்தான். அவருக்கு அலுவலகத்திலேயே முக்கியமான முதன்மை ஸ்தானத்தில் பிரிவு வழங்கப்பட்டது. எங்களுக்கே இவ்வளவு என்றால் அவருக்கு எப்படியிருக்கும். எங்கள் இருக்கைக்கு முன்னதாக அவரது இருக்கையை போட்டுக்கொண்டு உட்கார்ந்துகொண்டார். அது வரைக்கும் பிரச்சினை இல்லை. இனிதான் பிரச்சினையே ஆரம்பம்.

தாலுக்கா ஆபீசில் கூரை மிக உயரமாக இருக்கும். அதில் வெளிச்சத்திற்கு என்று நான்கு கண்ணாடிகள் மேலே பொருத்தப்பட்டிருக்கும். ஹாலில் பேனைப் போட்டவுடன் மேலிருந்து வீசும் வெளிச்சத்தாரையில் எங்கள் மேசைமேல் அதன் இறக்கை நிழல் அசைந்து

அசைந்து எங்களால் வேலையே பார்க்க முடியாத நிலைமை. காலை பத்து மணிக்கு ஆரம்பித்தால் மாலை நான்கு மணி வரையில்கூட அந்த தொல்லை தாங்காது.

அவர் பேனைப் போட்டுவிட்டு சீட்டில் போய் உட்காருவார். நான் போய் அதனை அணைத்துவிட்டு வந்துவிடுவேன். இப்படியாக தினமும் போராட்டம் நடக்கும். அவரோ உனக்கு கஷ்டமாக இருந்தால் நீ வேறு இடத்திற்கு சீட்டை மாற்றிக் கொள் என்பார். அதெப்படி சீட்டை விட்டுக்கொடுப்பது. நாங்கள் விட்டுக் கொடுக்கமாட்டோம். அடுத்தவன் சீட்டுக்கு வேட்டு வைத்தாலும் வைப்போமேயன்றி நம் சீட்டை விட்டுக்கொடுப்பதாவது. அப்புறம் நம் பண்பாடு என்னாவது.

சோ... வேட்டு வைக்க முடிவானது. எப்படி? ஒருநாள் அதிகாலையில் ஆபீசிற்குள் நுழைந்ததும் ஒரு சின்னஞ்சிறு பேப்பர் துண்டை எடுத்து பேன் சுவிட்சுக்குள் நுழைத்துவைத்துவிட்டு பேசாமல் உட்கார்ந்து வேலை செய்துகொண்டிருந்தேன். வந்தார் மகானுபவன். பந்தாவாக வழக்கம்போல் எங்களை நோக்கி ஒரு ‘லுக்கு’ விட்டுவிட்டு ஸ்விட்சைப் போட்டுவிட்டு தன் இருக்கையில் அமர்ந்தார். ஒன்றும் ஆகவில்லை. நாங்கள் காணததுபோல் வேலை செய்துகொண்டிருந்தோம். நிமிர்ந்து பார்த்தார். பேன் ஓடவில்லை. அது எப்படி ஓடும் அதைத்தான் ஆணியில் அறைந்து கட்டித் தொங்கவிட்டிருக்கிறார்களே.

திரும்பப் போய் சுவிட்சைப் போட்டுப் பார்த்தார். பலரிடமும் ஒரு பழக்கம் உண்டு எதையாவது காணவில்லை என்றால் தேடிய இடத்தில் மீண்டும் மீண்டும் தேடுவர். அது தானாக வந்து உட்காந்துவிடாதா என்ற நப்பாசை. இன்னும் ஒருபடி மேலே போய் அண்டாவைக் காணவில்லை என்றால் சொம்புக்குள் தேடிப்பார்ப்பர். அப்படியாக நம் தலைவர் மீண்டும் மீண்டும் ஆப் செய்து போட்டுப் பார்த்தார். சுவிட்சை நன்றாக அழுத்திப்போட்டுப் பார்த்தார். ஊகூம்...

எதற்கும் அசையவில்லை. நீங்கள்தான் ஏதோ செய்திருக்கிறீர்கள் என்று எங்களிடம் கேட்டுப்பார்த்தார். “இவன்தான் ஏதோ செய்துவிட்டான்” என்று என்னைப் பார்த்து புகார் சொல்லிப் பார்த்தார். “எங்களுக்கு வேறு வேலை இல்லையா” என்று ஒரே போடாகப் போட்டுவிட்டோம். அப்புறம் என்ன ஓரிரு மாதங்கள் வரை அப்படியே கிடந்ததுதான் மிச்சம்.

இப்படியாகப்பட்ட நாளிலே சம்பளம் போடுவது நாங்கள். ஆனா பட்டுவாடா செய்யும் உரிமை அவருக்கு. ஒவ்வொரு மாதமும் அவர் பாட்டுக்கு துணை வட்டாட்சியரிடம் பணத்தை வாங்கிவந்து பட்டுவாடா செய்வார். நாங்கள் கூட அவரிடம் நின்றுதான் பணம் வாங்கவேண்டும்.

ஒருபக்கம் ஆத்திரமாக வந்தாலும், பட்டுவாடா தொல்லை இல்லை என்பதில் திருப்தி. ஆனால் எங்களுக்கு முன்னுரிமைப்படி பணம் தரவேண்டுமல்லவா. அதுதான் நடக்காது. நான் பார்த்தேன். அவர் முன்பாக நின்றுகொண்டு எதையாவது தொணதொணப்பது. அவர் நோட்டை எண்ணும்போது எதிரில் நின்றுகொண்டு ஏதாவது எண்களை முணுமுணுப்பது. அவருக்கு எண்ணிக்கை விட்டுப்போகும் மீண்டும் எண்ணுவார். ‘முதலில் உன் பணத்தை வாங்கிக்கொண்டு இடத்தைக் காலி பண்ணு’ என்று என் சம்பளத்தை எண்ணுவார். எனக்கு “நானூற்று முப்பத்து ஐந்து” ரூபாய் சம்பளம் என்றால், எதிரில் நின்றுகொண்டு “நூறுரூபாய் நோட்டுக்கட்டு நான்கு, பத்து ரூபாய் நோட்டுக்கட்டு மூன்று, ஐந்து ரூபாய் கட்டு ஐந்து” என்று அவருக்கு பணம் கொடுக்க உதவி செய்வதுபோல் கேட்பேன். பாவம் அவருக்கு வெறி ஏறிவிடும். அதெல்லாம் பிற்காலத்தில் எவ்வளவு தப்பு என்று உணர்ந்தபோது வருத்தப்பட்டது என்னவோ நிஜம்.

நானும் நண்பர் கலியபெருமாளும் சம்பளப் பிரிவு பார்த்தபோது ஆபீசில் எல்லாருக்கும் ரொம்ப சந்தோஷம்தான். ஏனென்றால் அவரவர்கள்

கோரிக்கையும் அவர்களே எதிர்பாராத வேகத்தில் நடந்ததுதான்.

அதிலும்கூட சிலர் வாங்கிக் கட்டிக்கொண்டதுண்டு. ஒரு முறை சம்பளக் கமிஷன் நிலுவை பட்டியல் போட்டு வழங்கப்பட்டது. மாதங்கள் கணக்கில் விபரங்கள் சேகரித்து பட்டியல் போட்டுத் தரவேண்டும். இதற்கிடையில் ஓய்வு பெற்றவர்கள் தொல்லை வேறு. அதில் ஒருவர் தினமும் காலை மாலை என்று வந்து எங்கள் வேலையை ஆய்வு செய்வார். அவர் ஏற்கனவே ஆபீசில் வேலைபார்த்தபோது யாரையும் மதிக்கமாட்டார். சண்டை வளர்த்துவார். இப்படிப்பட்ட நல்ல மனிதர். ஒரு பத்து நாள் பொருத்துப் பார்த்தேன். அவர் வரும்போதெல்லாம் பக்கத்தில் இருப்பவர்கள் எங்களுக்காக பரிந்து பேசி சமாதானம் செய்வர். அவர்களிடமும் சண்டை வளர்ப்பார் அவர். தொல்லை தாங்காமல் அவருக்கு மட்டும் தனி பட்டியல் தயார் செய்து அனுப்புங்கள் என்று துணை வட்டாட்சியர் கேட்க ஆரம்பித்துவிட்டார்.

மறுநாள் வழக்கம்போல் வந்தார். நான் அவரை அழைத்து “உங்க எஸ்.ஆர்-ஐ காணடித்துவிடுவேன். அப்புறம் உங்க குணத்திற்கு யாரும் உதவி செய்யமாட்டார்கள். எனக்கு ஒரு பனிஷ்மெண்ட்தான் கிடைக்கும் அதைப்பற்றி பரவாயில்லை” என்று சத்தமில்லாமல் மிரட்டிவிட்டேன். அத்துடன் போனவர்தான். சிலதினங்கள் கழித்து அழைத்து பணத்தைக் கொடுத்து போய்வாருங்கள் நாங்களும் மனிதர்தான் என்று சமாதானம் செய்து அனுப்பி வைத்தோம். சிலருக்கு அதிர்ச்சி வைத்தியம்தான் வேலை செய்கிறது. என்ன செய்ய.

இதுபோல் இரண்டு மூன்று பேர் முறட்டு பேர்வழிகள் ஆபீசில் இருந்தனர். அவர்கள் மிரட்டலிலேயே காரியம் சாதிப்பர். ஒரு டிரைவர் இப்படித்தான் அவருக்கு டி.ஏ. இன்கிரிமெண்ட் என்று ஏக பாக்கி. நாங்கள் சேர்ந்த புதிது. அதற்கு முன் இருந்தவர்களிடம் வாங்கத் துப்பில்லை. அவர் ஒரு டெக்னிக் கையாளுவார். அதிகாரி வண்டியில் ஏறி

உட்கார்ந்து ஜீப்பை ஸ்டார்ட் செய்யும்போது முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு முணறுவார். அல்லது அப்போதுதான் ‘ஏ3’-யிடம் ஒரு வார்த்தை என்று தாமதம் செய்வார். அதிகாரிக்கு செண்டிமெண்டாக கோபம் வரும்.

எங்கள் பேரிலும் இந்த வேலையைக் காட்டினார். ஒருநாள் இரவு உட்கார்ந்தோம். அவரது பணிப்பதிவேட்டை எடுத்துப் பார்த்தோம். அவர் வாங்கும் சம்பளத்திற்கும் அதில் இருந்த பதிவுக்கும் சம்பந்தமில்லாமல் இருந்தது. முதலிலிருந்து ஆராய்தோம். டிரைவர் பாணியில் சொல்வதென்றால் சர்வீஸ் ரிஜிஸ்ட்டரை முழுவதாக ‘இஞ்சினை பெட்டை விட்டு இறக்கி ஓவராயிலிங்’ செய்துவிட்டோம். ஏராளமான குளறுபடிகள். பட்டியலிட்டோம். ஒரே பெயரில் நாலைந்துபேர் இருந்ததால் பணிப் பதிவேட்டில் மாற்றி மாற்றி பதிவு செய்ததால் வந்த வினை என்று கண்டறிந்தோம்.

ஒரு நாலைந்து பக்கத்திற்கு ஆபீஸ் நோட் எழுதினோம். அவர் இன்னின்ன மாதிரி அதிகப்படியாக பணம் வாங்கியிருக்கிறார். அந்த வகையில் அவரிடமிருந்து மூவாயிரத்து சொச்சம் வசூல் செய்ய வேண்டியுள்ளது. அடுத்து அவருக்கு இன்னின்ன தொகைகள் வழங்கப்பட வேண்டியுள்ளது. அதன்படி அவருக்கு மூவாயிரத்து சொச்சம் அரியர் தரவேண்டியுள்ளது என்று கணக்குப் போட்டோம். போதாதற்கு இவர் வேறு வேறு அலுவலகங்களில் வேலை பார்த்திருப்பதால் அந்தந்த அலுவலகத்திற்கு அனுப்பி சரிபார்த்தால்தான் வேலைக்காகும் இல்லையென்றால் பிற்பாடு தப்பாக உத்திரவிட்ட அதிகாரிக்கு ஓலைவரும் என்று வண்ணம் வர்ணம் வைத்து எழுதிவிட்டோம்.

நூறு ரூபாய்க்கு வெள்ளி வாங்கினால் விரலுக்குள் மடங்கும் அளவில் ஒரு சிறு காசு கிடைக்கும். அதே ரூபாய்க்கு பொரி மூட்டை வாங்கினால்? நாங்கள் பொரி மூட்டையைத் தயார் செய்து அதிகாரிக்கு அனுப்பிவிட்டோம். போதக்குறைக்கு அதிகாரி

டிரைவரைக் கூப்பிட்டு அவர் பங்குக்கு வேறு மிரட்டிவிட்டார்.

டிரைவர் நேராக வந்தார் எங்களிடம். இன்னைக்கு எனக்கு வர வேண்டிய பட்டியலை போடச்சொன்னால் பழையதை எல்லாம் ஏன் கிளறிக்கொண்டிருக்கிறீர்கள் என்று சண்டை வளர்த்தினார். தாசில்தார் அவரைக் கூப்பிட்டு எதுவானாலும் என்னைக் கேள் என்று அடக்கிவிட்டார். அதோடு போச்சா என்றால் அதுதான் இல்லை. நேராக மாவட்ட ஆட்சியருக்குப் போனது. அங்கிருந்து கோட்டாட்சியருக்கு வந்தது. மீண்டும் அறிவுரை கேட்டு மாவட்ட ஆட்சியருக்குப் போனது. ஆக சுமார் ஒரு ஆண்டுக்கு மேல் சுற்றிக்கொண்டிருந்தது. டிரைவரும் ஏதடா வம்பில் மாட்டிவிட்டார்களே என்று அடக்கி வாசிக்க ஆரம்பித்துவிட்டார்.

இப்படியாக இரண்டு மூன்று முறட்டு ஆத்மாக்கள் எங்களிடம் மாட்டிக்கொண்டு அடங்கிப் போயிருக்கிறார்கள். மற்றவர்களாக இருந்தால் அவர்கள் பர்செண்டேஜ் கொடுத்து சத்தம் காட்டாமல் அரியர் போட்டு வாங்கியிருப்பர். எங்களிடம் அது நடக்காததுதான் வருத்தம்.

விளையாட்டாக வேட்டு வைப்பது கைவந்த கலையாக இருந்தது. ஆனால் அவரவருக்கும் நாங்கள் செய்தது நல்லதுதான் என்பது காலம் கடந்துதான் தெரியும். ஒரு சீனியர் குமாஸ்தா, ‘டிரைவருக்கு இப்படி செய்துவிட்டீர்களே’ என்று பரிந்துகொண்டு பேசினார். அன்று இரவு அவரது எஸ்.ஆர்.-ஐ பரிசீலனை செய்தால் அவர் எப்படி வேலைக்கு வந்தார் என்ற முதல் பதிவே இல்லை. திடீரென்று அவர் ஒரு அலுவலகத்திலிருந்து மாறுதலில் வந்ததாக ஆரம்பித்தது. ஆணி வேர் இல்லாமல் ஒரு மரம் சுமார் இருபது வருடத்திற்குமேல் வளர்ந்திருந்தது. காலையில் அவர் வந்ததும் அவருக்கு பேதி கொடுத்தோம். மனுஷன் ஆடிப்போய்விட்டார். வீட்டுக்கு ஓடிப்போய் பழைய பஞ்சாங்கங்களைத் தேடி முதல் பணி நியமன

ஆணையை எடுத்துக் கொண்டு வந்துவிட்டார். அவரது எஸ்.ஆர்-ஐ சரி செய்து கொடுத்துவிட்டு ‘இந்த வேலைதான் நடக்கிறது. மற்றவர்கள் பேச்சை கேட்டு கோபிக்காதீர்கள்’ என்று தெரிவித்தோம். நாங்கள் இதைக் கண்டுபிடிக்காவிட்டால். அவர் ரிட்டையர் ஆனபின் அவருக்கு பென்ஷன் வழங்குவது தாமதமாகியிருக்கும்.

நானும் நண்பர் கலியபெருமாளும் பிரிவில் சேர்ந்த புதிதில் நிறைய பேருக்கு நிலுவைகள் இருந்தது. குழப்பமான பிரிவினைச் சரிசெய்வதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. இந்த நிலையில் ஒரு துணை வட்டாட்சியர் தமக்கு மூன்று மாத ஊதிய உயர்வு நிலுவை ரூ 15/- மட்டும் போட்டுத் தரும்படி தினமும் அரிக்க ஆரம்பித்துவிட்டார். அந்த தொகைக்கு பட்டியல் போடும் வேலைக்கு அந்த தொகையை கைவிட்டு கொடுத்து விடலாம் என்று முடிவு செய்த நண்பர் அவரிடம் தனது சொந்த பணத்தை எடுத்து கொடுத்துவிட்டார். காசு காசு என்று அலைகின்ற அவரும் வெட்கமில்லாமல் வாங்கிக்கொண்டு போய்விட்டார். அதன் பின் அவர் வாய் திறக்கவே இல்லை. அவருக்கு “காசி...” என்ற பட்டப் பெயர் சேர்ந்துவிட்டது.

சம்பள பட்டியல் பிரிவில் சேர்ந்தவுடன் ஒரு கால்குலேட்டர் வாங்கினோம். அப்போதெல்லாம் தினசரி வசூல் விபரங்களை பதிவேட்டில் பதிவு செய்து தலைப்பு வாரியாக கூட்டுப்புள்ளி போடவேண்டும். அன்றைய சீனியர் குமாஸ்த்தாக்கள் எல்லாம். சர்வ சாதாரணமாக முன்று இலக்கங்களைக்கூட ஒரே நேரத்தில் கூட்டுவதையும் அதில் ஒரு தவறுகூட இல்லாததையும் கண்டிருக்கிறேன். நமக்கு அப்படி வரவில்லையே என்று ஏக்கம்கூட உண்டு. எங்கள் மேஜையில் கால்குலேட்டர் இருப்பதைப் பார்த்ததும் ஒரு சீனியர் கூட்டுப்புள்ளி போடும்படி என்னிடம் கொடுத்தார். கேல்குலேட்டரை அப்போதுதான் முதன் முதலாகத் தொடுகிறேன். அதை வைத்துப் போட்டால் சீக்கிரம் முடித்துவிடலாம் என்று அதனைப் பெற்றுவந்து உட்கார்ந்தேன்.

மிகப் பிரமாதமாக கூட்டுப்புள்ளி போட்டு இவ்வளவு ரூபாய் என்று குறித்துக் கொடுத்துவிட்டேன். அந்தத் தொகையானது மாவட்டத் தொகையைவிடவும் பல மடங்கு அதிகமாக வந்துவிட்டது. சீனியரோ, “தம்பி புள்ளி தப்பா இருக்கு”என்றார். நானோ “மனுஷன் தப்பு பண்ணலாம். கேல்குலேட்டர் தப்பு செய்யாது” என்று சாதித்தேன். ஐந்து நிமிடத்தில் அவர் கணக்குப் பார்த்து நான் போட்டது தப்பு என்று நிரூபித்துவிட்டார். எனக்கோ ஆச்சரியம். நாம் சரியாகத்தானே போட்டோம். அப்புறம் எப்படி என்று. இரண்டு மூன்று நாட்கள் சென்றுதான் சூட்சுமம் புரிந்தது.

நான் ஒன்றும் பெரிய தப்பு செய்துவிடவில்லை. (அப்போதுதான் நான் முதன்முதலாக கால்குலேட்டரைத் தொடுகிறேன்.) கால்குலேட்டாரில் 1 3 4 9 என்று அடித்தால் 1349 என்றுதானே பதிவாகும். அப்போது அது எனக்குத் தெரியவில்லை. நான் 9 3 4 1 என்று அடித்தால்தான் அது சரியாகக் கூட்டும் என்று நானாகவே கணித்துக்கொண்டு சுமார் முன்னுருக்கு மேற்பட்ட எண்களையும் அதே ரீதியில் கேல்குலேட்டரில் பதிவுசெய்திருந்தேன். அதுபாட்டுக்கு நான் சொல்வதுதான் சரி என்று எண்ணிக்கொண்டு ரூ 9341என்று கணக்கில் எடுத்துக்கொண்டது. இப்படியே எல்லாத் தொகையையும் கூட்டினால் என்னாகும். நல்லவேளை பட்ஜெட் போடும் இடத்தில் என்னை வேலைக்கு வைக்கவில்லை. அப்படி வைத்திருந்தால் காற்றிலேயே கணக்குப்போட்டு இல்லாத தொகைக்கு செலவழிக்க வழிசெய்திருப்பேன். இந்தக்காலத்தில் அப்படித்தான் நடக்கிறது என்பது வேறு விஷயம். பிற்பாடு பல ஆண்டுகள் வரை நான் போட்ட கேல்குலேட்டர் கூட்டல் என் நினைவுக்கு வந்து கிண்டலடிக்கும்.

# 24 வணக்கம்

வணக்கங்கள் பலவிதம். மனிதர்கள் மட்டும் பலவிதம் என்னும்போது வணக்கங்களும் பலவிதம் இருந்தாலென்ன. மறைந்த நடிகர் என்.எஸ்.கிருஷ்ணன் அவர்களின் “சிரிப்பு அதன் சிறப்பை சீர்தூக்கி பார்ப்பதே நம்ம பொருப்பு” என்ற பாடலில் ஒவ்வொரு வகை சிரிப்பையும் சிரித்துக் காட்டுவார். அதுபோன்று ஒருசிலரது வணக்கங்கள் பிரசித்தியானவை.

1. ஒரு அலுவலர். அவரைவிடப் பெரிய அலுவலர் யாரைப் பார்த்தாலும் ஒரு கும்பிடு போடுவார் பாருங்கள். தற்கால அரசியல்வாதிகளைப் போல் தரையைத் தொடும் அளவிற்கு நன்றாகக் குனிந்து இரு கரம் குவித்து வணங்குவார். ஏதோ சினிமாக்களில் வரும் அரசர் முன் மூன்று முறை குனிந்து சலாம் செய்வது போல் இருக்கும். ஒரு தாசில்தார் அவரை “கீழே சாய்ந்து விடாதே அய்யா” என்று கேலி பேசுவார். இருந்தாலும் அவர் அதைப் பொருட்படுத்தமாட்டார். ஒரு முறை அவர் அதே அதிகாரி முன்பு குனிந்து வணக்கம் தெரிவித்தார். அப்போது அவரது சட்டைப் பையில் வைத்திருந்த சில்லரை காசுகள் உட்பட பல துண்டுக் காகிதங்களும் அதிகாரி காலடியில் விழுந்து வணக்கம் செலுத்தியதை இன்று நினைத்தாலும் சிரிப்பு வரும்.

2. ஒரு நண்பர். அவர் அலுவலகத்திற்குள் நுழைந்ததும் கடவுளுக்கு முதல் வணக்கத்தை செலுத்திவிட்டுத்தான் மற்றவரை வணங்குவார். அதுவும் அலாதியான நகைச்சுவைதான். அலுவலகத்திற்குள் நுழைந்ததும் டபக்கென்று செருப்பினை கழற்றுவார். போலீசார் அட்டெண்ஷனில் நிற்கும்போது ஏற்படும் சத்தம் போன்று அனைவரையும் அது கவரும். அந்த செருப்புகளின் பின்னால் நின்றவண்ணம்

கடவுளுக்கு வணக்கத்தைச் செலுத்துவார். எனக்கு வாய் சும்மா இருக்காது. “ஏண்டா கடவுளுக்கு செருப்பைப் படையலாகப் போடுகிறாயா” என்று சில சமயம் கேட்டு வம்பு வாங்கியது உண்டு.

3. ஒரு கிளார்க்கு. அவர் அலுவலகத்திற்குள் வந்தவுடன் கண்ணில் படும் எல்லாருக்கும் வணக்கம் செலுத்துவார். வலது கையை நெஞ்சுக்கு நேராக விரைப்பாக வைத்து ஆங்கில வணக்கம் செய்வர். அதனைப் பார்த்த ஒரு துணை வட்டாட்சியர் “ஏன் சார் அவர் வணக்கம் செலுத்துகிறாரா அல்லது மவனே வெட்டிடுவேன் என்று மிரட்டுகிறாரா” என்று ஒருநாள் கேட்டுவைக்க அதன் பின்னர் அவர் எப்போது வணக்கம் சொன்னாலும் அந்த நினைப்புதான் வரும்.

4. ஒரு கிராம நிர்வாக அலுவலர். அவர் என்னிடம் வேலை பார்த்தவர். அவர் எப்போது அலுவலகத்திற்கு வந்தாலும். துணை வட்டாட்சியர் முதல் முக்கியமாக பந்தா பண்ணும் உதவியாளர்கள் வரை எல்லோரையும் பார்த்து “எஜமான் வணக்கம். அய்யா வணக்கம்” என்று விதவிதமான அடைமொழிகளைச் சேர்த்து பவ்யமாக வணங்குவார். ஆனால் என்னிடம் வந்து “எப்படி இருக்கீங்க. வீட்ல எல்லாரும் நல்லா இருக்காங்களா” என்று சாதாரணமாக நண்பரிடம் கேட்பது போல் கேட்பார். ஒருநாள் அவரிடம் “அது என்ன ஒருசிலரிடம் மட்டும் அவ்வளவு அடைமொழிகளுடன் வணக்கம் சொல்கிறீர்கள்” என்று கேட்கப்போக “அய்யா, எஜமான் என்கிற அடைமொழி சொல்லும்போது கெட்ட கெட்ட வார்த்தையெல்லாம் மனதில் நினைத்துக்கொண்டு வாயாற வணக்கம் சொல்வேன். உங்களிடம் எல்லாம் வரும்போது மனதார பேசுவேன் எது வேணும் சொல்லுங்க” என்றார். அப்புறம் ஏன் நான் வணக்கத்தை எதிர்பார்க்கிறேன்.

5. ஒரு குமாஸ்த்தா சற்று ஜோவியலாக எல்லாரிடமும் பழகுபவர். அவர் சலாம் செய்யும் அழகே அழகுதான். பார்த்தவுடன் ராணுவ ரேஞ்சில் ஒரு காலை உதைப்பார். அடுத்து கண்ணுக்கு குடை பிடிப்பது போல் வலது கையை நெற்றியில் பிடித்து ஒரு சல்யூட் அடித்து அப்படியே ஒரு உதறு உதறி கையை விடுவிப்பார். அந்த உதறல்தான் ஹைலைட்.

6. ஒரு தலையாரி. அவர் தொலைதுர கிராமத்திலிருந்து வருபவர். அவர் அலுவலகத்திற்குள் நுழைந்ததும் செருப்பைக் கழற்றி கையில் துக்கிப் பிடித்துக்கொள்வார். அந்தக் காலப் பாரம்பாரியம் போன்று துண்டை இடுப்பில் கட்டி இறுக்கியிருப்பார். அலுவலர் யாரைப் பார்த்தாலும். அது பியூனாக இருந்தாலும் சரி இல்லை வட்டாட்சியராக இருந்தாலும் சரி. டக்கென்று செருப்புடன் இருகரம் துக்கி வணக்கம் செலுத்துவார். சில குறும்புக்கார அலுவலர்கள் “ஒன்று செருப்பைக் கீழே போட்டுவிட்டு வணக்கம் செலுத்து அல்லது வணக்கமே சொல்லவேண்டாம்” என்று சொல்வர். உடனே நாணிக்கொண்டு செருப்பை பின்பக்கம் கொண்டு சென்றுவிடுவார். கீழே மட்டும் போடமாட்டார். அவ்வளவு மரியாதை அலுவலகத்திற்கு. அடுத்ததாக அவருக்கு ரொம்பவும் பிடித்த ஒரு கிளார்க்கின் பீரோவிற்கு அடியில் கொண்டுபோய் செருப்பை மறைவாக வைத்துவிட்டு ஒவ்வொரு குமாஸ்த்தாவிடமாக வந்து வணக்கம் சொல்லுவார். ஏதாவது வேலை செய்ய வேண்டுமா என்பார். யாரும் சொல்லாமலே குப்பையைக் கூட்டுவது தண்ணீர் கொண்டு வந்து வைப்பது எல்லாம் செய்வார். தடுத்தாலும் கேட்கமாட்டார். யாராவது டீ சாப்பிடு என்று சில்லரை கொடுத்தால் அவருக்கு தெய்வமாக கண்ணில் தெரிவார்.

இவரால் ஒரு சுவாரஸ்யமான செய்தி. ஒரு நாள் அதிகாலை நேரம் காலிங்பெல் அடிக்கவே யாராயிருக்கும் என்று கதவைத் திறந்தால் அந்த

தலையாரி சிமெண்ட் சாக்கில் முக்கால் மூட்டை கட்டிக்கொண்டு வாசலில் நின்றார். என்னுடைய சர்வீசில் எந்த ஒரு கீழ் நிலை அலுவலரிடமும் என் சொந்த உபயோகத்திற்கு எதையும் கேட்டது கிடையாது. எந்த ஒரு சொந்த வேலையும் வாங்கியதும் கிடையாது. அப்படியிருக்க இவர் என்னத்தைக் கொண்டு வந்துள்ளார் என்று தெரியாமல் விசாரித்தால் என் முன்பாக மூட்டையைப் பிரித்து கொட்டினார். பத்துப் பதினைந்து கிலோ அளவிற்கு அவ்வளவும் கோவைக்காய். மிகவும் பவ்யமான தலையாரி என்பதால், சாந்தமாக யார் கேட்டது இவ்வளவும் எதற்கு கொண்டு வந்தார் என்று விசாரித்தால் “அய்யா தாங்கள்தானே அன்று கோவைக்காய் சாப்பிடச் சொன்னீர்கள்” என்று விளக்கம் வேறு. அப்புறம்தான் தெரிந்தது. நாங்கள் சாதாரணமாக பேசிக்கொண்டிருந்தபோது சில நாட்கள் முன்பு நீரிழிவு நோய் கண்ட ஒரு நண்பரை தினமும் ஒரு பிடி அளவுக்கு கோவைக்காய் சாப்பிடும்படியும் நிறையக் கிடைக்கும்போது வாங்கி வற்றலாக போட்டு வைத்துக்கொள்ளும்படியம் சொன்னதை இவர் கேட்டிருக்கிறார். அவர் ஏதோ எனக்குத்தான் நோய் என்று மனம் கசிந்து கோவைக்காய் மொத்த வியாபாரம் செய்யும் அளவிற்கு மெனக்கெட்டு சேகரித்து இருபத்தைந்து கிலோமீட்டர் பயணம் செய்து கொண்டு வந்துள்ளார். அவரது பாசம் கலந்த மனித நேயத்தை மெச்சுவதா. அல்லது அவரது அறியாமை செயலுக்காக திட்டுவதா என்று புரியாமல் ஒருவழியாக டீ குடிக்க காசு கொடுத்து அனுப்பி வைத்தேன். அவரோ வற்றல் போட்டுக்கொள்ளுங்கள் என்று மன்றாடினார். ஒருவழியாக சமாதானம் செய்து திருப்பி அனுப்பி வைத்தேன். இரண்டு நாள் கழித்து ஒரு நண்பர் தம் வீட்டுக்குக் கோவைக்காய் கொண்டுவந்த விஷயத்தை சொன்னார். அப்புறம்தான் தெரிந்தது கொண்டு வந்த கோவைக்காயை வீணாக்காமல் ஒவ்வொரு அலுவலர் வீட்டுக்கும் கொண்டுபோன விவகாரம். இது எப்படி இருக்கு.

1. அது ஒரு தனி திட்டப்பணி அலுவலகம், பத்து

தாசில்தார்களும், ஒரு மாவட்ட வருவாய் அலுவலரும் அங்கு வேலை செய்தனர். ஒரு தாசில்தார். அவர் திடீரென்று எழுந்து சென்று ஒவ்வொரு தாசில்தாராக பார்த்து ஓரிரு வார்த்தை பேசிவிட்டு நேராக அதிகாரியைப் பார்த்து வணக்கம் செலுத்திவிட்டு வருவார். முதலில் அதிகாரி நேரங்கெட்ட நேரத்தில் வந்து இவர் ஏன் வணக்கம் சொல்லிவிட்டுப் போகிறார் என்று குழம்பினார். பின்னர்தான் தெரிந்தது. அவர் அப்படியே வீட்டுக்குப் போகிறார் என்பதும், இரண்டொரு நாட்களுக்குத் தாக்கு தகவல் ஏதும் இல்லாமல் அபீசுக்கும் வரப்போவதில்லை என்பதும். இப்படி ஒரு வாரம் கூட வராமல் இருப்பார். எந்த தகவலும் தெரியாது. சில நாட்கள் அலுவலக வாசல் வரை வந்து மனம் மாறி வீட்டுக்குப் போனதுகூட உண்டு. சுதாரித்துக்கொண்ட அதிகாரி மறுநாள் அவரது கிராமத்திற்குப் பணி மேற்பார்வை செய்ய வருவதாகச் சொல்லிக்கூடப் பார்த்தார். அதிகாரிதான் தன் போக்கை மாற்றிக்கொண்டார். மகானுபாவன் மாறவில்லை. அவருக்கும் ஒரே சம்பளம்தான். மாய்ந்து மாய்ந்து வேலை செய்த மற்ற ஒன்பது வட்டாட்சியர்களுக்கும்கூட ஒரே சம்பளம்தான்.

இவரைப்பற்றி இன்னும்கூட சுவாரஸ்யம் உண்டு. அவர் மயிலாடுதுறையில் வசித்தார். எங்கு பணி புரிந்தாலும் ரயிலில் வருவார். கடலூருக்கு இந்த அலுவலகத்துக்கு வந்ததும் தினமும் காலை ரயிலில் ஏறியதும் சட்டையைக் கழற்றி மாட்டுவார். செருப்பு ஒரு பக்கம் கிடக்கும். ஆசுவாசமாக உட்கார்ந்து வருவார். பாசஞ்சர் என்பதால் மூன்று மணிநேரம் ஆகும். பயணத்தின்போது எதிரில் வண்டி வந்து கிராசிங் என்றால் அப்படியே இறங்கி வீட்டுக்கு போய்விடுவார். சில நாள் மறதியாகக் கடலூர் வரை வந்துவிட்டால் காலாற நடந்து ஆபீஸ் வரை வருவார். சந்து முனையில் அவருக்கு வேண்டிய ஒரு சர்வேயர் சந்தித்து விவரம் சொல்வார். அதற்கேற்ப ஆபீசுக்கு வந்தாலும் வருவார் அப்படியே போனாலும் போவார். இது எல்லாருக்கும் விக்கிலீக்ஸ் போல் லீக்

ஆகிவிட்டது. ஆனாலும் மனிதன் அலட்டிக்கொள்ளவில்லை.

ஆகக்கூடி அவரது அலுவலகத்தில் மட்டும் வேலை எதுவும் நடக்கவில்லை. பார்த்தார் பெரிய அதிகாரி. அவர் தன்னிச்சையாகப் பணிக்கு வரவில்லை என்று அறிக்கை எழுதிவிட்டு அவரது வேலையை மற்ற எட்டு தாசில்தார்களுக்கும் பிரித்துக் கொடுத்துவிட்டார். இந்த தகவல் தெரியாத அவரும் அவருடைய பணியாளர்களும். ஏதோ தங்களுக்கு வேலை பளு குறைந்துவிட்டது என்று ஒருமாதம் காலம் ஒட்டினர். ஒரு மாதம் கழித்துதான் தெரிந்தது சமாசாரம். விளைவு அவர்களுக்கு வரவேண்டிய பயணப்படி வகைகள் பறிபோய்விட்டது.

1. நாங்கள் தாலுக்கா அலுவலகத்தில் இளங் குமாஸ்த்தாக்களாக இருந்த சமயம். அருகில் உள்ள கடையில் டீ சாப்பிட நான்கைந்து பேராக போவோம். நாங்கள் எப்போது போனாலும் ஒரு குமாஸ்தா வணக்கம் சொல்லி எங்களுடன் சேர்ந்துகொள்வார். ஒரு சில மாதங்கள் வரை எங்களுக்கு ரகசியம் புரியவில்லை. ஒரு நாள் ஒரு நண்பர்தான் கண்டுபிடித்தார்.

நாங்கள் டீ குடித்ததும் யாராவது ஒருவர் காசு கொடுப்போம். அவர் ஒரு நாளும் கொடுத்ததில்லை. ஆக, எங்களுக்கு ஒரு வணக்கத்தை கடாசிவிட்டு எங்களுடன் வந்து தினமும் ஓசி டீ குடித்து வந்துள்ளார் நண்பர். அவர் பிரிவு வழியாதான் நாங்கள் போகவேண்டும் என்பதால் அவரிடம் தப்பவும் முடியாது. அவரிடம் சொல்லிக் காட்டி வெட்டிவிடவும் மனம் வரவில்லை. இருந்தாலும் பாடம் சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தோம்.

வழக்கம்போலவே 'டீ' கடைக்கு போவோம். அவரிடம் கொஞ்சம் தண்ணீர் மட்டும் கேட்டுவாங்கிக் குடித்துவிட்டு சற்று நேரம் பேசிவிட்டு திரும்பி விடுவோம். இப்படி செய்தும் அவர் எங்களுடன் வருவதை நிறுத்தவில்லை. கடைசியில் அவருக்கு திருச்சிக்கு மாறுதல் வந்ததால் எங்களை ஏங்கவிட்டுப் போய்விட்டார்.

1. ஒருவர் சற்று வசதியானவர் மிதப்பானவர். சட்டையில் ஒரு பட்டன் மட்டும் தான் போடுவார். விரல் மொத்த சங்கலி வயிறு வரை தொங்க, காவி பல்லில் கொப்பளிக்க, விரல்களில் கட்டி மோதிரங்கள் பளபளக்க ஆர்ப்பாட்டமாக வருவார். அவர் அதிகாரி முன்பு வந்தால் மட்டும் வணக்கம் சொல்வார். மற்றவர்களுக்கு – குட்டி அதிகாரியாக இருந்தாலும் சரி – இடது கையால் சலாம் அடிப்பார். அதுவும் அலட்சியமாக. அதற்கு வசதியாக வெற்றிலை பெட்டியை தனது வலது அக்குளில் இடுக்கிக்கொள்வார். அதனால் யாரும் அவரது செயலை தப்பா எடுத்துக்கொள்ள மாட்டார்கள் என்று நினைப்பு. இதில் வினோதம் என்னவென்றால் சிலர் அவரிடம் வேற்றிலை கேட்டு வாங்கி போடுவர். அவருக்கு மக்கள் வைத்த பட்டப் பெயர் நாயனக்காரர். அது அவருக்கு தெரியுமோ தெரியாதோ.

2. நான் திருக்கோயிலூரில் வேலை பார்த்த பொது என்னுடன் ஒரு வயதான எழுத்தர் வேலை பார்த்தார். அவர் அதிகாரியை பார்த்தவுடன் ஒற்றை வணக்கம் எல்லாம் சொல்லமாட்டார். அநேகம் கோடி நமஸ்காரம் என்பார். தாசில்தாரும் எனக்கு ஒரு வணக்கம் போதும். கோடி நமஸ்காரத்தை கடவுளுக்கு கொடுங்கள் என்பார். ஆனால் இவரோ மாற்றிக்கொள்ளவே இல்லை.

நான் விழுப்புரத்தில் வேலை பார்த்த பொது ஒரு முதிய எழுத்தர். அவர் அடிக்கடி புரோஹிதம் பார்க்கப் போவார். அவருக்கு எத்தனை நாள்தான் விடுப்பு என்று தெரியாது. இன்று விடுப்பு கேட்பார். மதியம் வந்து தாமத வருகை என்று சொல்லி விடுப்பை ரத்து செய்வார். இப்படியே குழப்பம் செய்து தேவையான விடுப்புகளை அனுபவிப்பார். அவர் அதிகாரிக்கு விடுப்பு கடிதம் எழுதும் அழகே தனி. வணக்கத்துடன்தான் கடிதம் ஆரம்பிப்பார் இப்படி.

“மகாராஜ ராஜஸ்ரீ சப்ரி ஆபீசர் இருக்கும் திசைநோக்கி தெண்டனிட்டு அநேக நமஸ்காரங்களுடன் எழுதிகொள்ளும் விண்ணப்பம் என்னவென்றால் .....” என்று எழுதி கடைசியில் நன்றி நன்றி நன்றி என்று மூன்று முறை எழுதி முடிப்பார். அதிகாரியோ கடவுள் மறுப்பு கொள்கை உடையவர். வயதான பெரியவர் என்பதால் சிரித்துக்கொண்டே கடிதத்தை வாங்கி வைத்துக்கொள்வார். அவருக்குத் தெரியும் மீண்டும் சற்று நேரத்தில் ரத்து செய்யப்படும் என்று. இருந்தும் வயதை முன்னிட்டும் அவர் அலுவலகத்தில் இருந்தாலும் வேலை செய்யப்போவதில்லை என்பதாலும் ஒழியட்டும் என்று விட்டு விடுவார்.

1. அப்போது என்னுடன் ஒரு தற்காலிக எழுத்தர் வேலை பார்த்தார். அவர் மேல் பட்டம்பாக்த்திலிருந்து தினமும் வருபவர். சில நிமிடங்கள் தாமதமாகத்தான் வருவார். அவர் கால் சற்று ஊனமுற்றவர். அதனால் அவருக்கு சிறிது சலுகை உண்டு அதிகாரியிடம். அலுவலகம் முழு அளவில் நடந்துகொண்டிருக்கும். இவர் அலுவலக வாசல் படியைத் தாண்டி ஒரு காலை வைக்கும்போதே இரண்டு கைகளையும் தலைக்கு மேல் கூப்பிய வண்ணம். “வணக்கம் சார்” என்று ஒரு கர்ண கடூர சத்தம் கொடுப்பார். அதன் பின்னர்தான் உடல் உள்ளே நுழையும். சில தினங்களில் அதிகாரி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்து ‘பயமுறுத்தாதே’ என்பார்.

இவரைப் பற்றி சுவையான செய்தி. நானும் இன்னொரு நண்பரும் கடலூரிலிருந்து தினமும் வருவோம். மாலையில் ஆறு மணிக்கு ஜனதா எக்ஸ்பிரஸ் ரயில் விழுப்புரத்தில் புறப்படும். நாங்கள் மூவரும் அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டால் அதிகாரி விடமாட்டார். வேண்டுமென்றே கடிகாரத்தை பார்த்துக் கொண்டே இருப்பார். சரியாக ஆறு மணிக்கு “போங்கடா” என்பார் சிரித்துக்கொண்டே. நாங்கள் எப்படியும் ஓடி ரயிலை பிடித்துவிடுவது என்று உத்வேகத்துடன்

நிலையத்தின் பின்புற வழியாக ஓடுவோம். சில நேரம் நிற்கிற கூட்ஸ் எல்லாம் தாவிக் குதித்து ஓடுவோம். ரயில் நிர்ப்பது போலவே தோன்றும். கடைசியில் பிடிக்க முடியாது. அப்புறம். ஸ்டேஷனிலேயே காத்திருப்போம். நாகூர் வண்டி இரவு ஒன்பது மணிக்கு வரும். தாமதமானால் ஒன்பதரைக்கு போட் மெயில் வரும். அதில் ஏறுவோம். மேல்பட்டாம் பக்கத்தில் நிற்காது. இருந்தாலும் ஓடும் ரயிலில் இருந்து இறங்கிவிடுவான் அந்த கில்லாடி.

சில சமயத்தில் அவனது பேசி பேசியே கொல்லும் அறுப்பு பிடிக்காமல் எப்படி அவனை கழட்டி விடுவது என்று பார்ப்போம். அவன் சற்று ஜொள்ளு பேர்வழி. நாங்கள் இருவரும் அவனிடம் “....சா கொஞ்சம் லேட்டா வரியே இப்பதான் ஒரு பொண்ணு சிகப்பு தாவணி பச்சை சட்டை போட்டு இந்த பக்கம் போச்சு” என்று அடித்து விடுவோம். அவனோ உடனே எந்த பக்கம், எவ்வளவு நேரம், அடையாளம் என்று பரபரப்பான்.

நாங்களும் எதாவது சொல்லிவைப்போம். கற்பனைதானே எதை சொன்னால் என்ன. ஆனால் அவனோ காற்றில் கணக்கு போட்டு வேகவேகமாக போவான். நாங்களும் விட்டது தொல்லை என்று அரட்டை அடிப்போம். அவனோ யாரையாவது பார்த்துவிட்டு சற்று நேரத்தில் வந்து எங்களை ரசனை குறைந்தவர்கள் என்று திட்டுவான். இப்படியே பொழுது போகும். கடைசியில் இரவு ரயிலை பிடிப்போம். மேல் பட்டாம்பக்கத்தில் ரயில் நிற்காது. ஆனால் நண்பனோ துணிச்சலாக ஏறிக்கொண்டு ஸ்டேஷன் வரும்போது சற்று வேகம் குறைந்தவுடன் இறங்கிவிடுவான். நாங்கள் என்ன சொன்னாலும் கேட்கமாட்டான். இப்படியாக கிட்டத்தட்ட ஒரு ஆண்டு ஜாலியாக போனது வாழ்க்கை.

# 25 கருவூலம்

வருவாய்த் துறைக்கும் கருவூலத்திற்கும் எப்போதுமே நல்ல தொடர்பு உண்டு. எல்லாத் துறைகளின் கணக்குகளையும் தணிக்கை செய்து பட்டியல் பாஸ் செய்வது கருவூலத் துறைதான் என்றாலும் வருவாய்த்துறையினருடன் சற்று பட்சமாகவே இருப்பது வழக்கம். காரணம் வருவாய்த்துறையிலிருந்து பிரிந்து உருவானதுதான்.

நான் சிதம்பரம் தாலுக்கா அலுவலகத்தில் பணியில் இருந்த காலம். கருவூலத்தில் திரு நரசிம்மன் என்ற நண்பர் இருந்தார். நாங்கள் டீ சாப்பிடக் கிளம்பும்போது அந்த அலுவலகம் வழியாகச் செல்வோம். வாசலில் நின்று கொண்டு தூரத்தில் அவரைப் பார்த்து சலாம் செய்வோம். ஆனால் அவரோ நாங்கள் ஏதோ பட்டியல் அனுப்புகிறோம் என்று எண்ணிக்கொண்டு ‘இன்னும் வரவில்லை நான் அனுப்பிவிடுகிறேன் நீ போ’என்று சாடைகாட்டி கை ஆட்டுவார். யாரும் போய் தள்ளிவிடாமலே பட்டியல்கள் போய்க்கொண்டே இருக்கும். ஒரு பட்டியல் என்றால் பட்டியல் அலுவலரால் குறைந்தபட்சம் பத்துக்குமேல் கையெழுத்துக்கள் பொறிக்கப் பட்டிருக்கும். ஒரு முறைக்கு பத்து பதினைந்து பட்டியல்கள் அனுப்பப்படும். இந்நிலையில் ஒரு கையெழுத்து விடுபட்டிருந்தாலும் அவரே நேரே எடுத்துவந்து வட்டாட்சியர் ஒப்பம் பெற்று பாஸ் செய்துவிடுவார். அவ்வளவு பாசம்.

ஒருமுறை தீபாவளியை முன்னிட்டு 25-ஆம் தேதியே சம்பளம் வழங்கும்படி 24- ஆம் தேதி அறிவித்துவிட்டது அரசாங்கம். இது விபரம் எங்களுக்குத் தெரியாது. மதியம் அலுவலகத்திற்கு வந்தார் கருவூல அலுவலர். நாளை சம்பளம். நீங்க என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள் என்று செல்லமாக கடிந்துகொண்டார்.

எங்கள் வட்டாட்சியரோ கவர்னர் வருகைக்காக பங்களாவில் குடியிருந்தார். அப்போதெல்லாம் அப்படித்தான். அலுவலகத்திலோ பட்டியல் அலுவலக நகல் மட்டும் முடிந்திருந்தது. நகல் தயாரிக்கும் வேலை நடந்துகொண்டிருந்தது. முடிய இன்னும் இரண்டு நாள் ஆகும். விபரத்தைக் கேட்டவர். எனக்கு வேண்டியது தாசில்தார் கையெழுத்துதான் பட்டியலைத் தைத்து எடுத்துவா என்றார். நானும் நண்பனும் (நண்பன்தான் பட்டியல் குமாஸ்த்தா) வேகவேகமாக முடித்து வட்டாட்சியரிடம் கொண்டுபோய் கையெழுத்து வாங்கி வந்தோம். ஆனால் சில பதிவேடுகளில் கையெழுத்து வாங்க முடியவில்லை. இணைப்புகளில் கையெழுத்து வாங்க முடியவில்லை. எப்படியும் 45 பில்களுக்கும் சேர்த்து ஆயிரம் கையெழுத்தாவது அதிகாரி போடவேண்டும்.

ட்ரெஷரி அதிகாரியிடம் போனால் பில்லை கொண்டா என்று கேட்டு வாங்கி பில் சம்பந்தப்பட்ட முக்கியமான கையெழுத்துக்கள் உள்ளதா என்று பார்த்து பாஸ் செய்து வங்கிக்கு அனுப்பிவிட்டார். இதெல்லாம் நடக்கும்போது மாலை ஆகிவிட்டது. மறுநாள் காலை வங்கியிலிருந்து முதல் ஆளாக பணம் பெற்றுவந்து சம்பளம் பட்டுவாடா ஆகிவிட்டது. மறுநாள் வங்கியிலிருந்து பில்களைப் பெற்றுவந்து சீவிமுடித்து சிங்காரித்து பொட்டிட்டு பூச்சூட்டி தேவையான இணைப்புகளை இணைத்து மீண்டும் கொண்டுபோய் ஒப்படைத்தோம்.

இதில் ஒரு சுவாரசியம் என்னவென்றால் அதிகாரியும் நீட்டிய இடத்தில் கையெழுத்து போட்டார். போதாதற்கு ‘தம்மை சும்மா சும்மா வந்து தொந்தரவு செய்ய வேண்டாம்’ என்று சில வெற்றுப் படிவங்களிலும் கையெழுத்து போட்டுக் கொடுத்துவிட்டார். மறுநாள் எல்லாம் செட்டில் ஆனபின்பு வட்டாட்சியரிடம் கொண்டுபோய் எல்லாவற்றையும் காண்பித்து தேவையில்லாத காகிதங்களையெல்லாம் அவர் முன்பாகவே கிழித்துப் போட்டது தனிக் கதை.

நான் பட்டியல் குமாஸ்த்தாவாக இருக்கும்போதும்

இதுமாதிரி வட்டாட்சியர் (இப்போது வேறு ஒருவர்) என்னை அழைத்து தாம் வெளியே போவதாகவும் ஏதேனும் பட்டியல் கையெழுத்து வாங்கவேண்டுமெனில் இப்போதே வாங்கிக்கொள் என்றும் சொல்லி என்னிடமும் வெற்றுப் படிவத்தில் ஒப்பம் செய்து கொடுத்த சம்பவங்கள் உண்டு.

அந்த நாளில் அதிகாரிகள் குமாஸ்தாக்களை நம்பினர். குமாஸ்தாக்கள் அதிகாரிகளிடம் விசுவாசமாகப் பணிபுரிந்தனர். அது அதிகாரி-குமாஸ்தா என்ற உறவு அல்ல. பெற்றோர் - பிள்ளைகள் போன்ற உறவு. அதற்கும் மேலே உற்ற நண்பர்களின் உறவு என்றால்கூடப் பொருந்தும். "கடிதோச்சி மெல்ல எரிவர்." இக்காலத்தில் அதையெல்லாம் நுற்றில் ஒருவரிடம் கூட எதிர்பார்க்க முடியாது. அதைவிட இப்போது கூட்டுக்கொள்ளை, நம்பிக்கைத் துரோகம் வேண்டுமாயின் நடக்கும்.

நான் சப்கலெக்டர் அலுவலகத்தில் பணிபுரிந்த காலம். எல்லாருக்கும் டி.ஏ. பில் தயார் செய்தோம். கையால் எழுதுவதெல்லாம் கிடையாது. எல்லாம் டைப்தான். கடைசியில் பட்டியல் போட்டு பணம் வந்து சேர்ந்துவிட்டது. சீனியர் குமாஸ்த்தா பணத்தை என்னிடம் கொடுத்து பட்டவாடா செய்யச் சொன்னார். பணம் கொடுத்துக்கொண்டே வந்தேன். கடைசியில் பணம் குறைந்தது. யாருக்கோ தப்பாக கொடுத்துவிட்டோம் என்று மீண்டும் மீண்டும் சரிபார்த்தால் எல்லாம் சரியாக இருந்தது. பணம் எப்படி குறையும். சீனியரிடம் கேட்டேன் பயந்துகொண்டே. நம்மை கண்காணிப்பதற்காக பணத்தைப் பிடித்து வைத்திருப்பாரோ என்று எண்ணம். அவர் பட்டியலைக் கொண்டா என்று வாங்கி ஒவ்வொருவராக கூட்டிப் பார்த்து கடைசியில் கூட்டுப் புள்ளி தப்பாக போட்டதை ஒரு நிமிடத்தில் கண்டுபிடித்துவிட்டார். அதுதான் சீனியர். நான் போட்டால் சரியாக வந்தது.

நான் டைப் அடிக்கும்போது எண்கள் பதிவு செய்யும்போது இலக்கங்களை ஒழுங்கு படுத்தாமல்

இடது ஒழுங்கில் தட்டச்சு செய்திருந்தேன். அப்படியே கூட்டினால் நுறும் பத்தும் சேர்ந்து தொகை அதிகமாக வந்துள்ளது. என்ன செய்வது என்று புரியவில்லை.

சப்கலெக்டரிடம் எப்படி சொல்வது என்று பயம். சீனியர் என்னையும் அழைத்துக்கொண்டு நேராக டிரஷரிக்குப் போய் அதிகாரியைப் பார்த்தார். அவர் சப்கலெக்டருக்குத் தொரியுமா என்றார். நாங்கள் இல்லை அவரிடம் போகுமுன்பாக என்ன செய்வது என்று தெரிந்துகொள்ள வந்ததாகச் சொன்னோம். அவரும் பட்டியலை ஒரு புரட்டு புரட்டிப் பார்த்தார். எவ்வளவு தொகை குறைவாக இருந்ததோ அதற்கு சமமாக ஒரு கிளாக்குக்கு சேரவேண்டிய தொகை இருந்தது. அதனை ரத்து செய்து சப்கலெக்டர் கையெழுத்து வாங்கிக்கொண்டு புதுப் பட்டியல் தனியாக அவருக்கு தயார் செய்து பெறும்படி ஆலோசனை சொன்னார்.

நேராக சப்கலெக்டரிடம் வந்தேன். பயந்துகொண்டே ஒரு தப்பு செய்துவிட்டேன் என்று பாதிரியாரிடம் பாபவிமோசனம் தேடுபவனாக நின்றேன். அவர் சிரித்த முகம் மாறாமல் அப்படியானால் டிரெஷரியில் கன்சல்ட் செய்து சரிசெய்ய வேண்டியதுதானே என்றார். நாங்கள்தான் முன்பே சரிசெய்து பட்டியலும் தயார் செய்து வைத்திருந்தோமே உடனே நீட்டி ஒப்பம் பெற்றுவிட்டோம். ஒரு வார்த்தைகூட சொல்லாமல் ஒப்புதல் செய்து கொடுத்தார். அதைவிட, அதன் பின்னர் சுமார் ஒரு ஆண்டுகாலம் பலப்பல பட்டியல்கள் ஒப்புதல் பெற்றுள்ளேன். ஒரு தடவைகூட எந்தவித கேள்வியும் கேட்டதில்லை. அது அவரது உயர்ந்த குணத்தைக் காட்டியிருக்கலாம். ஆனால் அவர் ஒரு வார்த்தையாவது திட்டியிருந்தால் என் மனம் சமாதானம் ஆகியிருக்கும். அவர் திட்டாததே எனக்கு மனதளவில் தண்டனையாக அமைந்துவிட்டது. அவர் என்னை முற்றிலுமாக ஏமாற்றிவிட்டார்.

நான் ஆதி திராவிடர் நலத் தனி வட்டாட்சியராகப் பணியேற்றதும் நேராக டிரெஷரி அதிகாரியிடம் சென்றேன். அவர் ஏற்கனவே என் நண்பர்தான். அவர்

எனக்கு டீ வாங்கிக் கொடுத்து உபசரித்தார். அடுத்து அந்த அலுவலகத்திலிருந்து பட்டியல்கள் தாறுமாறாக வருவதாகவும் சற்று கவனமுடன் இருக்கும்படியும் கேட்டுக் கொண்டார். நானோ. அவருடன் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டேன். அதன்படி பட்டியல்கள் அனைத்தும் துல்லியமாகச் சரிபார்க்கவேண்டியது. எந்த பட்டியல் வந்தாலும் ஆடிட் போடக்கூடாது. தினமும் நான் வந்து போவேன் என்ன குறை என்றாலும் அங்கேயே சரி செய்து கொடுத்துவிடுவேன். பில் பாஸ் செய்யும் குமாஸ்தா என் நண்பர். அப்புறம் என்ன பட்டியல்கள் ஸ்பெஷல் டிராக்கில் செல்ல ஆரம்பித்துவிட்டது. ஆசிரியர்கள் மத்தியில் எனக்கு ஆச்சரியமான நல்லுறவு மலர்ந்தது என்றால் அதுதான் காரணம். டிரெஷரியின் குமாஸ்த்தாவை எனது பட்டியல் குமாஸ்தா அளவிற்கு மாற்றி சிக்கலான பட்டியல்களையெல்லாம் முன் தணிக்கை செய்து பின்னர்தான் ஒப்புதல் செய்வேன்.

நான் ஆர்.டி.ஓ. ஆபீசில் குமாஸ்தாவாக இருந்த சமயம். ஒரு புதிய குமாஸ்தா வந்து சேர்ந்தார். துருதுருப்பான பொருப்பானவர். அந்த நாளில் சம்பளப் பட்டியல் பதிவேடு இரண்டடி அகலத்தில் முறம் மாதிரி இருக்கும் எல்லோரும் கையாண்டு சீக்கிரம் தாள்தாளாக வந்துவிடும். நண்பரோ தாமே உட்கார்ந்து ஒட்டி சரிசெய்து தோட்டப் பக்கம் வெயிலில் காயவைத்துவிட்டு தாமும் பின்பக்க வெராண்டாவில் உட்கார்ந்து வேலை செய்துகொண்டிருந்தார். அந்த நேரம் பார்த்து கலெக்டர் ஆபீசிலிருந்து போன் வரவும் நண்பர் சென்று பேசிவிட்டு வந்துபார்த்தால் காயவைத்ததைக் காணோம். மாடு வந்ததாகவும் தெரியவில்லை. யாரைக்கேட்டாலும் தெரியவில்லை பார்க்கவில்லை என்ற பதில்தான். இரண்டுநாளாகத் தேடியும் துப்புத் துலங்கவில்லை. இன்னும் இரண்டு நண்பர்களும் அக்கம் பக்க வீடுகள் எல்லாம் விசாரித்தனர். அருகில் உள்ள கடைகளில் எல்லாம் போய் இம்மாதிரி பேப்பர் ஏதேனும் கடையில் கொண்டுவந்து போட்டார்களா என்றெல்லாம் விசாரணை வேறு. இதற்கிடையில் ஒருவர் ஊர்

கோடியில் குறியும் கேட்டுப் பார்த்தார்.

இதற்கிடையில் ஏ.ஜி. ஆடிட் வேறு வந்து உட்கார்ந்துகொண்டு அந்த பதிவேட்டை கொண்டா என்றனர். பதிவேடு பயிண்டிங் கொடுத்ததாகவும் கடையைப் பூட்டிக்கொண்டு போனவர் வரவில்லை என்றும் சமாளிப்பு வேறு. இவர்கள் அல்லாடியதைப் பார்த்து ஆடிட் பார்ட்டி அடுத்த தணிக்கைக்கு ஆஜர் செய்கிறேன் என்று எழுதிவாங்கிக்கொண்டு போய்விட்டனர். மற்ற எல்லா பதிவேடும் திருப்தியாக இருந்ததால் பிரச்சினை செய்யவில்லை. இப்படியாக, பத்து நாள் ஓடிவிட்ட நிலையில் ஒரு பெட்டிக்கடைக்காரர் இரண்டு மாணவர்கள் தம்மிடம் வந்து பேப்பர் போட்டதாகவும் அரசாங்க பேப்பர் மாதிரி இருந்ததால் திட்டி அனுப்பியதாகவும் தெரியவந்தது.

நண்பர் ஒரு காரியம் செய்தார். ஆபீஸ் வளாகத்தில் சுற்றித்திரியும் மாணவர்களை பிடித்து விசாரித்ததில் ஒரு மாணவன் ஸ்டாம்பு வைத்து பல்பத்திற்கு விற்றதாக தகவல் கிடைத்தது. அவனது வீட்டைக் கண்டுபிடித்து போய் விசாரித்ததில் அவனது அம்மா சண்டை வளர்த்திவிட்டார். இதற்கிடையில் அந்த வீட்டில் ஒரு ஸ்டூலுக்கு அடியில் கட்டாக இருந்த பேப்பர் கட்டைக் கண்டுபிடித்து எடுத்துவிட்டார். எல்லாம் தாள் தாளாகக் கிழிக்கப்பட்டு அதில் ஒட்டப்படிருந்த ஸ்டாம்புகள் பிய்க்கப்பட்டு அனாதையாக கிடந்ததை கைப்பற்றிக் கொண்டுவந்து பயிண்டிங் செய்து புதிதாக ஸ்டாம்பு ஒட்டி எல்லாரிடமும் கையெழுத்து வாங்கி........ அம்மாடியோவ்

எனது நன்பன்தான் பட்டியல் குமஸ்தா. அவன் ஒரு வாரமாக அலுவலகத்திற்கு வரவில்லை. அவன் வீடோ கடைக்கோடி. தகவல் சொல்லவும் யாருமில்லை. சம்பளப் பட்டியல் வேறு தயார் செய்ய வேண்டும். நண்பர்கள் கூடி நேரில் சென்று பார்த்து வரலாம் என்று கிளம்பிய நேரத்தில் தலைவர் ஒரு குதிரைவண்டியில் வந்து அலுவலக வாசலில் இறங்குகிறார் பந்தாவாக. கூடவே பெரியவர் ஒருவர்

பாடிகார்டு மாதிரி. அப்புறந்தான் தெரிந்தது, புள்ளாண்டானுக்கு ஒரு வாரமாக பீஸ் பிடுங்கிக்கொண்ட விவரம். வந்த பெரியவர் ஒரு மந்திரவாதி கம் வைத்தியர். எதேச்சையாகப் போய்ப் பார்த்தவர் வைத்தியம் பார்த்து ஆபீசுக்கு அழைத்து வந்து விட்டுச் சென்றார். அப்புறம் என்ன அவனை உட்கார வைத்து, பட்டியலை இரவு முழுவதும் தயார் செய்து அதிகாலையில் தாசில்தார் கையெழுத்து வாங்கி, கருவூலத்தில் கொண்டுபோய் சேர்த்தோம். ஒரே பகல் இரவில் 45 பில் போட முடிந்ததென்றால் அனைத்தையும் டைப் அடித்து தள்ளிவிட்டேன் அடியேன். டிக்டேஷன் செய்தது நண்பன். எங்கள் காலத்தில் பட்டியல் கருவூலத்துக்கு அனுப்பினால் நேரில் போய் உட்கார்ந்துகொண்டு தள்ளிவிடும் வேலையெல்லாம் கிடையாது.

மறுநாள் காலையில் 'இப்படி அவசர கதியில் பட்டியல் போட்டோம் குறைகள் இருந்தால் சரி செய்து விடுகிறோம்' என்று சொல்வதற்காக, கருவூல குமாஸ்தாவிடம் சென்றோம். அங்கே என்றால் அவர் வேறொரு துறை குமாஸ்தாவிடம் எங்கள் பட்டியலைக் காட்டி திட்டிக்கொண்டிருந்தார். எங்களுக்கு கொஞ்சம் பயம். கடைசியில் பார்த்தால், "பட்டியல் என்றால் இப்படி இருக்கவேண்டும்" என்று எங்களைப் பற்றி புகழ்ந்து கொண்டிருந்தார். நாங்கள் விஷயத்தை சொன்னதும் பட்டியலை எடுத்து எங்களிடம் கொடுத்துவிட்டார். பார்த்தால் எல்லாம் பாஸ் செய்து வங்கிக்கு அனுப்பும் நிலையில் இருந்தது. எங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையேது.

ஒருமுறை நான் காட்டுமன்னர்கோயில் வட்டத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். சிதம்பரம் வட்டாட்சியர் அழைப்பதாக சேதி வந்தது. வந்து பார்த்தால் "எங்கள் சம்பள பட்டியலை கொஞ்சம் ஒப்பேற்றுங்கள்" – இது வட்டாச்சியர் கோரிக்கை.

பட்டியலை வாங்கிப் பார்த்தால் ஏக அடித்தல் திருத்தல் கருவூலத்திலோ ஆடிட் செய்திருந்தனர். பட்டியலை புதியதாக நகல் எடுத்து கூட்டுப் புள்ளி

போட்டால் தொகைகளில் ஏக வித்தியாசம்.

நடந்தது இதுதான். ஒரு தற்காலிக குமாஸ்தா வந்தார். தெரியாத அவருக்கு சொல்லிக்கொடுக்க யாருக்கும் மனசு இல்லை. அவர் பாட்டுக்கு கூட்டல் போட்டால் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு தொகை வந்துள்ளது. அடித்து அடித்து காகிதம் சில இடங்களில் ஒட்டைகூட விழுந்துவிட்டது. கடைசியில் புதியதாகத் தயார் செய்து கொடுத்துவிட்டு, பட்டியல் போடவும் சொல்லிக் கொடுத்துவிட்டு கருவூலம் சென்றால் நான் போட்ட பட்டியல் என்றதும் பாஸ் செய்துவிட்டனர். நல்ல வேலை தப்பு ஏதும் இருக்கவில்லை. சென்ற மாதத்துக்கும் நடப்பு மாதத்துக்கும் உள்ள வித்தியாசத்தை சரிபார்த்து பாஸ் செய்துவிட்டனர் கருவூலத்தில்.

காட்டுமன்னார் கோயிலில் நானும் என் நண்பனும் வேலை பார்க்கும்போது ஒரு சம்பவம். புதிதாக வந்த குமாஸ்தாவுக்குச் சொல்லிக் கொடுக்கும்படி துணை வட்டாட்சியர் உத்திரவு. எங்கள் வேலையை விட்டுவிட்டு இரண்டு நாட்கள் சொல்லிக்கொடுத்தோம். ஆனால் அவரோ கற்றுக்கொள்வதற்கு பதில் எங்களிடம் வேலை வாங்கிக்கொள்வதில் குறியாக இருந்தார். கடைசியில் பட்டியலை முடித்து அவரிடம் ஒப்படைத்து எடுத்து வரும்படி சொல்லிவிட்டு நாங்கள் முன்னால் நடந்தோம். அவரோ எங்கள் பின்னால் நடந்து வந்தவர் பட்டியல் பதிவேட்டை முன்னால் சென்று கொண்டிருந்த என் நண்பனின் தலைமீது வைத்தார். எங்களுக்கோ சரியான கோபம். என்ன செய்ய துணை வட்டாட்சியரோ ஒரு சரியில்லாத நபர்.

கடைசியில் மறுநாள் கருவூலத்திலும் நாங்களே சென்று பாஸ் செய்ய வேண்டியதாகிவிட்டது. அடுத்த மாதம் வட்டாட்சியர் எவ்வளவோ கேட்டும் முடியாது என்று சொல்லிவிட்டோம். நடந்ததை சொன்னதும் அவரும் எங்கள் வலையைப் பார்க்கும்படி சொல்லிவிட்டார்.

26. செக்போஸ்ட்

செக்போஸ்ட் என்றால் ஏதோ இந்தோ பாக்கிஸ்தான் எல்லைச் சோதனைச் சாவடி என்று அர்த்தமல்ல. இந்த சோதனைச் சாவடிகள் அவ்வப்போது முளைக்கும் திடீரென்று காணாமல் போய்விடும்.

இவை வருவாய்த் துறை சோதனைச் சாவடிகள். நெல் அறுவடை சீசனில் நெல்லை வெளி மாவட்டங்கள் வெளி இடங்களுக்கு கொண்டுபோய் அதிக விலை வைத்து விற்பதைத் தடுக்கவும், அரசு கொள்முதல் நிலையங்களில் நெல் கொள்முதல் செய்ய ஏதுவாகவும் ஏற்படுத்தப்படுபவை. இதனால் விவசாயிகளுக்குப் பைசா லாபம் கிடைக்காது. நெல் வியாபாரிகளுக்கும், அதிகாரிகளுக்கும் வேண்டுமானால் பலன் கிடைக்கும்.

இந்த செக்போஸ்ட்டுகள் ஏற்படுத்த உத்திரவானவுடன் இருக்கும் மற்ற பிரிவு குமாஸ்த்தாக்களைப் பிடித்து அனுப்பி வைத்துவிடுவர். இப்படி ஒரு நேரம் வருமா என்று சிலர் துண்டுபோட்டு முன்பதிவு செய்து காத்திருப்பதும் உண்டு. அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக இந்த ருசி கண்ட பூனைகளின் அட்டகாசம் குறித்து அலுவலகத்திற்கு தகவல் வரும். அப்படிப்பட்ட சுவாரசியமான தகவல்கள்தான் இவை,

செக்போஸ்ட் போடப்போகிறார்கள் என்று சொல்லியே நெல் வியாபாரிகளை முடுக்கிவிட்டு பலன் அடைந்த அதிகாரிகள் உண்டு.

செக்போஸ்ட்டில் போய் அமர்ந்தவுடன் அங்கு வரும் வியாபாரிகள் அலுவலர்களைத் தொடர்பு கொண்டு சினேகமாகிவிடுவர். இன்ன நேரம் செக்போஸ்ட்டை கடக்கும் பார்த்துக்கொள்ளுங்கள் என்று அட்வான்ஸ் கொடுத்துச் செல்பவர்கள் உண்டு. பணியில் உள்ள அலுவலர்களும் தமக்கு இன்ன நேரத்தில் டூட்டி என்றும் அப்போது மட்டும் வரவும் என்றும் தனக்கு பின்னர் டூட்டி பார்ப்பவன் வயிற்றில் அடிப்பதும் உண்டு.

அதைவிட ஒரு குமாஸ்த்தா அலுவலகத்திற்கு வந்து

தாம் இன்னின்ன வெல்லாம் வசூல் செய்தேன் என்று பெருமை பேசுவதும் உண்டு.

அவர் செக்போஸ்ட் வழியாகச் செல்லும் நெல்லை மடக்குவதற்குப் பதிலாக கரும்பு, மணிலா, மரவள்ளி போன்ற கட்டை வண்டி லோடுகளையும் மறித்து தண்டம் வசூலித்துவிடுவார். யாராவது வண்டிக்காரர் தட்டிக் கேட்டால் நிலத்தில் விளைகிற எல்லாத்துக்கும் செக்போஸ்ட்டில் பணம் கொடுக்க வேண்டும் என்று கறாராக மறித்துவிடுவார். யாராவது தகறாறு செய்தால் உன் வண்டியில் உள்ளே நெல் இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். எல்லா லோடையும் இறக்கிக் காட்டு என்று வண்டியை ஓரம் கட்டிவிடுவார்.

போதாக்குறைக்கு வண்டியில் வரும் கரும்புக் கட்டு மணிலா மரவள்ளி போன்ற பொருட்களை கொஞ்சம் பார்சல் கட்டி வீட்டுக்கு எடுத்துவந்துவிடுவார்.

இவர்கள் போக வர பேருந்தில் டிக்கட் எடுக்கமாட்டார்கள். கேட்டால் செக்போஸ்ட் என்று சொல்லிவிடுவர். அதிலும் யாராவது கண்டக்டர் ஒத்துழைக்கவில்லை என்றால் அந்த பேருந்தை செக்போஸ்ட்டில் நிறுத்திவைத்து வண்டி முழுவதும் வெடிகுண்டு சோதனை போன்று நடத்துவர்.

ஒரு குமாஸ்தா சற்று தமாஷ் பேர்வழி. இரவு நேரத்தில் சவுக்கு சுமை ஏற்றிக்கொண்டு வரிசையாக பத்து பதினைந்து டயர்வண்டிகள் வரும். அந்த வண்டிகளில் டிரைவர் எல்லாம் தேவையில்லை. வண்டிக்காரர் புறப்படும் இடத்தில் வண்டியைத் தட்டி ஓட்டிவிட்டு அப்படியே சாய்ந்து குறட்டை விட்டு தூங்க ஆரம்பித்துவிடுவர். இருட்டில் வண்டிபாட்டுக்கு போய்ச்சேரவேண்டிய இடத்துக்குப்போய் நின்றுவிடும். காலையில் லோடு இறக்கியதும் மீண்டும் அதே வழியில் திரும்பிவிடும். பெயருக்கு வண்டிக்காரர் உட்கார்ந்திருப்பார்.

நண்பர் இரண்டு மூன்று வண்டிகள் வந்த தொகுதியை செக்போஸ்ட் வாசலில் நிறுத்தி வண்டியை வந்த வழியே திருப்பிவிட்டார்.

இவ்வளவும் வண்டியில் படுத்துத் துங்கிக்கொண்டிருந்த டிரைவருக்குத் தெரியவில்லை. அவ்வளவு குறட்டை. மாடுகள் சற்றும் திணறாமல் வந்தவழியே போய்விட்டது. எங்கே போய் நின்றதோ எப்போது கண்டுபிடித்தாரோ தெரியாது. இது எப்படி இருக்கு.

அப்போதெல்லாம் நிறைய செக்போஸ்ட்டுகள் போடுவர். எதற்கு அந்த இடத்தில் போட்டார்கள் என்றே தெரியாது. அதில் வரும்படி இல்லாத இடத்தில் மாட்டிக் கொண்டவர் வரும்படி உள்ளவர்கள் பேரில் புகார் எழுதிப் போடுவர். இப்படியாக, பலப்பல குழப்பங்களும் வந்ததும் எல்லோருக்கும் சமமான பலன் கிடைக்க அதிகாரிகள் ஒரு வழி செய்தனர்.

அவ்வப்போது சுழற்சி முறையில் மாறுதல் செய்து உத்திரவிடுவது. இப்படியாக ஒரு வசூல் கோஷ்டிக்கு ராமாபுரம் என்ற கிராமத்திற்கு அருகில் வருமானம் இல்லாத இடம் கிடைத்துவிட்டது. அந்த வழியாக நெல்லோ கல்லோ ஏதாவது போனால்தானே. பொட்டல் வெளியில் எவன் போவான். எதேச்சையாக அந்த செக்போஸ்ட்டில் பணியமர்த்தப்பட்ட குமாஸ்தாக்களும் ஜவான்களும் ஊனமுற்றவர்களாக அமைந்துவிட்டனர். அவ்வளவுதான் அவர்களுக்கு வருமானம் வராத குறையை மாற்ற வழி தெரிந்தவிட்டது. செக்போஸ்ட் அருகில் ஊனமுற்றோர் செக்போர்ஸ்ட் என்று எழுதி வைத்துவிட்டனர். விழைவு, அதிகாரிகள் கவனத்திற்கு வந்து உடனே அவர்களுக்கு வேறு இடம் கிடைத்துவிட்டது.

1971-ல் நானும் செக் போஸ்டில் உத்தியோகம் பார்த்தேன். ஒரு மாதம்கூட இல்லை. அதற்குள் தூக்கி விட்டார்கள். காட்டுமன்னர்கோயில் வடவாற்றின் கரையில் ஒரு ரைஸ்மில் வாசலில் புளிய மரத்தின் அடியில். கொட்டகைகூட கிடையாது. ஒரு குறுக்கு கழிமட்டும் உண்டு. நாங்கள் இரண்டுபேர். ஒரு பியூன் மட்டும் உண்டு. அவர் எங்களை சட்டை பண்ணவே மாட்டார். அலுவலகத்திலேயே இருப்பார். பகலில் மில் திறந்திருக்கும்போது மட்டும் துணிமணிகளை

எடுத்து குளிக்க கொள்ள முடியும். இரவில் மூடி விடுவர். பணியில் மரத்தடியில் கேட்பாரற்று கிடக்க வேண்டியதுதான். ஒரு மண்ணெண்ணெய் விளக்கு கூட கிடையாது.

அதிகாரம் மட்டும் பறக்கும். ஒரு மணி நெல் கூட வெளியே போகக்கூடாது என்று TSO கடுமையாகப் பேசுவார். அதிகாரி சிதம்பரத்தில் இருப்பார். எது ஒன்று என்றாலும் எந்த நேரத்திலும் போன் செய்யவேண்டும் என்று உத்திரவு.

ஒருநாள் லாரி ஒன்று வடவார் வரை வருவதும் நாங்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிட்டு திரும்பி விடுவதுமாக இருந்தது. நாங்கள் இருவரில் ஒருவர் காவல் காப்பதும் ஒருவர் காட்டுமன்னர்கோயில் துணை வட்டாச்சியர் அலுவலகத்துக்கு ஓடி சிதம்பரத்துக்கு போன் செய்வதுமாக இரவு முழுவதும் சரியாக இருந்தது. அந்தோ ஃபோனை ஒரு பாவியும் எடுக்க வில்லை. இதற்கு ஏன் இந்த அதிகாரிகள் பந்தாவாக அறிவுரைகள் தந்தனரோ. கடைசியில் பகலிலேயே அந்த லாரி செக் போஸ்ட் அருகில் உள்ள வடவாற்றங்கரை வழியாகப் போய்விட்டது. கடைசியில் பார்த்தால் சற்று தொலைவில் குறுங்குடி என்ற ஊரில் அமைத்திருந்த சிறு பாலத்தின் வழியாக மறு கரையில் அடுக்கிவிட்டு காலி லாரியை செக் போஸ்ட் வழியாக கொண்டுசென்று நெல்லை ஏற்றிக்கொண்டு போய்விட்டனர்.

மறுநாள் இந்த விவரத்தினை அதிகாரியிடம் சொன்னால் அதைப்பற்றி உனக்கென்ன. நீ ஒழுங்கா வேலை பார் என்று சொல்லிவிட்டார்கள். இன்னொரு நாள் இரவு மாட்டு வண்டிகளில் நெல் மூட்டைகள் வந்தன. நாங்கள் வண்டிகளை மறித்து விட்டோம். வண்டியுடன் பத்து பேராவது வந்தனர். எல்லாம் அறுவடைக்கு வந்து கூலி நெல் எடுத்து செல்வதாகவும் அனுமதிக்கும்படியும் கோரினர். நாங்களோ உத்திரவு வாங்கிவந்தால்தான் விடுவோம் என்று பிடிவாதமாக இருந்தோம். லேசான நிலவு வெளிச்சம் மட்டும்தான் துணை எங்களுக்கு.

அடுத்தடுத்து இருபத்தேழு வண்டிகள் நிற்கிறது. நூறு நூற்றைம்பதுபேர் கூடிவிட்டார்கள். என் முகத்துக்கருகில் வந்து தீக்குச்சி உரசி பயமுறுத்துவதும் கண்டபடி பேசுவதும் தாங்கவில்லை. இருந்தாலும் இருவரும் பிடிவாதத்தை விடவில்லை.

திடீரென்று ஒரு குரல் கேட்டது எடுங்கடா வண்டியை என்று. அவ்வளவுதான் எல்லோரும் வண்டியை கிளப்பிக்கொண்டு போய்விட்டனர். எங்களை அசைய விடாமல் ஐம்பது பேருக்கு மேல் சுற்றி நின்றுகொண்டனர். நாங்கள் போர்க்களத்தில் நிராயுத பாணியாக தோல்வியை தழுவினோம். மறுநாள் TSO விடம் சொன்னால் அவர் கண்டுகொள்ளவில்லை.

அதிலிருந்து யாராவது வந்து ஓரிரு மூட்டை எடுத்துச்செல்ல அனுமதி கேட்டால் நாங்கள் பக்கத்தில் உள்ள குறுக்கு வழியை காட்டி எடுத்து செல்லுங்கள் என்று சொல்லிவிடுவோம்.

திடீரென்று ஒருநாள் காலையில் இருவரையும் அலுவலகத்துக்கு வரச்சொன்னார்கள் செக் போஸ்டை அனாதையாக விட்டுவிட்டுப் போய் அதிகாரி முன்பாக ஆஜரானோம். அவரோ நேற்றே செக் போஸ்ட் எடுத்தாச்சு. நீங்க வீட்டுக்கு போகலாம் என்றார்.

எதற்கு செக் போஸ்ட் போட்டார்களோ எதற்கு எடுத்தார்களோ. எடுத்தேன் கவிழ்த்தேன் திட்டங்கள் இப்படி நிறைய உண்டு.

நான் துணை வட்டாட்சியர் ஆனபோது மாமங்கலம் என்ற கிராமத்தில் செக்போஸ்ட் போட்டவுடன் பணி அமர்த்தப்பட்டேன். முக்கியமான இடம் என்று குறிப்பிட்டு அங்கு துணை வட்டாட்சியர் நிலை பணியிடம் வழங்கப்பட்டது. அந்த இடத்தின் வழியாக மெயின்ரோட்டின் மூலம் யாரும் நெல்லைக் கொண்டு போக வாய்ப்பு இல்லை. மேலும் அந்த ஆண்டு நெல் விளைச்சல் அமோகமாக இருந்து அரசாங்கமே போதும் போதும் என்று சொல்லும் அளவிற்கு

இருந்தது. எதற்காக செக்போஸ்ட் கொண்டு வந்தார்கள் என்றே தெரியவில்லை.

ஒருநாள் DRO தணிக்கைக்கு வந்தார். நெல் போகிறதா என்றார் நான் சொன்னேன். இந்த செக் போஸ்ட் பெயருக்கு போடப்பட்டுள்ளது. காட்டுமன்னர்கோயில் நெல் போவதற்கு தெற்கே மீன் சுருட்டி பாதை உள்ளது. வடக்கே சிதம்பரம் நெல் சேத்தியாதோப்பு வழியாக போகிறது. TNCSC நெல் போவதைக் கண்காணிக்க மட்டும்தான் இந்த செக் போஸ்ட் இருக்கிறது என்றேன். அவருக்கு சிரிப்பு வந்துவிட்டது.

ஒரு பட்டறையில் தங்கிக்கொண்டு ஒரு மாதம் வேலை பார்த்தோம். அப்புறம் ஒருநாள் ஒரு கூரை கொட்டகை கட்டிக் கொடுத்தார்கள். ஒருமாதம்கூட ஆகவில்லை. திடீரென்று எடுத்துவிட்டார்கள்.

செக்போஸ்ட் போட்ட மறுநாள் ஒரு முதிர்ந்த பையன் சட்டை பட்டன் எல்லாம் திறந்திருக்க முன்பக்கம் சற்று குனிந்த வண்ணம் “சிக்கு போ......ஸ்ட்” என்று கத்திக்கொண்டே, சட்டை இரண்டுபக்கமும் இறக்கை போல் பறக்க வந்து எங்கள் அண்மையில் தரையில் உட்கார்ந்துகொண்டான். சாப்பாட்டு நேரம் தவிர்த்து மற்ற நேரங்களில் இப்படி கத்திக்கொண்டு வந்து உட்கர்ந்து கொள்வது அந்த படிப்பை பாதியில் விட்ட மாணவனுக்கு வாடிக்கை.

செக்போஸ்ட் போட்டவுடன் இரண்டு மூன்றுபேர் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு நம்மிடம் கதை பேசிக் கொண்டிருப்பர். இவர்களுக்கு வேலை ஒன்றும் இல்லையோ என்று எனக்கு சந்தேகமாக இருக்கும். இப்படி பரிச்சயம் செய்து கொண்டு அங்கு பணிபுரிபவார்களுக்கு உதவிகள் செய்து கொடுத்து அவர்களுக்குக் கிடைக்கும் மாமூலில் பங்கும் பெற்றுக் கொள்வர் என்பது பின்னர்தான் ஒரு தலையாரிமூலம் தெரியவந்தது. இல்லாத வியாபரத்தில் பங்குக்காக உட்கார்ந்திருக்கும் நபர்களை என்ன சொல்வது.

ஆனால் அங்கு ஒரு காட்சி அரங்கேரும். தினமும்

காலையில் ஒரு போலீஸ் வேன் வரும். எதிரில் ஒரு டீக்கடையில் வந்து டீ சாப்பிட்டுவிட்டு அந்தக் கடைக்காரரிடம் துப்பு வாங்கிக்கொண்டு சாராய வேட்டைக்கு செல்வர். வரும்போது சில சமயம் சிறிய அலுமினியப் பானைகள் கொண்டுவருவதைப் பார்த்திருக்கிறேன். நானும் அது டீக்கடைதான் என்று எண்ணிக்கொண்டு இருந்தேன். ஒருநாள் என் தலையாரி சொன்னார். “உலகத்திலேயே சமத்துவம் இங்குதான்யா இருக்கு” என்று. எனக்கு ஒன்றும் புரியவில்லை.

நான் ஏற்கனவே அதே பகுதியில் வருவாய் ஆய்வாளராகப் பணிபுரிந்தபோது என்னிடம் வேலை பார்த்த வயதான தலையாரி. அவர் சொன்னார். “தகப்பன் இன்னும் விபரம் தெரியாமதான்யா இருக்கீங்க. எதுத்தாப்பல இருக்குறது டீக்கடை மட்டும் இல்லீங்க அங்க சாராயமும் கெடைக்குங்கய்யா. நீங்க வேணா கவனிச்சு பாருங்க தோட்டப்பக்கமா சிலர் போவாங்க முன் வாசல்ல சிலர் போவாங்க. வெளியிலே எல்லா பயலும் வெட்டிக்குவாங்க. சாரயம் குடிக்க மட்டும் முன்னால ஒருத்தன் போவான் பின்வாசல்ல ஒருத்தன் போவான். இவன் குடிச்ச எச்சி கிளாஸ்ல அவன் குடிப்பான் அவன் குடிச்ச எச்சி கிளாஸ்ல இவன் குடிப்பான். அப்பல்லாம் சாதில்லாம் தெரியாதுங்க. அதான்யா இங்கதான் சமத்துவம் இருக்குனு சொல்றேன். இது மாதிரி எங்கயாச்சும் பாத்திருக்கிங்ளா அய்யா” என்றார். எனக்கு பொட்டில் அறைந்தமாதிரி இருந்தது.

நான் அதுநாள் வரை ஏதோ வாகனம் நிறுத்தி வைக்க அந்தப் பக்கம் போகிறார்கள் என்று எண்ணிக்கொண்டிருந்தேன்.

இப்படியாகப்பட்ட நாளில் ஒருநாள் ஒரு போலீஸ் ஜீப் வந்தது. சேக்போஸ்ட் வாசலில் நிறுத்தி ஒரு ஏட்டையாவை இறக்கிவிட்டு எங்கள் செக்போஸ்ட்டில் அவரை தங்க அனுமதிக்கும்படி தெரிவித்து சென்றுவிட்டனர். அவரும் அங்கேயே இருந்தார். ஏதோ பிரச்சினை காரணமாக அங்கங்கே

போலீஸ் பந்தோபஸ்து ஏற்பாடு ஆகியிருந்தது. கடலுருக்கு சம்பளம் வாங்கச் சென்றவரை வண்டியில் ஏற்றிக் கொண்டுவந்து இறக்கிவிட்டனர். அவர் சாப்பிட்டாரா மாற்று உடை வைத்திருக்கிறாரா என்றெல்லாம் யாருக்கும் கவலையில்லை.

அவரும் தேமே என்று அன்று இரவைக் கழித்தார். மறுநாள் அவரை, தொடர்ந்து அங்கேயே இருக்கும்படி உத்திரவாகியது. அவரும் அதே துணியுடன் இருந்தார். எதிர் டீக்கடையில் சாப்பிட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். எந்த சம்பவமும் எங்கும் நடக்கவில்லை. அவர் வீட்டுக்குப் போகலாம் என்று நினைக்கையில் வேறு ஒரு பிரச்சினை என்று தகவல் வந்து அவர் மீண்டும் அங்கே இருக்க வேண்டியதாகிவிட்டது. மறுநாள் அவர் காலையில் எங்களிடம் கொஞ்சம் பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டு எதிரில் இருந்த ஒரு போர் செட்டில் போய் குளித்துவிட்டு துணிகளை உலர்த்திக்கொண்டிருந்தார். அந்த நேரம் பார்த்துதானா அதிகாரி வரவேண்டும். அவர் டூட்டியில் இல்லை என்று அதிகாரிக்கு கோபம் தலைக்கேற ஆரம்பித்துவிட்டது. நான் சொன்னேன் அவர் மூன்று நாளாக இங்கேதான் உட்கார்ந்திருந்தார். வியர்வை நாற்றம் தாளவில்லை என்று அதோ எதிரில் குளித்து யூனிபார்மை உலர்த்திக்கொண்டிருக்கிறார் பாருங்கள் என்றதும்தான் சற்று குளிர்ச்சியானார் அதிகாரி. அதற்குள் காயாத உடைகளை அவசரம் அவசரமாக அணிந்துகொண்டு ஓடிவந்து சல்யூட் அடித்தார் காவலர்.

அதிகாரியும் போய்விட்டார். முன்தினம் நாங்கள் கூட அருகில் உள்ள அவரது வீட்டுக்கு போய் வாருங்கள் என்று ஆலோசனை சொன்னோம். அவர் மறுத்து கடமையில் கண்ணாயிருந்தார். இந்நிலையில் ஷேவ் செய்யாமல் பார்த்தால் அதிகாரி கோபிப்பார் என்று எதிரில் ஒரு பிளேடு வாங்கிவந்து அவ்வளவு நாசூக்காக வெறும் பிளேடினால் சவரம் செய்துகொண்டார் அவர். அப்போதுதான் நான் நினைத்தேன் இப்படியெல்லாம் கைகட்டி

வாய்பொத்தி வேலை பார்ப்பதைவிட ஒரு தொழிலைக் கற்றுக்கொண்டு குறைந்த வருமானமானாலும் சுதந்திரமாக இருக்கலாமோ என்று.

செக்போஸ்ட் போட்டு நான் பணியேற்று பத்து நாள் கூட இருக்காது. பக்கத்து கிராமத்திற்குத் தகவல் பரவிவிட்டது. முன்னாள் வருவாய் ஆய்வாளர்தான் நம் ஊரில் செக்போஸ்ட்டில் வேலை பார்க்கிறார் என்று. அங்கிருந்து ஒருவர் வந்தார். அவரைப் பார்த்த ஞாபகம். அதற்கு மேல் தெரியவில்லை. ஆனால் வந்தவர் என்னை கட்டிக் கொள்ளும் நோக்கில் வேகமாக முகமெல்லாம் பல்லாக உடலெல்லாம் புல்லரிக்க மனமெல்லாம் மகிழ்ச்சியாக நேராக கொட்டகைக்குள் நுழைந்தார். அவரது உயரத்திற்கு அவரது வழுக்கை மண்டையில் மூங்கில் கழி இடித்து ரத்தம் வந்துவிட்டது. எனக்கு அதிர்ச்சி. அவரோ சற்றும் சட்டை செய்யாமல் என்னை அணுகி குசலம் விசாரித்தார். சற்று நேரம் கழிந்துதான் தெரிந்தது. அவர் நான் ஆர்.ஐ-ஆக இருந்தபோது என்னிடம் ஒரு வாரிசு சான்றுக்காக வந்து என்னுடைய நடவடிக்கையில் மயங்கி என்னை அவ்வளவு தூரம் நேசித்திருக்கிறார் என்று. நானும் அவரை நினைவில் வைத்திருந்தாலும் அவர் அளவிற்கு நான் தகுதியானவன் அல்ல.

அந்த நினைவுகளை இன்றும்கூட அசைபோட்டால் மனம் கசிந்துவிடும். நான் ஆர்.ஐ.-யாக இருந்தபோது அந்த கிராமத்திலிருந்து கபிரியேல் என்ற அந்தப் பெரியவர் தமது தம்பி இறந்துவிட்டதற்காக அவரது மனைவியையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தார். அப்போது மின் அழுத்தம் மிகமிகக் குறைவாக இருந்ததால் திருடன் வீட்டு தீவட்டி மாதிரி விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அவர் நேராக கடைக்குச் சென்று 200 வாட்ஸ் பல்பும் 110 ஓல்ட்டில் எரியும் இரண்டு பல்புகளும் வாங்கிவந்து மாட்டிவிட்டார். நம்ம வீட்டில் யாரடா பல்பு மாட்டுகிறான் என்று துணுக்குற்று விசாரித்தால் அந்தப் பெரியவரின் கைங்காரியம். லஞ்சத்தை பல்பாக கொடுத்ததாக நினைத்து அவரை சற்று கடிந்துகொண்டேன். அதன்

பின்னர்தான் தெரிந்தது அவர் என் ஓ.ஏ.விடம் மன்றாடி அனுமதி வாங்கி மாட்டிவிட்டது. அதற்கப்புறம் அவர் வரும் நேரம் எல்லாம் என்னை பார்த்து விசாரிக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. நானும் கிராமத்திற்குப் போனால் அவரைப் பற்றி விசாரிப்பேன். சுமார் இருபது ஆண்டு இடைவெளியில் அவர் என்னை நினைவில் வைத்து தம்மைச் சேர்ந்தவராக எண்ணி என்னைப் பார்க்க வந்ததே பெரிய விஷயம். அதில் அவர் உணர்ச்சி வயப்பட்டு மண்டையை உடைத்துக் கொண்டதை என்னென்பது. அன்பு என்பது கடையில் வாங்கும் பொருளல்ல. உணர்வுகளால் பின்னப்பட்டது. சில ஆண்டுகள் கழித்து அவர் இறந்தபோது எனக்கு தகவல் தெரிவித்த அந்தக் குடும்பத்தின் உணர்வுகளை என்னென்பது.

தொடர்புடைய இன்னொரு தகவல் தெரியுமா. அன்று அவர் வாங்கிக்கொடுத்த 200 வாட்ஸ் பல்பு முப்பத்தைந்து ஆண்டுகள் கழித்தும் நல்ல நிலையில் இருக்கிறது. அதுவும் எங்கள் வீட்டுக் கொலுவின்பொது அதைப் பயன்படுத்துகிறோம். 27. நடந்தாய் வாழி காவேரி

எப்போதும் அதிகாரிகள் பலவிதம் ஆனால் இளிச்சவாயர்கள் ஒரேவிதம்தான்.

1976-ஆம் ஆண்டு. ஒரு குமாஸ்தா. அவருக்கு முதல்முதலாக தனி வருவாய் ஆய்வாளர் பணியிடம் வழங்கப்பட்டது. மத நம்பிக்கையுள்ள அவருக்கு, இறைவனால் அது சம்பந்தமான இடங்களைப் பாதுகாக்கும் ஒரு பொறுப்பு தமக்கு வழங்கப்பட்டதில் ரொம்ப சந்தோஷம்.

ரொம்ப ஆத்மார்த்தமாக வேலை பார்த்தார். தினமும் பறங்கிப் பேட்டையிலிருந்து கடலூர் செல்வார். அல்லது ஜில்லா முழுக்க எங்கெங்கு போகும்படி அவரது தாசில்தார் உத்திரவிடுகிறாரோ அங்குபோய் விபரம் சேகரித்து வருவார். இப்படியாக முப்பது நாட்கள் திரைப்படம் ஓடியது. சம்பளத் தேதி. மாலை சம்பளம் வந்துவிடும் என்ற மிதப்பில் ஒருவழிக்கு மட்டும் பஸ்கட்டணத்தை வீட்டிலிருந்து

வாங்கிக்கொண்டு அலுவலகத்திற்கு வந்துவிட்டார். அவரது எண்ணம் நிறைவேறிவிட்டது. கருவூலத்திலிருந்து சம்பளம் வந்துவிட்டது. முதல் சம்பளம். ஆனால் அதிகாரி அதனை வாங்கி பையில் வைத்துக்கொண்டு சீட்டாட கிளப்பிற்கு சென்றுவிட்டார். நம்மவரோ 'கண்ணே பாப்பா அதிகாரி வருவார் சம்பளம் தருவார் வீட்டுக்குப் போகலாம் காத்திரு' என்று மனதிற்கு ஆறுதல் சொல்லிக்கொண்டே காத்திருந்தார்.

காத்திருந்தார்,,, காத்திருந்தார்.... காலம் கடக்க, கால் கடுக்க, காத்திருந்தார். அதிகாரியோ சூதாட்டத்தில் ஜெயித்த சந்தோஷமோ அன்றி தோற்ற துக்கமோ யாரைப் பற்றியும் கவலைப்படாமல் வீட்டுக்குச் சென்றுவிட்டார்.

இவருக்கோ ஒன்றும் புரியவில்லை. இடமோ புதிது. யாரும் அறிமுகம் கிடையாது. யோசித்தார் மண்டைக்குள் பல்பு எரிந்து ஒரு வழி தெரிந்தது. நடையைக் கட்டினார்.

'நடந்தாய் வாழி காவேரி' என்று நடந்தார்... நடந்தார்... நடந்துகொண்டே இருந்தார். திடீரென்று நிமிர்ந்து பார்த்தால் அவரது வீட்டு வாசல். ஆம் கடலுரிலிருந்து பரங்கிப்பேட்டைக்கு வந்துசேர்ந்தார் அந்த நள்ளிரவில். ஒரு மூலையில் உட்கார்ந்து அழுது கொண்டிருக்காமல் இருபத்தைந்து கிலோமீட்டருக்கு மேல் அந்த விபரமறியாப் பருவத்தில் தைரியமாக வீடுவந்து சேர்ந்தார். இங்கே எனக்கு ஒரு சந்தேகம். கடலூரை ஒட்டிய அந்த மோகினிப்பாலத்தில் எப்படித்தான் அந்த கும்மிருட்டில் வந்தாரோ. அவரை மோகினி ஒன்றும் செய்யவில்லை போலும்.

மறுநாள் காலை, காலைப் பார்த்தால் காணோம். இரண்டு திருமலை நாயக்கர் மகால் துண்கள்தான் அந்த இடத்தில் இருந்தது. இரண்டும் வெள்ளரிப் பழங்களாக வீங்கிப்போய் நடக்க முடியாத நிலை. இரண்டு தினங்கள் எழுந்திருக்க முடியாத நிலை. அப்புறம் சற்று ஆசுவாசம் செய்து கொண்டு அலுவலகத்திற்கு வந்தால் அதிகாரியோ நடந்தது

ஏதும் அறியாதவராக ஏன் இரண்டு தினங்கள் அலுவலகம் வரவில்லை என்று கடிந்துகொண்டார். இப்போதென்றால் உடனே சங்கத்தில் சொல்லி தகறாறு செய்துவிடுவர்.

இப்படிப்பட்ட சூதாடிகளுக்கு அதிகாரம் எதற்கு? உத்தியோகம்தான் எதற்கு? அதெல்லாம் சரி. இதெல்லாம் உனக்கு எப்படி தெரியும் என்கிறீர்களா. அதுதான் ஒரு நல்ல நாள் பார்த்து கையைப் பிடித்து இழுத்துவந்து எங்கள் பிரிவில் சிரஸ்ததாராகப்பட்ட ஹிட்லர் ஒப்படைத்துவிட்ட பின்னர் நண்பனாகிவிட்ட ரகமத்துல்லாதான் அந்த துரதிருஷ்டசாலி.

அந்த சம்பவம் நினைவு வரும்போதெல்லாம் என் நினைவில் வருவது முகம்மது நபி பெருமானார் ‘சல்லல்லாஹூ அலைஹிவஸல்லம்(ஸல்)’ அவர்கள் ஹிஜ்ரி யாத்திரை செய்தார். அவரளவிற்கு தகுதி இல்லாததால் இவன் தனது தகுதிக்கேற்ப பரங்கிப்பேட்டைக்கு யாத்திரை செய்தானோ என்று தோன்றும்.

இன்னொரு அதிகாரி. அலுவலகத்தில் வேலை பார்க்கும் அனைவருக்கும் டி.ஏ. பில் போட்டு பணம் பட்டுவாடா செய்யப்பட்டது. அந்த அலுவலகத்தில் புதிதாகச் சேர்ந்த ஒரு குமாஸ்தா முதன்முதலாக தாம் வாங்கிய பணத்தை அதிகாரி கையில் கொடுத்து வாங்கவேண்டும் என்று உயர்ந்த, ‘காக்கா’ பிடிக்கும் நோக்கில் அதிகாரி அலுவலகத்திற்கு வந்தவுடன் அவரிடம் கொடுத்தார். என்னுடைய டீ.ஏ. பணம் என்று சொல்லி. அதிகாரி கையில் வாங்கினார். பையில் போட்டார். கிணற்றில் போட்ட கல்லாகப் போனது அது. இவரோ அவரிடம் கேட்கும் தைரியம் இல்லாமல் காத்திருந்து பார்த்துவிட்டு இலவு காத்த கிளியாக வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அவரும் நானும் ஒரே வீட்டில் ஒட்டுக் குடித்தனம் இருந்ததால் இந்த தகவல் என்னிடம் புலம்பலாக சொல்லப்பட்டது. இந்த அதிகாரியை என்ன சொல்ல.

நான் ஆதி திராவிடர் நல தனி வருவாய் ஆய்வாளராக இருந்த சமயம். பெரிய செவலை

சார்க்கரை ஆலையை முதலமைச்சர் திறந்து வைப்பதாகவும் அப்போது நடக்கும் விழாவில் அரசு நலத் திட்ட உதவிகள் மக்களுக்கு வழங்குவதாகவும் ஏற்பாடு. காட்டுமன்னார்கோயில் தாலுக்காவில் இரண்டு கிராமங்களிலிருந்து பட்டாதாரார்களை அழைத்து வரவேண்டும் என்று உத்திரவானது. நான் முன்னதாகப் போய் தகவல் சொன்னதும் முதலமைச்சரைப் பார்க்கவேண்டும் என்பதால் நிறைய பேர் வரத் தயாராகினர். முன் தினம் கலெக்டர் ஆபீசிலிருந்து காலை பதினோரு மணிக்கு விழா என்றும் பத்து மணிக்குள் அரங்கிற்கு வர வேண்டும் என்றும் எங்களை முடுக்கிவிட்டனர்.

நானும் காலை ஐந்து மணிக்கெல்லாம் கிளம்பிப்போய் எள்ளேரி என்ற கிராமத்தில் பத்துப் பதினைந்து பேர்களைத் திரட்டிக்கொண்டு மாமங்கலம் என்ற கிராமத்திற்குப் போய் அங்கும் பத்துப் பதினைந்து பேர்களைத் திரட்டிக்கொண்டு பெரிய செவலைக்கு வழி விசாரித்துக்கொண்டு போய்ச்சேர்ந்தோம். முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் இப்போது போல் நினைத்த மாத்திரத்தில் ஊர் வழி போக பஸ்வசதி கிடையாது. எப்படியோ பத்து மணிக்கெல்லாம் போய் சேர்ந்தோம். பின்னர்தான் நிம்மதி.

அந்தகால கூத்துக் கொட்டகைபோல் சவுக்குக் கட்டைகளால் தடுப்புகள் அமைத்து எங்களை உள்ளே அனுப்பி வைத்தனர். காவல் துறையினர் ஏதோ வெளிநாட்டு எல்லையிலிருந்து தாண்டி வந்த தீவிரவாதிகள் போல் எங்களை மடக்கி உட்கார வைத்துவிட்டனர். குடிக்கத் தண்ணீர்கூட கிடையாது. அகதிகள் போல் உட்கார்ந்திருந்தோம். நேரம் ஓடிக்கொண்டே இருந்தது. மதியம் நோ சாப்பாடு. யாராவது பாத்ரூம் போகவேண்டுமென்றால் நான் துணைக்கு அழைத்துச்சென்று காவலரிடம் விபரம் சொல்லி சற்று தொலைவில் சென்றுவிட்டு மீண்டும் கையோடு அழைத்துக்கொண்டு வரவேண்டும். ஏன்னா என்கிட்டதானே பேட்ஜ் குத்தியிருக்கு.

மாலையும் வந்தது. முதலமைச்சர்தான் வருவாரா

என்று தெரியவில்லை. கடைசியாக மாலை ஐந்து மணிக்கு முதலமைச்சர் வந்துவிட்டதாகவும். இன்னும் சற்றுநேரத்தில் வந்துவிடுவார் என்றும் பேசிக்கொண்டனர். மூன்றாம் பிறை தரிசனம் செய்யக் காத்திருக்கும் பக்திமான்கள் போல் மேடையையே ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருந்தோம். ஊகூம். இருட்டியும் விட்டது. அப்புறம்தான் முதலமைச்சர் மேடை ஏறினார். பேசினார். நான் அழைத்துச் சென்ற பட்டா பயனாளிகள் எல்லாம் முதலமைச்சர் கையால் பட்டா பெறப்போவதைவிட அவர் அருகில் போய் நிற்கப்போகிறோம் என்ற சந்தோஷத்தில் பசியைக்கூட மறந்து காத்திருந்தனர். கடைசியாக பத்து மணிக்கு மேல் விழா முடிந்துவிட்டது. செஞ்சியிலிருந்து காட்டுமன்னார்கோயில் வரை மரக்காணத்திலிருந்து கள்ளக்குறிச்சி வரை பல ஊர்களிலிருந்து வந்த எங்களைப்போன்ற பயனாளிகள் ஏராளமாக காத்திருந்தனர். எங்களையெல்லாம் யாரும் சீண்டக்கூட இல்லை.

அரசியல் வாதிகளாவது பரவாயில்லை. கூட்டம் காட்டுவதற்காக பிரியாணி குவாட்டார் சப்ளைசெய்து கையில் காசும் கொடுத்து அழைத்து வந்துவிடுகின்றனர். அந்த செலவுகூட இல்லாமல் அதிகாரிகள் முதலமைச்சருக்கு கூட்டம் கூட்டிவிட்டனர்.

இதற்குப் பின்னர்தான் கிளைமேக்ஸ். எல்லோரும் வெளியே வந்தோம் பார்த்தால் பெரிய செவலை கூட்டு ரோட்டில் இரண்டு பேருந்துகள் நின்றுகொண்டிருந்தன. பொதுமக்கள்தான் ஜன்னல் வழியாக ஏறிக்குதித்து சீட்டு பிடிப்பர் என்றால் அங்கே காவலர்கள் எல்லா ஜன்னல்களிலும் ஏறிக் கொண்டிருந்தனர். பத்தாயிரம் பேருக்கு மேல் கூடிய இடத்தில் இரண்டு பேருந்துகள் எம்மாத்திரம்.

பலரும் நடந்தே போக ஆரம்பித்துவிட்டனர். காலையில் பட்டியில் அடைக்கப்பட்ட பின்னர் ஒரு டீ கூட குடிப்பதற்கு வழியில்லை. பசி தாகம் வேதாளமாக தொற்றிக்கொண்டது. இருந்தாலும்

என்னுடன் வந்தவர்கள் எனக்கு ஆறுதல் சொல்லி என்னை அழைத்து வந்தனர். நேராக மடப்பட்டு கூட்டு ரோட்டுக்கு போனால் வண்டி கிடைக்கும் என்ற எண்ணத்தில் திருவிழாக் கூட்டத்தின் துணையுடன் நடந்தோம்.... நடந்தோம்......

நிலவு சாட்சியாக நடந்தோம்......நடந்தோம் கடைசியில் பண்ருட்டி பேருந்து நிலையத்திற்கே வந்து சேர்ந்தோம். எப்படியும் இரவு இரண்டு மணிக்கு மேல் இருக்கும். எல்லாரும் வந்து படுத்துவிட்டோம். காலையில் முதல் பஸ் பிடித்து நாங்கள் போய்க்கொள்கிறோம் என்று சொல்லிவிட்டு என்னுடன் வந்தவர்கள் கிடைத்த இடங்களில் படுத்துவிட்டனர்.

எனக்கும் முடியவில்லை. பஸ் நிலையத்தில் ஒரு டீ கடையின் மேசையில் படுத்துவிட்டேன். அதிகாலை ஒன்றிரண்டு பஸ் சத்தம் கேட்டதும் எழுந்தேன். மணியெல்லாம் தெரியாது. இருட்டில் எழுந்தவுடன் என் பக்கத்தில் ஒரு டிரம்மில் தண்ணீர் தளும்பிக்கொண்டிருந்தது. பஸ் ஸ்டாண்டுக்கு வெளியே இருந்த லைட் போஸ்ட்டிலிருந்து வந்த வெளிச்சத்தில் தண்ணீர் தளும்புவது கண்ணாடி காட்டியது. ஒரு கை அள்ளி முகம் கழுவி கொஞ்சம் குடிக்கலாம் என்று நினைத்து கையைவிட்டேன். அந்த வினாடியில் ஏதோ தப்பு என்று என் உணர்வு சொல்லியது. அது தண்ணீர் மாதிரியில்லாமல் சில பெரிய அதிகாரிகள் எடுக்கும் முடிவுகள் மாதிரி கொழகொழவென்று இருந்தது. அப்படியே விட்டுவிட்டு உட்கார்ந்திருந்தேன். எந்தெந்த ஊருக்கோ பஸ் வந்தது. கடலூர் போய் சிதம்பரம் போகலாம் என்று எனக்கு உரைக்கவில்லை. சிதம்பரம் பஸ் வரவேயில்லை. காத்திருந்தேன். பலபலவென்று விடிந்தது. எனக்கு ஞானமும் பிறந்தது. நான் கைவிட்ட தண்ணீர் டிரம் கண்ணில் பட்டது. தினமும் டீக்கடையில் கிளாஸ் கழுவி ஊற்றவென்று ஒரு டிரம் வைத்திருக்கிறார். அதில் சாக்கடைத் தண்ணீர் இருந்துள்ளது. அதுதான் எனக்கு இருட்டில் குடிநீராக கங்கையின் புனித நீராகத் தெரிந்துள்ளது. பார்த்ததும் எனக்கு குமட்டல்.

என்ன செய்ய விதி வலிது.

கொஞ்ச நேரத்தில் சிதம்பரம் பஸ் வரவும் ஓடிப்போய் ஏறி வீடு வந்து சேர்ந்தேன். சில நாட்கள் வரை அந்த அறுவருப்பு மட்டும் மனதிலேயே சுற்றிக்கொண்டிருந்தது. பல ஆண்டுகள் இதனை நினைவு கூர்ந்திருக்கிறேன்.

கூட்டம் கூட்ட வழிகண்ட ஜால்ரா அதிகாரிகளுக்கு அடிப்படைத் தேவைகளைப் பற்றி சிந்திக்கக்கூட அறிவில்லாமல் போய்விட்டது. இப்போதென்றால் பத்திரிகைகள் கிழிகிழியென்று கிழித்துவிடும். மனித உரிமை ஆர்வலர்கள் குரல் கொடுப்பர்.

ஒரு முறை நான் ஆதி திராவிடர் நலத் தனி வருவாய் ஆய்வாளராக இருந்தபோது சட்டமன்றத்தில் ஒரு கேள்வி கேட்டதால் நான் ஒரு குக்கிராமத்திற்குப்போய் நேரில் விபரம் அறிந்துவர வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போது கிராம மணியம் கர்ணம் பதவி ரத்து செய்யப்பட்ட காலம். சம்பந்தப்பட்ட ஊர் எங்கு இருக்கிறது என்று தெரியவில்லை. முதல் நாள் காட்டுமன்னார்கோயில் தாலுக்கா அலுவலகத்திற்குச் சென்று விசாரித்ததில் பாளையங்கோட்டை கிராமத்திற்கான குக்கிராமம் அது என்றும் போகும் வழி விபரமும் தகவல் தெரிவித்தனர். அத்துடன் தாலுக்கா ஆபீசிலிருந்து அந்த கிராமக் கணக்குகளையும் வாங்கிக்கொண்டேன்.

அந்த கிராம வரைபடத்தைப் பிரித்துப் பார்த்தால் ஒரு பஞ்சகச்சம் வேட்டியை தரையில் விரித்தமாதிரி அவ்வளவு பெரியதாக இருந்தது. எல்லா கணக்குகளையும் இரண்டு பெரிய சாக்குப் பையில் அடைத்துக்கொண்டு சிதம்பரம் வந்துவிட்டேன். மறுநாள் காலை சுமார் ஏழு மணிக்கு சிதம்பரத்தில் பஸ் பிடித்தோம். என்னுடன் ஒரு அலுவலக உதவியாளர் வந்தார். பாவம் அவர் ஒரு கை பயன்படுத்த இயலாதவர். நான் இரண்டு கைகளிலும் அவர் ஒரு கையிலுமாக கணக்குக் கட்டுகளுடன் புறப்பட்டோம். பேருந்து திருவாருர் தேர் போல அசைந்து அசைந்து சென்றது. ஒன்பது மணிக்கு

மேல் ராமாபுரம் கைகாட்டி என்ற நிறுத்தத்தில் ஒரு வீரப்பன் காட்டுக்குள் இறங்கினோம். அங்கிருந்து தெற்கில் செல்லும் பாதையில் போகவேண்டும் என்று முன்தினம் எங்களுக்கு சொல்லப்பட்டிருந்தது.

போகும் பாதை சரிதானா என்றெல்லாம் கேட்பதற்கு யாரும் இல்லை. கணக்குப் பைகளைத் துக்கிக்கொண்டு நடந்தோம். நடந்தோம் நடந்துகொண்டே இருந்தோம். பலப்பல கிளைப் பாதைகள் குறுக்கிட்டன. வழி சொல்ல யாரும் இல்லை. ஒரு இடத்தில் வரப்பு வெட்டிக்கொண்டிருந்த ஒருவரிடம் இன்ன இடத்திற்கு எப்படி போகவேண்டும் என்று கேட்டோம்.

“நீ யார், யாரைப் பாக்கணும்” - அவர் “நான் ஆர்.ஐ. இன்ன வாலீஸ்பேட்டை கிராமத்தில் விபரம் தெரியணும். அவசரமா கேட்கிறார்கள்” இது அமைதியாக நான். “அதான் ஸ்ரீமுஷ்ணத்தில் ஒரு ஆர்.ஐ. இருக்காரே. அப்புறம் நீ யாரு” “நான் இதற்கென்று தனியாக ஆர்.ஐ. என்னோட வேலை இம்மாதிரி விஷயங்கள்பற்றி நடவடிக்கை எடுக்கறதுதான். கொஞ்சம் சொல்லுங்க நாங்க காலையிலிருந்து அலைகிறோம்.”
உள்ளுக்குள் எரிச்சல் மூண்டாலும். எங்கள் கையாலாகத தனம். பசி, தாகம் எல்லாவற்றையும் விட குறிப்பிட்ட இரண்டு கிராமங்களின் விபரங்கள் சேகரித்துக்கொண்டு போகவேண்டும் என்று அவசரம். அவரிடம் பொருமையைக் காட்டியது.

“இதோ இப்படியே போ” அவர் கைகாட்டிவிட்டு தன் வேலையில் மூழ்கிவிட்டார். நாங்கள் எங்கள் யாத்திரையைத் தொடர்ந்தோம். அங்கிருந்து அரை மணிநேரம் நடந்துசென்று நாங்கள் தேடிவந்த பகுதியை அடைந்துவிட்டோம். அங்கு மக்களிடம் தேவையான விபரங்களைக் கேட்டுக்கொண்டிருந்தோம். சாதாரணமாக சாமியாரிடமோ சீட்டுக் கம்பெனிக்காரனிடமோ ஏமாறும் மக்கள் எங்களை லேசில் நம்பவில்லை. அவர்களுக்கு சமாதானம் சொல்லி கணக்கெடுத்தோம். அப்போது ஓடிவந்தார் ஒருவர்.

அவர்தான் எங்களுக்கு வழிகாட்டிய நல்ல மனிதர்.

என்னுடன் வந்த ஓ.ஏ.விற்கு கோபம் வந்துவிட்டது. “ஏன்யா நாங்க வழி கேட்டப்ப அவ்வளவு அலட்சியமா எங்களை பார்த்தே. இப்ப எதுக்கு ஓடி வர்றே” என்று திட்டிவிட்டார். அங்கிருந்து விபரங்களை வாங்கிக்கொண்டு அடுத்த கிராமத்திற்குப் போனோம். வழியில் ஏதாவது டீக்கடை கிடைக்காதா என்று தேடினால் எதுவும் தட்டுப்படவில்லை. ஒரு கடையைப் பார்த்தோம். கிட்ட போனாலே பரபரப்பாகியது. அங்கு ஒருவர் இங்கு டீயெல்லாம் கிடைக்காது. சாராயம்தான் கிடைக்கும் என்றார். விட்டோம் ஓட்டம்.

அடுத்து அந்த கிராமத்திலும் வேலையை முடிக்கும்போது மணி இரண்டு இருக்கும். காலை ஒன்பது மணியிலிருந்து ஒரு இடத்தில்கூட உட்காராமல் நடந்துகொண்டேயிருந்ததில் ரொம்பக் களைப்பாக இருந்தது. இருந்தாலும். இவ்வளவு தூரம் நடக்க வேண்டுமே என்று சாலைக்கு சுருக்கு வழி போவது எப்படி என்று கேட்டதில் தெற்கில் ஏரி ஒன்றைக் காட்டி அதைக் கடந்தால் அதோ தெரிவது விளந்தை பேருந்து நிருத்தம். அங்குபோனால் சுலபம் என்றனர் புது இடம் என்பதால் பயந்துகொண்டு வேறு வழி கேட்டால் ஒரு பாதையைக் குறிப்பிட்டு இப்படியே போனால் இரண்டு வழி வரும் அதில் நேராகப் போனால் மாமங்கலம் ஸ்டாப்பிங் வரும் என்று தகவல் தந்தனர்

அங்கிருந்து புறப்பட்டோம் மீண்டும். சிறிது தொலைவு நடந்ததும். சில பெண்கள் தண்ணீர் இறைத்துக்கொண்டிருந்தனர் எங்கள் களைப்பு நீங்க அவர்களிடம் தண்ணீர் வாங்கிக் குடித்தோம். அந்த கிணற்றை சற்று எட்டிப் பார்த்த எனக்கு பயம் வந்துவிட்டது. கிணற்றுக்கு கைப்பிடிச் சுவர் எல்லாம் கிடையாது. செம்மண் பூமியில் நேராகத் தோண்டப்பட்ட பெரிய துளை அது. எட்டிப்பார்த்தால் பாதாள லோகத்தைப் பார்த்த மாதிரி அவ்வளவு ஆழம். அதன் ஓரமாக நின்றுகொண்டு சர்வசாதாரணமாக குடத்தில் கயிற்றைக்

கட்டிக்கொண்டு தண்ணீர் இறைத்தனர் பெண்கள்.

பாவம் அந்தப் பகுதி மக்கள். அந்நாளில் தண்ணீர் வசதி கிடையாது. மின் வசதி கிடையாது. சாலை என்பது செம்மண்ணில் வண்டிகள் போன தடம்தான். செம்மண் பாலைவனத்தில் நடுநடுவே சிலர் குடிசைகளில் வசித்தனர். அது ஒரு மலையும் மலை சார்ந்த பகுதி. வெய்யிலில் நடந்த எனக்கு அந்த செம்மண் பாதையைப் பார்த்துப் பார்த்து கண்கள் பூத்துவிட்டது. நிற்க நிழல்கூடக் கிடையாது.

கடைசியில் இரண்டாகப் பிரியும் பாதை வந்தது. எதில் போகவேண்டும் என்று கேட்க யாரும் தென்படவில்லை. நல்ல பாதையாகத் தெரிந்த ஒன்றில் புகுந்து நடந்துகொண்டேயிருந்தோம். சற்று தொலைவில் ஒரு டீக்கடை தென்பட்டது. அந்த நேரம் வியாபாரம் முடிந்துவிட்டது. அவரிடம் இரண்டு பேரும் தண்ணீர் வாங்கிக் குடித்துவிட்டு மாமங்கலம் ஸ்டாப்புக்கு இன்னும் எவ்வளவு தூரம் என்று கேட்டோம்.

அவரோ எங்களிடம் விபரம் கேட்டுவிட்டு “அதற்கு ஏன் இப்படி வந்தீர்கள் நீங்க இப்ப வந்த இடத்துக்குத்தான் போகிறீர்கள். கொஞ்சம் பின்னால் போய் ரோடு பிரியும் இடத்தில் மாற்றுப் பாதையில் போங்க” என்று வழிமாற்றிவிட்டார். மீண்டும் நடையைக் கட்டினோம். அந்த முடியாத சோகத்திலும் நடந்ததை நினைத்து சிரித்துக்கொண்டு போனோம்.

சற்று தூரம் நடந்ததும் பழக்கப்பட்ட ஒரு பகுதி தெரிந்தது. அதுதான் நான் ஏற்கனவே முதமைச்சார் கையால் பட்டா வாங்கிக்கொடுக்க அழைத்துச்சென்ற மக்கள் வசிக்கும் ஊர் - மாமங்கலம். உடனே தைரியம் வந்து நடக்க ஆரம்பித்தால் ஒருவர் எங்களை மறித்துவிட்டார் யார் என்று சட்டென்று அடையாளம் தெரியவில்லை.

“அய்யா அண்ணைக்கு எப்படி ஊருக்கு போய் சேர்ந்தீங்க” என்று கேட்டதும்தான் அவரை அடையாளம் தெரிந்தது. பின்னர் அவரிடம் நடந்ததை புலம்பினோம். அவரோ எங்களை

விடுவதாக இல்லை. சரசரவென்று அருகில் இருந்த தென்னை மரங்களில் ஏறி ஏராளமாக இளநீர் இறக்கிக் கொடுத்தார் ஆளுக்கு நாலைந்து சாப்பிட்டுவிட்டு ஆசுவாசப் படுத்திக்கொண்டு எங்களுடன் வந்து பஸ்சை நிறுத்தி ஏற்றிவிட்டார், அப்படிப்பட்டவர்களால்தான் இன்னும் நம் நாடு உயிர்ப்புடன் இருக்கிறது.

அது கும்பகோணத்திலிருந்து வடக்கே போகும் பஸ். அதில் நாங்கள் சேத்தியாதோப்பில் இறங்கி அங்கிருந்து வேறு பஸ்சில் போகவேண்டும். நேரடி பஸ்செல்லாம் கிடையாது. பஸ்சில் ஏறி டிரைவர் சீட்டுக்குப் பின்னால் எங்கள் கணக்கு மூட்டைகளை வைத்துவிட்டு நின்றுகொண்டோம். எங்கள் காலடியில் ஒரு பெரிய சாக்கு மூட்டை கிடந்தது. அது பேருந்து ஓட்டத்திற்கு ஏற்ப அசைந்துகொண்டே இருந்தது. அதன் ஓட்டைகளில் கருப்பாக துருத்திக் கொண்டிருந்தது.

நான் பன்றியைக் கட்டி சாக்கில் அடைத்து கொண்டுபோகிறார்கள் போலும். அது தப்பித்தவறி முட்டையைக் கிழித்துக்கொண்டு வெளியேறினால் நம்மைத்தானே முதலில் கடிக்கும் என்று பயந்துகொண்டே பயணம் செய்துகொண்டிருந்தேன். சேத்தியாதோப்பில் இறங்கியதும் என் ஓ.ஏ சொன்ன பின்புதான் தெரிந்தது. அது நாட்டு சாராயம் என்று. ஆம். குடிசைத் தொழிலாக தயாரித்த சாராயத்தை பெரிய லாரி டியூபுகளில் அடைத்து அதனை சாக்கில் கட்டி பகிரங்கமாக பேருந்திலேயே அனுப்பியுள்ளனர். அப்புறம்தான் எல்லாம் உரைத்தது.

இப்படியாக காலை ஒன்பது மணியிலிருந்து இருமுடிகட்டிக்கொண்டு வழிநடைப் பயணமாக மாலை ஐந்து மணி வரை நடந்தது ஒரு பெரிய கொடுமைதான். அதன்பின்னர் நாங்கள் இருவரும் சந்திக்கும்போது ராமாபுரம் கேம்பு போகலாமா என்று ஒருவரை ஒருவர் கேலி பேசிக்கொள்வோம்.

ஒரு முறை நானும் என் நண்பரும் காட்டுமன்னார்கோயில் தாலுக்காவில் வேலை பார்த்த சமயம். பல மாதங்கள் கழித்து எங்களுக்கு

சேரவேண்டிய சில அரியர் தொகைகள் வந்தது. அனைவருக்கும் பட்டுவாடா செய்துவிட்டு தாமதமாக வீட்டுக்குப் புறப்பட்டோம் நானும் என் நண்பரும். இருவரும் பேருந்தில் ஏறும்போது மணி ஒன்பதுக்கு மேல் இருக்கும். கடைசி பஸ். கூட்டம் அதிகமில்லை. நண்பர் தம்மிடம் இருந்த தனது தொகை மற்றும் மறுநாள் அலுவலகத்தில் ஒப்படைக்க வேண்டிய தொகை ஆகியவைகளை கணக்குப் பார்த்துவிட்டு தன் டிபன் பாக்சில் வைத்திருந்த பணத்தை எண்ணி சரிபார்த்துக் கொண்டார். அடுத்து பையில் வைத்துக் கொள்ளவும் நாங்கள் இறங்கவேண்டிய நிறுத்தம் வந்தது. சிதம்பரம் நகரின் முதல் நிறுத்தம் அது. அந்தப் பகுதியில் இறங்கினால் நேராக வீட்டுக்கு வந்துவிடலாம். ஆனால் ஒரு கிலோமீட்டர் தூரம் நடக்க வேண்டும்.

இருவரும் இறங்கினோம். இரவுமணி பத்துக்கு மேல் ஆகியிருக்கும் அனைத்தும் அடங்கிப்போன நேரம். தெருவில் படுத்திருந்த ஓரிரு நாய்கள் தலையைத் தூக்கிப் பார்த்துவிட்டு “அட நீதானா உனக்கு தினம் இந்த நேரம்தான் ஒழியும் போலிருக்கு” என்று எண்ணிக்கொண்டு அசிரத்தையாக தலையைத் தொங்கவைத்துக் கொண்டுவிட்டது. இறங்கியது முதல் நாங்கள் நடந்து வரும்போது எங்களை ஒருவர் பின் தொடர்ந்தார். பத்து தப்படி நடந்ததும் எனக்கு பயம் வந்துவிட்டது. வெளியில் காட்டிக் கொள்ளாமல் நடந்தோம். என் பையை இருவருக்கும் நடுவில் உள்ளபடி கையில் பிடித்துக்கொண்டேன். என் நண்பரும் தன் கைப் பையை அதேபோல் பிடித்துக்கொண்டார். எதுவும் பேசிக்கொள்ளவில்லை. பயம் முழுமையாக என்னை பீடித்திருந்தது. நாங்கள் வேகமாக நடந்தால் அவரும் வேகமாக எங்களை ஒட்டியே நடக்கிறார். சற்று தளர்ந்தால் அவரும் அப்படியே. நான் உள்ளூர மனதில் நண்பரைத் திட்டிக்கொண்டே நடந்தேன். அவர்பாட்டுக்கு பேருந்தில் வைத்து பணத்தை எண்ணியதை பார்த்துவிட்டுத்தான் அதை அடித்துக்கொண்டு போக வந்திருக்கிறார் என்று திடமாக நம்பியது மனது.

நான் மனதிற்குள் முடிவு செய்துகொண்டேன் எப்படி தற்காத்துக்கொள்வது. பையைப் பிடுங்கினால் எப்படி தாக்குவது என்றெல்லாம் மனதில் ஒத்திகை பார்த்துக்கொண்டே நடந்தோம். சுமார் முக்கால் கிலோமீட்டருக்கு மேல் கடந்ததும் வீடுகள் நிறைந்த பகுதியை நெருங்கிவிட்டோம். அங்கு ஒரு பிள்ளையார் கோயிலுடன் கூடிய நான்கு முக்கு ரோடு குறுக்கிட்டது. நாங்கள் அதையும் கடந்து நேராக நடக்க வேண்டும். அதை அடையும்போது என்ன செய்வது என்று பயம் உச்சக் கட்டத்தில் இருந்தது.

அந்த நான்கு முக்கு ரோட்டை அடைந்ததுதான் தாமதம் எங்கள் பின்னால் வந்தவர் எங்களை முந்திக்கொண்டு நடந்தார். மனம் பயத்தினால் அடித்துக்கொள்ள பையை இன்னும் இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு எதற்கும் தயாராக இருந்தோம். வந்தவரோ எங்களைக் கடந்து வலப்பக்கம் திரும்பி வேகவேகமாக நடந்து சென்றுவிட்டார்.

என் நண்பர் “பசுபதி” என்றார். ஆக அவருக்கும் என்னைப் போலவே பயம் இருந்திருக்கிறது. இருவரும் ஒருவருக்கு ஒருவர் பேசிக்கொள்ளாமலே பயத்தில் பையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஒன்றிருக்க ஒன்றாக சிந்தித்துக்கொண்டு நடந்திருக்கிறோம். .

சரி எங்களுக்குத்தான் பயம் இப்படி நடந்துகொண்டோம். வந்த அந்தப் புதியவருக்கு என்னாயிற்று. வேறென்ன. அவருக்கும் பயம்தான். அவர் அந்த சாலையில் நடக்கப் பயந்துகொண்டு யாரும் வருகின்றனரா என்று காத்திருந்து எங்களைப் பார்த்ததும் எங்களைத் துணையாகக்கொண்டு நடந்துவந்திருக்க வேண்டும். பாதுகாப்பான இடம் வந்ததும் அவர் எங்களை முந்திக்கொண்டு வேகமாக நடந்து சென்றதே நிரூபித்துவிட்டதே. அன்று நடந்ததை பல முறை நினைத்தும் பேசியும் சிரித்துக்கொண்டதுண்டு. அதன்பின் எந்த ஒரு பொது இடத்திலும் பணவிஷயத்தைப் பற்றி பேசுவதோ சரிபார்ப்பதோ கிடையாது.

இன்னொரு சம்பவம், இது கொஞ்சம் வேறு மாதிரி.

நான் வட்டாட்சியர் அலுவலகத்தில் உதவியாளராக இருந்தபோது நடந்தது. ஜமாபந்தி அறிக்கை என்ற ஒன்றினைத் தயார் செய்து எடுத்துக்கொண்டு கடலூர் சென்றேன். அங்குள்ள பிரிவு குமாஸ்த்தாவிடம் ஒப்படைத்தேன். வழக்கமாக அந்த அறிக்கையைக் கொண்டு போய் கொடுக்கும்போது கொஞ்சம் தட்சிணையும் வைத்துக் கொடுக்க வேண்டும். ஆனால் பிரிவு எழுத்தரோ நன்கு தெரிந்தவர். அதைவிட என்னைப் பற்றியும் நன்கு தெரிந்தவர். அதனால் நான் போகவர மட்டும் காசு எடுத்துச் சென்றேன். போகும்போதே என் நண்பர் செல்வராசு உதவிக்கு தாமும் வருவதாக சொன்னதையும் உதாசீனப் படுத்திவிட்டுச் சென்றேன். என் அறிக்கை துல்லியமாக உள்ளது என்பதில் அவ்வளவு நம்பிக்கை.

கலெக்டர் அலுவலகத்தில் கொண்டுபோய் அறிக்கையை ஒப்படைத்தேன். அதனை சரிபார்க்க மாலை ஆகிவிட்டது. நான் புறப்படும்போது அந்த குமாஸ்தா ‘டீ சாப்பிட்டுப் போ’ என்றார். பொதுவாக நாம்தான் அவருக்கு சப்ளை சர்வீஸ் செய்யவேண்டிய அளவிற்கு பெரிய குமாஸ்தா அவர். கலெக்டர் அலுவலகத்தில் அந்த குமாஸ்தா பணியிடம் கிட்டத்தட்ட அதிகாரிக்கு சமமானது. ஆனால் அவர் என்னை டீ சாப்பிட அழைத்துச் சென்றார்.

டீக்கடைக்குப் போனோம். அந்த நேரத்தில் அவரது நண்பர் அங்கு வர அவருக்கும் டீ பிஸ்கட் சொல்லப்பட்டது.

ஒரு திரைப்படத்தில் நாகேஷ் தாம் சாலையில் கண்டெடுத்து பையில் இருப்பதாக நம்பிக்கொண்டிருக்கும் 25 பைசாவைக் கணக்கில் வைத்துக்கொண்டு விலை விபரம் கேட்டுக்கேட்டு டிபன் சாப்பிடுவார். அதுபோல் நானும் சிதம்பரம் வருவதற்கான பேருந்து கட்டணம் ஆறு ரூபாயை நினைத்துக்கொண்டு டீ சாப்பிட்டேன்.

நண்பர் தாம் தருவதாக சொல்லியும் நான் ஆறு ரூபாயை நிறுத்தி வைத்துக் கொண்டு மீதியை செலவழித்தேன். மற்றவர் கொடுத்தால் என் கௌரவம் என்னாவது. நண்பரை அலுவலகத்திற்கு அனுப்பிவிட்டு நான் விடைவாங்கிக்கொண்டு புறப்பட்டால் எங்கள் தேர்தல் துணை வட்டாட்சியர் வழிமறித்துவிட்டார். சிதம்பரம்தானே! வாங்க போகலாம் என்று அழைத்தார். நான் எவ்வளவோ மறுதலித்தும் என்னை வலுகட்டாயமாக அழைத்துச் சென்றார்.

பஸ் ஸ்டாண்டுக்கு நடந்து சென்று அங்கிருந்து போவது என் திட்டம். அவரோ என்னை டவுண் பஸ்சுக்கு அழைத்துச் சென்றுவிட்டார். அதிகாரி உடன் வந்தால் நாம்தானே டிக்கட் எடுக்க வேண்டும். நான் எடுத்துவிட்டேன். ஆக சிதம்பரம் போக நான்கரை ரூபாய்தான் மீதம் இருந்தது. வழியில் என்னென்னமோ சிந்தித்து பேருந்து நிலையம் வந்ததும் கொஞ்சம் வேலை இருக்கு என்று கழட்டிக்கொண்டுவிட்டேன்.

பேருந்து நிறுத்தத்தில் நின்றுகொண்டு பலவாறு சிந்தித்து கடைசியில் இரண்டு வழி தென்பட்டது. ஒன்று முட்லூர் வரை சென்று இறங்கி நடப்பது. இரவு ஆகிவிட்டதால் அது சரிப்படாது என்று திட்டம் கைவிடப்பட்டது.

இரண்டாவது. கடலூரில் ஒரு குடும்ப நண்பர் இருக்கிறார். அவரிடம் சென்று காசு வாங்கிக்கொண்டு செல்வது. அதுவே சரியென்று பட்டதால் மீண்டும் மேற்குநோக்கி இரண்டு கிலோமீட்டர் நடந்து அவர் வீட்டுக்குப் போனேன். ஏக வரவேற்பு. அகம் குளிர்ந்தது. கௌரவமாக “அவசரமாக ஒரு இருபத்தைந்து ரூபாய் தேவை” என்று கேட்டேன். அவர்களோ “நீங்களே பணம் கேட்டால் எப்படி? உங்ககிட்ட இல்லாததா. கிண்டல் செய்கிறீர்களா” என்று வழுக்கிக் கொண்டே இருந்தனர்.

நானும் சற்று நேரம் இருந்து பார்த்துவிட்டு பணம் ஏதும் பெயராது என்று உறுதி செய்துகொண்டு

புறப்பட்டேன். இங்கே எனக்கு ஒரு புத்திக் கொள்முதல் ஏற்பட்டதை கட்டாயம் சொல்லவேண்டும். 1980-ல் நண்பர் அவசரமாக தமக்கு 500 ரூபாய் (அது என் ஒரு மாத சம்பளத்தைவிட மிக அதிகம்) வேண்டும் என்று கைமாற்றாக வாங்கியவர். எப்போது போனாலும் ‘நான் வேறு உங்களுக்கு பணம் தரவேண்டும். விரைவில் தந்துவிடுகிறேன்’ என்று சொல்லிக் கொண்டே இருப்பார். 1988ல் அவருக்கு அதெல்லாம் நினைவுக்கே வரவில்லை. (இன்று வரை தரவில்லை என்பது சோகம்)

ஆனால் அன்றோ ஒரு பத்து ரூபாய்கூட தரும் மனநிலையில் அந்தக் குடும்பம் இல்லை. சரி இன்று நடை பயணம்தான் என்று முடிவுசெய்து சோகமாக திரும்பிக் கொண்டிருந்தேன். அந்த நேரம் கடைத்தெருவில் ஒரு நண்பர் மிக வறிய நிலையில் ஆர்ட்டிஸ்டாக இருந்தார். எதற்கும் முயற்சிப்போம் என்று அவரிடம் “ரூ 25/- அவசரமாக வேண்டும் நாளை கொடுத்து அனுப்புகிறேன்” என்று கேட்டதும். பக்கத்துக் கடையில் வாங்கிக் கொடுத்தார். இரவு மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. விரைந்து வந்து கடைசி பஸ் பிடித்து வீடு சேர்ந்தேன். வறுமையில் செம்மை என்பது இதுதான்.

அன்று அவர் உதவாமல் போயிருந்தால் என் நண்பனுக்கு நடந்தது ஒரு மாமாங்கம் கழித்து எனக்கு நடந்திருக்கும்.

# 26 ஆரைய்யர் (வருவாய் ஆய்வாளர்)

அந்த நாட்களில் வருவாய் ஆய்வாளர் என்பவர் கிராமப் பகுதிகளில் மிகவும் மதிப்புக்கு உரியவர். அவரைத் தெய்வம்போலவோ, தன குடும்ப முக்கிய நபர் போலவோ தங்கள் ஊருக்கான தேவ தூதன் போலவோ மக்களால் மதிக்கப்பட்ட காலம். பொதுவாக கிராமப் பகுதிகளில் president என்பவரை ப்ரசெண்டு என்றும், மணியக்காரரை மணியார் என்றும் அழைப்பது போன்று R.I. (வருவாய் ஆய்வாளர்) என்பவரை ஆரய்யர் என்று அழைப்பது வழக்கம்.

இந்த வருவாய் ஆய்வாளர் பணியிடம் இருக்கிறதே அது ஒரு வித்தியாசமான அனுபவம். அந்த பதவியில் வேலை செய்யும்போது பல்வேறு படிப்பினைகள், அனுபவங்கள், சோதனைகள் என்று சுகமான சோகங்களும் சோகமான சுகங்களும் நிறைந்த வாழ்க்கையை வழங்கும்.

நான் சொல்வதெல்லாம் முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் வரை. இப்போதெல்லாம் அது ஒரு புரமோஷனுக்கான பயிற்சி.

கிராமத்திற்கு கலெக்டரே வந்தாலும் வருவாய் ஆய்வாளருக்குதான் முதல் முன்னுரிமை வழங்கத் தயாரான மக்கள் நிறைந்த காலம். வருவாய் ஆய்வாளர்களும் அந்த அளவிற்கு மக்களுடன் இணைந்து வாழ்ந்தனர்.

என்னுடைய கிட்டத்தட்ட மூன்று ஆண்டுகால ஆர்.ஐ. பணியில் என்னைத் தேடிவந்த அனுபவங்கள் சந்தித்த மனிதர்கள் என்று அது ஒரு மறக்க முடியாத பொற்காலம்.

என்னுடைய வருவாய் ஆய்வாளர் பணியேற்பே சற்று

கோணலாகத்தான் ஆரம்பித்தது.

ஒரு சுபயோக சுபதினத்தில் எனக்கு கலெக்டர் ஆபீசில் சூனியம் வைத்துவிட்டார்கள். ஆம், காலையில் அலுவலகத்திற்குள் நுழைந்ததும் என்னை உடையார்குடி வருவாய் ஆய்வாளராகப் பணியமர்த்தப் பட்டிருப்பதாகவும் உடனடியாக சேரவேண்டும் என்றும் உத்திரவாகியிருந்தது.

கூட்ஸ் ரயிலிலிருந்து சிலபல பெட்டிகளைக் கழற்றி விடுவதுபோல் அப்போதே என்னை ஆபீசிலிருந்து கழற்றிவிட்டார்கள். அதன் விளைவு சிந்திக்கக்கூட நேரம் இல்லாமல் பணியேற்றாக வேண்டும். நானோ சப்ளை அண்டு சர்வீஸ் பிடிக்காமல் இரண்டு ஆண்டுகளாக ஆர்.ஐ. வேண்டாம் என்று எழுதிக் கொடுத்து வந்தவன். கடைசியில் பங்களா வரவு செலவு பார்க்க வேண்டிய பிர்க்காவிலேயே போட்டுவிட்டார்கள்.

தலைவிதியை நொந்துகொண்டு மதியம் தாசில்தாரிடம் உள்ள பலிபீடத்தில் தலையைக் கொண்டுபோய் வைத்தேன். அவருக்கு என்னை ஏற்பதற்கு விருப்பமில்லை. காரணம் நான் விடுவிக்கவேண்டிய நபர் நன்றாக வேலை பார்த்துவந்ததுதான். எப்பவுமே புது துடைப்பம் நல்லா பெருக்காது. கொஞ்சம் பழகும் வரை அதிலிருந்தே குப்பை கொட்டும்.

நான் விடுவிக்க வேண்டிய நபர் வேறு யாருமில்லை. என் நண்பன் ரகமத்துல்லாதான். ‘நேமிச் சக்கரத்தை’ சுமந்துகொண்டிருந்த அவனுக்கோ விட்டால் போதும் என்று ஓடத் தயார் நிலை. கடைசியில் வேண்டா வெறுப்பாக என்னை ஏற்றுக்கொண்டார் தாசில்தார். அப்போது அவர் சொன்னது ஏதோ நான் வீடுபுகுந்து திருட வந்ததுபோலவும் என்னைப் பிடித்து கட்டிப்போடச் சொல்வதுபோலும் இருந்தது.

துணை வட்டாட்சியரை அழைத்து “நாளை கலெக்டர் வரார். இந்தாள்கிட்ட பைண்டோவர்பண்ணி கையெழுத்து வாங்கிக்குங்க.” அப்படியே என்பக்கம் திரும்பி “இங்கேதான் தங்க வேண்டும் தெரியுமா?”

எனக்கோ வாழ்க்கையே வெறுத்துப் போன நிலைமை. நான் டெம்பரரி குமாஸ்த்தாவாகப் பணிபுரிந்தபோதுமுதல் என் ஆத்மார்த்த வேலை காரணமாக அதிகாரியின் செல்லப் பிள்ளையாகத்தான் இருந்திருக்கிறேன்.

தன்மானம் பின்னிழுத்தபோதும் தூக்கு தண்டனை விதிக்கப்பட்ட கைதி போன்று கோர்ட் ஹாலைவிட்டு வெளியே வந்தேன். உடன் புறப்பட்டு வந்து கோட்டாட்சியரை சந்தித்து ஆசி வாங்கிக்கொண்டு மீண்டும் அதிகாலை சென்று வட்டாட்சியரை சந்தித்தேன். அப்போது அவரது பேச்சே மாறியிருந்தது. எனக்கு ஒரே சந்தேகம். ‘நமக்காக எந்த மந்திரி, எம்.எல்.ஏ. சிபாரிசு செய்திருக்கப் போகிறார். இப்படி குழைவாக பேசுராரே’ என்று.

அப்போதுதான் அவர் சொன்னர் “நீங்க ஹெட்குவார்ட்டர்ஸ்ல வேல பாக்குறதில பல நன்மை இருக்கு அதிகாரிங்க நல்ல அறிமுகத்துல இருப்பாக. அது பல விதத்தில உதவியா இருக்கும். தைரியமா வேல பாருங்க. உங்களைப் பத்தி கேள்விப்பட்டேன் எந்த பிரச்சினையும் இருக்காது. எதா இருந்தாலும் என்னிட்ட கொண்டுவந்திடுங்க”.

எனக்கு முன்னோடியான என் நண்பன் பக்கத்திலேயே இருக்கையில் எனக்கென்ன கவலை. அன்றே என்னுடைய பெட்டி படுக்கையுடன் ஜாகை மாறினேன். அப்புறம் நான் விடுவிக்கப்படும் வரையிலும் அங்கேதான் தனிக்குடித்தனம் செய்தேன். அந்த கட்டிடத்தில் தங்கி வேலை பார்த்த நான்தான் கடைசி. அதன் பின் வருவாய் ஆய்வாளர் தலைமையிடத்தில் தங்கியிருக்கவேண்டும் என்ற நடைமுறையெல்லாம் காற்றோடு போயாச்சு.

ஒரு மாதத்தில் கலெக்டர் ஜமாபந்தி. எனக்கோ ஒரே பயம். ஆனால் என் ஓ.ஏ. வின் பொறுப்புணர்ச்சி, என் வி.ஏ.ஓக்களின் ஒத்துழைப்பால் நல்லாவே முடிந்தது. அதிலே ஹைலைட் என்னண்ணா கலெக்டர் முதல் நாளும் கடைசி நாளும் மட்டும் வந்தார். என் சக ஆர்.ஐகளும் நண்பர்களாவிட்டனர். அப்புறம் என்ன கவலை.

கலெக்டர் ஜமாபந்தியே முடித்துவிட்டதால் கொஞ்சம் தைரியம் வந்துவிட்டது. ஏற்கனவே என் நண்பன் பிர்க்காவில் ரோடே போட்டு வைத்திருந்ததால் நான் ஹைவேயாக மாற்றி பயணம் செய்ய ஆரம்பித்துவிட்டேன்.

ஆர்.ஐ. பணிகளில் முக்கியமான ஒன்று ஆறு மாதத்திற்கு ஒருமுறை முதியோர் உதவித் தொகை பெறுபவர்களை தணிக்கை செய்து அறிக்கை தரவேண்டும். அந்த நேரம் வந்தது. கிராமத்திற்குப் போனவுடன் பயனாளிகளை அழைத்து நேரடித் தணிக்கை செய்யப்போக ஒருவர் சத்துணவு மையத்தில் வேலை செய்வதாகத் தகவல் கிடைத்தது. கிராமத்திலேயே இப்படி என்றால் நகரத்தில் எப்படி இருக்கும் என்று எண்ணம் வந்தது.
மதியம் பன்னிரண்டு மணியளவில் நானும் என் ஓ.ஏ.வும் ஒவ்வொரு மையமாகப் போய் ஆயாக்களை பேட்டி கண்டு இந்த மாதம் “பென்ஷன் பணம் வந்துவிட்டதா” என்று கேட்கப்போக ஒரே நாளில் பத்துப் பதினைந்து கேஸ்கள் கிடைத்துவிட்டது. உடனே ஒரு அறிக்கை தயார் செய்து அனுப்பிவிட்டேன். அந்த மாதமே அவர்களின் பணம் நிறுத்தப்பட்டுவிட்டது. ஆனால் சிபாரிசு தாங்கவில்லை. வெளியிலிருந்தெல்லாம் சிபாரிசு வரவில்லை. ஆபீசில் வேலை பார்ப்பவர் வீட்டு வேலைக்காரரர், அக்கம்பக்கத்து வீட்டு குடியிருப்பாளர்கள் என்று அலுவலக நண்பர்களே சிபாரிசுக்கு வந்துவிட்டனர். இதிலே ஒரு விசேஷம் அலுவலகத்தில் வேலை பார்ப்பவரின் மாமியார் ஒருத்தர். அப்புறம் என்ன. ஆட்சி மாறிய அரசாங்கத் திட்டம் போல் தணிக்கை கைவிடப்பட்டு விட்டது.

இப்படியாக நான் தணிக்கை செய்கிற விஷயம் பிர்க்கா முழுவதும் பரவிப்போய் மாலை நான் வீட்டுக்கு வந்தால் ஒரே கிழங்கட்டை கூட்டம் உட்கார்ந்திருக்கும். ஒரே புலம்பலாக இருக்கும். பார்க்கவே பரிதாபமாக இருந்தது. அதில் ஒரு பெண்மணி உண்மையை உடைத்தார்.

அவரது கணவன் இறந்துவிட்ட நிலையில் வாழ

வழியின்றி தவித்துள்ளார். கணவன் இருந்ததுவரை குடியிருந்த இடத்தையும் காலி செய்துவிட்டனர். அவர் ஒரு முசாபார்கானா அருகில் குடியிருந்துள்ளார். இந்நிலையில் தாலுக்கா ஆபீசில் ஜமாபந்தியின்போது தினமும் அலுவலக வாசலில் வந்து காத்திருந்ததை அப்போதைய சப்கலெக்டர் பார்த்துவிட்டு விசாரித்ததில் அவருக்கு 45 வயதாகவில்லை என்பது தெரிந்தும் அவரது நிலைக்குஇறங்கி“இவளுக்கு வயசுமட்டும்தான் குறைச்சல். மற்றபடி பணம் கொடுக்கலாம். பாவமா இருக்கு. நீங்க அனுப்புங்க. நான் சாங்ஷன் செய்கிறேன்” என்று உத்திரவிட்டுவிட்டார். தொடர்ந்து பணம் பெற்றுவந்தவருக்கு என் மூலம் ஆபத்து வந்துவிட்டது. அப்புறம் என் முன்னவர்களை விசாரித்ததில் உண்மைதான் என்று தெரிந்துகொண்டேன். போனால் போகிறது என்று நானும் சட்டத்தைத் தளர்த்திவிட்டேன்.

அப்புறம் என்ன. ஓ.ஏ.பி வாங்குகிறவர்கள் எல்லாம் தகுதியுடனா வாங்குகிறார்கள். அந்த ஏழைக்கு மட்டும் என்ன சட்டம். உதவித் தொகை வாங்குவதற்காகவே உயிருடன் உள்ள கணவனை இறந்துவிட்டதாக சாதிப்பர். அருகில் நிற்பவர் யார் என்றால் அவர் பக்கத்து வீட்டுக்காரர். உதவிக்கு அழைத்துவந்தேன் என்பார். விசாரணைக்கு வரும்போதுமட்டும் தாலியை அவிழ்த்து பையில் வைத்திருப்பார். ஆண்கள் மட்டும் என்ன. உயிருடன் உள்ள மகனையே செத்துவிட்டார் என்று சொல்வர் கரும காரியம் மட்டும் செய்திருக்கமாட்டார்.

ஆறு மாதத்திற்கு ஒரு முறை வேட்டியோ புடவையோ முதியோர் உதவித் தொகை பெறுபவர்களுக்கு வழங்கப்படும். சிலர் அதனை வாங்கிய கையோடு கடையில் கொண்டுபோய் விற்றுவிடுவதை பார்த்திருக்கிறேன். அதே சமயம் அரசாங்கம் வழங்கிய துணியை அரதப் பழசானாலும் கட்டும் நிலையில் உள்ளவர்களையும் பார்த்திருக்கிறேன். அப்புறம்தான், சட்டம் ஒன்றையே பிடித்துத் தொங்காமல் யாதார்த்தத்தையும் மதிக்கக் கற்றுக்கொண்டேன்.

எனது பிர்க்காவில் மட்டும்தான் நிறைய மாணவர்கள் சாதி வருமான சான்று கேட்டு வருவர். மற்ற ஆர்.ஐ. எல்லாரிடமும் வரும் விண்ணப்பங்களைவிட என் ஒருவனிடம் மட்டும் அதிகமாக வருவதில் எனக்கு ஒரு பெருமை. சான்று கேட்பவர்களின் எண்ணிக்கைதானே கல்வி பயிலுபவர்களின் அளவைக் காண்பிக்கிறது. என் பிர்க்காவில் கல்வி அதிகம் என்பதில் ஒரு கர்வம்கூட. அதனால் இரவு எத்தனை நேரமானாலும் இருந்து எல்லா மாணவர்களையும் அனுப்பிவிட்டுத்தான் மறுவேலை. தூர கிராமங்களில் இருந்து வருபவர்களை முதலில் விசாரித்து முடித்து அனுப்பி விடுவேன். தற்காலம் போல் மொட்டைக் கையெழுத்தெல்லாம் கிடையாது.

அப்படியும் முண்டியடித்து முன்னால் வர முடியாத மாணவர்கள் ஓரிருவர் வெகு நேரம் கழித்து வந்து என் மனதைச் சங்கடப் படுத்தியிருப்பர். அவர்களுக்கு என் செலவிலேயே டிபன் வாங்கிக் கொடுத்து என் ஓ.ஏ. அவர்களை பத்திரமாக அனுப்பி வைத்த சில சந்தர்ப்பங்கள்கூட உண்டு.

அப்படிப்பட்ட ஒரு மாணவர் என்னிடம் வந்தார். அவர் அவரது தாயார், அவருக்குத் தாயார் இதுதான் அவரது குடும்பம். வருமானம் என்றால் பூச்சியம். அப்புறம் எப்படி குடும்பம் என்றால் வீட்டு வேலை செய்து வயிறு வளர்த்துவந்தனர். அந்த பையன்பேரில் இறக்கம் இருந்தபோதும் சந்தேகமும் இருந்ததால் விசாரித்து பின்னர்தான் சான்று வழங்கினேன்.

நான் தடுக்கி விழுந்தால் கேம்பு போகும் இடமான லால்பேட்டைக்கு சைக்கிளில் போகும்போது அந்தப் பையன் நடந்துபோவதைப் பார்த்ததும் என் மனதில் இனம் புரியாத உணர்வு. அடுத்தடுத்து அந்தப் பையனும் என்னிடம் வந்து நின்ற சூழ்நிலை. அவனிடம் நடந்து போகாதே என்று இரண்டு ரூபாய் கொடுத்து அனுப்பியும் அவன் நடந்தே சென்றது தெரியவந்ததும் ஒருநாள் வழியில் பார்த்து கடிந்துகொண்டேன்.

அவன் சொன்னான் “இந்த காசைக்கொண்டுபோய் என் அம்மாவிடம் கொடுத்தால் ஏதாவது உதவியா இருக்கும்” என்று. அந்தக் குடும்பத்தை அழைத்து விசாரித்ததில் அவனது பாட்டிக்கு மட்டும் உதவித் தொகை வழங்கத் தகுதி இருந்ததால் அவருக்கு மட்டும் கிடைத்தது. ஒரு ஆண் மகன் இருந்த ஒரே காரணத்தால் அந்த ஏழைத்தாய்க்கு விதவை உதவித்தொகை வழங்க இயலாமல் போனது. அதன்பின்னர் அந்தப் பையன் என் சகோதரனாகிவிட்டான். இப்போது புரிந்திருக்கும் நான் இந்தப் பையனை அவன் இவன் என்று ஒருமையில் குறிப்பிட்டது. இது ஒரு சாதாரண விஷயம்தான். ஆனால் இதன் தொடர்ச்சிதான் உணர்வுப் பூர்வமானது.

அவனால் மேற்கொண்டு கல்லூரிக்குச் செல்ல இயலவில்லை. சம்பாதிக்க வேண்டிய சூழ்நிலை. வெற்றிலை மண்டியில் கணக்கு எழுதினான். அடுத்து ஊரார் உதவியுடன் வெளிநாடு செல்லப் பயணமானான். நானும்கூட உதவிசெய்தேன். சில மாதங்கள் கழித்து வந்தான். அப்போதுதான் தெரிந்தது. புரோக்கர் ஏமாற்றி மும்பையில் கைவிட்டார் என்பது.

கொஞ்சகாலம் கழித்து மீண்டும் முயற்சி செய்து அரபுநாட்டுக்குச் சென்றான். அங்கிருந்து வெளிநாடுகளில் வேலைக்கு ஆள் எடுக்கும் நோக்கில் நடைபெற்ற தேர்வில் பாசாகி தற்போது லண்டனில் போஸ்ட்டல் டிப்பார்ட்மெண்டில் பணிபுரிகிறார் அந்த சகோதரர்.

ஒவ்வொரு பொங்கல், தீபாவளி பண்டிகைக்கும் தவறாமல் தொலைபேசியில் அழைப்பு வந்துவிடும். என்னையும் குடும்பத்தையும் விசாரித்து. அதைவிட ஒருமுறை அவரது மனைவி என்னிடம் தொலைபேசியில் பேசினர். நான் இன்னார் என்று அறிமுகம் செய்து கொள்ளும் முன்னர் என்னைப்பற்றிய விபரங்களை அவர் தெரிவித்தார். நான் அசந்துபோய் விட்டேன். என்னைப்பற்றி சொல்லி வைத்திருப்பதுடன் அடிக்கடி என்னைப்

பற்றி பேசுவார் என்றும் அவர் சொன்னார். என்னுடைய சகோதரன் ஒருத்தன் உலகின் வேறு மூலையில் இருக்கிறான். அவனது பூரண அன்பைப் பெறுவதற்கு அப்படி என்ன செய்தேன் என்பதுதான் என் முன் உள்ள கேள்வி.

இது ஒரு உதாரணத்திற்கு சொல்லப்பட்டதுதான். இதுபோல் நிறையபேர் இன்றும் அந்தப் பகுதியில் சென்றால் வயதானவர்கள் அடையாளம் கண்டு விசாரிக்கும்போது நாம் அப்படி என்ன செய்துவிட்டோம் இவர்களின் அன்பைப் பெறுவதற்கு என்று ஆச்சாரியம்தான் மிஞ்சும்.

நான் ஆர்.ஐ.யாகப் பணியாற்ற ஆரம்பித்து இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டது. ஒருநாள் நான் லால்பேட்டையில் சைக்கிளில் வந்து கொண்டிருந்தேன் என் எதிரில் வந்த நபர் ஒருவர் டபக்கென்று சைக்கிளிலிருந்து குதித்து என்னிடம் குசலம் விசாரித்தார். அவருக்கு சுமார் எழுபது வயதிருக்கலாம். எனக்கு அடையாளம் தெரியவில்லை. தனது சைக்கிளில் தொங்கிய மஞ்சள் பையைக் கழற்றி என்னிடம் கொடுத்தார். எதற்கு என்றெல்லாம் புரியவில்லை. யார் என்றும் புரியவில்லை. வெட்கத்தை விட்டு அவரிடமே விசாரித்தேன். சம்பவம் இதுதான்.

நான் பணியேற்ற சில தினங்களில் ஒரு பெரியவர் வந்தார். அவருக்கு அதற்கு முன்பு மூன்று ஆண்டுகளுக்கு முன் அவரது வருமானம் என்ன என்று சான்று பெற்று நீதி மன்றத்தில் ஒப்படைக்க வேண்டும். அதன்பொருட்டு அவர் மூன்று மாதங்களாக அலைந்து கொண்டிருந்தார். என் நண்பன் ஏற்கனவே அறிக்கை அனுப்பியிருந்தும் சொத்தை கேள்விகேட்டு திருப்பி அனுப்பிக்கொண்டே இருந்துள்ளனர். இந்நிலையில் நான் பணியேற்றதும் என்னிடம் படையெடுத்தார் அந்தப் பெரியவர். நானும் மீண்டும் அறிக்கை அனுப்பிவைத்தேன். பல போராட்டத்திற்குப் பின் அவருக்கு சான்று கிடைத்து அவரது வழக்கும் வெற்றி பெற்றுவிட்டது. ஆனால் காரியம்

முடிந்தபின்னர் அவரை நானும் சந்திக்கவில்லை. அத்துடன் மறந்தும்விட்டது.

இரண்டு ஆண்டு கழித்து அவரது மகன் வெளிநாட்டிலிருந்து வந்துள்ளார். அவர் கொண்டு வந்த பொருட்களில் சிலவற்றை எனக்கென்று எடுத்துக்கொண்டு சில முறைகள் வந்துள்ளார். என்னை சந்திக்க முடியாமல் திருப்பிவிட்டிருக்கிறார். இந்நிலையில் வேறு வேலையாக சென்று வந்தவர் கண்ணில் நான் மாட்டிக்கொண்டேன்.

நான் எவ்வளவோ மறுத்தும் நடுத்தெருவிலேயே மஞ்சள் பையை அப்படியே என் கையில் திணித்துவிட்டார். வீட்டுக்கு வந்து பார்த்தால் உயர்தர பேண்ட் பிட், உயர்தர செண்ட் பாட்டில், ஷேவிங் கிரீம், பேனா என்று ஐந்தாறு பொருட்கள் அதில் இருந்தன. என்னால் அதனை ஜீரணிக்கவே முடியவில்லை. நான் மீண்டும் அவரது வீட்டுக்குப்போய் சண்டை பிடித்தேன். அவரோ நான் உங்களுக்குக் கொடுக்கவில்லை. என் மகனுக்குத்தான் கொடுத்திருக்கிறேன் என்றாரே பார்க்கலாம். இந்த அன்பைத்தான் என்னால் சம்பாதிக்க முடிந்தது.

இதுபோன்று ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள் இல்லை. பலர் என் நண்பர்கள் ஆயினர். இதுபோன்று ஒருவர் மோதலில் நண்பராக மாறினார் கடைசியில் பிசிராந்தையார் அளவிற்கு நட்பு மலர்ந்த ஒரு கதை.

ஒரு வீட்டுக்கு நிலவரி பாக்கிக்காக போய் நின்றோம் நானும் என் உபதளபதிகளான வி.ஏ.ஓ. மற்றும் போர்வீரர்களான தலையாரிகளும். அந்த வீட்டில் நெல் அறுவடை முடிந்து மூட்டைகள் உள்ளே போய்க்கொண்டிருந்தது. எங்களையெல்லாம் அவர் வைக்கோல் துரும்பாகக்கூட நினைத்துப் பார்க்கவில்லை. பக்கத்திலிருந்து ஒரு பெரியவர் வந்தார். எங்களை வரவேற்று உட்காரச்சொல்லி கணக்கு பார்த்து சொல்லுங்கள் கட்டிவிடுகிறோம் என்று சொல்லி அனுப்பி வைத்தார். எனக்கோ பயங்கர கோபம். அவரை விடக்கூடாது என்றெல்லாம் பொருமல்.

சில தினங்கள் சென்றது. சிமெண்ட் பார்மிட் கேட்டு விண்ணப்பம் வந்திருந்தது. அந்தப் பெரியவர்தான் எடுத்துவந்தார். அப்போது சிமெண்ட் தட்டுப்பாட்டு காலம். கோட்டாட்சியர்தான் நூறு நூறு மூட்டையாக வழங்குவார். அதற்கு முன்னோடியாக கீழே இருந்து ஒவ்வொரு முறையும் அறிக்கை வரவேண்டும். அந்தப்பாடு படுவதற்குப் பதிலாக கள்ள மார்க்கெட்டிலேயே வாங்கலாம் என்ற நிலை. என்னுடைய பிர்க்காவில்தான் அதிக பர்மிட் வரும். நானும் இடத்தைப் பார்க்காமல் அறிக்கை தரமாட்டேன். ஆனால் ஒன்று. ஒரு முறை இடம் பார்த்தால் போதும். பின் நலைந்து அறிக்கைகள் இருந்த இடத்திலிருந்தே அனுப்பிவிடலாம்.

இந்தப் பெரியவர் வந்தவுடன் இடம் பார்க்கச் சென்றேன். அவர் கேட்டது போலி பார்மிட்டாக என் கண்ணுக்குத் தெரிந்தது. ஆனால் பெரியவர் பச்சையாகத் தெரிவித்துவிட்டார். அந்த வீட்டுக்கு அருகில் பள்ளிவாசல் கட்டுவதற்காகத்தான் இந்த பர்மிட் என்றும். அதற்காகவே முன்சொன்ன என் கோபத்திற்கு உட்பட்டவர் பெயரில் பார்மிட் கேட்டிருப்பதாகவும் சொன்னர். இருந்தாலும் என் கோபம் தலைகாட்ட ‘அவருக்கு வழங்கமுடியாது. வீட்டு வாசலில் ஒரு பிச்சைக்காரன் வந்து நின்றால்கூட என்ன வென்று கேட்கவேண்டியிருக்க அவர் சற்றும் மதிக்கவில்லை’ என்று குமுறினேன். ஆனால் அந்தப் பெரியவர் என்னை வரவேற்று பதில்சொன்னதை உத்தேசித்து ‘அவருக்காகத்தான் இந்த பர்மிட் பரிந்துரைக்கிறேன்’ என்று சொல்லி அறிக்கை அனுப்பிவிட்டேன். அடுத்தடுத்து வேலை நடந்து பள்ளிவாசலும் முடிந்தது. ஒருநாள் அந்த இடம் பார்க்கப்போனபோது எனக்கே ஆச்சரியம் அந்த அளவிற்கு வேலை முடிந்திருந்தது.

அவரோடு ஒரு சிறு அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தேன். அப்போது முன்சொன்ன கோபக்காரர் வந்து வணக்கம் சொல்லிப் பேசியதும் எனக்கு ஆச்சரியம். அதன் பின்னர் என் நண்பராக மாறிவிட்டது அதைவிட ஆச்சரியம்.

ஒரு சாதாரண சிமிண்ட் பர்மிட் என்னை அந்த ஊர் தலைவரின் நண்பராக்கிவிட்டது. அதன் பின்னர் அந்த ஊர்காரர்களே இவன் இன்னாருடைய ஆள் என்று பேசும் அளவிற்கு சினேகிதமாகிவிட்டோம்.

இதில் ஒரு விசோஷம் என்னண்ணா, ஒருவாரம்கூட இருவரும் சந்திக்காமல் இருக்க முடியாது. நான் அவரைப் பார்க்கவேண்டும் என்று காதலனைத் தேடும் காதலியாக உருகிக் கொண்டிருப்பேன். ஒரு குதிரை வண்டி வந்து என் வாசலில் நிற்கும். பார்த்தால் “ஆரைய்யா உங்களை பார்க்கணுண்ணு ஒரே ஆவல் அதான் வந்தேன்” என்பார். அதேபோன்று நானும் சென்று பார்த்தால் அப்போதுதான் அவர் என்னைப் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருப்பார். இப்போது நான் சொன்ன பிசிராந்தையார் நட்பு சரிதானே.

நண்பர்களைச் சம்பாதித்த நான் ஒரு எதிரியையும் சம்பாதித்தது ஒரு சுவாரியமான கதை.

நான் பணியேற்ற புதிது. நிறைய மாணவர்கள் சான்றுக்காக வந்து நின்றிருந்தனர். அந்த முன் இரவு நேரத்தில் ஒரு பெரியவர் வந்து தாலுக்கா ஆபீசிலிருந்து ஒரு கடிதத்தை கொண்டு வந்திருந்தார். அவர் ஒரு முக்கியப் பிரமுகரின் கணக்குப் பிள்ளை. மின் இணைப்புக்காக அவருக்கு வெறும் ரூ 35,000 சொத்து மதிப்புள்ளவர் என்று சான்று தேவை. அதில் சொல்லியிருந்த சொத்துக்கள் எல்லாம் அந்நாளில் 35 லட்சம் பெறுமானமுள்ளது. அது என்ன சட்டமோ முப்பத்தைந் தாயிரம்தான் வேண்டும் என்று கேட்டிருந்தார்.

அந்த விண்ணப்பம் தாலுக்கா ஆபீசிலிருந்து ஒரு மாதம் முன்னதாக அவரிடம் கொடுக்கப்பட்டிருந்தது. நான் வாங்கிப் பார்த்துவிட்டு இப்படி நீங்கள் தாமதமாக கொண்டு வருகிறீர்களே பின்னாளில் நான் தாமதப் படுத்தியதாக அர்த்தமாகுமே என்று சொல்லிவிட்டு மறுநாள் வாருங்கள் என்று அனுப்பி வைத்தேன். மறுநாள் விசாரணை முடித்து அறிக்கை தயார் செய்து அனுப்பி வைத்தேன். மீண்டும் ஒரு மாதம் கழித்து அந்தப் பெரியவர் மேல் விபரம் கேட்டு

அனுப்பிய கடிதத்தினை எடுத்துவந்தார். அப்போதும் இரவு சுமார் எட்டு மணி. அவரிடம் இப்படி தாமதமாக கொண்டுவந்ததற்காக கடிந்துகொண்டு மறுநாள் வரும்படி தெரிவித்திருந்தேன்.

சற்று நேரம் கழிந்தது. ஒரு அந்தஸ்தான மனிதர் வந்தார். அந்த சான்று அவருக்குத்தான் கேட்கப்பட்டிருந்தது. வந்தவர் சாதாரணமாக ஆரம்பிக்காமல் ஒரு சான்றுக்கு இவ்வளவு அலைக்கழிப்பா என்ற ரீதியில் பேசினார். நானும் அவரிடம் அப்போதுதான் தபால் கொண்டு வந்த விபரம் சொல்லி மறுநாள் கணக்கப் பிள்ளையை அனுப்பச்சொன்னேன். அவரோ எழுந்து செல்லும்போது “பத்து இருபதுக்கெல்லாம் ஆசைப்பட்டுக்கொண்டு ஏன் தாமதப் படுத்துகிறீர்கள்” என்று ஒரு வார்த்தையை விட்டுவிட்டு கதவுக்கருகில் சென்றுவிட்டார்.

வந்ததே கோபம் எனக்கு. என் அருகில் இருந்த தலையாரியிடம் “இந்த ஆளை பிடித்து கட்டுடா” என்று ஒரு கத்து கத்தினேன். அவர் அப்படியே விக்கித்துப் போய்விட்டார். என் தலையாரிக்கு அவர் எவ்வளவு பெரிய அந்தஸ்த்தில் உள்ளவர் என்பது தெரியுமானதால் அவர் கைகால் நடுங்க நின்றுகொண்டிருந்தார். என் கட்டளைக்குப் பணியாத தலையாரியிடம் நான் அடுத்து ஒரு குரல் கொடுத்தேன். ரோஷம் வந்துவிட்டது அந்தப் பெரிய மனுஷனுக்கு.

“நான் என்ன தப்பா சொன்னேன் பத்து இருபது நாளா அலைக்கழிக்கிறீங்களே என்றுதானே கேட்டேன். நான் யார் தெரியுமா” என்று எகிறப்பார்த்தார். நானோ அவர் யாரா இருந்தால் என்ன சொன்ன வார்த்தையை மாற்றிப் பேசுறவன் பெரிய மனுஷனா என்று இன்னும் வேகம். என்னைச் சுற்றி பத்துப் பதினைந்து மாணவர்கள் நின்றுகொண்டிருந்தனர்.

“இப்படி வந்து உட்காருங்க நீங்க என்ன சொன்னீங்க என்று பார்ப்போம். வேறு யாரிடமாவது இதெல்லாம் வைத்துக் கொள்ளுங்க” என்று படபடவென்று

பேசிவிட்டேன். இந்த சத்தம் கேட்டு எதிரில் இருந்த ரைஸ்மில் ஆட்கள் முதற்கொண்டு சிறு கூட்டம் கூடிவிட்டது.

அந்தஸ்தானவர் போயே போய்விட்டார். மறுநாள் தாசில்தாரிடம் புகார் சொல்லியிருக்கிறார். அவரோ பிரச்சினைக்குக் காரணமானவன் நான் என்று தெரியாமல் வேறு ஆர்.ஐ. என்று எண்ணி தாம் விசாரிப்பதாக சொல்லி விட்டார். மாலை மீட்டிங்கின்போது இதனைத் தெரிவித்தார். நானும் அந்த பிரச்சினையாளன் நான் தான் என்று சொல்லி நடந்ததைச் சொன்னேன். என் அறிக்கையை வாங்கிப் பார்த்தார் வட்டாட்சியர். அதில் இரண்டு முறையும் அந்த கடிதம் என்னிடம் ஒருமாத தாமதத்தில் வந்துள்ள விபரத்தை நான் எழுதியிருந்ததைப் பார்த்து சரி பார்த்துக்கங்க என்று அத்துடன் விட்டுவிட்டார்.

ஆனால் இந்த சம்பவம் ஏதோ நான் பெரிய வஸ்த்தாது என்ற தோற்றத்தை என்னைச் சுற்றியிருந்தவர்கள் மத்தியில் ஏற்படுத்திவிட்டது. காசு கொடிகட்டிப் பறக்கிற இடத்தில் அந்தக் கருமம் வேண்டாம் என்று இருப்பதுகூட பெரிய தொல்லைதான்.

அடுத்தடுத்து ஆபீசில் குசலம் விசாரிப்பு, எச்சரிக்கை என்று வர ஆரம்பித்தது. என்னடா என்று பார்த்தால் அந்தப் பெரிய மனிதரின் வளாக வீடுகளில் நம் அலுவலகத்தில் வட்டாட்சியர் முதல் கிளார்க்கு வரை குடியிருக்கிற விபரம் பின்னர்தான் தெரிந்தது. அவரவர் பயம் அவரவருக்கு. மடியில் கனமில்லை என்னும்போது எனக்கென்ன மனக்கவலை.

ஆர்.ஐ. என்றாலே அந்த பிர்க்காவில் வரிவசூல் கண்காணிப்புதான் முக்கியமானது. அப்போதெல்லாம் ஒருபக்கம் வரி கொடா இயக்கம் நடக்கும். அதிகாரிகளோ எப்படியோ வசூல் செய்யுங்கள் என்பர். ஆனால் ஜப்தி நடவடிக்கையும் கூடாது. பதினாறு வயதினிலே திரைப்படத்தில் ஒரு கிளிசோதிடர் சொல்வார் ‘இருபத்தோரு சுற்று சுற்றவேண்டும் ஆனா எண்ணக்கூடாது’ என்று.

அதுபோல் அடிக்கவேண்டும் ஆனால் அடி விழக்கூடாது. நாம் என்ன சாட்டை வைத்து வித்தைகாட்டும் பிச்சைக்காரனா என்ன. அவன்தான் தன்மேல் அடிவிளாமல் அடித்துக்கொள்வான்.

இருந்தாலும் அங்கங்கே பயங்கர உதாரெல்லாம் விடுவோம். ஒரு வீட்டில் அதிக அளவில் வரி பாக்கி. கேட்டுக் கேட்டுப் பார்த்து அன்று அந்த அழும்பு பட்டாதாரை ஒரு வழி பண்ணுவது என்று முடிவாயிற்று. வீட்டில் மாட்டைப் பிடித்துவா என்று தலையாரிக்கு உத்தரவாகிவிட்டது. போய் மாட்டின் கயிற்றை தலையாரி பிடித்ததுதான் தாமதம். வெள்ளிக் கிழமையும் அதுவுமா இப்படி செய்திட்டாங்களே என்று செண்டிமெண்ட் ஏற்பட்டுவிட்டது. பெரிய போராட்டம் ஆகிவிட்டது. நாங்களோ விடுவதாக இல்லை. கடைசியில் பட்டாதாராரிடம் அவரது வீட்டு பெண்கள் சண்டை பிடித்துவிட்டனர். கடைசியில் இரண்டு தினங்களில் கட்டுகிறேன் என்று ஜகா வாங்கினர். நாங்கள் கதவு அது இது என்று இறங்கி குடத்தில் வந்து நின்றோம். “குடத்தைக் கொடுத்துவிடு பணம் கட்டிவிட்டு வாங்கிக்கொள்” என்றோம். குடமும் லட்சுமி வசிக்கிற இடமாம். கடைசியில் ஒரு டம்ளரை கொண்டு வந்துகொடு அல்லது பணம் கட்டு என்று மத்தியஸ்த்தம் செய்ததில் அசிங்கத்திற்குப் பயப்படாதவர் செண்டிமெண்டுக்கும் பெண்களுக்கும் பயந்துகொண்டு வள்ளிசாக பூரா பாக்கியையும் கட்டிவிட்டார் அப்போதே. அவர்கள் கொடாக் கண்டர்கள் என்றால் நாங்கள் விடாக்கண்டர்கள் அல்லவா.

இந்த உதாரெல்லாம் எல்லா நேரமும் பலிக்காது. வேறு ஒரு ஊரில் இப்படித்தான் பாக்கிப் பட்டாதாரின் கட்டை வண்டியை மறித்து மாட்டை ஓட்டிச் செல்லும்படி சொல்லிவிட்டு தொழுஉரம் ஏற்றிய வண்டியை நடுத்தெருவில் அவிழ்த்து விட்டுவிட்டோம். பட்டாதாரோ சற்றும் கவலைப்படாமல் போய்விட்டார். ஒரு வாரமாகியும் நடுத்தெருவிலேயே கிடந்தது. கடைசியில் வி.ஏ.ஓ. சரண்டராகி வண்டியை எடுத்துபோனார் பட்டாதாரர்.

திடீரென்று ஒரு நாளைக்கு ஆர்.டி.ஓ. அதிகாலையில் வந்து பார்க்கச் சொல்லுவார். காலையில் சிதம்பரம் போய் ஆஜரானால் அன்று தமக்கு வேலை ஏதுமில்லை என்றும் ஜீப்பை எடுத்துக்கொண்டுபோய் வசூல் பணி செய்யுங்கள் என்பார். இரண்டு பிர்க்காவுக்கு அந்த வண்டி பயன்படும். ஒரு மைக் செட் கட்டிக் கொள்வோம். என்னுடைய ஓ.ஏ. படு மிரட்டலாக அட்சர சுத்தமாக வெட்டுவேன் குத்துவேன் என்ற ரீதியில் மைக்கில் பேசுவார். கூட்டம் சேர்ப்பதற்காக சமயத்தில் விதவிதமான மிமிக்ரியெல்லாம் செய்வார். அரசாங்க விளம்பரத்தில் அப்படியெல்லாம் பேசாதே என்றால் சற்றுநேரம் அடக்கி வாசிப்பார். அடுத்து வாலை அவிழ்த்துவிடுவார். இடையிடையே சினிமா பாட்டுவேறு போடுவார். அவரை அடக்குவதுதான் சற்று தமாஷான சிரமமாக இருக்கும்.

ஆர்.டி.ஓ. பக்கத்து கிராமத்தில் கணக்கு தணிக்கை செய்வதாகவும், அடுத்து இங்கு வருகிறார் என்றும் கதைவிட்டு வசூல் செய்வோம். கொண்டை வைத்த (சிவப்பு விளக்கு) ஆர்.டி.ஓ. ஜீப்பு என்றால் மக்களுக்கு சற்று பயம் கலந்த மரியாதை ஏற்பட்டு கணிசமாக வசூல் ஆகும். அப்புறம் மாதம் இரண்டு முறையாவது ஜீப் கொடுத்து வசூல் செய்யச் சொல்லிவிடுவார்.

என் பணிக்காலத்தில் என்னாளும் சட்டம் ஒழுங்குப் பிரச்சினைதான் இரண்டு பிரிவினர். ஒருவர் நடவடிக்கை இன்னொருவருக்கு வருத்தத்தை ஏற்படுத்திவிடும். எங்காவது சாவு விழுந்தால் முக்கிய சொந்தக் காரருக்கு சொல்கிறார்களோ இல்லையோ. ஆர்.ஐ.க்கு சேதி வந்துவிடும். போலீஸ் பந்தோபஸ்த்து என்ன, சில சமயம் ஆர்.டி.ஓ. தலைமையில் அடக்கம் நடைபெறும். ராஜமரியாதை அடக்கம்.

அதுபோல் கோயில் திருவிழா என்றாலும் ஆர்.டி.ஓ. தலைமையில் ஊர்வலம் போகும். உறுமி மேளம் அடிக்கத் தடை இருந்தது. ஆனால் சாதாரண மேளத்திலேயே உறுமி போல் சத்தம் வரவைப்பார் அந்தக் கலைஞர். இழுக்கிறான் பார் என்று கத்துவர்

எதிர்தரப்பினர். ஊர்வலம் போய் முடியும் வரை எப்ப சண்டை வரும் என்று படபடப்புடன்தான் நடக்கும்.

இப்படித்தான் 1985 சுதந்திர தினம். எங்கள் சுதந்திரம் கேள்விக் குறியானது. அதைவிட எங்கள் உயிருக்கு உடலிடமிருந்து சுதந்திரம் கிடைத்திருக்க வேண்டிய நாள். அன்று ஒரு திருவிழா தொடர்பாக பெரும் கலவரம் ஏற்படும் நிலை. கல்வரம் ஏற்பட்டுவிடாமல் பார்த்துக்கொண்ட எங்கள் நிலவரம்தான் கலவரமாகப் போய்விட்டது.

ஆர்.டீ.ஓவுடன் ஜீப்பில் சென்றுகொண்டிருந்தேன் முன்னதாக போலீஸ் வண்டிபோனது. திடீரென்று ஒரு குடிசையை வண்டி கடக்கவும் பின்னாலேயே ஒரு காவலர் துப்பாக்கியுடன் கைகால்களை விரித்த நிலையில் திரைப்படங்களில் வருவதுபோல் காற்றில் பறந்துவந்து விழுந்தார். நானும் என் ஓ.ஏ. அன்பழகனும் சட்டென்று இறங்கித் தூக்கவும் காவலர்கள் ஓடிவரவும் அப்படியே ஜீப்பில் போட்டுக் கொண்டுபோய் மருத்துவ மனையில் சேர்த்தோம்.

அடுத்து துப்பாக்கிச்சூடு நடந்த இடத்தில் நான் இருக்க நேரிட்டது. அந்த நொடியில், ‘சரி நாம் இனி வீட்டுக்குப் போகப்போவதில்லை’ என்று முடிவு செய்துகொண்டேன். நடந்து முப்பது ஆண்டு ஆகிவிட்டபோதிலும். அங்கு பயந்துகொண்டு நின்றிருந்ததும். அந்த நேரத்திலும் மாலைச் சூரியன் ஒருபக்கம் இறங்கவும் வாய்க்கால் கரைமேல் காவலர்கள் வரிசையாக துப்பாக்கியுடன் நின்றிருக்கவுமாகத் தெரிந்த காட்சியை பயத்திலும்கூட ரசித்தது இன்றும் பசுமையாக நினைவில் உள்ளது. நான் ஒரு ஓவியனாக இருந்தால் இன்றும்கூட அதனை வரைந்துவிடுவேன். எல்லையைக் காவல் காக்கும் ராணுவ வீரர்களை அந்த நேரத்திலும்கூட நினைத்துக் கொண்டிருந்தேன்.

ஒருமுறை மாலை நேரம். நான் ஒரு கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அந்த கிராமத்தில் இருந்த முக்கிய நபர்கள் சிலர் சற்று பரபரப்புடன் தாங்கள் பக்கத்து கிராமத்தினரால் தாக்கப்படலாம் என்றும் எதிர்தாக்குதலுக்கு ரெடியாவதாகவும் சொன்னர்கள்.

இது ஏதடா வம்பு என்று உடனே புறப்பட்டு பக்கத்து கிராமத்திற்குச் சென்றேன். அங்கு நண்பர் ஒருவரை சந்தித்தபோது அவர்கள்தான் தங்களைத் தாக்கப் போவதாகவும். அதற்காக தாங்கள் தற்காப்புக்கு தயாராவதாகவும் தெரிவித்தனர். ஆக இரண்டு தரப்பும் ஒருவர் பேரில் ஒருவர் பயம் கொண்டு எப்படா அடிப்பார்கள் என்று எதிர்பார்த்திருந்தனர். மீண்டும் இரண்டு இடங்களுக்கும் அலைந்து அப்படியெல்லாம் நடக்காது. இருவரும் ஒருவர் மீது ஒருவர் பயத்தில் இப்படி நடந்துகொள்ளாதீர்கள் என்று சொல்லிவிட்டு வட்டாட்சியரிடம் தெரிவித்தால் அதெல்லாம் ஒன்றும் இல்லை என்றும் ஸ்பெஷல் பிராஞ்சிலிருந்து ஏதும் வரவில்லை என்றும் சொல்லிவிட்டார். இருந்தும் சில தினங்கள் வரை எனக்கு சற்று பயம்தான். இப்போது நினைத்தால் அன்று இப்படி இரண்டு கிராமத்திற்கும் பரபரப்பாக ஷட்டில் அடித்தது ஒரு வேடிக்கையாகத் தெரிகிறது.

ஸ்பெஷல் பிராஞ் என்றால் எல்லா தகவலையும் சரியாக மோப்பம் பிடித்து விடுவர் என்று நினைப்பு. முன்சொன்ன துப்பாக்கி சூடு சம்பவத்திற்கு ஒரு வாரம் முன்பே என் ஓ.ஏ. அன்பழகன், ‘அய்யா கிராமங்களில் ஏதோ நடக்கிறது. அவரவர்களும் ஆயுதம் சேகரிக்கிறார்கள். சிலர் கிராமங்களைக் காலி செய்து வெளியேறுகிறார்கள்’ என்று சொன்னர். நானும் தாசில்தாரிடமும் ஸ்பெஷல் பிராஞ்ச் ஆட்களிடமும் சொன்னேன். அவர்களோ விவசாய வேலை தேடி குடிபெயர்ந்திருப்பார்கள் என்று சொல்லிவிட்டனர். ஒரு பெரும் கலவரத்தின் முன்னோடி என்பது கடைசியில்தான் தெரிந்தது.

என் ஓ.ஏ. அன்பழகன் துப்பறிவதில் கெட்டிக்காரர். அய்யா இங்க இன்னமாதிரி பிரச்சினை வரும் என்று தகவல்களைச் சேகரித்துக் கொடுப்பார். அதைவிட பிரச்சினையான போஸ்ட்டர் ஒட்டப் பட்ட மறுநிமிடம் அதனை பசையோடு பிய்த்துக் கொண்டு வந்து கழுவி சுத்தம் செய்து அலுவலகத்தில் கொடுத்துவிடுவார். சட்டம் ஒழுங்கு பிரிவு பார்த்த என் நண்பனும் உடனடி நடவடிக்கை எடுத்துவிடுவான்.

வருவாய் ஆய்வாளர் பணியில் நான் பாதி அளவிற்குத்தான் என் திறமையை செலுத்தினேன். மீதி பாதியை என் ஓ.ஏ. அன்பழகன்தான் ஏற்றுக்கொண்டார். அந்த அளவிற்கு அவருக்கு கணக்கு வழக்குகள் சொல்லிக் கொடுத்துவிட்டேன். அவரும் புத்திசாலியாக இருந்ததாலும் ஆர்வம் மிகுந்திருந்ததாலும் நன்கு கற்றுக்கொண்டார்.

கிராம நிர்வாக அலுவலர்கள் நுழையும்போதே அவர்களிடமிருந்து வரவேண்டிய அறிக்கைகள் விபரங்கள் என்று துளைத்துவிடுவார். என்னிடம் சாக்கு போக்கு சொல்லுபவர்கள் அவரைக் கண்டால் ஓடுவர். மனுக்கள் பேரில் விசாரணைகள் செய்ய வேண்டிய இனங்களில் முக்கியமானவைகளை நான் வைத்துக்கொண்டு சாதி வருமானம் போன்ற வாலாயமானவற்றை அவரிடம் தள்ளிவிடுவேன். மிக நேர்த்தியாக விசாரித்து வாக்குமூலம் பெற்றுவிடுவார். ஒரு குறை சொல்ல முடியாது. நான் படித்துப் பார்த்துவிட்டு அறிக்கை தயார்செய்வேன். அதைவிட எங்கள் இருவரின் கையெழுத்தும் ஒன்றுபோலவே இருக்கும் அதனால் யாராலும் அது யார் எழுதியது என்று கண்டுபிடிக்க முடியாது. இவ்வளவிற்கும் என்னிடம் அவர் பணியேற்கும்போது அலுவலக நடைமுறை ஏதும் அறியாதவராக இருந்தார். என்னிடம் அவ்வளவு வேலை கற்றுக் கொண்டவர் சற்று சிரமம் எடுத்து பள்ளி இறுதித் தேர்வை முடித்திருந்தால் அவர் இந்நேரம் வட்டாட்சியராக இருக்கவேண்டியவர். தலையெழுத்துதான் சரியில்லாமல் போய்விட்டது போலும்.

திரு அன்பழகனைப் பற்றி சொல்லிய நான் அவருக்கு முன் என்னிடம் பணிபுரிந்த திரு இராஜமாணிக்கத்தைப் பற்றி நினைத்தால் இன்னும் பெருமையாக உள்ளது. அவர் என்னிடம் வேலை பார்த்த நாட்களில் எப்போதும் புன்னகை மாறாத முகத்துடன்தான் இருப்பார். நான் சாப்பிடுவதை முதற்கொண்டு கண்காணித்து என்னைப் பார்த்துக்கொள்வார். அவர் பள்ளி இறுதி வகுப்பு முடிக்காமல் இருந்ததை தூண்டிவிட்டு தேர்வு

எழுதவைத்தேன். அந்த ஊக்கத்தில் தாலுக்கா அலுவலகத்தில் பணிபுரிந்த நாலைந்து ஓ.ஏ.களும் தேர்வு எழுதி தங்களை குமாஸ்தாவாகப் பதவி உயர்வு பெறும் அளவிற்கு தகுதிப்படுத்திக் கொண்டனர். அந்த நேரத்தில் ஜில்லா பிரிந்தபோது விழுப்புரம் மாவட்டத்திற்குச் செல்லுங்கள் என்று ஊக்கப்படுத்தியதில் அவர்கள் அனைவரும் விழுப்புரம் மாவட்டத்திற்குச் சென்றுவிட்டனர். அனைவரும் வட்டாட்சியராகப் பணிபுரிந்தது வரை கேள்விப்படும்போது அந்த சந்தோஷமே தனிதான்.

தேவன் கதை படித்தவர்களுக்குத் துப்பறியும் சாம்புவைப் பற்றி தெரிந்திருக்கும். அந்த மாதிரி சில சந்தர்ப்பங்களில் நடந்துகொண்டதுண்டு. ஒரு முறை வானமாதேவியிலிருந்து மன்னர்குடிக்கு திரும்பிக் கொண்டிருந்தோம். ஒரு குறுகிய பாலத்தில் காய்ந்துபோன ரத்தக் கறை. அங்கிருந்து பாலத்திற்கடியில் வரை இழுத்துச் சென்ற அடையாளம் வேறு. ‘ஆகா ஏதோ தப்பு நடந்திருக்கு. யாரையோ தீர்த்துக் கட்டி புதைத்திருக்கிறார்கள் அதனைக் கண்டுபிடிப்பது’ என்று முடிவு செய்து, ‘செய்ய வேண்டிய வேலையை விட்டுவிட்டு சினையாட்டுக்கு பரிச்சாரகம் செய்யும் ஆராய்ச்சியில்’ இறங்கினோம். கீழே ஒரே புதர்க்காடு. அதற்குள் சென்று ஆராய்ச்சி செய்தால் ஒன்றும் தெரியவில்லை. அப்போது அந்த வழியாக ஒருவர் வந்தார். நாங்கள் ஏதோ ஆராய்ச்சி செய்கிறோம் என்பதைப் பார்த்ததும் தமிழருக்கே உரிய சுற்றி நின்று வேடிக்கை பார்க்கும் குணத்தின்படி சற்றுநேரம் எங்களுடன் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார். சற்றுப் பொருத்து அவருக்கு ரகசியம் என்ன என்று தெரிந்துகொள்ளும் ஆவலில். என்ன பார்க்கிறீங்க என்றார். நாங்கள் விஷயத்தை சொன்னதும். அவர் சிரித்துக்கொண்டே, ‘நேற்று மாலை ஒரு நாயை அடித்துப்போட்டுவிட்டு போய்விட்டார்கள். ஒரு ரணகளமா இருந்ததால் அதனை இழுத்துவந்து கீழே புதைத்திருக்கிறார்கள்’ என்று சொல்லி அந்த இடத்தையும் காட்டினர். இது எங்களுடன் இருந்த தலையாரிக்கும் வி.ஏ.ஓவுக்கும் தெரியவில்லை. அப்புறம் என்ன வழக்கம்போல் அசடுதான்.

வழிசல்தான்.

இப்படியாக சில சந்தார்ப்பங்களில் அசடு வழிந்தாலும் பல சமயங்களில் அட்வெஞ்சர்கள் செய்ததும் மறக்க முடியாததுதான். 1985-ஆம் ஆண்டு தீபாவளிக்கு இரண்டு நாட்கள் முன்பு பெருமழை பிடித்துக்கொண்டது. போதாக்குறைக்கு மேற்கிலிருந்து வேறு வெள்ளம் வர ஆரம்பித்துவிட்டது. தீபாவளிக்கு முன் தினம். காலையில் தாசில்தாருடன் கிளம்பி ஒவ்வொரு பகுதியாக பார்த்துக்கொண்டே வந்தோம். எனக்கு காலையிலேயே சற்று சுரம் வேறு அடித்துக்கொண்டிருந்தது. இருந்தாலும் கடமைக்கு முன்பு அது எம்மாத்திரம். ஜீப்பின் பின்பக்கம் நான் படுத்துக்கொள்வதும் அவ்வப்போது இடம் பார்ப்பதுமாக சென்றது. நிலைமை மோசமாக ஆக என் சுரம் இருந்த இடம் தெரியவில்லை. மாலை திருநாரையூரில் வெள்ளம் சூழ்ந்ததாகத் தகவல் வந்தது. எப்போதும் முதல் பாதிப்பு அங்குதான் ஏற்படும். எந்த அறிவிப்பும் இன்றி தீடீரென்று திறந்துவிட்ட தண்ணீர் சூழ்ந்துவிட்டது.

முதலில் ஒரு முறை சென்று பார்த்துவிட்டு வந்ததில் உடனடியாக உணவு ஏற்பாடு செய்ய வேண்டிய நிலைமை. அந்த நேரத்தில் எந்த வழியும் புலப்படவில்லை. அப்படியே மன்னார்குடியில் உள்ள அனைத்து ஓட்டல், கடைகளையும் தொடர்புகொண்டு பிரட், பிஸ்க்கட், மற்றும் சாப்பிடக்கூடிய இனங்கள் என்று எல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாக கைப்பற்றி வட்டாட்சியர் ஜீப்பில் நிறைத்துவிட்டோம். வருவாய் ஆய்வாளர் கேட்டால் இல்லை என்று சொல்லாத காலம். எல்லாவற்றையும் அடுக்கிக்கொண்டு இரவு ஏழு மணியளவில் கிராமத்திற்குப் போய்க்கொண்டிருந்தோம். டிரைவர் ஒரு இடத்தில் நிறுத்திவிட்டார். சாலையில் இரண்டு பக்கமும் தண்ணீர் தளும்பிக் கொண்டிருக்கையில் ஒரு இடத்தில் மட்டும் தண்ணீர் இரண்டு பக்கமும் சுழித்துக்கொண்டிருந்தது. என்னுடைய ஜவான் இறங்கி அங்கு போய் தன் முழுநீள குடையினை விட்டார். அது முழுவதும் முழுகிப்போகவே அவரைத்

திரும்பி வரச்சொல்லிவிட்டு அந்த இடம் சந்தேகமாக இருக்கிறது என்று சொன்ன டிரைவர் மெதுவாக ஜீப்பினை அந்தப் பக்கம் கொண்டுபோய்விட்டார்.

கிராமத்திற்குப் போய் எல்லாரையும் கரையேற்றி பள்ளி, கோயில் என்று மேடான இடங்களில் அமரவைத்து உணவு கொடுத்துவிட்டு மறுநாள் காலை வந்து பார்க்கிறோம் பத்திரமாக இருங்கள் என்று சொல்லிவிட்டு தலைமையிடம் திரும்பும் நேரம். டிரைவர், ‘அந்த வழியாக போகவேண்டாம். ஏதோ சந்தேகமா இருக்கு’ என்று சொல்லவே. சுற்றிக்கொண்டு வந்து சேர்ந்தோம். இரண்டு தினங்களில் வெள்ளம் வடிந்தது. ஒரு வாரம் கழித்து ஒவ்வொரு கிராமமாகப் போய் பயிர் அழிவு கணக்கெடுப்பு செய்துவந்தோம். அப்போது நாங்கள் பார்த்து பயந்த இடத்திற்கு வந்தால் அது ஒரு மதகு இரண்டு பக்க கட்டைச் சுவர்களும் இடிந்துபோய் உள்ளே கிடந்தது. சுமார் பதினைந்து அடி ஆழம் வாய்க்கால் இருந்தது. நல்ல வேளை நாங்கள் அதில் அதிர்ஷ்டவசமாக அன்று தப்பித்தோம். அப்படி நாங்கள் அதில் கவிழ்ந்திருந்தால் எங்கள் உடல்கள் சுமார் இருபது கிலோமீட்டர்கள் கழித்து சிதம்பரத்திற்குக் கிழக்கில்தான் கிடைத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அந்த வெள்ளத்தின்போது ஒரு விசேஷம் என்னவென்றால் வெள்ள நிவாரணம் வழங்கும்போது. அனைவருக்கும் ஒரு வேட்டி சேலை வழங்கப்படும். அதனை கொள்முதல் செய்து கொண்டுவர ஒருவருக்கும் தைரியமில்லை. ஏதோ அவர்கள் தங்கள் கைவிட்டு காசு கொடுப்பது போன்று. நான் நேராக கோஆப்டெக்ஸ் மேலாளாரிடம் சென்றேன். இவ்வளவு வேட்டி சேலை வேண்டும் என்று கேட்டு என்னுடைய சொந்தப் பொறுப்பில் பெற்றுவந்து அடுக்கிவிட்டேன். பின்னர் ஒரு மாதம் கழித்து அலாட்மெண்ட் வந்தபின்னர் பணம் கொடுத்தனர். எவ்வளவு தெரியுமா? ஆறு லட்ச ரூபாய். அந்த நாளில் அவ்வளவு பெறுமானத்தை ஒரு வருவாய் ஆய்வாளரால் கடனாக சாதிக்க முடிந்தது. இன்று யாரிடமும் நாணயமும் இல்லை. ‘நா-

நயமும்’ இல்லை. இப்போதெல்லாம் வெள்ள நிவாரணப் பணி என்று படம் காட்டுகிறார்கள் என்பதுதான் உண்மை. அந்த நாட்களில் வந்ததுபோன்று கடுமையான வெள்ளம் ஏற்பட்டதும் இல்லை. உண்மையான கடுமையான வெள்ளம் அதன்பின்னர் 2005-ல்தான் வந்தது.

இதிலே இன்னொன்றையும் சொல்ல வேண்டும். நான் வருவாய் ஆய்வாளர் பணி முடித்து ஆறுமாதங்களில் இலங்கை அகதிகள் ஆர்.ஐ.யாக சிதம்பரத்தில் வந்து சேர்ந்தேன். அப்போது, ஏராளமான அகதிகள் சிதம்பரத்தில் பல இடங்களிலும் தங்க வைக்கப்பட்டிருந்தனர். அவர்களுக்கு வேட்டி புடவை வழங்க வேண்டும். சிதம்பரம் கோஆப்டெக்சில் அந்த மேலாளார் கடன் கொடுக்கத் தயாராக இல்லை. நான் முன்பழக்கத்தை வைத்து நேராக காட்டுமன்னர்கோயில் சென்று தேவையானதை கடன் அடிப்படையில் வாங்கி வந்துவிட்டேன்.

இதனால் சிதம்பரம் கோஆப்டெக்சை விட காட்டுமன்னர்கோயில் விற்பனை அந்த ஆண்டில் எங்கோ போய்விட்டது. அத்துறை அதிகாரிகள் ஆராய்ச்சி செய்தனர். விளைவு சிதம்பரம் மேலாளருக்கு மாற்றல் வந்துவிட்டது. தீபாவளிக்கு துணி எடுக்கப்போனபோது அங்கிருந்த ஊழியார்கள் புலம்பித் தீர்த்துவிட்டனர்.

# 27 தலையாரி

கிராம உதவியாளர்களை அந்நாளில் தலையாரி என்றுதான் அழைப்பர். பின்னார்தான் பெயர் மாற்றப்பட்டது. கிராம சிப்பந்திகள் சமயத்தில் அடிக்கும் கூத்து ரொம்ப சுவாரசியமானது. கிராம கர்ணம் மணியம் பதவிகள் ஒழிக்கப்பட்ட காலம். நிருவாகம் நடைபெறுவதற்காக அலுவலக குமாஸ்த்தாக்களை ஒவ்வொரு கிராமத்திற்கும் பயிர் ஆய்வு செய்து அடங்கலில் பதிவு செய்யப் பணித்துவிட்டனர். அதன்படி எனக்கும் என் நண்பன் ரகமத்துல்லாவுக்கும் நாலைந்து கிராமங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டன. கிராமத்திற்குச்சென்று ஒவ்வொரு சர்வே நம்பராகப் போய்ப் பார்த்து அதில் என்ன சாகுபடி என்ற விபரங்களை அடங்கலில் பதிவு செய்ய வேண்டும்.

அதில் ஒரு கிராமம். நாங்கள் இருவரும் கிராம சிப்பந்திகளை அழைத்துக்கொண்டு சாகுபடி விபரம் பதிவு செய்வதற்காக கணக்குகளுடன் விளை நிலங்களுக்குள் புகுந்தோம். புலப்படப் பதிவேட்டை வைத்துக்கொண்டு குறிப்பிட்ட நிலத்தினை அடையாளம் கண்டோம் நாம் நிற்கும் இடம் சரியானதுதானா என்பதை உறுதிப் படுத்திக் கொள்வதற்காக இந்த நிலம் யாருடையது என்றோம். அந்தப் பட்டதார் பெயர் கணக்குகளின்படி சரியாக இருந்தால் பக்கத்து பட்டாதாரார்களையும் சரிபார்த்து உறுதி செய்துகொள்ளவேண்டும். அப்புறம் அடுத்தடுத்த புலங்களை வரிசையாக அடையாளம் கண்டு சுலபமாகப் பதிவு செய்துவிடலாம். இதுதான் முறை.

“இதுக்கு பட்டாதார் யாருப்பா” - இது நாங்கள்
“அய்யா இது நல்லுவரு கொல்லிங்க” - தலையாரி 1
“இல்லிங்கயா மூத்தார் கொல்லிங்க” - தலையாரி 2
“ஏ பட்டாதார் பேர சொல்லுங்கப்பா” - நாம்
“இது நல்லுவரு கொல்லதாங்க”
“ஹே. உனக்கு தெரிமாடா. இது மூத்தார்

கொல்லதாங்க”

இப்படியாக இருவரும் மாறிமாறி எம்.ஜி.ஆர். நம்பியார் ரேஞ்சில் சிலம்பம் ஆட ஆரம்பித்துவிட்டனர். இருவருக்கும் பட்டாதார் பெயர் தெரியவில்லை என்று அடுத்த புலத்தினை காட்டி பட்டாதார் பெயர் கேட்டால் அங்கும் இதே கதைதான். நல்லுவரு மூத்தாருக்கு பதிலாக மோட்டாரு காட்டாரு ரேஞ்சில் பதில்சொல்லி எங்களைப் பைத்தியம் பிடிக்க வைத்தனர். அப்புறம் அந்த வழியாக வந்த விவசாயிகளிடம் விசாரித்து உறுதி செய்து கொண்டு ஒருவழியாகப் பதிவு செய்து முடித்தோம்.

உண்மையில் அவர்களுக்கு பட்டாதாரைத் தெரியுமேயன்றி அவர்களின் பெயர் விபரம் தெரியாது. பொதுவாக கிராமத்தில் நிலவும் பட்டப் பெயர்களின் அடிப்படையில் தெரிந்துவைத்துக்கொண்டு எங்கள் மண்டைக்குள் மாவாட்டிவிட்டனர்.

இன்னும் சிலர் இருக்கின்றனர். அவர்களிடம் இந்த குறிப்பிட்ட இடம் அல்லது பட்டாதார் நிலம் எங்கு இருக்கிறது என்று கேட்டால் போதும் நம்மை காடுமேடெல்லாம் சுற்றிச்சென்று பக்கத்து கிராமத்தில் போய் நிறுத்துவர். அவ்வளவு ஞானம் அவர்களுக்கு. ஆனால் பாவம் அவர்கள் மணியம் கார்ணம் ஆகியோரின் ஏவல் பணிக்காக மட்டுமே நியமனம் செய்யப்பட்டவர்கள். மற்ற விபரங்கள் எல்லாம் சரியாகச் சொல்லிவிடுவார்.

சில கிராமங்களில் அந்தந்த பட்டதார் பெயர் சொல்லி கேட்டால் தெரியாது. ஆனால் ‘சட்டி.....’, ‘வவுத்து பூனை.....’ போன்று பட்டப் பெயர் சொன்னால் மட்டும் மிகச் சரியான நபரை சொல்வர். இதில் ஒரு வினோதம் சில பட்டப் பெயர்கள் கேட்ட வார்த்தைபோல் தொனிக்கும். இருந்தாலும் அதனை பெரியவர் சின்னவர் வித்தியாசம் இல்லாமல் சொல்வர்.

இப்படிப் பலர் என்றால் சில கிராமங்களில் தலையாரிக்கு தெரிந்த விபரம் கர்ணம்

மணியத்திற்கோ அல்லது தற்போதைய கிராம நிர்வாக அலுவலருக்கோ தெரியாது. அவ்வளவு விபரமாக இருப்பர்.

ஒரு கிராம நிர்வாக அலுவலரிடம் தெருவாரியாக வீடுவாரியாக பட்டாதார் பாக்கிப் பட்டியல் தயார் செய்யும்படி கேட்டேன். இது வசூல் பணிக்கு மிகவும் உதவியாக இருக்கும். ஒரே வீட்டிற்கு பல முறை போகாமல் ஒரே நேரத்தில் அந்த வீட்டின் மூலம் அரசுக்கு சேரவேண்டிய பாக்கி எவ்வளவு என்பதைக் குறித்துப் பேசி வசூல் செய்ய உதவும்.

அந்த கிராம அதிகாரியோ சற்றும் கூச்சப்படாமல் தலையாரியை அழைத்துக் கேட்டார். அடுத்த நொடி ஒரு நோட்டை எடுத்து வந்து நீட்டினார் தலையாரி. அதில் பட்டாதார் விபரங்கள் பாக்கி விபரங்கள் பல ஆண்டுகளுக்கு பராமரித்திருந்தார். இப்படி சில தலையாரிகள் சூட்டிகையாக பணியாற்றுவர்.

இன்னும் ஒருபடி மேலே போய் கிராமக் கணக்குகள் அனைத்தையும் அவர்தான் எழுதிப் பராமரிப்பார். கையெழுத்து போடுவது மட்டும்தான் வி.ஏ.ஓ. வேலை. இவர்களுக்கு அரசாங்கமே தனித்தேர்வு வைத்தோ அல்லது வேறு ஏதாவது ஒரு முறையை அனுசரித்து வி.ஏ.ஓ.வாகப் பதவி உயர்வு கொடுக்கலாம்.

இன்னொரு தலையாரியின் கூத்து. நான் லால்பேட்டை பங்களா வாசலில் முக்கியப் பிரமுகர் வருகைக்காக காத்திருந்தேன். ஒரு தலையாரி திடீரென முளைத்து சலாமிட்டார். “எங்கப்பா போய் வருகிறீர்” என்றேன். “அய்யா வி.ஓ தாலுக்காபிஸ்ல கணக்கு கேட்டாங்கன்னு எடுத்துட்டுப் போனார் என்ன ஆபீஸ்ல வெக்கச் சொல்லிட்டு அவர் ஊருக்கு பூட்டார்” என்றார். சரியென்று விடைகொடுத்து அனுப்பிவிட்டேன்.

என்னுடன் இருந்த வி.ஏ.ஓ. “இந்தாளை நம்பி கணக்கைக் கொடுத்திருக்காரே மனிதன். கணக்கு போய் சேர்ந்தால்தான் உண்டு. இவனே ஒழுங்கா ஊருக்குப் போவானோ தெரியலை” என்று

அங்கலாய்த்தார்.

அவர் சொல்லி வாய் மூடவில்லை ஒருசில தப்படிகள் நடந்தவர் எங்கள் கண் முன்பாகவே சாலையை விட்டு இறக்கத்தில் இறங்கிவிட்டார். அப்போது சாராயக் கடைகள் இருந்த காலம். அங்கு சாராயக் கடைக்குப் போய்விட்டார். எனக்கு அதிர்ச்சி. அந்த நேரம் பார்த்து வி.ஐ.பியும் வந்து குதிக்க வேறு வழியில்லாமல் அதை மறந்து எங்கள் வேலையைப் பார்க்கக் கிளம்பிவிட்டோம்.

மறுநாள் மதியம் அந்த ஊர் வி.ஏ.ஓ. வந்தார். “அய்யா என் வேலை போய்விட்டது. யார் மூஞ்சிலும் முழிக்க முடியாது. ஒரு தப்பு நடந்துபோய்ட்டுது.” என்று புலம்பிக்கொண்டு அலமாடிக்கொண்டு நின்றார். உட்காரச்சொன்னாலும் கேட்கவில்லை. அப்புறம் இரண்டு மூன்று நாட்கள் கழித்துதான் தெரிந்தது நடந்த விஷயம்.

கணக்குகளை எடுத்துச்சென்ற தலையாரி எங்கள் கண் முன்பாகவே சாராயக்கடைக்குச் சென்றவர் களைப்புத் தெரியாமல் ஐந்து கிலோமீட்டர் தூரம் ரோட்டை அளந்துகொண்டே போய் நேராக, - தப்பு தப்பு, கோணல்மாணலாக என்பதுதான் சரி. - அலுவலகம் வைத்திருந்த வீட்டுக்குப் போயிருக்கிறார்.

அந்த ஊரில் பெருந்தனக்காரர் ஒருவர் தம் வீட்டின் முன்பக்கப் பகுதியை வீ.ஏ.ஓ ஆபீசுக்கு இலவசமாகக் கொடுத்திருந்தார். தலையாரி போன நேரத்தில் அந்த வீட்டு பெரிய ஆச்சி வாசலில் உட்கார்ந்திருந்திருக்கிறார். இவர் போதையில் கணக்குகளை அவர் முன்பாகத் துக்கி வீசிவிட்டு அவரையும் திட்டிவிட்டு தெரு முழுவதும் அலம்பல் பண்ணிக்கொண்டே போய்விட்டார். இவர் இப்படி போதை ஏற்றிக்கொண்டு திட்டுவது வழக்கம். இருந்தாலும் வயதானவர் என்பதால் மக்கள் அவ்வப்போது திட்டிவிட்டு அனுப்பிவிடுவர்.

அன்று அந்த பெண்மணி கணக்குகளை எடுத்துச்சென்று வீட்டுக்குள் வைத்துவிட்டு பேசாமல்

இருந்துவிட்டார். மறுநாள் வி.ஏ.ஓ வந்து கணக்குகள் எங்கே என்றால் தலையாரிக்கு தாம் என்ன செய்தோம் என்பதே தெரியவில்லை. யாரும் நடந்ததையும் சொல்லவில்லை. கணக்குபற்றி துப்பு ஏதும் கிடைக்கவில்லை. வி.ஏ.ஓ நேராக தாலுக்கா ஆபீசில் போய் விசாரித்தால் அங்கும் எதுவும் தெரியவில்லை. கணக்குகள் போய்விட்டது என்று முடிவு செய்துதான் என்னிடம் வந்து நின்றார். அவருக்கு கௌரவம் போய்விடுமே என்ற கவலை. எனக்கோ கணக்கு போச்சே என்ற கவலை.

ஒரு அறிக்கை வாங்கிக்கொண்டு தாலுக்கா ஆபீசுக்கு அனுப்பிவிட்டேன். ஒரு வாரம் கழிந்தது. வி.ஏ.ஓவின் நிலையைப் பார்க்கச் சகிக்காமல் அந்த அம்மா கணக்குகளை எடுத்துக் கொடுத்துள்ளார். இப்படிப்பட்ட தெம்மாங்கு தலையாரியை வைத்துக்கொண்டு என்ன செய்வது. இதுமாதிரி நிறைய நடக்கும் எல்லாத்தையும் பொறுத்துக்கொண்டு இழுத்துப்பிடித்து ஓட்டினால்தான் வண்டி ஓடும்.

இன்னொரு சம்பவம். ஒரு வி.ஏ.ஓ கணக்குகளை எல்லாம் கட்டி எடுத்துக்கொண்டு நான்கு தலையாரிகள் புடைசூழ பேருந்து நிறுத்தத்தில் காத்திருந்தார். வி.ஏ.ஓ ஒரு பேருந்தைப் பார்த்து கை காட்டினார். பஸ்சில் ஏறி சீட்டு பிடித்து உட்கார்ந்துகொண்டார். காட்டுமன்னார்கோயில் வந்து பார்த்தால் அவர் மட்டும்தான் இறங்கினார். கணக்கும் வரவில்லை. தலையாரியும் வரவில்லை. சரி அடுத்த பஸ்சில் வருவார் என்று நினைத்து தாலுக்கா ஆபீசில் ஆஜராகிவிட்டார். இரவு வரை கணக்கு வரவில்லை. ஆபீசில் பின்னர் வருவதாக தகவல் சொல்லிவிட்டு வீட்டுக்குப் போய்விட்டார்.

மறுநாள் காலையில் கும்பகோணம் பஸ் டெப்போவிலிருந்து தாசில்தாருக்கு போன். ஏதோ கட்டு ஒன்று பஸ்சில் டிக்கட் இல்லாமல் பயணம் செய்து இறங்க மறுத்துவிட்டதாகவும், இறக்கிப் பார்த்தால் பல பதிவேடுகள் இருந்ததாகவும் வேறு விபரம் இல்லை என்றும் ஆனால் சில இடங்களில்

தாலுக்கா ஆபீஸ் சீல் போட்டிருந்ததாகவும் அதை வைத்து போன் செய்வதாகவும் தகவல். தாசில்தாருக்கு கும்பகோணத்திற்கு ஏன் நம் ரிக்கார்டு போகப்போகிறது. மேலும் புகார் ஏதும் வரவுமில்லையே என்ற நினைப்பில் அதற்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை என்ற ரீதியில் பேசிக்கொண்டிருந்தார். பக்கத்திலிருந்த குமாஸ்த்தா கிளப்பிய சந்தேகத்தில் கொஞ்சம் சூடு பிடித்து வி.ஏ.வை வரவழைத்துவிட்டனர். அப்புறம் அவரை கும்பகோணத்திற்கு அனுப்பி கட்டுகளை சரிபார்த்து வாங்கி வந்தனர்.

நடந்தது இதுதான். வி.ஏ.ஓ. காட்டுமன்னார்னோயில் போகும் பஸ்சை நிறுத்தி முன்பக்கம் ஏறிவிட்டார். அந்த நேரத்தில் அதன் பின்னாலேயே ஒரு கும்பகோணம் போகும் பேருந்து வந்துள்ளது. நம் தலையாரிகள் சேர்ந்து கட்டினை கடைசி சீட்டுக்கு அடியில் ஏற்றிவிட்டனர். யாரும் பஸ்சில் ஏறவில்லை. இவர் போவார் என்று அவரும் அவர் போவார் என்று இவரும் போட்டிபோட்டுக்கொண்டு யாருமே வண்டி ஏறவில்லை. கடைசியில் வி.ஏ.ஓ. கிழக்கிலும், டிக்கெட் எடுக்காமலேயே கணக்கு தெற்கிலுமாக பயணம் செய்துவிட்டது.

# 28 வசூலோ வசூல்

நான் வருவாய் ஆய்வாளராக இருந்தபோது ஒரு ஊரில்தான் அதிக பாக்கி இருந்தது. காரணம் அந்த ஊரில் உள்ளவர்களுக்கு சுற்றுப்பட்ட பதினைந்துக்கு மேற்பட்ட கிராமங்களில் நிலம் இருந்தது. அதனால் தடுக்கி விழுந்தால் அங்குபோய்தான் வீடுவீடாக வசூல் செய்வோம். அந்த ஊர்க்காரர்கள் மிகவும் நல்லவர்கள், எனக்குப் பிடித்தவர்கள், என்னைப் பிடித்தவர்கள் என்றால் துளிகூட பொய் இல்லை. ஆனால் எந்த ஊரிலும் ஒருசில துருப்பிடித்தவைகளும் இருக்குமல்லவா. அதிகாரிகளோ அரசு பாக்கியை எந்த முறைகளைக் கையாண்டாகிலும் வசூல் செய்யவேண்டும் என்று குறிக்கோள் உள்ளவர்கள். சில சமயங்களில் சிலரிடம் கடுமையாகக்கூட நடக்க வேண்டிவரும்.

அதில் ஒருவர். அவர் ஒரு வியாபாரி. அந்த ஊரிலேயே வெளிநாட்டுப் பொருள்கள் வாங்கி விற்பது, வெளியூர்களுக்கு அனுப்புவது. நோட்டு மாத்துவது என்று பெரிய ஆள். அவருக்குப் போகத்தான் மற்றவர்களுக்குப் பொருள் கிடைக்கும்.

இப்படிப்பட்ட நிலையில் அவரது மகள் திருமண முறிவு சம்பந்தமாக ஒரு பெரும் தொகை அவர் அரசுக்குச் செலுத்த வேண்டும். அதனைக் கட்டும்படி கேட்டுச் சென்றால் நாம் போனவுடன் மிக அன்பாக வரவேற்று உபசாரிப்பார். ஹால் முழுக்க போட்டோக்கள் மாட்டப்பட்டிருக்கும். தம் பெருமைகளை விவரிப்பார். இதோ இந்தப் படத்தில் நான் இன்னாருடன் இருக்கிறேன் பாருங்கள். இன்னாருக்கு தொப்பிக்கு செண்ட் நான்தான் சப்ளை செய்கிறேன். என்றெல்லாம் அளப்பார். நமக்கும் அவ்வளவு பெரிய மனிதனிடம் கடிந்து வசூல் செய்வது எப்படி என்று சிறிது அச்சம் வரும்.

சில சமயம் அதெல்லாம் சரிதான் கட்டவேண்டிய பணம் என்னாச்சு என்றால் “அந்தப் பணம் நான்

கட்ட வேண்டியதில்லை. என் மகள்தான் கட்டவேண்டும். அதோ இருக்கிறார். அவர்கிட்ட கேட்டுக்கொள்ளுங்கள்” என்று நம்மை நக்கலடிப்பார். ஆறுமாதத்தில் முப்பது நாற்பது முறையாவது போய் கேட்டிருப்பேன். ஒருநாள் அந்த ஊர் வி.ஏ.ஓ. ஒரு தகவல் சொன்னார். “அந்த ஆள்கிட்ட காசு நிறைய இருக்குங்க. டாலர் நோட்டெல்லாம் மாத்துறான். ஆனா எப்ப போனாலும் கையில் காசு இல்லைன்னுதான் சொல்வான். வெளிநாட்டுப் பணம் கணக்கில்லாமல் அவன் மூலம்தான் போகிறது” என்றார்.

எனக்கோ ஆச்சரியம் கலந்த அதிர்ச்சி. அந்த ஆளோ செல்வாக்கு மிகுந்தவர். நம்மால் ஒன்றும் ஆகாது என்று கணக்குப் போட்டேன். ஆபீசுக்கு வந்ததும் ஒரு நீளமான ரிப்போர்ட் தயார் செய்தேன். அவர் இன்னின்ன வியாபாரம் செய்கிறார். இருந்தாலும் மனநிலை பாதிக்கப்பட்ட பெண்ணைக் காட்டி அவரிடம் வசூல் செய்துகொள்ளும்படி கிண்டல் செய்கிறார். அவரது மகளுக்காக அவர்தான் வாதாடி அந்த பணமும் அவருக்குத்தான் வந்துள்ளது. எனவே அவர்பேரில் நடவடிக்கை எடுக்க அறிவுரை வழங்கவேண்டும் என்று முழுநீள திரைக்கதை வசனம் எழுதி அனுப்பிவிட்டேன். ஆனால் நான் என்னை அறியாமலே ஒரு காரியம் செய்தேன். அந்த அறிக்கையின் நகலை கஸ்டம்ஸ் கலெக்டர் சென்னை என்று மொட்டையாக விலாசம் அடித்து அனுப்பிவிட்டேன்.

அந்தக் கடிதம் போய்ச்சேருமா என்பதே கேள்விக் குறி. ஆனால் பத்து நாட்கள் கடந்தது. வி.ஏ.ஓ. ஓடிவந்தார். லால்பேட்டையில் ரெயிடு நடக்கிறது என்னை கூப்பிடுகிறார்கள். என்ன செய்வது என்றார். அவரது கடமையைச் சொல்லி போய் எதுவாக இருந்தாலும் நடந்தது நடந்தபடி எழுதினால் கையெழுத்து போடுங்கள் என்று அறிவுரைசொல்லி அனுப்பி வைத்தேன்.

என் அறிக்கை நகல் போனவுடன் கஸ்டம்ஸ் துறையினர் விழித்துக் கொண்டனர். உடனே பல

ஆட்களை அனுப்பி வெளிநாட்டுப் பொருட்கள் விற்கும் எல்லா கடைகளையும் நோட்டம் விட்டு விபரம் சேகரித்துவிட்டனர். அதுவரை அந்த ஊரில் அப்படி ஒரு வியாபாரம் நடப்பதே அந்தத் துறைக்குத் தெரிந்திருக்கவில்லை. குறிப்பிட்ட நாளில் எல்லா கடைகளையும் காலை திறக்கும்போதே மடக்கிவிட்டனர்.

நம்ம உதார் பேர்வழி என்ன ஆனார் என்கிறீர்களா. அவர் வீட்டில் பெட்டி பெட்டியாக பொருட்கள் மற்றும் கட்டுக்கட்டாக வெளிநாட்டு ரூபாய் என்று அள்ளிக்கொண்டு போய்விட்டார்கள். ஆயிரம் ரூபாய் பாக்கியை ஏமாற்றி லட்ச ரூபாய் இழந்த கதையானது. அப்புறம் மீண்டும் நாங்கள் வசூலுக்கு அவரிடம் போனபோது எவனோ புகார் போட்டுட்டான். இப்படி நஷ்டமாகிவிட்டது என்று எங்களிடமே புலம்பினார். எங்களைப்போன்ற ஏழைகளின் கண்ணீர் ஒருநாள் அவரைச் சுட்டுவிட்டது என்பதுதான் உண்மை.

இந்த வரி வசூல் பணி இருக்கிறதே அது ஒரு விநோதமான நடைமுறை. மேலே இருக்கிற அதிகாரிகள் கீழே இருப்பவர்களை டார்ச்சர் செய்வதற்கான ஒரு வழிமுறை. தங்கள் எதிர்பார்ப்புக்கள் சரிவராத நிலையில் அதிகாரிகள் அவனைப் பழிவாங்க அவர் பேரில் நடவடிக்கை எடுக்கவென்று ஏற்பட்ட ஒரு அஸ்த்திரம். அந்த அஸ்த்திரத்திற்குப் பயந்து தன் வஸ்த்திரத்தை போட்டுவிட்டு தப்பி ஓடியவர்களும் உண்டு. எவ்வளவு நாட்களுக்குத்தான் வலிக்காத மாதிரியே நடிக்க முடியும்?

சிலர் அந்த அஸ்த்திரத்தை வழிமாற்றிவிட்டு குளிர்காய்ந்ததும் உண்டு. தோல் கொஞ்சம் தடிமனாக இருந்தால் எல்லாத்தையும் துடைத்துப் போட்டுவிட்டு போய்க்கொண்டே இருக்கலாம்.

குரூப் கலெக்ஷன் என்று ஒன்றை அறிமுகம் செய்தோம். முதலில் ஒரு குறிப்பிட்ட ஊரில் யார்யார் பாக்கிதார் என்று பட்டியல் தயார் செய்தோம். அதனை ஒருங்கிணைத்து கும்பலாக பல கிராம

நிர்வாக அலுவலர்கள் வருவாய் ஆய்வாளர்கள் சேர்ந்துகொண்டு அந்த ஊரில்போய் முற்றுகையிடுவோம். அதற்கு நல்ல பலன் கிடைத்தது. இப்படியாக சிதம்பரம் நகரில் பாக்கிவைத்துள்ள காட்டுமன்னார்கோயில் பட்டாதாரர்கள் பட்டியலைத் தயார் செய்தோம். தாசில்தார் தலைமையில் ஒருவாரம் படையெடுத்தோம். அப்போதைக்கப்போது அவரிடம் வந்து இன்னின்னார் இவ்வளவு வசூல் செய்தோம் என்று கணக்கு தெரிவித்தோம்.

இப்படியாக ஒரு பட்டாதாரர் -முன்னாள் சண்டியர்- யாரும் அவரிடம் பேசக்கூடப் பயப்படுவர். தற்போது வயதும் அமைதியும் அதிகமாகிவிட்டது. அவர் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் பாக்கி வைத்திருந்தார். நாங்கள் போய் ‘நிலைமை கெடுபிடியாக இருக்கு உடனே கட்டுங்கள்’ என்று நெருக்குதல் செய்ததில் மூவாயிரம் ரூபாய் நாளை வந்து பெற்றுக்கொள்ளுங்கள் மீதியை வாரம் தோரும் ஆயிரம் என்று செலுத்திவிடுகிறேன் என்று உத்திரவாதம் கொடுத்துவிட்டார். நாங்கள் தாசில்தாரிடம் இன்னார் இவ்வளவு செலுத்துகிறார் என்று தகவலைச் சொன்னதுதான் தாமதம். தாசில்தாரோ “அவரா? இங்கேயா இருக்கிறார்? அவர் எனக்கு ரொம்ப வேண்டியவராச்சே. நான் வந்திருந்தால் பூரா தொகைக்கும் பில் போட்டிருக்கலாமே. உடனே வாங்க” என்று எங்களையும் அழைத்துக்கொண்டு நேராக அவர் வீட்டுக்குப் போனார். அங்கே அவர் ஓய்வாக ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். நம்ம அய்யா வண்டியை விட்டு இறங்கியதும். அவிழ்த்துவிடப்பட்ட கன்றுக்குட்டி பசுவிடம் ஓடுவதுபோல் இரண்டு கைகளையும் நீட்டியவாறே முகமெல்லாம் பல்லாக ஓடிப்போய் தழுவிக்கொண்டார். இருவரும் குசலம் விசாரித்துக்கொண்டனர். நாங்கள் பில் போடத் தயாராக இருந்தோம்.

தாசில்தார் ஒரு கேள்வி, ஒரேஒரு கேள்விதான் கேட்டார். “வெள்ளாமை- யெல்லாம் எப்படி இருக்கு?”

அவரோ மூக்கைச் சிந்தி தாசில்தார் சட்டையிலேயே துடைத்துவிட்டார். இவரு அவருக்கு சாதகமாக சேம்சைடு கோல் அடித்து "பாவம் ரொம்ப கஷ்டப்படுகிறார். விரைவில் கட்டிவிடுவார்" என்று எங்களுக்கு சொல்லிவிட்டு வண்டியில் ஏறி வந்துவிட்டார்.

எங்களிடம் அவர் கட்டுவதாக சொன்ன மூவாயிரமும் போனதோடு எப்போது கேட்டாலும் நான் தாசில்தாரிடம் பேசிக்கிறேன் என்று எங்களைத் துறத்திவிடுவார். அவரை வைத்து அந்த கிராமமே வரி செலுத்துவதை மறந்துவிட்டது. எந்தப் பட்டாதாரிடம் கேட்டாலும் பெரியவரிடம் வசூலித்து விட்டீர்களா என்று கேட்பர்.

இன்னொரு பட்டாதாரர். அவர் விவசாய சங்கத்தில் முக்கிய புள்ளி. வரி செலுத்தாதவர். அவரிடமும் பல ஆயிரம் பாக்கி.

எங்கள் கோட்டாட்சியரோ ரொம்ப நேர்மையானவர். தண்ணீர், சாப்பாடு எல்லாமும் வீட்டிலிருந்து எடுத்து வருபவர். தானே தமது துணிகளை துவைத்து அணிவார். அவர்தான் திரு மெய்வழி கோபாலகிருஷ்ண அநந்நர்.

அவர் முகாம் வந்துவிட்டு தலைமையிடம் திரும்பும் வழியில் ரைஸ்மில் தணிக்கை செய்வதற்காக என்னை தனது ஜீப்பில் அழைத்துக்கொண்டு திரும்பினார். நானும் ஒவ்வொரு இடமாக காட்டிக்கொண்டு வந்தேன். ஒரு மில்லில் கணக்குகளை வண்டியில் உட்கார்ந்துகொண்டே பார்த்துக் கொண்டிருந்தார். நான் பின்பக்கம் நின்றுகொண்டிருந்தேன். எனக்கோ தாகம் தாங்கமுடியவில்லை. ஈப்பு ஓட்டுனர் அங்கே இருந்த ஒரு அடி பம்பில் தண்ணீர் அடித்துத்தர முன்வந்தார். நான் இந்த கிராமத்தினர் வரி செல்லுத்தக்கூடாது என்று இருப்பதால் இந்த கிராமத்தில் தண்ணீர்கூட குடிக்கமாட்டேன் என்று சொல்லிக்கொண்டிருந்தேன். அது எப்படித்தான் அதிகாரி காதில் விழுந்ததோ தெரியவில்லை. கணக்கு தணிக்கை முடித்துவிட்டு என்னை விசாரித்தார்.

‘அவரிடம், அலுவலகத்திலும் ஒத்துழைப்பதில்லை. எந்த பகுதி அலுவலரும் எனக்கு வசூல் பணிக்கு வருவதில்லை. என் கிராம நிர்வாக அலுவலர்களிடம் ஆய்வு செய்வதில்லை.’ என்று என் கையறு நிலைமையை சொல்லும்போதே அழுதுவிட்டேன். பின்னர் பலமுறை அதைப்பற்றி வெட்கப்பட்டதுண்டு.

என் அதிகாரி சொன்னார் “இதோ பாருமையா நீர் ஆள் வேண்டுமென்கிறீர். அதைவிட உமக்கு ஒரு ஜீப் தருகிறேன். அது எல்லாத்தையும் விட சிறப்பா வேலை செய்யும்”. மறுநாள் டி.எஸ்.ஓ. ஜீப்பை எனக்கு வழங்கி உத்திரவு வந்துவிட்டது. அப்புறம் என்ன ஆட்களை அழைத்துக்கொண்டு கிராமங்களில் கலக்கியது தனிக்கதை.

அழுதுவிட்டதைக் கண்டதும் என்ன தோன்றியதோ. அதிகாரி கேட்டார் “இந்த ஊரிலேயே அதிகம் பாக்கி வைத்துள்ள பட்டாதாரர் யார்” என்று. என் வி.ஏ.ஓ. அழும்பு பட்டாதார் திலகத்தைக் காட்டிவிட்டார். எனக்குள் சற்று பயம். ‘சங்கத்தில் இருக்கிறானே ஏதாவது வம்பு அடித்துவிட்டால் என்ன செய்வது’ என்று.

இந்த கிராம நிர்வாக அலுவலர்கள் இருக்கிறார்களே. அவர்களுக்கு ஒரு அடிப்படைக் குணம் உண்டு. தனக்கு ஒத்துவராத ஆட்களை இப்படி அதிகாரிகளிடம் போட்டுக்கொடுத்து மோதவிட்டுவிடுவர். அப்புறம் எது கேட்டாலும் அய்யாகூட ஏற்கனவே வந்தீர்களே அப்படிப்பட்ட ஊரில் எப்படி வசூலாகும் என்று அதையே காட்டித் தப்பித்துக்கொள்வர். அப்படித்தான் இப்போதும் நடந்தது.

அதிகாரி, “ஏறுங்கள் வண்டியில்” என்று கூட்டிக்கொண்டு நேராக அவரது ரைஸ் மில்லுக்குப்போய் வண்டியை நிறுத்தினார். ஓரே கூட்டம். அறவை ஜரூராக நடந்துகொண்டிருந்தது. அங்கிருந்த ஒரு வாலிபன் வந்து வணக்கம் செலுத்தினார். நான் யார் என்று தெரியுமா என்று கேட்டார். அவர் “தாங்கள் ஆர்.டி.ஓ என்று தெரியும்.

நான் மயிலாடுதுறையில் படிக்கும்போது நீங்கள் அங்கு கோட்டாட்சியராக இருந்தீர்கள் உங்களைத் தெரியும்” என்றார்.

அதிகாரி இறங்கி ரைஸ்மில்லை சுற்றி நோட்டம் விட்டார்.
என்பக்கம் திரும்பி “என்னையா ஆர்.ஐ., இவர் எவ்வளவு நிலவரி செலுத்தவேண்டும்”
நான் பவ்யமாக கொஞ்சம் பயத்துடன் “அவர் பத்தாயிரத்துக்கு மேல் பாக்கி வைத்திருக்கிறாருங்க.”
அங்கேயிருந்த ஒரு ஆயில் இஞ்சினைக் காட்டி “என்னையா துப்புகெட்ட ஆர்.ஐ. நீர். யானை படுத்திருக்கிறமாதிரி ஒரு ஆயில் இஞ்சின் இருக்கு துக்கி வெளியே போடவேண்டியதுதானே. அதை விட்டு தைரியம் இல்லாம என்ன உத்தியோகம் பார்க்கிறீர். நீர் ஜப்தி செய்யும் நான் கலெக்டரிடம் பேசிக்கிறேன்.”

அங்கிருந்த எல்லாருக்கும் அதிர்ச்சி. ஊரிலேயே பெரிய மனிதர். விவசாய சங்கத்துக்காரரர். எல்லாரையும் வரி செலுத்தாதீர்கள் என்று முன்னின்று தடுப்பவர். அவர் மில்லிலேயே வந்து அதிகாரி இப்படிப் பேசினால்....

அதிகாரியோ மகாராஜா போல் ஒரு தலைப்பாகை. அதில் ஒரு பதக்கம் என்று ஏக அந்தஸ்த்தாக இருந்தார். அதுவேறு கொஞ்சம் அச்சத்தை ஊட்டியிருக்க வேண்டும்.

வாலிபன் வேறு யாருமல்ல பாக்கிவைத்துள்ள பேர்வழியின் திருக்குமாரன்தான். ஏற்கனவே மயிலாடுதுறையில் கல்லுரியில் படித்தபோது ஒரு பிரச்சினை ஏற்பட்டு அங்கு வந்த நம் அதிகாரி செமையாகப் பிடித்துவிட்டிருக்கிறார். அவரது நேர்மை தைரியம் கடுமை எல்லாம் நம் வாலிபருக்கு மனதில் பதிவாகியிருந்ததால் வாலிபர் பயந்துவிட்டார்.

தாம் தந்தையிடம் சொல்லி தொகை செலுத்திவிடுவதாக ஒப்புக்கொண்டார். ஆனால் அதிகாரியோ அடுத்து கணக்குப் பார்த்தார். பதிவு

செய்யாமல் பல மூட்டை நெல் இருந்தது. ஆனால் கூடவே அதற்கான நபர்கள் அறவைக்கு வந்து காத்திருந்தனர். விபரத்தை எழுதி வாக்குமூலம் பதிவு செய்துகொண்டார். அறவைக்கு வந்தவர்களை அழைத்து மில்லை சீல் வைக்கும் விபரம் சொல்லி பக்கத்து மில்லில் அறைத்துக்கொள்ளுங்கள் என்று அனுப்பிவிட்டு என்னை அழைத்து மில்லை என் கையாலேயே பூட்டி சாவியை வாங்கிக்கொண்டார். கணக்குகளையும் அள்ளிக்கொண்டு நேராக மெயின்ரோடு வந்து சாவியை மட்டும் என்னிடம் கொடுத்துவிட்டு சென்றுவிட்டார்.

பட்டாதாரர், மகன் கொடுத்த பேதி மருந்தில் சங்கம் பரிவாரம் எல்லாத்தையும் மறந்துபோய் நேராக கோட்டாட்சியரிடம் ஆஜராகி விரைவில் செலுத்திவிடுகிறேன் என்று மன்றாடியுள்ளார். அதிகாரியோ நிலவரி பாக்கி பற்றியெல்லாம் கவலையே படவில்லை. “உங்க மில் தொடார்பா ஆர்.ஐ. ரிப்போட் வந்ததும் நான் பரிசீலித்து உத்திரவிடுகிறேன்” என்று சொல்லிவிட்டார் என்னை போனில் கூப்பிட்டு அவரை சரியாக டீல் செய்துகொள்வது உனது பொறுப்பு என்று எனக்கு முழு அதிகாரமும் கொடுத்துவிட்டார். அப்புறம் என்ன.

அவர் அப்பாவியாக முகத்தை வைத்துக்கொண்டு என் அலுவலக வாசலில் வந்து ஆர்.ஐ.யை பார்க்கவேண்டும் என்று நின்றதும் என் ஓ.ஏ. ‘அய்யா இன்னார் வந்திருக்கார்’ என்பார். நான் ஏதோ கலெக்டர், மந்திரி போன்றோர் வந்தால் பரபரப்பாவது போல் போட்டது போட்டபடி நேராக தாலுக்கா ஆபீசுக்கு போய்விடுவேன். அங்கு வந்து கேட்டுக்கு அருகிலேயே நிற்பார். அவர் கண்ணில் படாமல் நேராக கேம்பு போய்விடுவேன். இப்படியாக ஒருவாரம் கழிந்தது. ஒருநாள் என் ஓ.ஏ. மூலம் பணம் கட்டிவிடுவதாகவும் மில் சாவி தரவேண்டும் என்றும் ஆர்.டீ.ஓ-வுக்கு அறிக்கை அனுப்ப வேண்டும் என்றும் தூதுவிட்டார். சம்பந்தப்பட்ட கிராம நிர்வாக அலுவலரை வரவழைத்து அவர் பாக்கி முழுவதையும் கணக்குப் போட்டு பைசா சுத்தமாக

வசூல் செய்தபின்னர்தான் அவருக்கு சாவியை ஒப்படைத்தேன்.

அப்போதுதான் என் ஓ.ஏ. கேட்டார் அவரைப்பார்த்து "நாங்கள் எத்தனை முறை உங்கள் வீட்டு வாசலில் பிச்சைக்காரன்போல் வந்து நின்றிருப்போம். நீங்கள் உள்ளே இருந்துகொண்டே பெண்களை விட்டு இல்லை என்று சொன்னீர்களே" என்று. கடைசியில் ஓ.ஏ.விடம்கூட மன்னிப்புக் கேட்கும் நிலைமை வந்துவிட்டது அவருக்கு.

ஒரு நேர்மையும் தைரியமும் நிறைந்த அதிகாரி நமக்கு அமைந்து விட்டால் புல்லைக்கூட மந்திரித்து ஏவல் விடலாம். ஆனால் ஒன்று. அங்கே நாமும் நேர்மையாக இருக்க வேண்டும். இல்லையெனில் அந்த ஏவல் நம்மீதே பாய்ந்துவிடும்.

ஒரு கிராமம். அதற்கு துணை கிராம அந்தஸ்த்துதான். வீராணம் ஏரியின் உள் வாயில் அமைந்திருந்ததால் யாரும் அங்கு போகவும் மாட்டார்கள். கோரிக்கை எதும் வரவும் வராது. அமைதியான அழகான கிராமம். அங்கே ஒரே அரசு அலுவலர் அந்த ஊர் தலையாரி மட்டுமே. அப்புறம் என்ன அவர்தான் அதன் சிற்றரசர். அவர் வைத்ததுதான் சட்டம். ஏரி கோடையில் காய்ந்துவிட்டால் குறுக்குப் பாதையாக எரியில் இறங்கி சைக்கிளில் அந்த கிராமத்தை அடைந்து மேற்கு கிராமங்களுக்கு செல்வேன். அப்போது ஒரு பெண்மணி என்னிடம் தலையாரி அடிக்கும் கொட்டம் பற்றி சொன்னார். எனக்கு நம்பிக்கையில்லை. முதல்முதலாக எனக்கு ஒரு புகார் அவர்மீது. இப்படியாக ஒரு மாதம் கழிந்தது. ஒருநாள் நானும் என் ஓ.ஏவும் அந்த கிராமம் வழியாகத் திரும்பிக்கொண்டிருந்தோம், மாலை நான்கு மணியிருக்கும் ஒரு அரச மரத்தடியில் தலையாரி நின்றுகொண்டு போதையில் கண்டபடி திட்டிக் கொண்டிருந்தார். என் ஓ.ஏ. அவர் அருகில் சென்று ஆர். ஐ. வந்திருப்பதாகச் சொல்லி கண்டித்தார்.

ஒன்றும் மசியவில்லை. நான் ஏதோ என்னிடம் 'ஏ.கே.47' இருப்பதுபோன்ற தைரியத்தில்

அவரைப்போய் கண்டித்தேன்.

அவரைப் பார்த்தால் கிங்கரன்போன்ற உருவம். ரத்தம் சிவந்த முட்டைக் கண்கள் என்று அய்யனார் கோயில் சிலைபோன்று பூதாகரமாக இருப்பார். நானோ, நானோகார் மாதிரியிருப்பேன், யானையின் காலடியில் நிற்கும் ஒரு முயல்போல் அவருக்குத் தோற்றமளித்தேனோ என்னவோ. என்னையும் பார்த்து “யார்ரா நீ ஆர்.ஐ.” என்று ஏக வசனத்தில் திட்ட ஆரம்பித்துவிட்டார். அந்த வழியாக போய்வந்த ஏதோ ஒரு சிலரும் ஏதோ ரோட்டோரத்தில் ஆடு மாடு மேய்கிறது என்ற நினைப்பில் எங்களைக் கண்டு கொள்ளாமல் போய்க்கொண்டே இருந்தனர். எனக்கு அவமானம் தாங்கவில்லை.

என் ஓ.ஏ. என்னைத் தள்ளிக்கொண்டு வந்துவிட்டார். ஒருவாரத்துக்கு மேலாகியும் என் மனதில் அமைதி ஏற்படவில்லை. அந்த கிராம நிர்வாக அலுவலரையும் அழைத்துக்கொண்டு மீண்டும் அந்த கிராமத்திற்குப் போனோம். அங்கே அன்று தலைவர் ஆஜரில் இல்லை. அவர் தாலுக்கா ஆபீசுக்குப் போயிருப்பதாக தகவல் கிடைத்தது.

என்னிடம் ஏற்கனவே முறையிட்ட பெண்பற்றிய விபரங்களைச் சொல்லி விசாரித்ததில் கடைசியில் ஒரு வீட்டில் இருந்த பெண்மணி வந்தார். அவர்தான் என்னிடம் முறையிட்டவர். ஆனால் யாரும் தலையாரி பற்றி புகார் எழுதித் தரத் தயாராக இல்லை. கடைசியாக ஒரு பெரியவர். அந்த ஊரில் அவர் ஒரு பெருந்தனக்காரரர். அவர் தம் வீட்டுக்கு அழைத்துச்சென்று உபசாரித்தர். கடைசியில் அவரும் புகார் தரமறுத்து அவரை அடக்கி வைத்தால் போதும். தினசரி அடிக்கும் லுட்டி தாங்கவில்லை என்று சொன்னார். புகார் என்று எதுவும் இல்லாமல் எப்படி நடவடிக்கை எடுப்பது என்று யோசிக்கையில் அவரே ஒரு துண்டு சீட்டினைக் காட்டி என்னிடம் நிலவரிக்கு என்று நாநூறு ரூபாய் வாங்கிச்சென்று ஒரு ஆண்டு ஆகிறது. இன்னும் ரசீது தரவில்லை வாங்கித்தாருங்கள் என்றார். ஆனால் எழுத்து மூலமாக புகார் அல்லது வாக்குமூலம் ஏதும் தர

மறுத்துவிட்டார்.

ஆனால் நம்ம தலையாரி, அதில், இன்ன பசலி இன்ன பட்டாவுக்கு இவ்வளவு ரூபாய் வாங்கிக்கொண்டேன் என்று அரசாங்க ரசீதுக்குச் சமமாக எழுதிக் கொடுத்திருந்தார். அப்போது சிரத்தையில்லாமல் அவரிடம் அந்த சீட்டை வாங்கிக்கொண்டு சம்பளத்தில் பிடித்தம் செய்து தருகிறேன் என்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன்.

வந்தபின்னர் அந்த சீட்டில் கண்ட தொகை வரவாகியிருக்கிறதா என்று பார்த்ததில் அப்படி ஏதும் வரவாகவில்லை. அப்போது கிராம நிர்வாக அலுவலர்கள் இல்லாத நிலையில் ஆர்.ஐ.தான் எல்லாவற்றுக்கும் பில் போட்டுக் கொடுத்துவந்தனர். அதனால் யார் கேட்கப் போகிறார்கள் என்று பலர் வாங்கிச் சாப்பிட்டதுண்டு. அதையே நம்ம தலையாரியும் செய்திருந்தார். மறுநாள் தலையாரியை முறைப்படி வரவழைத்து விசாரித்தேன். அவரோ நடந்தது தெரியாமல் கொஞ்சம் எடுப்பாகவே பதில் சொன்னார். சரி இவருக்கு தூக்கு தண்டனைதான் என்று முடிவாகிவிட்டது.

அன்று இரவே ஒரு பெரிய அறிக்கை தயார் செய்து போலீஸ் ஸ்டேஷனில் எப்.ஐ.ஆர். போடுவதுபோல் பல்வேறு குற்றச்சாட்டுக்கள் சுமத்தி துண்டுச்சீட்டுக்கு நகல் எடுத்து அதையும் தாசில்தாரிடம் கையொப்பம் வாங்கி அறிக்கையினை தயார் செய்து கொடுத்துவிட்டேன். நகலையும் ஆர்.டீ.ஓவிற்கு அனுப்பிவிட்டேன். அலுவலகத்தில் இப்படி ஒரு அறிக்கை வந்தால் சம்பந்தப்பட்டவரை வரவழைத்துக் கறந்துகொண்டு ஒன்றுமில்லாமல் செய்துவிடுவர். ஆனால் மேலே ஒரு நேர்மையான அப்பழுக்கற்ற அதிகாரி உட்கார்ந்திருந்ததால் வேறு வழி இல்லாமல் சஸ்பெண்ட் செய்துவிட்டனர்.

அப்புறம்தான் வழிக்கு வந்தார் நம்ம தலையாரி. எந்த சிபாரிசும் செல்லுபடியாகவில்லை. கடைசியில் அவர் பேரில் ஏற்படுத்திய குற்றச்சாட்டுக்களுக்கு நானே சமாதானம் எழுதிக்கொடுக்கும் நிலை

ஏற்பட்டுவிட்டது. அதற்குள் ஆறுமாதங்கள் உத்தியோகம் போச்சு. அப்புறம் கிராமத்தில் பெட்டிப்பாம்பாக வேலைபார்த்தார் அவர். கொட்டினால்தான் தேள் என்பது சரிதான்.

# 29 சினிமா சினிமா

ரொம்ப நல்லவன்னு பேரெடுத்துவிட்டாலும் அது தர்ம சங்கடத்தில்தான் கொண்டுவிடும். என் நண்பன் ரகமத்துல்லாவும் அடுத்து நானுமாக வருவாய் ஆய்வாளர் பணிசெய்த வகையில் ஐந்து ஆண்டுகாலம் அந்த குறுவட்ட மக்களைக் கெடுத்துவிட்டோம். அடுத்து வந்தவர்களுக்கு வருமானம் வராத அளவிற்கு பிர்க்காவைக் மாற்றிவிட்டோம். அதனால் எங்கே போனாலும் ஏதாவது ஒரு அன்புத் தொல்லை வந்து சேரும். காரியம் செய்து கொடுத்து பயனடைந்தால்தான் ஊழலா. அன்பு என்ற பெயரால் மக்களிடம் ஏதேனும் பெற்றாலும்கூட அது ஒரு வகை ஊழல்தானே.

ஒன்று, எப்போதோ நாம் செய்த உதவிக்கு நன்றியாக இப்போது உபசரிக்கக்கூடும். அல்லது, வரும் காலத்தில் எப்போதாவது உதவி கிடைக்கும் என்று உத்தேசத்தில் இன்று உபசரிக்கப்படலாம் அல்லவா.

இப்படித்தான் நானும் என் நண்பனும் திடீரென்று சினிமாவிற்குப் போவது என்று முடிவு செய்து இரண்டாம் ஆட்டத்திற்குப் போவோம். என் நண்பன் பளிச்சென்று அடையாளம் கண்டுகொள்ளப்படுவான் என்பதால் ஒரு பெரிய ராஜஸ்தான் தலைப்பாகை கட்டிக்கொள்வான். இருவரும் பள்ளிக்கூடத்தினைக் கட்டடித்துவிட்டு ‘ஏ’ படம் பார்க்கச் செல்லும் மாணவன் போன்று திருட்டுத் தனமாக கவுண்டரில் நுழைந்து டிக்கட் எடுத்துக்கொண்டு வெளியே வருவோம்.

அந்த வினாடியிலிருந்து நாங்கள் சீட்டில் போய் உட்காருவதற்குள்ளாக ஒரு இரும்புக்கை எங்களைப் பிடித்துவிடும். நிமிர்ந்து பார்த்தால் தியேட்டர் ஓனர். சுதாரிப்பதற்குள் டிக்கட்டைப் பறித்துக்கொண்டு காசைக் கையில் கொடுத்துவிடுவார். அதுமட்டுமா தியேட்டருக்குள் கொண்டுபோய் உட்கார்த்தி வைத்துவிட்டுப் போவார். அடுத்து கேக், முருக்கு, டீ

என்று வரிசையாக பலகாராதிகள் வேறு வந்துசேரும்.

சரி இப்படித்தான் நடக்கிறதே படம் பார்க்கவேண்டாம் என்றிருந்தால் ஒருநாளைக்கு நல்ல பழைய படமாகப் போட்டு எங்கள் நாக்கில் தேன் தடவிவிடுவர். அப்புறம் என்ன. தொல்லைகள் தொடர்ச்சிதான்...

அதே தியேட்டரில்போய் மக்களிடம் வசவு வாங்கியதும் உண்டு. எப்படி என்கிறீர்களா. அப்போதெல்லாம் திடீரென்று ஆர்.டீ.ஓ ஆபீசில் வந்து உட்கார்ந்துகெர்ண்டு பத்து பதினைந்து அடியாட்களைத் தயார் செய்துவிடுவார். வேறுயார் நாங்கள்தான் அந்த அடியாட்கள். எல்லாரும் கிடைபோட்டு வைக்கப்படுவர். குறிப்பிட்ட நேரம் வந்ததும் இரண்டு ஜீப்புகளில் அள்ளிப்போட்டுக்கொண்டு கிளம்பிவிடுவார். நேராகத் தியேட்டரில் போய் இறங்கியதும். எங்களை ஆளுக்கு ஒரு கிளாசுக்கு அனுப்பி அங்கு எத்தனை டிக்கட் உள்ளது என்று எண்ணிவரச் சொல்வார்.

நாங்கள் இருட்டுக்குள் குறுக்காகப் புகுந்து தலையை எண்ணுவோம் அதிலும் தரை டிக்கட் என்றால் போச்சு. எல்லாரும் அவரவர் வசதிக்கு கால்நீட்டிக்கொண்டு கும்பலாக உட்கார்ந்திருப்பர். புறாக்கூட்டத்தில் புகுந்து எண்ணிக் கணக்கெடுக்கும் கதைதான். படம் இண்ட்ரஸ்டாக போகும்போது மறைத்தால் காசுகொடுத்து டிக்கட் வாங்கியவர் சும்மா இருப்பரா? செந்தமிழ், வன்தமிழ் கொடுந்தமிழ் வார்த்தைகள் எல்லாம் தெரிந்துகொள்ளலாம்.

எண்ணிக்கொண்டு வந்து சொன்னால் டிக்கட் கொடுத்ததற்கும் எங்கள் கணக்குக்கும் ஒத்திருக்காது. ஏதோ ஒன்றிரண்டு என்றால் அரை மனதுடன் ஏற்றுக் கொள்வார். கூட இருந்தால் தியேட்டர்காரரர் மாட்டினார். குறைவாக இருந்தால் சரியாக கணக்கெடுக்கவில்லை என்று மீண்டும் கணக்கெடுக்கவேண்டும். மீண்டும்....

ஒருமுறை மாவட்டம் முழுவதும் ஒரே நேரத்தில் தியேட்டர்களைத் தணிக்கை செய்ய வேண்டும் என்று

உத்திரவிடப்பட்டது. அதற்காக வட்டாட்சியர், துணை வட்டாட்சியர் தலைமையில் ஒவ்வொரு குழு அமைக்கப்பட்டது. நாங்கள் நான்கு பேர் ஒரு தியேட்டருக்குப் போனோம். ஒரு கிராமப்பகுதி. புது படம் ஓடும் அரங்குகளில்கூட அவ்வளவு கூட்டம் இருக்காது. ஆனால் அங்கே மிகப் பழைய எம்.ஜி.ஆர். படம். உள்ளே நுழைந்த எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அரைகுறை ஆடை ரெக்கார்டு டான்ஸ் இலவசமாகப் பார்க்கும் அரங்கு போன்று அவ்வளவு கூட்டம். உள்ளே நுழையவே முடியாத அளவுக்கு கூட்டம். பாதைகளில்கூட அடைத்துக்கொண்டு நின்று கொண்டு பார்க்கின்றனர். கூரை மேல்தான் ஏறிப்பார்க்கவில்லை. அதிகாரியிடம் வந்து நிலைமையை சொன்னோம்.

நான் நினைத்துக்கொண்டேன், ஒழிந்தார் இந்த தியேட்டர்காரர் என்று. சீல் வைக்கப்போவது போலெல்லாம் கற்பனை. தாசில்தாரோ அவரிடம் வாக்கு மூலம் வாங்கிக்கொண்டிருந்தார். வேலை முடிந்தது. புறப்பட வேண்டியதுதானே ஏன் இன்னும் உட்கார்ந்திருக்கிறார் என்று தெரியாமல் காத்திருந்தோம். கடைசியில் படம் முடிந்து எல்லோரும் வெளியே போன பின்னர்தான் கிளம்பினார் வட்டாச்சியர். எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் பணிக்கு வந்து மூன்று ஆண்டுகூட ஆகவில்லை. அத்துடன் இந்த மாதிரி விவகாரம் எல்லாம் பார்த்தது கூட இல்லை. என்னுடன் வந்த சீனியரிடம் கேட்டேன்.

அவர்தான் சொன்னார். கூடுதல் டிக்கெட் பற்றி, ஒரு வாக்குமூலம் வங்கிக்கொண்டது இடையில் யாரேனும் திடீர் தணிக்கைக்கு வந்தால் பாதுகாப்புக்காக என்றும், யாரும் வராததால் அது நடைமுறைக்கு வரவில்லை என்றும், வட்டாட்சியருக்கு கவனிப்பு நடந்துவிட்டது என்றும் சொன்னதும்தான் இப்படிக்கூட நடக்க முடியும் என்று தெரிந்துகொண்டேன். அப்புறம் ஏன் எங்களையெல்லாம் அழைத்துக்கொண்டு போய் சிரமப்படுத்தவேண்டும்.

நான் திட்டக்குடியில் வேலை பார்க்கும்போது ஆற்றுக்கு அக்கரையில் ஒரு டென்ட் கொட்டகை இருந்தது. கிராமத்தில் உள்ள அதில் புதுப்புது படங்கள் போடுவர். நானும் என் நண்பரும் நள்ளிரவுக் காட்சிக்கு போய்வருவது உண்டு. ஒருநாள் நாங்கள் போகும்போது எங்களுடன் ஒரு அலுவலக உதவியாளர் சேர்ந்துகொண்டார். வாசலில் போய் நின்றால் படத்தின் பேரே வித்யாசமாக இருந்தது. படம் போட்டுவிட்டிருந்தார்கள். உடன் வந்த அ. உ. சும்மா இருக்காமல் நாங்கள் துணை வட்டாட்சியர்கள் என்று முன்னதாக அறிமுகம் செய்துவிட்டார். அவ்வளவுதான், சிப்பந்திகளுக்குள் ஒரே பரபரப்பு. கடைசியில் டிக்கெட் தீர்ந்துவிட்டது என்று எங்களை திருப்பி அனுப்பிவிட்டார். பின்னர்தான் தெரிந்தது அங்கே அடிக்கடி பலான படம் போடுவார்கள் என்று.

துணை வட்டாட்சியர் என்று சொன்னதும் ஏதோ ரெய்டுக்கு வந்திருக்கிறோம் என்று பயந்துபோய் எங்களைத் திருப்பி அனுப்பிவிட்டார் உரிமையாளர். ஆக, எங்களை அறிமுகம் என்ற பேரில் நாங்கள் பலான படம் பார்த்து சொர்க்கத்துக்கு போவதை தடுத்துவிட்டார் எங்கள் அ. உ.

சில நாட்களில் அந்த திரை அரங்கில் பத்து மணி ஆனாலும் படம் போடுவதற்கான அறிகுறியே இருக்காது. காட்சி ரத்து என்பது போல் தோன்றும். அர்த்த ராத்திரியில் டிக்கட் கொடுத்து பலான படம் போடுவார்களாம். அந்த பகுதி மக்களுக்கு விபரம் தெரியுமாம். அதனால் அந்த அரிய சந்தர்ப்பத்தை அவர்கள் தவறாமல் பயன்படுத்திக் கொள்ளுவார்களாம்.

ஒருமுறை நாங்கள் மணல் கடத்தலைத் தடுக்கும் நோக்கில் போனபோது சற்று முன்னதாக ஒரு திரை அரங்கில் தங்கிக்கொண்டு சற்று நேரம் கழித்து போகலாம் என்று உத்தேசித்து படம் பார்க்கப் போனோம். கிராமப்பகுதி என்பதால் கூட்டம் குறைவுதான். நாங்கள் போனபோது படம் ஓடிக்கொண்டிருந்தது. ஏதோ நாங்கள் படம்

பார்க்கத்தான் வந்திருக்கிறோம் என்று எண்ணிக்கொண்டு ஓடிய படத்தை நிறுத்தி மீண்டும் முதலில் இருந்து ஓட விட்டார்கள். ஆனால் பார்வையாளர்களோ எந்தப் பிரசின்னையும் செய்யவில்லை என்பதுதான் ஆச்சரியம். ஒருவேளை ஒரு டிக்கட்டுக்கு இரண்டு படம் பார்த்த சந்தோஷம் போலும்.

திரை அரங்கு தணிக்கைக்கு என்று போனால் கழிப்பறை சுத்தமாக இருக்கிறதா என்று பார்க்கும் அவலம் இருக்கிறதே. அப்பப்பா. நாங்களோ சுத்தம் செய்யவில்லை என்போம். ஓனரோ இப்பதான் மக்கள் பயன்படுத்தினர் என்பார். தீ வாளிகள் எங்கே என்றால் செந்தில் வாழைப்பழம் கதையாக அதுதான் இது என்பார். அதைவிட இருக்கும் வாளிகளில் மணல் நிரப்பி இருந்தால் அதைத்தாண்டி நம் மக்கள் வெற்றிலை பாக்கு எச்சில் துப்பி தொடமுடியாத அளவுக்கு மாற்றியிருப்பர்.

கொடிநாள் வசூல் என்பதற்காக குறிப்பிட்ட ஒருநாள் வசூலை தரவேண்டும் என்று மாவட்ட ஆட்சியர் உத்திரவிடுவார். சில திரை அரங்குகளில் அந்த ஒருநாளில் மட்டும் அரதப் பழைய படம் போடுவர். ஒரு நாள் வசூல் என்றால் தாங்காது என்று முறையீடு செய்ததன் பேரில் ஒரு காட்சி என்று மாறியது. அதிலும் ‘அகாஜுகா’ செய்து மிகக் குறைந்த தொகையைதான் செலுத்துவார்கள்.

முன்பெல்லாம் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து கடிதம் வரும் ‘குறிப்பிட்ட படத்தில் இத்தனை அடியிலிருந்து இத்தனை அடி வரை இன்னின்ன வசனம் அல்லது காட்சி நீக்கப்பட்டுள்ளது. அதனை தணிக்கை செய்து அறிக்கை அனுப்பவும்’ என்று. அந்தோ பரிதாபம். அந்த படம் ஓடி முடிந்து தியேட்டரை விட்டுத் தூக்கிய பின்னர்தான் கடிதம் வரும். அதைவிட சின்னி ஜெயந்த் மாதிரி படப்பெட்டியை திறந்து ரீல்களை அளந்து முழம்போடவா நேரம் இருக்கிறது.

இந்த நாளைய அரசு பேருந்து சீட்டுகளை விட அந்நாளைய திரை அரங்கு இருக்கைகள் நன்றாகவே

இருக்கும். இருந்தும் அது சரியில்லை இது சரியில்லை என்று குறை சொல்லி வசூல் செய்வதில் எங்கள் ஆட்களைப் போல் கில்லாடிகள் இருக்க முடியாது.

அதிலும் சில சமயம் கூடுதல் கட்டணம், டிக்கெட் முறைகேடு என்று கண்டுபிடித்து அறிக்கை அனுப்பினால் அதன்பேரில் நடவடிக்கை எடுக்க மாவட்ட ஆட்சியருக்கு அதிகாரம் கிடையாதாம். அதனை விற்பனை வரித் துறைக்குத்தான் அனுப்புவர். அதனால் எங்களவர்கள் நாம் என் வேறு துறைக்கு வாய்க்கால் வெட்ட வேண்டும் என்று கழிப்பறை, சுற்றுப்புறம், என்று தணிக்கை செய்துகொண்டிருப்பர்.

# 30 மாமூல்

இந்த மாமூல் இருக்கிறதே அதற்குப் பெரிய அதிகாரிகள் கடிவாளம் போடாதவரை அதை அடக்க முடியாது.

ஒரு முறை மத்திய அமைச்சர் இருவர் ஹெலிகாப்டரில் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்ச்சிக்கு வந்தனர். அவர்கள் சுமார் பத்து கிலோமீட்டர் தொலைவில் ஓஎன்ஜிசி இறங்குதளத்தில் இறங்கி அங்கிருந்து காரில் நிகழ்ச்சிக்குப் போய்விட்டுத் திரும்பினர். கலெக்டர் உட்பட எல்லாரும் பக்கத்தில் நின்று வழிகொடுத்துவிட்டு தங்கள் கார்களில் இடத்தைக் காலிசெய்துவிட்டனர்.

எப்போதும் தாசில்தார் ஜீப்பானது முக்கியப் பிரமுகர் வாகனங்களுக்கு ஒரு கிலோமீட்டர் தள்ளித்தான் போகும். அவ்வளவு கண்டிஷனில் அந்த ஜீப் இருக்கும். புதிய ஜீப் வந்தால் உயர் அதிகாரிகள் அதனை எடுத்துக்கொண்டு தங்கள் வாகனத்தை கீழே தள்ளிவிடுவர். இப்படியாக உழைத்து ஓடாகிப்போன அறதப் பழைய வண்டிதான் தாசில்தாருக்குக் கிடைக்கும். அது யானை அசைவதுபோல் அசைந்து வரும். அதனை வைத்துக்கொண்டுதான் தாசில்தார்கள் குப்பைகொட்டி நற்பெயர் எடுப்பர்.

இப்படியாக வழியனுப்பிவிட்டு எல்லா கார்களும் புறப்பட்டுவிட, தாசில்தார் ஜீப் முக்கி முனகி திக்கித் திணறி ‘முன் இருவர் இழுக்க பின் இருவர் தள்ள’ என்று பரமார்த்த குருவின் குதிரை போன்று புறப்பட்டுக் கொண்டிருந்தது. அமைச்சரின் ஹெலிகாப்டரோ வேகமாக ஆரம்பித்தது. சத்தம் பெரிதாக வந்தது. ஓரிரு அடிகள் மேலே எழும்பியது. அடுத்து அதிக லோடு ஏற்றப்பட்ட முரட்டு மாடுபோல் தரையில் படுத்துவிட்டது. ஆனால் சத்தம் மட்டும் பெரிதாகக் கேட்டது. அசையவில்லை. தாசில்தார்

வண்டியில் பின்னால் உட்கார்ந்து வேடிக்கை பார்த்தவர்கள் ஏதோ கோளாறு என்று தாசில்தாரிடம் சொல்ல, ஓடிப்போய்ப் பார்த்தால் ஹெலிகாப்டரில் கோளாறு என்றும் மெக்கானிக் வந்தால்தான் போகும் என்றும் சொல்லிவிட்டார் பைலட்.

உடனே தாசில்தார் தமது ஜீப்பினை அனுப்பி கலெக்டர் காரைத் துரத்திச்சென்று திருப்பி அழைத்துவந்து அதில் சென்னைக்கு அனுப்பிவைத்தனர். மந்திரி புறப்பட்டுப் போனதுதான் தாமதம் ஹெலிகாப்டர் கிளம்பிப் போய்விட்டது. பின்னர்தான் தெரிந்தது. வழக்கம்போல் ஹெலிகாப்டர் பைலட்டுக்கு தாசில்தார் பாட்டில் உட்பட மாமூல் தரவில்லை என்பது.

கவர்னர் வந்தால் அவரது டபேதாரிடம் தாசில்தார் மாமூல் பணத்தை முன்னதாகவே தந்துவிடவேண்டும். இல்லையெனில் ஒவ்வொரு பொருளிலும் குற்றம் கண்டுபிடித்து டார்ச்சர் கொடுத்துவிடுவார். அப்புறம் அதிகாரிகளிடம் மாட்டிக்கொண்டு முழிக்கப்போவது தாசில்தார்தான் என்றால் யார் நம்புவர்.

ஒருமுறை நான் கலெக்டர் வருகைக்காக பங்களாவில் இருந்தேன். கலெக்டர் புறப்படும் நேரம்வரை காத்திருந்த டபேதார் என்னிடம் “ஆர்ஜ சார் படிகொடுத்தால் நாங்கள்ளாம் புறப்படுவோம். அய்யா ரெடியாயிட்டாங்க” என்றார். அன்று பார்த்து என்னிடம் காசு கிடையாது. அன்று கலெக்டர் உட்பட அனைத்து பரிவாரங்களுக்கும் சாப்பாடு இத்தியாதிகள் வாங்கியதில் கையில் காசு கிடையாது. நான் அடுத்தமுறை தருவதாகச் சொன்னதும். அவரோ ‘உங்களிடம் இருந்தால் பாங்கில் போட்டமாதிரி அதற்கென்ன’ என்று சொல்லிவிட்டார்.

ஆனால் முறட்டு டிரைவருக்கு பொறுக்கவில்லை. தாசில்தாரிடம் போட்டுக் கொடுத்துவிட்டார். தாசில்தாரோ என்னை அழைத்து ‘அந்த ஆளுக்கு படி கொடுத்துத் தொலைக்க வேண்டியதுதானே’ என்று என்மேல் விழுந்தார். நான் காசு இல்லாத

விரபத்தையும் அடுத்த முறை தருவதாகவும் சொல்லிவிட்டேன்.

இருந்தாலும் டிரைவரின் லஞ்ச கௌரவம் பாதித்துவிட்டதல்லவா. அவர் தாசில்தாரிடம் கலெக்டர் உட்காருவதற்கு காரில் போடுவதற்காக மணிகளாலான ஒரு கவர் வேண்டும் என்று இண்டெண்ட் வைத்துவிட்டார். அன்று ஐம்பது ரூபாய் படிகொடுக்காததற்கு நான் நானுறு ரூபாய் செலவு செய்தேன் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

நான் பள்ளியில் படிக்கும்போது ஒரு சிறுகதை குமுதத்தில் வந்தது. தலைப்பு: 'கலெக்டர் வருகிறார்'. கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள்வரை ஆகியும் மறக்கவில்லை. அந்தக் கதையின் சாரம் இதுதான்.

ஒரு ஊருக்கு வந்த கலெக்டர் கோழிக்கறி சாப்பிட்டுவிட்டு கெஸ்ட்ஹவுஸ் ரூமில் ரெஸ்ட் எடுப்பார். திடீரென்று தாசில்தாரை அழைப்பார் கலெக்டர். தாசில்தாருக்கு வயிற்றில் புளி கரைக்கும். இதுவரை செய்த தப்புகள் இனி செய்யப் போற தப்புகள் இப்படியெல்லாம் சிந்தித்து அவசர அவசரமாக சட்டைப் பித்தான்கள் பேண்ட் ஜிப்பு உட்பட சரிசெய்துகொண்டு மெதுவாகக கதவைத் திறந்துகொண்டு கலெக்டர் முன்பாக ஆஜராகி குனிந்து கொண்டு வணக்கம் செலுத்துவார். அவருக்கு பேஸ்மெண்ட் மட்டுமின்றி கட்டிடம் முழுவதும் வீக்தான் என்பது அப்போதுதான் நன்கு புலனாகும்.

கலெக்டர் ஹாயாக சாய்ந்துகொண்டு “கோழி ரொம்ப நல்லா இருந்ததையா. கோழி என்ன விலை” என்பார். தாசில்தாருக்கு கோழிவிலை பற்றி குழப்பம் வந்துவிடும். கையிலிருந்து காசுகொடுத்து வாங்கி சாப்பிடுகிறாரா என்ன! டக்கென்று வெளியில் வந்து பிரசவ வார்டில் எட்டிப் பார்த்துக்கொண்டு காத்திருக்கும் கணவன் போன்ற நிலையில் நின்றுகொண்டிருக்கும் பி.டி.ஓ.விடம் கேட்பார். அவருக்கும் கோழி விலை என்னவென்று சொல்லத் தைரியம் வராது. கோழிவிலையை அதிகமாகச் சொன்னால் விலைவாசி இப்படி விற்கிறதே நீர்

என்ன நடவடிக்கை எடுத்தீர் என்று பிடித்துக்கொண்டால் என்ன செய்வது. குறைத்துச் சொன்னால் இன்ன விலை விற்கும் கோழியை குறைத்துச் சொல்கிறீரே என்று பிடித்துக்கொண்டால் என்னாவது அல்லது ஒருவேளை கோழிவிலையைக் கேட்டு நமக்கு டெஸ்ட் வைக்கிறாரா, என்றெல்லாம் பலவாறாகக் குழப்பிக்கொண்டு அவசர மந்திராலோசனை நடத்தி 'ஒரு கோழி ஒரு ரூபாய்' என்று சொல்வதென்று முடிவெடுத்தனர். கலெக்டர் கேட்டால் இருவரும் ஒரே மாதிரி சொல்லவேண்டும் அல்லவா.

மீண்டும் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போன தாசில்தார், கலெக்டரிடம் "ஒரு கோழி ஒரு ரூபாய் அய்யா" என்று பவ்யமாகத் தெரிவித்தார். கலெக்டருக்கு பரம சந்தோஷம். பாக்கெட்டிலிருந்து முப்பது ரூபாயை எடுத்து தாசில்தாரிடம் நீட்டி "கோழி நல்லாவும் இருக்கு. சீப்பாகவும் இருக்கு - தினம் ஒரு கோழி பங்களாவுக்கு அனுப்பிவிடும்" என்று சொல்லிவிடுவார்.

தாசில்தாரும் தலைதப்பியது தம்பிரான் புண்ணியம் என்று வெளியே வந்து பி.டி.ஓ.-விடம் தாம் தப்பித்த கதையைச் சொல்லி ஒரு மாதம்தானே பல்லைக் கடித்துக்கொண்டு தினம் ஒரு கோழி வாங்கி அனுப்பிவிடுவோம் என்று திருப்தியாக சென்றுவிடுவார். ஆனால் மாதம் முடிந்ததும் கலெக்டரிடமிருந்து முப்பது ரூபாய் வந்துவிட்டது அடுத்த மாதத்திற்கு கோழிவாங்கி அனுப்புவதற்காக. இப்படியாக மாதம் தோறும் தினம் ஒரு கோழியாக அனுப்பிக் கொண்டிருப்பார்.

அதேபோன்று ஒரு நிகழ்ச்சி. கலெக்டர் வந்தார். அவருக்காக மீன்துறை வளர்க்கும் பண்ணையிலிருந்து அதிகாலையில் மீன் வாங்கி தனியே சமையல் செய்து பரிமாறப்போக மீனின் ருசி கலெக்டர் நாக்கில் ஒட்டிக்கொண்டு விடமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது. கலெக்டர் தம் வீட்டுக்குப் போனதும் தாசில்தாரை போனில் அழைத்து தமக்கு அந்த மீன் இத்தனை பேருக்கு சமைக்கும் வகையில்

தேவை என்றும் உயிருடன் அனுப்பி வைக்கும்படியும் உத்திரவிட்டுவிட்டார்.

உடனே மீன் துறை வளர்ப்பிடத்திற்கு ஓடிப்போய் அதிகாலையில் மீன்பிடிக்கும்போதே காத்திருந்து நல்ல பெரிய மீனாக வாங்கினோம். அந்த மீன் வகையானது பிடித்த ஐந்து நிமிடத்திற்குள் இறந்துவிடும். ஆனால் கலெக்டர் உத்திரவிட்டுவிட்டால் அது உயிரை விடலாமா! அதற்கென்று பெரிய பிளாஸ்ட்டிக் பக்கெட் வாங்கி அதில் தண்ணீர் நிரப்பி அதில் மீனைத் தலைகீழாக நட்டுவைத்து (ஒரு முழம் மீன் நீந்துவதற்கு வேறு என்ன செய்வது) ஜீப்பில் பறந்தோம். இருந்தாலும் அது அதிகபட்சமாக அரைமணிகூட தாக்குப் பிடிக்கவில்லை.

நேராக பங்களாவில் கொண்டுபோய் டபேதார் மூலமாக சமையல் ஆளைக் கவனித்து, ‘கேட்டால் மீன் உயிருடன்தான் வந்த’தென்று சொல்லச்சொல்லிக் கொடுத்துவிட்டு வந்தோம். வெளியில் வந்துபார்த்தால் ஜீப்பில் பின்பக்கம் மீன் வியாபாரம் செய்த வண்டிபோல் வாடையும் அதனால் கவரப்பட்ட ஈக்கூட்டமும் தாங்கவில்லை. ஒருவழியாக கழுவி சுத்தம் செய்து வந்துசேர்ந்தோம்.

ஆனால் ஒன்று அந்தக் கதையில் வந்ததுபோன்று தினமும் கேட்கவில்லை. மாதம் ஒருநாள் நினைவுவந்தால் கேட்பார் அல்லது விருந்தாளி வந்தால் கேட்பார்.

ஒரு கலெக்டர் முகாம் வந்தால் சமயத்தில் தன் மகனையும் கூட அழைத்து வந்துவிடுவார். அவ்வளவுதான் அன்று குடிதண்ணீர் ஏற்பாடு செய்ய வேண்டிய அவசியம் இல்லை. வெறும் கோல்டு ஸ்பாட்தான். ஒரு டஜனுக்குக் குறையாமல் வாங்கிவிடுவேன். வந்து இறங்கியது முதல் கையில் ஒரு பாட்டில் இருக்கும். செயின் ஸ்மோக்கர் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். இவர் செயின் ட்ரிங்க்கர். சாப்பிடும்போதுகூட தண்ணீருக்கு பதிலாக கோல்டு ஸ்பாட்தான் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள். பத்துவயதுகூட ஆகாத சிறுவன் டபுள்காட் மெத்தை

சைசில் இருப்பார்.

ஒரு அதிகாரி தம் மகனுக்கு நான்காம் வயது பிறந்தநாள் கொண்டாடினார். கைத்தடிகளின் மூலமாக தாசில்தார்கள், பி.டி.ஓ.க்கள் என்று கீழ் நிலை அதிகாரிகளுக்கு எல்லாம் ஓலை அனுப்பி பரிசுகளுடன் வரும்படி கேட்டுக்கொண்டனர். ஒவ்வொரு தாசில்தாரும் அவனே ஒரு பவுன் செய்கிறானே நான் அதைவிடக் குறைத்து செய்தால் நம் கௌரவம் என்னாவது என்ற எண்ணத்தில் அதைவிட கூடுதலாக செய்தனர். பி.டி.ஓ.களும் மற்றும் பல அதிகாரிகளும் அப்படியே. அரசியல் தலைவர் வீட்டு விசேஷம் கணக்காக தடபுடல் விருந்துவேறு. விருந்து செலவு கீழே இருப்பவர் உபயத்தில்தான். இப்படி ஒரு கலெக்ஷன் டெக்னிக்.

எனக்கு ஒரே ஒரு சந்தேகம். இந்த அதிகாரி மூன்று வயது வரை பிறந்தநாளை எப்படிக் கொண்டாடினார். ஐந்தாவது முதல் அடுத்தடுத்த பிறந்தநாளை எப்படி கொண்டாடினார் என்பதுதான்.

ஒரு கிராமத்தில் தொழில் வளாகம் அமைக்கவேண்டி நிலம் எடுக்கப்பட்டது. அந்த கிராமம் முழுவதும் மணற்பாங்கானது அங்கு சில இடங்களில் சவுக்கு பயிரிட்டிருந்தனர். அதுவும் வளரவில்லை. பெரும்பாலும் பனைமரங்களும் மணிலாவும்தான் இருந்தது மற்ற இடங்கள் சாகுபடிக்கு லாயக்கில்லாத கடற்கரை ஓர கிராமம் என்பதால் புதர்கள் நிறைந்து காணப்பட்டது. ஆர்ஜிதம் செய்ய உத்தேச நிலங்களுக்கு அதில் என்ன பயிர் என்பதைக் காட்டும் அடங்கல் நகல்கள் கிராம நிர்வாக அலுவலரிடமிருந்து பெற்று அறிக்கை தயார் செய்து சென்னைக்கு அனுப்பப்பட்டது.

திருப்பதி என்றால் ‘லட்டு’ என்பது போலவும், திருநெல்வேலி என்றால் ‘அல்வா’ போலவும் கடலூர் என்றால் ‘முந்திரி’ என்று மனதில் பதிந்து வைத்துக்கொண்டனர் அந்த மேலோர். காரணம் நெய்வேலி சுரங்க ஆர்ஜிதம் முழுக்க முந்திரி சாகுபடி நிலங்கள்தான். என்.எல்.சி நிறுவனத்தினர் அந்த மேலோருக்கு அவ்வப்போது முந்திரிப் பருப்பு சப்ளை

செய்து பேப்பர்களைத் தாமதமின்றி தள்ளிச்சென்று கொண்டிருந்தனர். அந்த 'ருசி' கண்டவர்கள் எங்களையும் விடவில்லை. எங்கள் அறிக்கையைப் பார்த்ததும் அத்துடன் முந்திரிப் பருப்பு இணைக்கப்பட்டுள்ளதா என்று பார்த்துவிட்டு கட்டிப்போட்டுவிட்டனர். நாங்கள் போய் இந்தப் பகுதியில் அம்மாதிரி நிலம் இல்லை என்று எவ்வளவோ வாதாடியும் கேட்கவில்லை.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் இணைக்கப்பட்டிருந்த அடங்கலை எடுத்துக் காண்பித்து இதோ முந்திரி சாகுபடி செய்துள்ளதாக பதிவாகியிருக்கிறதே என்று கேள்விகேட்டனர். சாகுபடிப் பயிர் விபரத்தைப் பதியச்சொன்னால் அந்த வி.ஏ.ஓ. முட்புதர்களாகக் கிடந்த இடங்களைப்பொறுத்து "முள்" என்று அடங்கலில் பதிவுசெய்திருந்தார். அதனை நாங்கள் அப்போதே கண்டுபிடித்து விட்டிருந்தோம். எனவே, மேலாவிடம் அய்யா இது முந்திரியில்லை 'முள்' என்று வி.ஏ.ஓ. பதிவு செய்திருக்கிறார் என்றால் கேட்டால்தானே. அவர்களுக்கு நம்பிக்கையே பிறக்கவில்லை.

வி.ஏ.ஓ.-க்கள் அடங்கலில் பயிர் விவரத்தை சுருக்கித்தான் பதிவு செய்வர். அதன்படி முந்திரியை 'முந்' என்று பதிவு செய்வர். அதை வைத்துக்கொண்டு எங்களிடம் வம்பு செய்தனர். 'அரசுக்கு அனுப்பினாலும் சரி, இல்லையென்றாலும் சரி, உங்கள் இஷ்டம்' என்று தெரிவித்துவிட்டு வந்துவிட்டோம்.

இது மற்றொரு நிகழ்ச்சி. ஒரு அதிகாரி தமது துறையினரின் திறமைகுறித்து பெருமை பேசும் வகையில், என் சீனியர் அடிக்கடி சொல்லும் நிகழ்ச்சி. ஒரு கலெக்டர், பங்களாவில் தன் நண்பருடன் பேசிக் கொண்டிருந்தார். நண்பர்களுக்குள் சிறு வாக்குவாதம். கலெக்டரோ, 'எங்கள் தாசில்தார் நினைத்தால் எதுவும் சாதித்துவிடுவார். அதிகாரிகளின் குறிப்பறிந்து அதற்குத் தக்கபடி காரியம் செய்வதில் வல்லவர்கள்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்ததை நண்பர் சற்றும்

ஏற்கவில்லை. கலெக்டர் தம் வாதத்தை நிரூபிப்பதாகச் சொல்லிவிட்டு தாசில்தாரை அழைத்துள்ளார்.

அறை வாசலில் காத்திருந்த தாசில்தார் உள்ளே வந்ததும் ஒரு விண்ணப்பத்தினை அவரிடம் கொடுத்து "இந்த மனுவைப் பரிசீலித்து எனக்கு உடனடியாக அறிக்கை கொடுங்கள். எனக்கென்னவோ இதில் சொல்லப் பட்டிருப்பது ரொம்ப நியாயமாகப்படுகிறது" என்று சொல்லியுள்ளார்.

வட்டாட்சியர் உடனடியாகக் கிளம்பிப்போய் விசாரித்து தமது அறிக்கையினை கலெக்டருக்குக் கொடுத்துவிட்டார். அதில் இன்னின்ன காரணங்களால் இவரது கோரிக்கை மிகவும் சரியானதுதான் என்று பல பாயிண்டுகளைத் தெரிவித்திருந்தார். கலெக்டரோ அந்த அறிக்கையினை வாங்கிக்கொண்டே "ஏதோ தகுதியுள்ளதாகத் தெரிகிறது என்று அப்போது நான் சொன்னேனே ஒழிய பின்னர் சிந்தித்ததில் அது தவறாகப் படுகிறது." என்று சொல்லியிருக்கிறார். அடுத்த நிமிடம் தாசில்தார் அந்த அறிக்கையின் தொடர்ச்சியாக ஒரு அறிக்கையை கலெக்டரிடம் ஒப்படைத்துள்ளார். அந்த அறிக்கையில், தாம் ஏற்கனவே பரிந்துரைத்து ஒரு அறிக்கை சமர்ப்பித்ததாகவும், தொடர்ந்து பரிசீலனை செய்தவகையில் தமது அறிக்கையின் பரிந்துரைகள் அனைத்தும் கீழ்கண்ட ஆவணங்களின் அடிப்படையில் மறுபரிசீலனை செய்யப்பட்டதாகவும் அதன் அடிப்படையில் தாம் பரிந்துரைத்ததை மறுதலிப்பதாகவும். மனுவைத் 'தள்ளுபடி' செய்யலாம் என்றும் விளாவாரியாக அறிக்கை கொடுத்துவிட்டார். அதில் ஒவ்வொரு பரிந்துரைக்கும் ஒரு மறுதலிப்பினை மிகவும் நேர்த்தியாகக் கொடுத்திருந்தார். கலெக்டரின் நண்பர் அதனைப் பார்த்துவிட்டு அசந்துபோய் விட்டாராம்.

ஆனால் இந்தத் திறமையெல்லாம் இப்போது பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போனதென்னவோ

உண்மை.

இப்படிப்பட்ட திறமைமிக்க அலுவலர்கள் நிறைந்திருந்த துறையில் சமீபத்திய நிகழ்ச்சி ஒன்று. புன்செய் தரிசு நிலத்திற்கு தாசில்தாருக்கு பட்டா வழங்கும் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தும். அதனைக் கையெழுத்துப்போட மனமின்றி கோட்டாட்சியருக்குப் பரிந்துரைத்தார். மாமூல் வந்திருந்தால் ஒப்புதல் செய்திருப்பார். அதுவே அசத்தலாக வந்திருந்தால் தனது அதிகாரத்தை மீறிக்கூட பட்டா கொடுத்திருப்பார்.

கோட்டாட்சியரோ அந்த இடத்தைப் போய்க்கூட பார்வையிடாமல் வட்டாட்சியர் பார்வைக் குறிப்பையே தமது பார்வைக் குறிப்பாக மாற்றி அதனை கலெக்டருக்கு அனுப்பி வைத்துவிட்டார். அங்கேயாவது இந்த பேப்பர் ஏன் எனக்கு அனுப்பி வைக்கப்பட்டது என்று கேட்டார்களா. அல்லது உத்திரவுதான் பிறப்பித்தார்களா. இதுவரை இம்மாதிரி அறிக்கைகள் ஏதும் வந்ததில்லையே என்று குழம்பிப்போய் கட்டிவைத்து விட்டனர் போலும். பேப்பரின் கதி சுனாமியில் காணாமல் போனமாதிரி ஆகிவிட்டது.

பின்னுரை

புத்தகம் என்றால் அதற்கு ஒரு முன்னுரை, முகவுரை, உள்ளடக்கம், முடிவுரை என்று அமைப்பது பாரம்பரியம் என்ற வகையில் இந்த ஆக்கத்திற்கும் ஒரு முடிவுரை அமைக்கப்பட வேண்டும் என்றபோதிலும் நினைவுகள் தொடர்வதாலும், முப்பத்தைந்தாண்டு நிகழ்வுகள் அவ்வப்போது வந்து வந்து நவரசங்களையும் விதைப்பதாலும். மனிதனுக்கே உரிய நினைவு சக்தி குன்றாததாலும், நினைக்க நினைக்க வரும் நிகழ்ச்சிகளின் எச்சங்களை தடுக்க இயலாததாலும், வந்த நினைவுகளை எழுதிக்கொண்டே இருக்கப் போவதாலும், போதாக் குறைக்கு இன்னும் என் தோழனின் பகிர்வுகள் தொடரப்போவதாலும், அடுத்து ஒரு தொடர் வெளிவந்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் காரணமாகவும், அந்த நிர்ப்பந்தத்தினை

கட்டாயமாக நிறைவேற்றியே தீரவேண்டும் என்ற சங்கற்பத்தாலும், சங்கற்பம் என்றாலே கைகூடும் என்ற விதியாலும், இந்த தொடர் தொடரப்போது நிச்சயம் என்பதாலும் முடிவுரைக்கு பதிலாக பின்னுரை என்று அமைத்து தொடரும் என்று முடிக்கிறேன்...... .... அப்பாடி மூச்சு விட்டுக்கறேன்.

தங்களின் கருத்துக்களை, சாத்தியப்பட்டால், கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பினால் அகமகிழ்வோம் pasupathilingam@gmail.com

# 31 எங்களைப் பற்றி - Free Tamil Ebooks

மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்: மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர். ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்: ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம். தமிழிலுள்ள மின்புத்தகங்கள்: தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள். சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை. எனவே ஒரு தமிழ் வாசகர் மேற்கூறிய "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகளை" வாங்கும்போது, அவரால் எந்த ஒரு தமிழ் புத்தகத்தையும் இலவசமாகப் பெற முடியாது. சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி? சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை,

வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன. நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம். அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம். எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும். தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா? கூடாது. ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும். அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும். அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது. வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும். பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள்

பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும் வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம். FreeTamilEbooks.com இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும். PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம். அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம். இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா? நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும். அவ்வளவுதான்! மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு: ஒருசில பதிவர்கள்/ எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல் தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல் சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல் விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும். இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்? யாருமில்லை. இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க

தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும். மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும். இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்? ஆசிரியர்/ பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை. ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம். அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது. தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா? உள்ளது. பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன. 1. vinavu 2. badriseshadri.in 3. maattru 4. kaniyam 5. blog.ravidreams.net எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் Creative Commons உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது? இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

துவக்கம் உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்]. தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை

அதிகரித்து வந்துள்ளது. இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம். இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும். இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும். எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம். இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம். http://creativecommons.org/licenses/ நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம். e-mail : freetamilebooksteam@gmail.com FB : https://www.facebook.com/FreeTamilEbooks G +: https://plus.google.com/communities/108817760492177970948
நன்றி. முடிவு

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள். முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள். கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைfreetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள். ஓர் எழுத்தாளர்

உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது ?

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும். ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது. அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும். மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்? ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும். நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம். தவிர்க்க வேண்டியவைகள் யாவை? இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி? நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம். email : freetamilebooksteam@gmail.com Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948 இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்? Shrinivasan tshrinivasan@gmail.com Alagunambi Welkin alagunambiwelkin@fsftn.org Arun arun@fsftn.org இரவி Supported by Free Software Foundation TamilNadu, www.fsftn.org Yavarukkum Software Foundation http://www.yavarkkum.org/

உங்கள் படைப்புகளை வெளியிடலாமே உங்கள் படைப்புகளை மின்னூலாக இங்கு வெளியிடலாம். 1.

எங்கள் திட்டம் பற்றி - http://freetamilebooks.com/about-the-project/ தமிழில் காணொளி - http://www.youtube.com/watch?v=Mu_OVA4qY8I 2. படைப்புகளை யாவரும் பகிரும் உரிமை தரும் கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் பற்றி - கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமை - ஒரு அறிமுகம் http://www.kaniyam.com/introduction-to-creative-commons-licenses/ http://www.wired.co.uk/news/archive/2011-12/13/creative-commons-101 https://learn.canvas.net/courses/4/wiki/creative-commons-licenses உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமத்தை இங்கே தேர்ந்தெடுக்கலாம். http://creativecommons.org/choose/ 3. மேற்கண்டவற்றை பார்த்த / படித்த பின், உங்கள் படைப்புகளை மின்னூலாக மாற்ற பின்வரும் தகவல்களை எங்களுக்கு அனுப்பவும். நூலின் பெயர் நூல் அறிமுக உரை நூல் ஆசிரியர் அறிமுக உரை உங்கள் விருப்பான கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் நூல் - text / html / LibreOffice odt/ MS office doc வடிவங்களில். அல்லது வலைப்பதிவு / இணைய தளங்களில் உள்ள கட்டுரைகளில் தொடுப்புகள் (url) இவற்றை freetamilebooksteam@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்பவும். விரைவில் மின்னூல் உருவாக்கி வெளியிடுவோம். நீங்களும் மின்னூல் உருவாக்கிட உதவலாம். மின்னூல் எப்படி உருவாக்குகிறோம்? - தமிழில் காணொளி - https://www.youtube.com/watch?v=bXNBwGUDhRs இதன் உரை வடிவம் ஆங்கிலத்தில் - http://bit.ly/create-ebook எங்கள் மின்னஞ்சல் குழுவில் இணைந்து உதவலாம். https://groups.google.com/forum/#!forum/freetamilebooks நன்றி !